# சங்க இலக்கியங்களில் வட்டார வழக்குச் சொற்கள் - ஓர் ஆய்வு

மதுரை காமராசர் பல்கலைக்கழக மொழியியல் துறை முனைவர்ப் பட்டத்திற்காக (பிஎச்.டி) அளிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்

**ச. சரண்யா**

பதிவு எண் : **P3433**

**மேற்பார்வையாளர்**

**முனைவர் இரா. குமாரசாமி**, எம்.ஏ., பிஎச்.டி.,
உதவிப் பேராசிரியர்




**மொழியியல் துறை**

**மதுரை காமராசர் பல்கலைக்கழகம்**

**(ஆற்றல்சால் பல்கலைக்கழகம்)**

**மதுரை – 625 021.**

**ஜுன் - 2019**

**முனைவர் இரா. குமாரசாமி, எம்.ஏ., பிஎச்.டி.,**
உதவிப் பேராசிரியர்
மொழியியல் துறை
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை – 625 021.

## மேற்பார்வையாளர் சான்றிதழ்

**"சங்க இலக்கியங்களில் வட்டார வழக்குச் சொற்கள் - ஓர் ஆய்வு"** என்னும் தலைப்பிலான இவ்வாய்வேடு மொழியியல் துறையில் முனைவர்ப் **(பி.எச்.டி.,)** பட்டம் பெறுவதற்காக **திருமதி. ச. சரண்யா** அவர்கள் (2013-2019) ஆம் கல்வியாண்டில் ஆய்வு நிகழ்த்தி வழங்கியதாகும். இவ்வாய்வேடு இதற்கு முன் வேறு எந்தப் பட்டத்திற்கோ ஆய்வரங்கிற்கோ அனுப்பப் பெறவில்லை எனவும் இந்த ஆய்வு அவர்தம் சொந்த முயற்சியால் உருவானது எனவும் சான்றளிக்கிறேன்.

இடம் : மதுரை (இரா.குமாரசாமி)

நாள் : மேற்பார்வையாளர்

**ச. சரண்யா**
பதிவு எண் : P3433
முனைவர்ப் பட்ட ஆய்வாளர்
மொழியியல் துறை
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை – 625 021.

# ஆய்வாளர் உறுதிமொழி

**“சங்க இலக்கியங்களில் வட்டார வழக்குச் சொற்கள் - ஓர் ஆய்வு”** என்னும் தலைப்பில் முனைவர்ப் **(பி.எச்.டி)** பட்டத்திற்காக மதுரை காமராசர் பல்கலைக்கழக மொழியியல் துறையின் உதவிப் பேராசிரியர் முனைவர் **இரா. குமாரசாமி** அவர்களின் மேற்பார்வையின் கீழ் செய்யப்பட்ட இவ்வாய்வு எனது சொந்த முயற்சியில் உருவானதாகும். இதற்கு முன் வேறு எந்த ஆய்வுப் பட்டத்திற்கும் இவ்வாய்வோடு அளிக்கப் பெறவில்லை என்றும், இத்தலைப்பில் வேறு எவரும் ஆய்வு நிகழ்த்தவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

இடம் : மதுரை ச. சரண்யா

நாள் : ஆய்வாளர்

உறுதிக் கையொப்பம்

**முனைவர் இரா. குமாரசாமி, எம்.ஏ., பிஎச்.டி.,**
மேற்பார்வையாளர்
உதவிப் பேராசிரியர்
மொழியியல் துறை
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை – 625 021.

# நன்றியுரை

**“சங்க இலக்கியங்களில் வட்டார வழக்குச் சொற்கள் - ஓர் ஆய்வு”** என்னும் தலைப்பில் ஆய்வு மேற்கொள்ள இசைவு நல்கிய மதுரை காமராசர் பல்கலைக்கழகத்திற்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வு தொடங்கிய காலம் முதல் இன்று வரை எனக்கு நல்வழி காட்டியதோடு எனது ஆய்வைச் செம்மைப்படுத்திய எனது நெறியாளர் மொழியியல் துறை உதவிப் பேராசிரியர் **முனைவர் இரா. குமாரசாமி** அவர்களுக்கு அன்பு கனிந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

மதுரை காமராசர் பல்கலைக்கழக மொழியியல் துறை பொறுப்புத் தலைவர் **முனைவர் ஆ. முனியன்** அவர்களுக்கும், மொழியியல் துறை உதவிப் பேராசிரியர் **முனைவர் க. உமாராஜ்** அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்வேட்டினை கட்டமைத்தும் ஒழுங்கமையும் செய்த செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனம் வழக்காற்று ஆய்வுத் திட்ட ஆய்வறிஞர் **முனைவர் ச. மனோகரன்** எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்து கொள்கிறேன்.

ஆய்வுக் காலத்தில் அலுவலகம் சார்ந்து உதவி புரிந்த **திரு. த. பன்னீர் செல்வம், திருமதி மு. பராசக்தி** ஆகியோருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

நான் விரும்பும் கல்விப் பாதையில் பயணம் செய்வதற்கு என்னை ஈன்று என் வாழ்விற்கும் வளர்ச்சிக்கும் அடித்தளமிட்ட என் **தந்தை தெய்வத்திரு கா. சந்திரசேகரன், தாய் நலமுடன் திருமதி ச. ராஜம்மாள்** மற்றும் என்னுடைய அன்பு தோழனும் கணவருமான **திரு. ஜோ. பாண்டியராஜன்** மற்றும் என் அன்பு மழலைச் செல்வம் **பேபி. ஜோ. பா. சம்ரிதாஸ்ரீ** அவர்களுக்கும் என் நன்றியினை உரித்தாக்குகிறேன்.

நான் ஆய்வு செய்த காலங்களில் எனக்கு தேவையான பொருளுதவி செய்த **என் கணவரின் தந்தையார், திரு. பூ. ஜோதிசங்கரலிங்கம், என் கணவரின் தாயார் திருமதி ஜோ. ஜெயக்கொடி** அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இவ்வாய்வு திட்டத்திற்குப் பல நிலைகளில் உதவி புரிந்த மொழியியல்துறை முனைவர் பட்ட ஆய்வாளர்களான **திரு. மா. சின்னச்சாமி, வ. மலைமொழி, க.கனகவள்ளி** அவர்களுக்கும் மேலும் இவ்வாய்வேட்டிற்கு பல்வேறு வகையில் உதவிபுரிந்த மொழியியல்துறை முனைவர்ப்பட்ட மேலாய்வாளர், **முனைவர் வே. சண்முகராஜ்** மற்றும் இளநிலை நிறைஞர் மற்றும் முதுகலை மாணவ, மாணவியர்களுக்கும், எனது சகத்தோழியருக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுக் காலத்தில் நூல்களை வழங்கி உதவி புரிந்த மதுரை காமராசர் பல்கலைக்கழக தெ.பொ. மீனாட்சி சுந்தரனார் நூலகம், மொழியியல் துறை நூலகம், மற்றும் செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவன நூலகத்தினருக்கும், நூலகங்களில் பணி புரியும் ஊழியர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்வேட்டினைச் சிறந்த முறையில் செப்பனிடுவதற்கு உதவி புரிந்த பொன். பாலமுருகன் அவர்களுக்கு இவ்வாய்வேட்டினைச் செம்மையாக அச்சிட்டு உதவிய ஸ்ரீபாலாஜி பிரிண்டிங் மற்றும் அச்சக ஊழியர்களுக்கும் என நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

***ச.சரண்யா***

# பொருளடக்கம்

# முன்னுரை

உலக மொழிகளில் மிகவும் தொன்மை வாய்ந்த மொழி தமிழ்மொழியாகும். திராவிடமொழிக் குடும்பத்தின் மூத்த மொழியாக விளங்கும் தமிழ்மொழியின் காலம் சமஸ்கிருத மொழிக் காப்பியங்களான இராமாயணம், மகாபாரதம் ஆகியவைகளின் காலத்திற்கு முந்தையது ஆகும். இராமாயணம், மகாபாரதம் ஆகிய இரண்டு காப்பியங்களிலும் தமிழர்கள், தமிழ்மொழி, தமிழகத்தை ஆண்ட மன்னர்கள் ஆகியவர்களின் குறிப்புகள் காணக்கிடக்கின்றன. இந்தியத் துணைக்கண்டத்தில் பேசப்படும் மொழிகளில் காலத்தால் மிகவும் பழமை வாய்ந்ததாகவும் தனியொரு இலக்கண, இலக்கியப் பாரம்பரியங்களைக் கொண்ட மொழிகள் தமிழும் சமஸ்கிருதமும் ஆகும். எனவேதான் இந்த இரண்டு மொழிகளும் செம்மொழிகள் எனும் தகுதி பெற்றுள்ளன. தமிழ்மொழி தன்னுடைய இலக்கண, இலக்கியப் பாரம்பரியத்தைச் சங்ககால இலக்கியங்கள் எனக்கருதப்படும் இலக்கியங்கள் வாயிலாகவும் தொல்காப்பியம் எனும் இலக்கண நூல் வாயிலாகவும் சுட்டிக்காட்டித் தன் வரலாற்றுப் பதிவுகளைத் தன்னகத்தே கொண்டுள்ளது. தமிழ்மொழியின் இலக்கண, இலக்கியப் பாரம்பரியம் என்பது நமக்குக் கிடைத்திருக்கும் இலக்கண, இலக்கிய நூல்களின் அடிப்படையில் நோக்குங்கால் தமிழின் வரலாறு தொல்காப்பியம் எனும் ஒரு இலக்கண நூல் மூலம் ஆரம்பமாகிறது. தொல்காப்பியர் என்பவரால் எழுதப்பட்ட தொல்காப்பியம் எனும் இலக்கண நூல் காலத்தால் பழமைவாய்ந்ததாக அமைகிறது. எனவே தமிழ்மொழியின் இலக்கண, இலக்கியப் பாரம்பரியம் ஒரு இலக்கணநூலில் இருந்து ஆரம்பம் ஆவது தமிழ்மொழியின் தனிச்சிறப்பு என்று கூற முடியும். நமக்குக் கிடைத்திருக்கும் நூற்களுள் தொல்காப்பியம் மிகவும் பழமையான இலக்கணநூலாக இருப்பினும், அது எழுதப்பட்ட காலமாகிய கி.மு. ஐந்தாம் நூற்றாண்டுக்கு முன் அகத்திய முனிவரால் எழுதப்பட்ட அகத்தியம் எனும் ஒரு இலக்கணநூல் இருந்ததைப் பிற்காலப் புலவர்களின் மேற்கோள்கள் மூலம் அறிய முடிகிறது. முனைவர் வின்ஸ்லோ அகத்தியம் எனும் இலக்கண நூலைப்பற்றிக் குறிப்பிடும் பொழுது, கிறித்து பிறப்பதற்கு ஆறு அல்லது ஏழு நூற்றாண்டுகளுக்கு முன்னர், முனிவர்களின் தலைவராக அகஸ்தியர் இருந்துள்ளார். அவரே தமிழ்மொழியின் தந்தை என அழைக்கப்படுகின்றார். இவர் தமிழ்க் கடவுள் கந்தனிடமிருந்து தமிழைக் கற்றார். அவர்தான் தமிழ் எழுத்துக்களை உருவாக்கினார் என்று கூற முடியாது ஏனெனில் அவர் காலத்திற்கு முன்னரே எழுத்து, சுவடி எனும் தமிழ்ச் சொற்கள் வழக்கில் இருந்துள்ளன. அகத்தியர் அகத்தியம் எனும் தமிழ்மொழியின்

முதல் இலக்கணநூலை எழுதினார். இந்த நூல் சுமார் 12,000 சூத்திரங்களைக் கொண்டது ஆகும் என்று குறிப்பிட்டுள்ளார்.

> **"In the sixth or seventh century before Christ, at the head of a colony of holy ascetics, we find the celebrated Agasthya called the Father of Tamil. He is said to have learned it from Skanda, the second son of Siva. We are not to suppose that he formed the Tamil alphabet. The words vOj;J, letter, and Rtb, book, are original Tamil; and shew that such existed before there were any innovations from Sanskrit, which Agasthya himself commenced. He formed the first Tamil grammar. It contained 12,000 sutras".**
>
> **- Rev. Dr. Winslow, Quoted by Bavanandam Pillai, 1925: iii**

இந்தியத் துணைக்கண்ட வரலாற்றில் அகத்தியர் எனும் முனிவரின் புராணக்கதை இரண்டு இடங்களில் வருகிறது. முதலில் வரும் அகத்தியர் விதர்பா நாட்டு இளவரசியாகிய லோபமுத்ராவின் கணவர் ஆவார். இந்த அகத்தியர் இராமாயணக் காவிய நாயகன் இராமனின் காலத்திலிருந்து நான்கு நூற்றாண்டுகள் முந்தையவராகக் கருதப்படுகின்றார். எனவே அகத்தியரைப் பற்றிய முதற்குறிப்பு கோதாவரி நதிக்கரையில் அமைந்திருந்த பஞ்சவடி எனும் இடத்தில் வாழ்ந்த அகத்தியரிடம் ஆரம்பிக்கிறது. ஆனால் தமிழ் இலக்கியங்களில் வரும் அகத்தியர் காவேரி நதி உற்பத்தியாகும் குடகு மாவட்டத்தில் உள்ள தலைக்காவேரி எனும் இடத்தில் ஆரம்பித்து தமிழகத்தின் தென்பகுதியில் உள்ள பொதிகை மலையில் முடிவடைகிறது. அகத்தியர் எனும் முனிவரின் வரலாறு ஆரிய - திராவிட மொழிகள் பேசும் மக்களின் மதம்சார் கொள்கைகளின் ஒற்றுமைகளை விளக்குவதாக உள்ளது.

> **"Agastya may be considered as the pioneer advocate of the concept of co-existence of different people and ideologists and the give and take policy of differing cultures of India".**
>
> **- P.P. Narayan Nambudiri, 1992: 50**

இந்தியத் துணைக்கண்டத்தில் நிலவும் புராணக்கதைப்படி சிவபெருமான் அகத்தியருக்குத் தமிழ்மொழியையும் பாணினிக்கு சமஸ்கிருத மொழியையும் கற்றுக்கொடுத்தார் (மனோகரன், 2002). தமிழகத்தில் வழங்கும் வரலாற்றுப்படி

அகத்தியர் தொல்காப்பிய இலக்கண நூலை எழுதிய தொல்காப்பியரின் ஆசிரியர் ஆவார். எனவே, அகத்தியம் எனும் தமிழ் இலக்கண நூலை எழுதிய அகத்தியர் பொதிகை மலையில் வாழ்ந்த அகத்தியர் என்பது தெளிவாகிறது. காவேரி உற்பத்தியாகும் கர்நாடக மாநிலக் குடகு மாவட்டத்தில் உள்ள தலைக்காவேரி எனும் இடத்தில் வழ்ந்த அகத்தியரும் பொதிகை மலையில் வாழ்ந்த அகத்தியரும் ஒருவரே ஆவார். குடகு நாடு சங்ககாலப் பன்னிரு நாடுகளில் ஒன்றாகும். தலைக்காவேரி எனும் இடம் மேற்குத்தொடர்ச்சி மலையில் காவேரி உற்பத்தியாகும் இடமாகும். இராமாயணக் காவியத் தலைவர் இராமரின் காலத்திற்கு நான்கு தலைமுறைக்கு முன் வாழ்ந்த அகத்தியரின் வரலாற்றை நோக்குங்கால், கோதாவரி ஆற்றங்கரையில் உள்ள பஞ்சவடி எனும் இடத்தில் வாழ்ந்த அகத்தியரும் விதர்பா நாட்டு மன்னரும் தான் முதன் முதலில் வடநாட்டிலிருந்து தென்நாட்டிற்குக் குடியேறியவர்கள் என்பதும் இராமாயணக் காலத்திற்கு முன்பிருந்தே திராவிட மொழி பேசும் மக்கள் தென் இந்தியப் பகுதிகளுக்குக் குடியேற ஆரம்பித்துவிட்டனர் என்பதும் தெளிவாகிறது.

இராவணன் வாழ்ந்த காலத்தில் தமிழகமும் இலங்கையும் ஒரே நிலப்பரப்பாக இருந்தது. இராவணன் எனும் பெயர் சமஸ்கிருதமயமாக்கப்பட்ட இறைவன் எனும் தமிழ்ச் சொல் என்பது பி.டி. சீனிவாச ஐயங்கார் (1929: 52) அவர்களின் கருத்தாகும். இராவணனின் அழிவுக்குப் பின்னரே தமிழகத்தில் சேரர், சோழர், பாண்டியர் எனும் மூவேந்தர்கள் தோன்றினர் என்பதும் இராமன் இராவணனை வென்றது தென் இந்தியப் பகுதிகளில் இராவணனின் ஆதிக்கத்திற்கு ஒரு முற்றுப்புள்ளி வைத்தது என்கின்றர் பி.டி. சீனிவாச ஐயங்கார். இராமர் காலத்திற்கே முன்னரே ஆரியர்கள் தென் இந்தியாவில் குடியேற ஆரம்பித்து விட்டனர் என்றும், குடியேறிய ஆரியர்களை எதிர்ப்பவர்களைத் தடுத்து நிறுத்தவும் அத்தகைய சக்திகளை அழித்துத் தென் இந்தியாவில் குடியேறிய ஆரியர்களைப் பாதுகாப்பது மட்டும்தான் இராமரின் கடமை ஆகும். இராமன் தென் இந்தியாவில் தனது ஆதிக்கத்தை நிலைநிறுத்த வருகை தரவில்லை, அவரது செயல்கள் அனைத்தும் தென் இந்தியாவில் குடியேறிய ஆரியர்களை எதிர்ப்பவர்களை ஒடுக்குவதையே நோக்கமாகக் கொண்டிருந்தது என்கின்றார். பி.பி. நராயண் நம்பூதிரி (1992: 51)

**“The epic Rāmāyaṇa shows that progressive penetration of the Aryans into the south had already begun. It is true that Rāma did not make any conquest in the south nor lead emigrant batches of the Āryans. The role played by**

**Rāma as can be seen from the Rāmāyaṇa was to destroy the forces that stood against the progressive Āryan colonization of the south and to secure the safety of the Āryans who had already settled down in the south".**

**- P.P. Narayan Nambudiri, 1992: 51**

மேலும் அகத்தியர் எனும் முனிவரின் கொள்கைகள் ஆரிய-திராவிட மதங்களின் நல்லிணக்கத்தையும் ஒரு நாட்டில் இருமதக் கொள்கைகளை உடையவர்கள் இணக்கமாக வாழமுடியும் எனும் கொள்கையையும் எடுத்துக்காட்டுவதாக உள்ளது என்கின்றார் பி.பி. நாராயண் நம்பூதிரி (1992: 51). அகத்தியரின் காலத்திலேயே சமஸ்கிருத மொழியானது தமிழகத்தைச் சேர்ந்த தமிழ்மொழி பேசும் அந்தணர் எனும் ஒரு பிரிவினரால் ஏற்றுக் கொள்ளப்பட்ட மொழியாகும். எனவேதான்இ தொல்காப்பியர் சொற்களை வகைப்படுத்தும் பொழுது வடசொல் என ஒரு குறிப்பிட்ட சொற்களை வரையறுத்துள்ளார். சங்ககாலத் தமிழகத்தில் இரண்டு வகையான கல்விசார் அறிவுடையவர்களை நாம் காணமுடிகிறது. இவர்களில் ஒரு பிரிவினர் தமிழ்மொழியில் புலமை பெற்று தவமுனிவர்கள் போல் வாழ்ந்த சான்றோர் அல்லது அறிவர் எனும் மக்கள் ஆவர். மற்றொரு பிரிவினர் சமஸ்கிருத மொழியைக் கற்ற அந்தணர் ஆவர். ஆனால் இரு பிரிவினரும் தமிழைத் தாய்மொழியாகக் கொண்டவர்கள். தமிழகத்தைச் சேர்ந்த அந்தணர்கள் சமஸ்கிருத மொழியைக் கற்றவர்களாக இருந்தாலும் அவர்களுடைய கீழ்க்கண்ட பழக்கவழக்கங்களால் வட இந்திய அந்தணர்களிலிருந்து தமிழ் அந்தணர்கள் தனித்து அடையாளங்காணப்பட்டனர்:

1. ஒரு குறிப்பிட்ட கொள்கைக்குள் அல்லது மதக்கோட்பாடுகளுக்குள் கொண்டுவரப்படாத நபர்களுடன் உட்கார்ந்து உணவு உண்பது
2. பெண்களுடன் அமர்ந்து உணவு உண்பது
3. முந்தைய நாளில் சமைத்த பழைய உணவுகளை உண்பது
4. மாமன் மகள் அல்லது அத்தை மகளை மணப்பது (ஐயங்கார், 1929: 118)

இராவணனின் மறைவுக்குப் பின்னரே தமிழகத்தில் சேரர், சோழர், பாண்டியர் ஆகிய மூவேந்தர்களின் ஆட்சி நிலை பெற்றது என்பது வரலாற்று உண்மைகளாகும். இவ்வாறாகத் தமிழ்மொழியும் தமிழகமும் நீண்ட ஒரு தொல் பாரம்பரியத்தைக்கொண்ட மொழியாகவும் பகுதியாகவும் உள்ளன.

திராவிடமொழிகளின் மூத்த மொழியாகிய தமிழ்மொழி, பிற திராவிடமொழிகளைவிட மிகவும் பண்பட்ட மொழியாக விளங்குகிறது. சமஸ்கிருத மொழியின் துணை இல்லாது தனித்து இயங்கும் வல்லமை தமிழ்மொழிக்கு உண்டு என்பார் திராவிடமொழிகளின் தந்தை என அழைக்கப்படும் பிசப் இராபர்ட் கால்டுவெல்.

**“The Tamil, the most cultivated ab-intra of all the Dravidian idioms, can dispense with Sanskrit altogether, if need be, not only stand alone, but flourish, without its aid’**

**- Bisoph Robert Caldwell, 1856**

மேலும் தமிழ் இலக்கியங்களைப் பற்றிக் கூறும்பொழுது ஜி.யு. போப் அவர்கள், தமிழ்மொழியின் இலக்கியப் பாரம்பரியத்தைத் தனது வாழ்நாளில் கற்பதென்பது கடலில் மூழ்கி முத்து எடுப்பதற்கு ஒப்பாகும் என்கின்றார்.

**“Those who spend their lives in the study of the great South Indian classics must resemble men seeking for pearls under water”**

**- G.U. Pope, 1911: 2**

சமஸ்கிருதம் இந்தியத் துணைக்கண்டத்து மற்றொரு செம்மொழியாக உள்ளது. அந்த மொழி, திராவிடமொழிகளின் மேல் ஒரு தாக்கத்தை ஏற்படுத்தினாலும், சமஸ்கிருதமும் திராவிடமொழிகளின் தாக்கத்திற்கு உள்ளாகியிருக்கிறது. அத்தகைய தாக்கத்தை ஏற்படுத்திய திராவிடமொழிகளின் மூத்தமொழி தமிழ் ஆகும் என்பார் இராவ்பகதூர் பவானந்தம் பிள்ளை.

**“….. that wonderful language has condescended to borrow even from Dravidian group of which the Tamil is the oldest, and the principal”**

- பவானந்தம் பிள்ளை**, 1925: vi**

தமிழ்மொழியின் வரலாறு பிற இந்திய மொழிகளின் வரலாற்றுகளில் இருந்து ஒரு தனித்துவம் பெற்றுள்ளது. பிற இந்திய மொழிகள் போல் சிதையாது அழியாது இன்றளவிலும் தனித்து வாழும் செம்மொழியாக விளங்குவதால் பேராசிரியர் சுந்தரம்பிள்ளை தமது தமிழ் வாழ்த்துப் பாடலில்

**ஆரியம்போல் உலகவழக் கழிந்தொழிந்து சிதையாஉன்**

**சீரளமைத் திறம்வியந்து செயல்மறந்து வாழ்த்துதுமே**

எனப் பாடியுள்ளார். தமிழ்மொழியின் வரலாற்றின் தொடக்க காலமாகிய தொல்காப்பியரது காலம் முதலே இலக்கிய வழக்கு அல்லது எழுத்து வழக்கு என இருவேறு வழக்குகள் தமிழில் இருந்துள்ளது. இத்தகைய வழக்குகளைத் தொல்காப்பியரும் தமது இலக்கண நூலில் எடுத்துக்காட்டியுள்ளார். மேலும், தமிழ்மொழி பேசப்பட்ட பகுதிகள் தமிழகம் என்று அழைக்கப்பட்டாலும் அப்பகுதிகள் சேரர், சோழர், பாண்டியர் எனும் மூவேந்தர்களாலும் 12 சிற்றரசர்களாலும் ஆளப்பட்ட வேறுவேறு தனித்தனி நாடுகளாக இருந்துள்ளன என்பது வரலாற்று உண்மைகளாகும். சங்க கால இலக்கண, இலக்கிய ஆசிரியர்களின் இலக்கியப் படைப்புகள் அனைத்தும் தனியொரு இலக்கியவழக்கு அல்லது எழுத்துவழக்கு எனும் கொள்கைக்குள் அடங்கியதால் அவர்களின் படைப்புகளில் வேறுபாடுகளை விட ஒற்றுமையே அதிக அளவில் காணப்படுகிறது. பல நாடுகளில் பேசப்பட்ட தமிழ் வழக்குகள் திசைச்சொற்கள் என்று அழைக்கப்பட்டாலும் அத்தகைய வழக்குகளும் தேவைப்பட்டால் இலக்கிய வழக்கில் பயன்படுத்தலாம் என்ற இலக்கண கொள்கைகள் இருந்தாலும், புலவர்கள் பெரும்பாலும் திசைச்சொற்களின் பயன்பாட்டைத் தவிர்த்து இலக்கியவழக்கு எனும் அனைத்து மக்களுக்கும் பொதுவாக இருந்த வழக்கைப் பயன்படுத்தியதால் இன்றுவரை தமிழ்மொழி சிதையாது, அழியாது சங்ககாலம் முதல் இன்று வரை தொடர்ந்து பேசப்படும் மொழியாக உள்ளது.

பல நாடுகளில் வாழ்ந்த புலவர்கள் தங்களிடையே பகைமை உணர்வுகள் இல்லாது ஒன்றுசேரத் தமிழ்மொழியைக் கட்டிக்காத்து அதன் இலக்கண, இலக்கியப் பாரம்பரியங்களுக்கு வளம் சேர்த்து உலக மொழிகளில் ஒரு சிறந்த தனித்துவம் பெற்ற மொழி தமிழ்மொழி என்பதை உலகுக்கு எடுத்துக்காட்டியுள்ளனர். தமிழகப் பேரரசர்களும், சிற்றரசர்களும், வள்ளல்களும் புலவர்களை அவர்களது நாடுகளோடு அடையாளம் கண்டு வேற்றுமை பாராட்டாது தமிழகப் புலவர்கள் என்று எல்லோரையும் சமமாகவே கருதிப் பரிசில்களையும் வழங்கியுள்ளனர். தமிழ்மொழியின் இத்தகைய சிறப்பு பற்றிக் கூறுகின்ற பேராசிரியர் தெ. பொ. மீனாட்சிசுந்தரன் (1955: 1961: 31) தமிழ்மொழியானது தன்னுடைய கடந்த காலத்தை வரலாற்றுப் பதிவுகளின் மூலம் உணர்த்துவதோடு இன்றையக் காலக்கட்டத்தில் தற்கால உலகை எதிர்நோக்கி வலம் வருவதோடு ஏனையச் செம்மொழிகள் போல் மடிந்துவிட மறுத்துவிட்டது என்பார்

**"The Tamil language like Janus, looks backward to the ancient world and looks forward to the modern world, with the Future still in its womb. It is both a Classical Language, shaping itself with logical precision and wondrous rhythm as a beautiful and befitting medium for poetry and philosophy, and a modern language shaping itself as a powerful and proper vehicle for the scientific and practical thoughts; for, unlike other classical languages, it has refused to die"**

**- T.P. Meenakshisundaran, 1955: Reprint 1961: 31**

சங்ககால இலக்கண, இலக்கிய நூற்களாகக் கருதப்படுபவை தொல்காப்பியம் எனும் இலக்கண நூலும், பாட்டும்தொகையும் எனக் கருதப்படும் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு நூற்களும் ஆகும். இவைகள் காலத்தால் கி.மு. ஐந்தாம் நூற்றாண்டுக்கும் கி.பி. இரண்டாம் நூற்றாண்டுக்கும் இடைப்பட்ட காலத்தில் எழுதப்பட்ட நூற்களாகக் கருதப்படுகின்றன. எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரம் எனும் மூன்று அதிகாரங்களைக் கொண்ட தொல்காப்பியம் எனும் இலக்கணநூல் பற்றி முனைவர். ச. வே. சுப்பிரமணியன் (2008) தமது தொல்காப்பிய நூலின் முன்னுரையில் கீழ்க்கண்டவாறு குறிப்பிட்டுள்ளார்:

**"தொல்காப்பியம் உலகத்தோற்றம், உயிர்களின் வகைப்பாடு, முதல் கரு உரிப்பொருள்களின் கொள்கைகள், திணை பற்றிய கொள்கை, உலகமாந்தர்க்குப் பொதுவாக அமைகின்ற மெய்ப்பாட்டியல் கூறுகள், உலக மொழிகளின் அனைத்திலும் முதல் நிலையாக அமைக்கின்ற செய்யுளியல் பற்றிய எண்ணங்கள், வெறும் இலக்கண நூலாக அமையாது, வாழ்வியல் நூலாகச் சொல்லதிகாரமும், பொருளதிகாரமும் அமைந்துள்ளதை மறுபடியும் மறுபடியும் படிக்கும்போது, தெளிவாக உணர முடிகிறது"**

**- ச.வே. சுப்பிரமணியன், 2008**

மேலும், தொல்காப்பியம் தமிழ்மொழி இலக்கணநூல் மட்டும் அன்று. சமுதாய நூல் எனும் பெருமை கொண்டது. தமிழ்நாட்டில் அமைந்த வழக்குகளும், செய்யுளும் தொல்காப்பியம் மூலம் தெரியவருகிறது. தொல்காப்பியரின் உரியியல் கோட்பாடுகள் சொல்லுக்குப் பொருள்களைக் கூறுவன. அடிச்சொற்களாக

அமைவன. பெயருக்கும், வினைக்கும், இடைச்சொல்லுக்கும் அடிப்படையாக அமையும் என்றும் கூற முடியும். பிற்காலத்தில் தோன்றிய அகராதிகள், நிகண்டுகளுக்கு தொல்காப்பியரின் உரியியல் ஆதாரமாக விளங்குகிறது என்பது ஆய்வாளர்களின் கருத்தாகும். தமிழ் இலக்கண, இலக்கிய நூல்களுக்கு உரைநூல்கள் எழுதப்பட்ட காலம் உரையாசிரியர்களின் காலமாகக் கருதப்படுகிறது. காலத்தால் மொழியில் ஏற்பட்ட சொற்-பொருள் மாற்றங்களால் சங்ககால இலக்கண, இலக்கிய நூல்களைப் படித்துப் புரிந்து கொள்வதற்கு என்று உரை நூல்கள் எழுதப்பட்டன. இத்தகைய உரைநூலகள் தமிழின் இலக்கிய வழக்குகளின் பொருண்மையோடு, பேச்சுவழக்கு அல்லது வட்டாரவழக்குகளின் தனித்தன்மைகளையும் விளக்குவனவாக அமைந்தன. தொல்காப்பிய உரையாசிரியர் இளம்பூரணர் கி.பி.11-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். தொல்காப்பியம் முழுமைக்கும் உரை எழுதியவர் இவர் ஒருவரே. சோழநாட்டைச் சேர்ந்தவராகக் கருதப்படும் இளம்பூரணர் உரையாசிரியர்களுக்கு முன்னோடியாகத் திகழ்கின்றார்.

தமிழ் இலக்கண, இலக்கியங்களை வரலாற்று அடைப்படையில் ஆய்வு செய்த அறிஞர்கள் தமிழ்மொழியின் வரலாற்றுப் பாரம்பரியத்தைக் கீழ்க்கண்டவாறு பிரித்துள்ளனர் (வரதராசன், 1972: 28-29).

I. பழையகாலம் - சங்ககலம் கி.மு. 500 முதல் கி.பி. 500 வரை

1. சங்ககாலம் - கி.மு. 500 முதல் கி.பி. 200 வரை
2. நீதி நூற்கள் காலம் - கி.பி. 100 முதல் கி.பி. 500 வரை
3. இரட்டைக்கப்பிய காலம் - கி.பி. 100 முதல் கி.பி. 500 வரை

II. மத்தியகாலம் - கி.பி. 600 முதல் கி.பி. 1800 வரை

1. பத்தி இலக்கியக் காலம் - கி.பி. 600 முதல் கி.பி. 900 வரை
2. காப்பிய இலக்கியக் காலம் - கி.பி. 500 முதல் கி.பி. 1200 வரை
3. உரையாசிரியர்கள் காலம் - கி.பி. 1200 முதல் கி.பி. 1500 வரை
4. பிற இலக்கியங்கள் காலம் - கி.பி. 700 முதல் கி.பி. 1300 வரை
5. புராண இலக்கிய காலம் - கி.பி. 150 முதல் கி.பி. 1800 வரை

III. தற்காலம் - கி.பி. 1800 முதல்

1. 19-ஆம் நூற்றாண்டு இலக்கியங்கள்

2. 20-ஆம் நூற்றாண்டு இலக்கியங்கள்

இத்தகைய வரலாற்றுப் பாரம்பரியம் கொண்ட தமிழ்மொழியின் தனித்தன்மை அதன் இருமொழி வழக்காகிய எழுத்துவழக்கிலும் பேச்சுவழக்கிலும் சங்ககாலம் முதல் அறியப்படுகிறது.

ஐரோப்பியர்களின் வருகை தமிழ்மொழி ஆய்வில் ஒரு திருப்புமுனையை ஏற்படுத்தியது. இழிவழக்கு, கொடுந்தமிழ், சேரிவழக்கு என்று தாழ்ந்த நிலை வழக்கு மொழியாகக் கருதப்பட்டவைகள் தனியொரு ஆய்வுகளுக்கு உகந்தவை எனும் நிலைக்கு உயர்த்தப்பட்டது. பேச்சுவழக்குகளை ஆதாரமாக வைத்து இலக்கணங்களும் அகராதிகளும் எழுதப்பட்டன. மொழியியல் எனும் ஒரு ஆய்வு தனித்துறையாக வளர்ந்த பின் தமிழ்ப் பேச்சுவழக்குகள் பொதுப்பேச்சுவழக்கு, வட்டாரவழக்கு, சமூக வழக்கு, தொழில் வழக்கு எனப் பல தலைப்புகளில் ஆராயப்பட்டன. அத்தகைய ஆய்வுகள் வட்டாரவழக்கு என்பது தற்காலத் தமிழ்மொழியின் நிலை என்பதைக் கடந்து இத்தகைய வட்டாரவழக்குகள் சங்ககாலந்தொட்டே இருந்துள்ளன என்பதை உலகுக்கு எடுத்துக் கூறி வட்டாரவழக்குகளின் சிறப்புகளை அறிமுகப்படுத்தியுள்ளது.

இந்தியாவில் எடுக்கப்பட்ட அனைத்து மக்கள்தொகைக் கணக்கெடுப்புகளிலும் தமிழ்மொழி பேசுபவர்களின் எண்ணிக்கை கொடுக்கப்பட்டுள்ளன. 1891-ஆம் ஆண்டு நடத்தப்பட்ட முதல் மக்கள்தொகைக் கணக்கெடுப்பில் தமிழ்மொழி 15,272,856 நபர்களால் பேசப்பட்டது என்று கூறப்பட்டுள்ளது. இந்த எண்ணிக்கை 1931-ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்கெடுப்பில் 20,411,652 நபர்களாக உயர்ந்தது. சுதந்திர இந்தியாவில் 1951-ஆம் ஆண்டு நடத்தப்பட்ட முதல் மக்கள்தொகைக் கணக்கெடுப்பில் தமிழ்மொழி பேசும் மக்கள்தொகை 26,546,764 நபர்கள் ஆகும். 1961-ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்கெடுப்பின்படி தமிழ்மொழி பேசும் மக்களின் எண்ணிக்கை 30,562,706 நபர்கள் ஆகும். 1991-ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணெக்கெடுப்பின்படி 53,006,368 நபர்கள் தமிழ்மொழி பேசுபவர்கள். இந்திய மக்கள்தொகையில் இது 6.32 விழுக்காடு ஆகும். 2001-ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்கெடுப்பின்படி, தமிழ்மொழி பேசுபவர்களின் எண்ணிக்கை 60,793,814 நபர்கள் ஆகும். இது இந்திய மக்கள்தொகையில் 5.91 விழுக்காடு

ஆகும். 2011-ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்கெடுப்பின்படி 6,90,26,881 நபர்கள் தமிழ்மொழி பேசுபவர்கள். இவர்கள் இந்திய மக்கள்தொகையில் 5.89 விழுக்காடு ஆகும். தமிழ்மொழியின் கீழ் கீழ்க்கண்ட தாய்மொழிகள் பட்டியலிடப்பட்டுள்ளன: இருளர் மொழி (11,870 நபர்கள்), கைகடி (25,870 நபர்கள்), கொரவா (10,421 நபர்கள்), தமிழ் (6,88,88,839 நபர்கள்), எருக்குவா (31,816 நபர்கள்), பிற மக்கள் (31,816 நபர்கள்) ஆகும். இந்திய மொழிகளில் இந்திய அரசியல் சட்டம் எட்டாவது பட்டியலில் உள்ள 22 மொழிகளில் தமிழும் ஒன்றாகும். தமிழ்மொழி தமிழ்நாடு, புதுச்சேரி ஆகிய மாநிலம் மற்றும் யூனியன் பிரதேசத்தின் ஆட்சி மொழியாகவும் விளங்குகிறது.

## ஆய்வுத் தலைப்பு

இந்த ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட தலைப்பு **“சங்க இலக்கியங்களில் வட்டார வழக்குச் சொற்கள் - ஓர் ஆய்வு”** என்பதாகும். இவ்வாய்வில் தொல்காப்பியர் தனது இலக்கணநூலில் கூறியிருக்கும் வட்டாரவழக்குக் கூறுகளுக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டு அவைகளின் பிரதிபலிப்பு சங்ககாலம் முதல் தற்காலம் வரை நடத்தப்பட்டுள்ள ஆய்வுகளை மேற்கோள் காட்டி தமிழ் வழக்காறுகளை ஒரு வரலாற்று நோக்கில் ஆய்வதாக அமைந்துள்ளது. தற்கால மொழியியல் ஆய்வுகளுக்குப் பின்புதான் வட்டாரவழக்குக்குத் தனி அங்கீகாரம் கிடைத்துள்ளதாக ஆய்வாளர்களிடம் ஒரு கருத்து நிலவுகிறது. ஆனால், தொல்காப்பியர் காலம் முதல் தற்கால வட்டாரவழக்குகள் ஆய்வு வரை வட்டாரவழக்குகள் ஒரு தனி இடம் பெற்றுள்ளன என்பது இவ்வாய்வு மூலம் அறியப்படும் கருத்தாகும். தொல்காப்பியர் கூறும் 12 நாடுகளைத் தொல்காப்பிய உரையாசிரியர் சேனாவரையர்: தென்பாண்டி நாடு, குட்ட நாடு, குட நாடு, கற்கா நாடு, வேணாடு, பூழி நாடு, பன்றி நாடு, அருவா நாடு, அருவா வடதலை நாடு, சீத நாடு, மலை நாடு, புனல் நாடு எனப் பட்டியலிட்டுள்ளார். மேலும் சேரர், சோழர், பாண்டியர் எனும் மூவேந்தர்கள் ஆண்ட மூன்று நாடுகளும் சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன. ‘‘வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பின் (சூத்திரம் 1336) என்கின்றார் தொல்காப்பியர். பேரரசர்கள் மூவரும் சிற்றரசர்கள் 12 பேரும் ஆண்ட நாடுகள் தவிர கொங்கு நாடு, தொண்டை நாடு என்ற இரு நாடுகளின் குறிப்புகளும் சங்க இலக்கியங்களில் காணக்கிடக்கின்றன.

**.... தென்நீர் வயல்தொண்டை**

**நன்னாடு சான்றோர் உடைத்து**

என ஔவையாரின் தனிப்பாடல் தொண்டை நாட்டைப் பற்றிக் கூறுகிறது. மேலும் திரையன் எனும் மன்னன் தொண்டை நாட்டை ஆண்ட வரலாற்றுச் செய்திகள் அகநானூற்றில் காணக்கிடக்கின்றன. ''ஆடு கழு கொங்கர் நாடு'' ''கொங்கு புறம் பெற்ற கொற்ற வேந்து'' ''கொங்கர் படுமணி ஆயம்'' எனக் காணப்படும் சங்க கால இலக்கியத் தொடர்கள் கொங்குநாடு ஒரு தனி நாடாக இருந்ததைத் தெரிவிக்கிறது. மேலும் சேனாவரையர் கொடுத்துள்ள 12 நாடுகளையும் தற்காலத் தமிழ் நாட்டில் அடையாளங்காணப்பட முடிகிறது. நடு நாட்டுச் சொல்லகராதி, நாஞ்சில் நாட்டு வழக்கு, தொண்டை நாட்டு வழக்கு, செட்டி நாட்டு வழக்கு, கொங்கு நாட்டு வழக்கு போன்ற தற்காலப் பேச்சுவழக்கு அகராதிகள் சங்ககால நாடுகள் பேச்சுவழக்கில் வேறுபட்டன என்பதை உறுதிசெய்வதாக அமைந்துள்ளன. மேலும் சோழிய வேளாளர், கொங்கு வேளாளர், பாண்டிய வேளாளர், சோழியச் செட்டி, தொண்டை மண்டல முதலி, நாஞ்சில் வேளாளர் எனும் குலப்பெயர்கள் சங்ககால நாட்டுப் பிரிவுகளின் தொடர்ச்சி தற்காலத்திலும் உணரப்படுவதைக் காட்டுவனவாக அமைந்துள்ளன.

## ஆய்வு நோக்கம்

இலக்கணவழக்கு, பேச்சுவழக்கு என இரு வழக்குகள் தமிழில் தனித்தனியாக இருந்துள்ளன என்பதை சங்க கால இலக்கண, இலக்கியங்கள் மூலம் அறிகின்றோம். இருப்பினும் பேச்சுவழக்கு என்பதற்குரிய ஒரு தனி இலக்கண நூலோ, இலக்கிய நூலோ சங்ககாலம் முதல் கி.பி. 16-ஆம் நூற்றாண்டு வரை எழுதப்படவில்லை. பேச்சுவழக்கு ஆய்வு என்பது ஐரோப்பியப் பாதிரிமார்களின் வருகைக்குப் பின்னர் ஒரு தனி இடம் பெற்றுள்ளது. மக்களை அணுகுவதற்கு அவர்களின் பேச்சுவழக்கே உதவும் என்ற நோக்கில் அவர்கள் தமிழ் இலக்கியங்களோடு, தமிழ் பேச்சுவழக்குகளையும் கற்கத்தொடங்கியதோடு, பிற ஐரோப்பியர்களுக்குப் பயன் அளிக்கும் வகையில் பேச்சுவழகுக்களின் அடிப்படையில் இலக்கணங்களும் அகராதிகளும் எழுதத் தொடங்கினர். இத்தகைய ஆய்வுகளுக்கு முன்னோடியாகத் தூத்துக்குடியின் அருகில் உள்ள புன்னைக்காயல் கிராமத்தில் தங்கி மீனவர்கள் மத்தியில் வாழ்ந்த இறைத்தந்தை ஹென்ரிக் ஹென்ரிக் (1520 - 1600) என்பவர் திகழ்கின்றார். இவர் முதன் முதலில் தூத்துக்குடி மாவட்டப் பரதவர்கள் பேசும் தமிழப் பேச்சுவழக்கை ஆராய்ந்து அதற்கு ஒரு இலக்கணத்தை 1549-ஆம் ஆண்டு எழுதத் தொடங்கி 1552-ஆம் ஆண்டு அதை நிறைவு செய்தார். கி.பி. 1728-ஆம் ஆண்டு தமிழின் பொதுப்பேச்சுத் தமிழை அடிப்படையாக வைத்து கான்ஸ்டாண்டினஸ் ஜோஸப் பெங்கி ஒரு

இலக்கண நூலை இலத்தீன் மொழியில் எழுதினார். இவர் தமிழின் இருநிலை வழக்கை செந்தமிழ் (high dialect), கொடுந்தமிழ; (common dialect) எனக் கூறியுள்ளார். இவர் இலத்தீன் மொழியில் எழுதிய இலக்கண நூல் 1806-ஆம் ஆண்டு "Grammar of the Common Dialect of the Tamil Called கொடுந்தமிழ், composed for the use of the Missionaries of the Society of Jesus" எனும் தலைப்பில் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. பேச்சுவழக்கிற்கு இலக்கணங்கள் எழுதிய ஐரோப்பியப் பாதிரிமார்கள் தமிழ் அகராதிகளும் எழுதத் தொடங்கினர். தமிழ்மொழியின் அகராதியியல் வளர்ச்சிக்கு தமிழ்மொழியையும், தமிழர்களின் பண்பாடுகளையும் கற்ற கிறித்தவர்களையே சாரும் என்கின்றார் பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை. தற்கால மொழியியல் ஆய்வாளர்கள் பலர்: கமில் சுவலபில், ஆண்ட்ரனோவ், ரா.பி. சேதுப்பிள்ளை போன்றவர்கள் தமிழ் வட்டாரவழக்கு, பொதுப்பேச்சுவழக்கு ஆய்வுகள் பல நடத்தியுள்ளனர். ஆண்ட்ரனோவ், வெள்ளைவாரணர், முத்து சண்முகம் போன்றவர்கள் தற்கல வட்டார வழக்குகளை ஆதாரமாக வைத்து சங்க காலத்தில் செந்தமிழ் பேசப்பட்ட நாடு எது என்பதைத் தெரிவிக்கின்றனர். மேலும், இவர்களது ஆய்வுகள் தற்கால வட்டாரவழக்குகள் சங்க காலத் தமிழின் சொல், இலக்கணக் கூறுகளைப் பிரதிபலிப்பதாக இருப்பதைத் தங்களது ஆய்வில் தெரிவித்துள்ளனர். தொல்காப்பியர் காட்டும் உகரச் சுட்டு தற்காலத் தமிழில் இலங்கை யாழ்ப்பாணத் தமிழ்ப் பேச்சுவழக்கில் இன்றளவிலும் பயன்பாட்டில் உள்ளது. இதன் அடிப்படையில் "தமிழ்கூறும் நல்லுலகம்" என்பது தமிழகத்தோடு இலங்கையையும் சேர்த்ததே ஆகும் என்கின்றார் செக்கோசுலாவாக்கிய நாட்டு அறிஞர் கமில் சுவலபில். சங்ககால இலக்கண, இலக்கியங்களில் காணும் வட்டாரவழக்குக் கூறுகளோடு தற்கால வட்டாரவழக்குக் கூறுகளையும் ஒப்பிட்டுப்பார்த்து சங்ககாலம் முதல் தற்காலம் வரை நடத்தப்பட்டுள்ள வட்டாரவழக்கு ஆய்வுகளின் தொகுப்பாகவும் அவைகளை ஆய்வு நோக்கில் காணும் ஒரு ஆய்வாகவும் இவ்வாய்வை நடத்துவதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

## ஆய்வு முன்னோடிகள்

தொல்காப்பிய உரையாசிரியர்கள் சேனாவரையர், அடியார்க்கு நல்லார் போன்றவர்கள் திசைச்சொற்களுக்குச் சங்ககால இலக்கியங்களில் இருந்து எடுத்துக்காட்டுகள் கொடுத்துள்ளனர். இவைகளைப் பேராசிரியர் மீனாட்சிசுந்தரன், பேராசிரியர் ரா.பி. சேதுப்பிள்ளை போன்றோர் எடுத்துக்காட்டியுள்ளனர். சங்ககால

இலக்கண, இலக்கியங்களில் காணப்படும் வட்டாரவழக்குச் சொற்கள், இலக்கணக்கூறுகள் என முழுமையான ஆய்வுகள் இன்றுவரை நடத்தப்படவில்லை. இத்தகைய இலக்கணக்கூறுகள் இந்த ஒரு வட்டாரத்திற்குரியது என்றும் இத்தகைய சொற்கள் இந்த ஒரு வட்டாரத்திற்குரியது என்பன போன்ற ஆய்வுமுடிவுகள் இல்லை. இதுவரை நடத்தப்பட்டுள்ள ஆய்வுகளில் எடுத்துக்காட்டுகள் மட்டுமே உள்ளன. கமில் சுவலபில், ஆண்ட்ரனோவ், ரா.பி. சேதுப்பிள்ளை, வெள்ளைவாரணர் போன்றோர் தங்களது ஆய்வுக்கட்டுரைகளில் தற்காலத் தமிழ்ப் பேச்சுவழக்குகளின் அடிப்படையில் சங்ககாலத்தில் செந்தமிழ் பேசப்பட்ட பகுதியை அடையாளங்காட்டியுள்ளனர். பேராசிரியர் ஜெ. நீதிவாணன் அவர்கள் “தமிழ்க் கிளைமொழிகள் - ஒரு வரலாற்று அளவீடு (பகுதி ஐ - தொல்காப்பியம்” எனும் தமது ஆய்வு அறிக்கையில் தொல்காப்பியத்தில் காணப்படும் வட்டாரவழக்குக் கூறுகளுக்கு எடுத்துக்காட்டுகள் கொடுத்துள்ளார். முனைவர் ச. மனோகரன் “Classical Tamil - Its Regional and Social Dialects", "Tamil Dialects through Ages", “தொல்காப்பியமும் கிளை மொழித் தமிழும்” “தொல்காப்பியர் காட்டும் சுட்டுகளும் சுட்டுப் பெயர்களும் - ஒரு மொழியியல் சமூகவியல் வரலாற்றாய்வு” எனும் கட்டுரைகளில் சங்ககால இலக்கண, இலக்கியங்களில் காணப்படும் வட்டாரவழக்குக் கூறுகள் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. பேராசிரியர் பெ. மாதையன் “சங்க இலக்கியமும் வட்டார வழக்கும்” எனும் கட்டுரையில் திணை அடிப்படையில் காணும் வேறுபாடுகளை எடுத்துக்காட்டுகளோடு விளக்கியுள்ளார். இவ்வாய்வுக்குரிய ஆய்வுகள் அனைத்தும் துணை நூல் பட்டியலில் கொடுக்கப்பட்டுள்ளன.

## ஆய்வுத் தரவுகள்

சங்ககால இலக்கண, இலக்கியங்களில் வட்டார, சமூகவழக்குகள் குறித்த ஆய்வுகளில் இருந்தும் தொல்காப்பியரின் இலக்கண நூலாகிய தொக்காப்பியத்திலிருந்தும் பிற இலக்கியங்களிலிருந்தும் தரவுகள் பயன்படுத்தப்பட்டுள்ளன. தற்கால வட்டாரவழக்கு ஆய்வுகளில் இருந்தும் தரவுகள் சேகரிக்கப்பட்டுள்ளன. வட்டாரவழக்குகளை திசைச்சொற்கள் என்று தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார். மேலும் தற்கால வட்டாரவழக்கு அகராதிகளில் சங்ககால இலக்கியங்களில் உள்ள இலக்கியச்சொற்கள் பல பதிவாகியிருப்பது தமிழ் இன்றளவிலும் அழியாத செம்மொழி என எடுத்துக்காட்டுகிறது. வட்டாரவழக்கு அகராதிகளிடமிருந்து சேகரிக்கப்பட்ட தரவுகளும் தனி இயலில்

பட்டியலிடப்பட்டுள்ளன. இதில் பயன்படுத்தப்பட்டுள்ள பெரும்பாலான தரவுகள் இதுவரை வெளிவந்துள்ள நூல்கள், கட்டுரைகள் வெளிவந்திராத அறிக்கைகள், பதிப்பாசிரியர்கள் வெளியிட்டுள்ள பதிப்பு நூல்கள் ஆகியவைகளிலிருந்து சேகரிக்கப்பட்டுள்ளன.

## ஆய்வு எல்லை

சங்க இலக்கியங்களில் வட்டாரவழக்குச் சொற்கள் - ஓர் ஆய்வு எனும் தலைப்பில் ஆய்வு செய்யப்படுவதால் சங்ககால இலக்கண, இலக்கிய நூல்கள் ஆய்வு எல்லைக்குள் அடங்கும். மேலும், தற்கால வட்டாரவழக்கில் காணப்படும் சொற்களைச் சங்ககால இலக்கியச் சொற்களோடு ஒப்பிட்டுப் பார்த்தால்தான் சங்ககாலச் சொற்களின் தொடர்ச்சியையும், அவைகள் பயன்படுத்தப்படும் வட்டாரங்களையும் அறியமுடியும். எனவே, தற்கால வட்டாரவழக்குச் சொற்களும் ஆய்வு எல்லைக்குள் கொண்டுவரப்பட்டுள்ளன.

## ஆய்வு அணுகுமுறை

இதுவரை வெளிவந்துள்ள ஆய்வுநூல்கள், கட்டுரைகள் அறிக்கைகள் ஆகியவைகளில் இருந்து தரவுகள் சேகரிக்கப்பட்டுள்ளதால் இது ஒரு ஆய்வுகள் அடிப்படையில் நடத்தப்பட்டுள்ள ஆய்வாகும். சேகரிக்கப்பட்டுள்ள தரவுகள் வரலாற்று அடிப்படையில் நடத்தப்படவுள்ள வரலாற்றாய்வாகும். எனவே, இதை ஒரு வரலாற்றாய்வாகவே கருத வேண்டும். தமிழ்மொழியின் வட்டாரவழக்கு ஆய்வுகள் கள ஆய்வுகள் செய்து சேகரிக்கப்பட்ட தரவுகள் மூலமாக ஆராயும் கள ஆய்வு அணுகுமுறையில் நடத்தலாம். இதுவரை நடந்துள்ள ஆய்வுகளில் இருந்து தரவுகளைச் சேகரித்து ஒரு வரலாற்றாய்வாகவும் நடத்தலாம். இதில் இரண்டாவதாகக் கொடுக்கப்பட்டுள்ள அணுகுமுறை இந்த ஆய்வுக்கு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

## இயல்-1

## வட்டாரவழக்கு ஆய்வுகள் - தொல்காப்பியம் முதல் தற்காலம் வரை

வடவேங்கடம் முதல் தென்குமரி வரை பேசப்பட்ட தமிழ்மொழிக்கு எழுத்துவழக்கு அல்லது இலக்கியவழக்கு, பேச்சுவழக்கு என இருவகைப்பட்ட வழக்குகள் இருந்ததைத் தொல்காப்பியப் பாயிரம் எடுத்துரைக்கிறது. மேலும் தொல்காப்பியர் தாம் இயற்றிய இலக்கண நூலுக்கு இலக்கியவழக்கு, பேச்சுவழக்கு ஆகிய இரண்டையும் ஆராய்ந்து, அவைகளை ஆதாரமாக வைத்துத் தன் இலக்கண நூலை எழுதினார் என்பதும் பாயிரம் கூறும் செய்தியாகும். ஆனால் பேச்சுவழக்கின் அங்கங்களாகத் திகழும் வட்டாரவழக்கு, சமூகவழக்கு, தொழில்வழக்கு எனும் வழக்குகளைப் பற்றி நேரடியாகத் தொல்காப்பியர் எந்தச் செய்யுளிலும் குறிப்பிடவில்லை. தமிழ்மொழியில் காணலாகும் சொற்களை இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் என நான்கு வகைகளாகப் பிரித்துக்காட்டித் தனித்தனிச் செய்யுட்களின் மூலம் அவைகளை விளக்கவும் செய்கின்றார். திசைச்சொல் என்பது செந்தமிழ் சேர் பன்னிரண்டு நாடுகளில் வழங்கிய சொற்கள் என்று கூறும் தொல்காப்பியர் இந்தச் சொல் இந்த வட்டாரத்திற்குரிய சொல் அல்லது இத்தகைய இலக்கணக்கூறு இந்த வட்டாரத்திற்குரிய இலக்கணக்கூறு என வேறுபடுத்தியோ அல்லது தனிப்படுத்தியோ காட்டவில்லை. ஆனால் கிளைமொழிச் சிந்தனைகளை அவரது வேற்றுமை மயங்கியல், இடையியல், உரியியல் போன்ற இயல்களில் அவர் கூறும் கருத்துக்கள் மூலம் அறியமுடிகிறது. இருப்பினும் தெளிவாக அறுதியிட்டுக் கூற இயலவில்லை. பெயர்ச்சொற்களும், தொழிற்பெயர்களும் திசைச்சொற்களிலிருந்தும் வடமொழியிலிருந்தும் செய்யுட்களில் பயன்படுத்தப்பட முடியும் என்று உரையாசிரியர்கள் கருதினாலும் தொல்காப்பியர் தனது இலக்கணக் கோட்பாடுகளில் தெளிவாக வரையறுத்துக் கூறவில்லை. இருப்பினும் பேச்சுவழக்கில் உள்ள சொற்கள் வட்டாரவழக்குச் சொற்களாக இருப்பினும் தேவைப்படும்பொழுது அத்தகைய சொற்களைச் செய்யுளில் பயன்படுத்துவதில் தவறில்லை என்பது அவரது கருத்தாகும். ஆனால் தொல்காப்பியர் வட்டாரவழக்குச் சொற்களைத் திசைச்சொல் என்றே குறிப்பிட்டுள்ளார். எடுத்துக்காட்டாக நெய்தல் நில மக்களைப் பாடவந்த புலவரது பாடலில் நெய்தல் வட்டாரவழக்குச் சொற்களாக விளங்கும் சொற்கள் அவைகளின் பொருளோடு தேவைப்பட்ட இடத்தில் பயன்படுத்திக் கொள்வதில் தவறில்லை, அத்தகைய இடங்களில் நெய்தல் நிலச் சொற்களுக்குப் பதிலாக வேறு வழக்குச்சொற்களையோ அல்லது

பொதுப்பேச்சுச்சொற்களையோ பயன்படுத்தினால் அச்சொல்லின் குறிப்பிட்ட பயன்பாட்டையும் பொருளையும் அச்சொல் இழந்துவிடுவதால் பொருள் மாறுபட்டுவிடும். தொல்காப்பியத்தில் காணப்படும் பல சொற்களை தொல்காப்பியத்திற்கு உரை எழுதிய உரையாசிரியர்கள் அடையாளங்கண்டு அவைகள் எந்த வட்டாரத்தில் வழங்கப்பட்ட சொற்கள் என்பதையும் கூறியுள்ளனர். பேராசிரியர் தெ. பொ. மீனாட்சிசுந்தரன் (1965: 196-197), பேராசிரியர் ரா. பி. சேதுப்பிள்ளை (1956: 32), பேராசிரியர் ஜெ. நீதிவாணன் (2007: 76-77) ஆகியோர் தங்களது ஆய்வு நூற்களில் அத்தகைய சொற்களைப் பட்டியலிட்டுள்ளனர்.

தமிழின் சொற்களை ஒன்றுதிரட்டி வகைப்படுத்திப் பொருள் விளக்கத்துடன் தொகுக்கப்பட்ட நூல் சென்னைப் பல்கலைக்கழகம் வெளியிட்ட தமிழ்ப் பேரகராதி (1926-1934). ஆறு பகுதிகளையும் ஒரு பின்னிணைப்பையும் கொண்ட இந்த நூலில் தமிழில் பயன்படுத்தப்படும் 1,24,000 சொற்கள் அகர வரிசையில் பதிப்பிக்கப்பட்டுள்ளன (வையாபுரிப்பிள்ளை, 1926-1934). இதுவே தமிழுக்குரிய மிகப் பெரிய அகராதி நூலாகும். இந்த அகராதியில் அதன் சொற்களை தமிழ் வழக்குகள் அடிப்படையில் அதன் தொகுப்பாளர்கள் சொற்களை வேறுபடுத்திக் காட்டியுள்ளனர். அந்த அகராதியில் அடையாளங்காணப்பட்டுள்ள வட்டார, சமூக, தொழில் வழக்குச்சொற்களின் தலைப்புகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன:

## தமிழ்ப்பேரகராதியில் உள்ள வழக்காற்று வகைகள் (1926 - 34)

**வட்டாரங்கள்: கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு**

| வட்டார வழக்குகள் | சமுதாய வழக்குகள் | தொழில் வழக்குகள் | மதச்சார் வழக்குகள் | பிற..பொது வழக்குகள் |
|---|---|---|---|---|
| ஆனைமலை வழக்கு | பரதர் வழக்கு | கப்பல் மாலுமிகள் | கிறித்தவர் வழக்கு | அந்தந்தப் பகுதி வழக்கு |
| இராமநாதபுரம் வழக்கு | அந்தணர் வழக்கு | நெசவு | முகம்மதியர் வழக்கு | இழிசொல் |
| இலங்கை வழக்கு | இருளர் வழக்கு | படைவீரர்கள் | ரோமன் கத்தோலிக்கர் வழக்கு | கல்வெட்டு வழக்கு |
| கடப்பா வழக்கு | கள்ளர் வழக்கு | வணிகம் | வைணவர் வழக்கு | கொடுந்தமிழ் வழக்கு |
| கொடைக்கானல் வழக்கு | காடர் வழக்கு | | வேதாகமம் வழக்கு | தென்னிந்திய வழக்கு |
| கோயம்புத்தூர் வழக்கு | குறவர் வழக்கு | | | பழமொழி வழக்கு |
| சித்தூர் வழக்கு | கோமுட்டி வழக்கு | | | பிரெஞ்சு இந்திய வழக்கு |
| செங்கல்பட்டு வழக்கு | செம்படவர் வழக்கு | | | பேச்சு வழக்கு |
| செட்டிநாடு வழக்கு | நாட்டுக்கோட்டை செட்டியார் வழக்கு | | | மகாராஸ்ட்டிர வழக்கு |
| சென்னை வழக்கு | பரவர் வழக்கு | | | மலேசிய வழக்கு |
| சேலம் வழக்கு | பறையர் வழக்கு | | | வட்டார வழக்கு |

| | | | | |
|---|---|---|---|---|
| தஞ்சாவூர் வழக்கு | புலையர் வழக்கு | | | வட இந்திய வழக்கு |
| தரங்கம்பாடி வழக்கு | மறவர் வழக்கு | | | |
| திருச்சிராப்பள்ளி வழக்கு | வள்ளுவர் வழக்கு | | | |
| திருநெல்வேலி வழக்கு | வாணியச்செட்டியார் வழக்கு | | | |
| திருவிதாங்கூர் வழக்கு | வில்ளி வழக்கு | | | |
| தென் ஆற்காடு வழக்கு | ஸ்மார்த்தா அந்தணர் வழக்கு | | | |
| நாஞ்சில் நாடு வழக்கு | | | | |
| புதுக்கோட்டை வழக்கு | | | | |
| புதுச்சேரி வழக்கு | | | | |
| மதுரை வழக்கு | | | | |
| யாழ்ப்பாண வழக்கு | | | | |
| வட ஆற்காடு வழக்கு | | | | |

தொல்காப்பியம் ஒரு இலக்கணநூல் என்பதால் பொதுவான இலக்கணக் கோட்பாடுகளைப் பெரும்பாலும் கொண்டிருக்கும். பல வட்டாரங்களில் பல குழுக்களாக அல்லது சமூகங்களாகப் பலதரப்பட்ட தொழில் புரிந்து வாழும் மக்களின் தனித்தன்மைகள் மொழியியல், சமூகவியல், பண்பாட்டியல் கூறுகள் அனைத்தும் இங்கொன்றும் அங்கொன்றுமாக வெளிப்படுத்தப்பட்டிருப்பினும் அவைகள் அனைத்தையும் ஒன்றுதிரட்டி எந்த நிலத்தில் எந்த வழக்கு பயன்படுத்தப்பட்டது என்று தெளிவாகக் கூறமுடியவில்லை. இருப்பினும் சொல்லின் பயன், பொருள், பயன்படுத்திய புலவர் வாழ்ந்த பகுதி, அவரால் பாடப் பட்ட அரசர்கள் எனும் பின்புலங்களைப் பயன்படுத்தி ஒருவாறு அச்சொல் எந்தக்கிளை மொழியைச் சார்ந்தது என்று ஒரு முடிவிற்கு வர வாய்ப்புண்டு. ஆனால், தொல்காப்பியர் எந்த ஒரு சொல்லையும் ஒரு குறிப்பிட்ட வட்டார மக்களால் அல்லது ஒரு குறிப்பிட்ட சமூகத்தைச் சார்ந்த மக்களால் பேசப்படும் அல்லது பேசப்பட்ட சொல் என வரையறுத்துக் கூறவில்லை என்பதனால் அத்தகைய கிளைமொழி ஆய்வு முடிவுகளில் தவறாகப் பதிவு செய்வதற்கும் வாய்ப்புகள் உள்ளன. தொல்காப்பிய உரையாசிரியர்கள் அழிவழக்கு, இழிவழக்கு, சேரிவழக்கு என்று வழக்குச்சொற்களை ஒதுக்குவதுபோல் தொல்காப்பியர் எந்த ஒரு அத்தியாயத்திலும் அல்லது சூத்திரத்திலும் எதையும் ஒதுக்கவில்லை என்றே தோன்றுகிறது. பேச்சுமொழி அல்லது பேச்சுவழக்கு என்பது காலத்தால் மாறுபடும் தன்மையுள்ளது. அத்தகைய மாறுதல்கள் காலப்போக்கில் எழுத்துவழக்கிலும் ஊடுருவிவிடும் என்பதும் வரலாற்று மொழியியல் ஆய்வுகள் உணர்த்துகின்றன. தொல்காப்பியத்திற்குப் பின்பு தோன்றிய சங்க இலக்கியங்களைப் படைத்த ஆசிரியர்களின் காலத்தை வரலாற்று மொழியியல் ஆய்வுமூலம் ஒருவகையாகக் கணித்துக் கூற முடியும். இருப்பினும் அவர்கள் எந்த இடத்தைச் சார்ந்தவர்கள் என்பதற்குரிய வலுவான ஆதாரங்கள் அடையாளங்காணப்படவில்லை. சங்க இலக்கியப் புலவர்களின் பெயர்கள் தெரிந்தாலும் ஒரு சிலரின் பெயரோடு மட்டுமே புலவர்களுடைய ஊர் அல்லது அவர்கள் வாழ்ந்த நாடு பதிவு செய்யப்பட்டுள்ளது. இருப்பினும் ஒருவருடைய வட்டார, சமூக, தொழில் வழக்குகளின் தாக்கம் அவர்களின் படைப்புகளில் உள்ளதா? இல்லையா? எனக் கண்டறியும் தீவிர ஆழமான ஆய்வுகள் இன்றுவரை நடத்தப்படவில்லை. சில புலவர்கள் பாடிய பாடல்களில் காணப்படும் அரசர்கள் பெயர்கள், பரிசில் கொடுத்த புரவலர்கள் பெயர்கள் எனும் சில தரவுகளை வைத்து ஒரு முடிவுக்கு வர இயலாது. ஏனெனில், புலவர்களை அவர்கள் வாழும் ஊர், நாடு எனும் அடிப்படையில் பிரித்துப் பார்க்காது 'தமிழ்ப் புலவர்' எனும் பொது நிலையிலேயே எல்லா

அரசர்களாலும், புரவலர்களாலும் அவர்கள் பார்க்கப்பட்டனர். எல்லா நாட்டுப் புலவர்களும் ஒரே அளவில் அல்லது சம அளவில் மதிக்கப்பட்டார்கள் என்பதில் ஐயமில்லை. புலவர்களுக்குக் கொடுக்கப்படும் பரிசில் அவர்களை வரவேற்று உபசரிக்கும் முறைகளிலும் வேற்றுமை காட்டவில்லை என்பது தமிழ்மொழிக்கும் புலவர்களுக்கும் கிடைத்த மரியாதை என்றே கூறவேண்டும்.

ஒரு சில எடுத்துக்காட்டுகள் புலவர்கள் அல்லது உரை ஆசிரியர்கள் பயன்படுத்திய சொற்கள் மூலம் அவர்கள் வாழ்ந்த பகுதியை அடையாளங்காண முடியும் எனவும் ஆய்வாளர்கள் கருதுகின்றனர். எடுத்துக்காட்டாகஇ தொல்காப்பிய உரையாசிரியர்களுள் ஒருவரான இளம்பூரணர் (கி.பி. 11-ஆம் நூற்றாண்டு) கைவாய்க்கால் எனும் ஒரு சொல்லைப் பயன்படுத்தியுள்ளார். இந்தச் சொல்லின் அடிப்படையில் இளம்பூரனர் சோழநாட்டின் உறையூர்ப் பகுதி அல்லது கருவூர்ப் பகுதியைச் சார்ந்தவராக இருக்கக் கூடும் என தமிழறிஞர் மு அருணாசலத்தை மேற்கோள் காட்டி விளக்கம் தருகின்றார் முனைவர் ச. வே. சுப்பிரமணியன்:

> **“இளம்பூரனர் சோழநாட்டைச் சார்ந்தவர். அதோடு, உறையூர்ப் பகுதி அல்லது கருவூர்ப்பகுதியைச் சார்ந்தவராக இருக்கலாம் என்பது அவர் விளக்கங்களிலிருந்து தெரிகிறது. கைக்கிளை என்பதன் பொருண்மை யாதோ எனின், கை என்பது சிறுமை பற்றி வரும். அது தத்தம் குறிப்பிற் பொருள் செய்வதோர் இடைச்சொல், கிளை**
>
> **என்பது உறவு. பெருமையில்லாத தலைமக்கள் உறவு என்றவாறு- கைக்குடை, கைஏடு, கைவாள், கையொலியல், கைவாய்க்க்கால் எனப் பெருமையில்லாதவற்றை வழங்குப ஆதலின் என்று எழுதுகின்றார். கைக்குடை, கைவாள் என்ற தொடர்கள் எங்கும் வழங்குமாயினும், கைவாய்க்கால் என்பது இன்றும் சோழநாட்டில் மட்டுமே சிறு வாய்க்காலைக் குறிப்பிடுவதற்கு வழங்கும் பெயராகும். இவர் சோழநாட்டினர் என்ற கருத்துக்கு இது பின்னும் ஆதரவு தருகிறது”**
>
> **- ச.வே. சுப்பிரமணியன், 2008: 18**

மேலும், தற்காலக் கொங்குநாட்டு வழக்கில் காணும் கும்மாயம் ‘சிறுவர்கள் விளையாடும் ஒரு வகைவிளையாட்டு’ என்ற சொல் பதிற்றுப்பத்தில் உள்ளது எனவும் கூழை ‘குட்டையான நபர்’ எனும் சொல் அகநானூற்றில் உள்ளது எனவும் சுளகு ‘தானியங்களைச் சுத்தம் செய்ய உதவும் பொருள்’ என்ற சொல்

புறநானூற்றிலும் காணக்கிடக்கின்றன என்கின்றார் பி.லூர்துசாமி (1949: 457-459). தென்மாவட்டங்களில் பயன்படுத்தும் விடலை 'திருமணப்பருவத்தில் உள்ள ஆண்மகன்' என்ற சொல் அகநானூற்றில் அதே பொருளில் வந்துள்ளது. நாத்தனார் 'கணவரின் தங்கை' என்ற சொல் சிலப்பதிகாரத்தில் காணப்படுகிறது. இலக்கிய வழக்கில் காணும் கீழ்க்கண்ட சொற்கள் இன்றளவிலும் ஏதாவது ஒரு வட்டார வழக்கில் காணப்படுகின்றன:

| | | |
|---|---|---|
| அகம் 'வீடு, மனம்' | - | அகத்துக்காரர் 'கணவர்' (அந்தணர் வழக்கு), அகஞ்சேரனும் 'வீடு சென்றடைய வேண்டும்' (கொங்குநாட்டு வழக்கு) |
| அஞ்ஞை 'தாய்' | - | ஆஞா 'தந்தை' (புதுக்கோட்டை வழக்கு) |
| அந்தணர் 'வேதம் ஓதும் ஒருவகைச் சமூகம்' | - | அந்தணர் 'வேதம் ஓதும் உயர் சமூகத்தினர்' |
| அடிசில் 'சோறு' | - | அக்கார அடிசில் 'அரிசியில் தயாரிக்கப்படும் ஒருவகை உணவு' (அந்தணர் வழக்கு) |
| ஆண்டை 'ஆங்கே' | - | அந்தாண்ட 'அங்கே' (தொண்டைமண்டல வழக்கு) |
| உது 'இடைச் சுட்டு' | - | உது 'இடைச் சுட்டு' (இலங்கை யாழ்ப்பாண வழக்கு) |
| உமக்கு (நுமக்கு) | - | உமக்கு (தென்மாவட்ட வழக்கு) |
| உருளி 'உருளை, சக்கரம' | - | உருளி, உருண்டை வடிவப் பித்தளை அல்லது வெண்கலப் பாத்திரம் (தென் மாவட்ட வழக்கு) |
| உழிஞை 'முடக்கத்தான்' | - | உழிஞை 'முடக்கத்தான்' (நாஞ்சில் நாட்டு வழக்கு). மருந்தாகப் பயன்படும் ஒருவகைக் 'கொடி' |
| எ.்.கு 'கூர்மை, வேல், கத்தரி' | - | எக்கு 'உலோக வகை' |
| எறி உளி 'எறிகின்ற உளி ஓர் ஆயுத வகை' | - | எறி உளி பெரியவகை மீன்களைப் பிடிக்கப் பயன்படும் கருவி (மீனவர் வழக்கு) |
| கடுவன் 'ஆண் குரங்கு' | - | கடுவன் 'ஆண் பூனை' (நாஞ்சில் நாட்டு வழக்கு) |
| கமுகு 'பாக்கு மரம்' | - | கமுகு 'பாக்கு மரம்' (நாஞ்சில் நாட்டு வழக்கு) |
| கள்வர் 'பாலை நில மக்கள்' | - | கள்ளர் 'ஒருவகைச் சமூகம்' (தென் மாவட்டங்கள்) |
| குடி 'ஒரு சமூகம்' | - | பறக்குடி 'பறையர் இனத்தவர் வாழும் பகுதி' (தென் மாவட்டங்கள்) |

| | | |
|---|---|---|
| குறவர், குறத்தியர் ‘குறிஞ்சி நில மக்கள்’ | - | குறவர், குறத்தியர் ‘ஒருவகைச் சமுகத்தார்’ |
| கேணி ‘கிணறு, நீர் ஊறும் இடம்’ | - | கேணி ‘கிணறு’ (நடுநாட்டு வழக்கு) |
| தெங்கு ‘தென்னை மரம்’ | - | தெங்கு ‘தென்னை மரம்’ (நாஞ்சில் நாட்டு வழக்கு) |
| பட்டினம் | - | பட்டினம் ‘மீனவர் வாழும் ஊர்’ (தொண்டைமண்டல வழக்கு) |
| பனம் போந்தை ‘பனைமரத்தின் குருத்தோலை’ | - | போந்தை ‘ஒருவகைப் பனைமரம்’ (கொங்கு நாட்டு வழக்கு) |
| பாணர் ‘பாணர் இனம்’ | - | பாணர் ‘ஒருவகைச் சமூகம்’ (நாஞ்சில் நாடு) |
| பார்ப்பார் ‘அந்தணர் | - | பார்ப்பனர் ‘அந்தணர்’ சமூகத்தின் வேறு பெயர்’ |
| பொழுது ‘சூரியன்’ | - | பொழுதடைய (பொழுது ு அடைய) ‘சூரியன் மறையும் நேரம்’ (தென்மாவட்ட வழக்கு) |
| மறவர் ‘பாலை நில மக்கள்’ | - | மறவர் ‘ஒருவகைச் சமூகம்’ (தென் மாவட்டம்) |
| மனை ‘வீடு’ | - | அரிவாள் மனை ‘வீட்டில் காய்கறி வெட்டப் பயன்படும் ஒருவகைக் கருவி’ (மனை - ‘வீடு’ - தென்மாவட்ட வழக்கு) |
| மேனி ‘நிறம், வடிவு’ | - | மேனி ‘உடல்’, பிறந்தமேனி ‘ஆடையில்லாத உடல்’ (தென் மாவட்ட வழக்கு) |
| மோட்டு இரு வரால் ‘பெரிய ஓட்டினையுடைய வரால் மீன்’ | - | மோட்டெராலு ‘இறால் வகை’ (மீனவர் வழக்கு) |
| மோதகம் ‘ஒருவகைத் தின்பண்டம்’ | - | மோதகம் ‘விநாயகருக்குப் படைக்கப்படும் கொளுக்கட்டை’ (நாஞ்சில் நாட்டு வழக்கு) |
| யாடு ‘ஆடு’ | - | ஆடு (நாஞ்சில் நாட்டு) |
| யாமம் ‘நடு இரவு’ | - | சாமம், நடுச்சாமம் ‘நடு இரவு’ (தென் மாவட்ட வழக்கு) |
| வட்டி ‘கடகப் பெட்டி, கூடை’ | - | வட்டி ‘பனை ஓலையில் கருப்புக்கட்டி வைக்கப் பின்னப்படும் பெட்டி வகை’ (தென் மாவட்ட வழக்கு) |
| வட்டில் ‘தட்டு’ | - | வட்லு ‘சாப்பாட்டுத் தட்டு’ (தென் மாவட்ட வழக்கு) |
| வலையன் ‘மீனவர்’ | - | வலையன் ‘மீனவர்களில் ஒரு சமூகம்’ (இராமநாதபுரம் மாவட்டம்) |
| வள்ளுவர் ‘திருவள்ளுவர்’ | - | வள்ளுவர் ‘சோதிடம் சொல்லும் ஒருவகைச் சாதி’ (தென் மாவட்டங்கள்) |

| | | |
|---|---|---|
| வேடர் 'குறிஞ்சி நில மக்கள்' | - | வேடர் 'வேட்டையாடி வாழும் ஒருவகைச் சமூகம்' (நாஞ்சில் நாடு) |
| வேடுவர் 'முல்லை நில மக்கள்' | - | வேட்டுவர் 'வேட்டையாடி வாழும் ஒருவகைச் சமூகம்' (நாஞ்சில் நாடு) |

தொல்காப்பிய உரையாசிரியர் சேனாவரையர் "செந்தமிழ்சேர் பன்னிருநிலத்தும்" என்ற சூத்திரத்திற்கு உரை எழுதும் பொழுது தென்பாண்டி நாட்டார் ஆ, எருமை என்பனவற்றைப் பெற்றம் என்றும் தம்மாமி என்பதைத் தந்துவை என்றும் வழங்குவர் என வட்டாரவழக்குகளுக்கு எடுத்துக்காட்டுகள் கொடுத்துள்ளார். நன்னூலுக்கு உரையெழுதும் சங்கர நமச்சிவாயர்

> **"இவற்றுள், செந்தமிழ்ப் பாண்டி நாட்டின் தெந்திசைக் கண்ணதாகிய தென்பாண்டி நாட்டார் ஆவினைப் பெற்றம் என்றும் சோற்றைச் சோன்றி என்றும், குட்ட நாட்டார் தாயைத் தள்ளி என்றும், குட நாட்டார் தந்தையை அச்சன் என்றும், கற்கா நாட்டார் வஞ்சரைக் கையர் என்றும், வேணாட்டார் தோட்டத்தைக் கிழார் என்றும், பூழி நாட்டார் சிறு குளத்தைப் பாழி என்றும், அருவா நாட்டார் செறுவைச் செய் என்றும், சிறுகுளத்தைக் கேணி என்றும், அருவா வடதலையார் புளியை எகினம் என்றும், சீத நாட்டார் தோழனை எலுவன் என்றும், தோழியை இருளை என்றும் வழங்குவர்"**
>
> **- ந. குமாரசாமி ராஜாஇ 1972**

என்று கூறுகின்றார்.

பேச்சுவழக்கு என்பது ஐரோப்பியர்களின் காலம் வரை ஆய்வுக்கும் எழுத்து வழக்கிற்கும் அப்பாற்பட்ட ஒரு வழக்காகவே இருந்து வந்தது. கி.பி. 16-ஆம் நூற்றாண்டு முதல் ஐரோப்பியர்களின் வருகைக்குப்பின் பேச்சுவழக்கிற்கென்று ஒரு தனியிடம் கொடுக்கப்பட்டு, மொழியியல் ஒரு தனித்துறையாக நிறுவப்பட்ட பின்பு பேச்சுவழக்கும் பேச்சுவழக்கின் கூறுகளான வட்டாரவழக்கு, சமுதாயவழக்கு, தொழில்வழக்கு போன்ற வழக்குகள் மொழியியல் ஆய்வின் முக்கியமான அங்கமாகத் திகழ்கின்றன. தமிழின் பேச்சுவழக்கிற்கும் எழுத்துவழக்கிற்கும் இடையில் ஒரு நீண்ட ஆழமான இடைவெளி உள்ளது. தமிழின் எழுத்துவழக்கிற்கும் பேச்சுவழக்கிற்கும் உள்ள வேறுபாடுகளைப் பற்றி மாத்தாயு (1942: 992) எனும் அறிஞர் இவ்வாறாகக் கூறுகின்றார்: மாதக்கணக்கில் இலக்கண, இலக்கியங்களைப் படித்த ஒரு வெளிநாட்டினர் மக்கள் பேசும் மொழியைக் கேட்கும்பொழுது எதுவுமே அவர்களுக்குப் புரிவதில்லை. கிராமப்புரங்களில்,

வயல்களில், கடைத்தெருக்களில் மற்றும் சாலைகளில் மக்கள் பேசும் மொழி தாங்கள் கற்ற மொழிதானா என்று திகைக்க வைக்கின்றது.

> **“It is a common experience for the foreigner learning Tamil to discover to his dismay that after months of study with grammar and reader and munshi, he is able to understand scarcely anything of the language spoken around him In the villages and in the fields, in the bazaars and the highroads, he hears a language spoken which he finds it hard to believe is the language of his study”**
>
> **- Gordon Mathews, 1942: 992**

ஐரோப்பியர்களின் வருகை தமிழ்மொழி ஆய்வில் ஒரு புதிய அத்தியாயத்தைத் தொடங்கியது எனலாம். கிறித்தவ மதத்தைத் தமிழர்களிடையே போதிக்க விரும்பிய ஐரோப்பியப் பாதிரிமார்கள், மக்களை நேரடியாக அணுக விரும்பினர். அவ்வாறு நேரடியாக அணுகுவதற்கு பேச்சுவழக்கைப் பயன்படுத்துவதே சிறந்த வழியாகக் கருதினர். ஆகையால், மக்களோடு நெருங்கிப் பழகி அவர்கள் பேசும் மொழி வழக்கினை அப்படியே கற்கத்தொடங்கினர். இவ்வகை ஆய்வுக்கு முன்னோடியாகத் திகழ்ந்தவர் ஹென்றிக் ஹென்றிக் (Fr. Henrique Henriques - 1520-1600) எனும் போர்த்துக்கீசியப் பாதிரியார் ஆவார். இவர் 1546-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 17-ஆம் நாள் இந்தியாவுக்கு வந்தார். இவருடைய வருகைக்கு முன் தூய பிரான்சிஸ் சேவியர் (St. Francis Xavier) அவர்கள் கி.பி. 1546-இல் தற்பொழுதுள்ள தூத்துக்குடி மாவட்டக் கடற்கரைப் பகுதிகளில் மீன்பிடிதொழில் புரிந்து வரும் பரதர் அல்லது பரதவர் இன மக்களிடையே தொண்டாற்றிக்கொண்டு கிறித்தவ மதத்தைப் போதித்துக் கொண்டிருந்தார். அதே பகுதிக்கு வந்து தூத்துக்குடிக்கு அருகேயுள்ள புன்னைக்காயலில் தங்கியிருந்த ஹென்றிக் ஹென்றிக்கை (Fr. Henrique Henriques) பரதவமக்களிடம் பழகி அவர்களுடைய பேச்சுத்தமிழைக் கற்று அதன் மூலம் கிறித்தவ மதத்தைப் போதிக்குமாறு தூய பிரான்சிஸ் சேவியர் அவருக்கு அறிவுரை கூறினார். அதன்படி பரதவமக்கள் பேசும் பேச்சுத் தமிழைக் கற்று அதை ஆதாரமாகக் கொண்டு கி.பி. 1549-ஆம் ஆண்டு தமிழ்மொழிக்கு ஒரு இலக்கணம் எழுதத்தொடங்கி கி.பி. 1552-இல் அதை எழுதி முடித்தார். பின்னர், 1565-இல் அதைத் திருத்தி எழுதினார். அர்தெ டி லிங்குவ

மளவர் (Arde de Lingua Mulaur) எனும் இவருடைய நூலே, பேச்சுமொழியின் அடிப்படையில் எழுதப்பட்ட முதல் இலக்கண நூலாகும்.

> **"For writing his grammar, he "had drawn the basics from the language spoken by the Paravas"**
>
> **- Stephen, 2006: 71**

எனவே, பேச்சுத் தமிழில் எழுதப்பட்ட முதல் தமிழ் இலக்கணநூல் பரதவர் இன மக்கள் பேசும் பேச்சுத்தமிழின் அடிப்படையில் எழுதப்பட்ட நூலாகும். இவரைப் பின்பற்றி காஸ்பர் த அகுய்லர் (Fr. Gasper da Aguilar - 1588-1648) மேலும் ஒரு விரிவான இலக்கணத்தை எழுதினார். ஆனால் இவர்களால் எழுதப்பட்ட இலக்கண நூல்கள் கைப்பிரதிகளாகக் கிறித்தவப் பாதிரிமார்களின் பயன்பாட்டில் மட்டும் இருந்தது.

டச்சு நாட்டைச் சேர்ந்த மத போதகர் பிலிப்பஸ் பால்டியஸ் (Philippus Baldeaus-1632-1672) எழுதிய இலக்கணநூல் கி.பி. 1672-இல் அம்பலக்கட்டாவில் இருந்த அச்சுக் கூடத்தில் அச்சிடப்பட்டு வெளியிடப்பட்டது. ஐரோப்பிய மொழியில் எழுதப்பட்டு வெளிவந்த முதல் தமிழ் இலக்கண நூல் இதுவே ஆகும். இவ்வாறு பேச்சுவழக்கு ஆய்வுகளுக்கு வித்திட்ட போர்த்துக்கீசிய, டச்சுப் பாதிரிமார்களைப் பின்தொடர்ந்து மற்ற ஐரோப்பியப் பாதிரிமார்களும் தமிழ்மொழியின் பேச்சுவழக்கிற்கு முக்கியத்துவம் கொடுத்து அவற்றை மையமாக வைத்து தங்களின் இலக்கண மற்றும் அகராதி நூல்களை எழுதத் தொடங்கினர். முதல் தமிழ் - போர்த்துக்கீசிய அகராதியை இறைத்தந்தை அந்தெம் த பிரோயன்கா (Fr. Antem de Proenca) எழுதினார். கி.பி. 1679-இல் கொச்சி அம்பலக்கட்டாவிலிருந்து வெளியிடப்பட்டது. அதன் பின்னர் கி.பி. 1712-இல் பர்தோல்மியஸ் ஸீகென்பல்க் (Bartholmeus Ziegenbalg) என்பவர் ஒரு அகராதியை உருவாக்கினார். இது அச்சிடப்படாமலேயே இருந்துவிட்டது. கி.பி. 1728-இல் தந்தை கான்ஸ்டாண்டினஸ் ஜோஸப் பெஸ்கி (Fr. Constantinus Joseph Beschi) இலத்தீன் மொழியில் தமிழுக்கு ஒரு இலக்கணநூல் எழுதினார். இது 1806-இல் கிறிஸ்டோபர் ஹென்றி ஹோஸ்ட் (Christopher Hentry Horst) என்பவரால் ஆங்கிலத்தில் "Grammar of the Common Dialect of the Tamil called கொடுந்தமிழ் composed for the use of the missionaries of the Society of Jesus" எனும் தலைப்பில்

மொழிபெயர்க்கப்பட்டு வெளியிடப்பட்டது. பின்பு 1855-இல் இறைத்தந்தை ஜி.யு. போப் (Rev. G.U. Pope) அவர்கள் “A Tamil Hand-Bool or Full Introduction to the Common Dialect of that Language on the Plan of Ollendorf and Arnold, for the use of foreigners learning Tamil, and of Tamilians learning English; with copious vocabularies (Tamil-English and English-Tamil)” என்னும் தமிழ் இலக்கணநூலை எழுதி வெளியிட்டார்.

ஐரோப்பியப் பாதிரிமார்கள் தமிழைக் கற்க உதவியாக இருக்கும் நோக்கில் இந்நூல் எழுதப்பட்டதோடு, கொடுந்தமிழ் என்று பேச்சுத்தமிழை இந்நூலில் குறிப்பிட்டுள்ளார். தமிழகத்தில் பேசப்படும் தமிழ்மொழியின் தன்மை பற்றிக் கூறும்பொழுது் இந்தப்பகுதியில் இரண்டுவிதமான வழக்குகள் தமிழ்மொழிக்கு உள்ளன. இதில் ஒன்றை உயர்வான வழக்கு என்றும் மற்றொன்றைப் பொதுவான வழக்கென்றும் நான் அழைக்கின்றேன். சிலர் பொதுவழக்கிலிருந்து மாறுபட்டு வழங்கப்படும் வழக்கை இலக்கியவழக்கு என்று அழைக்கின்றனர். ஆனால், இத்தகைய இலக்கியவழக்கினைத் தமிழர்கள் தற்காலத்தில் பயன்படுத்துவதில்லை. எனவே, இத்தகைய வழக்கினை உயர்ந்தவழக்கு என அழைக்கலாம். இதைத் தமிழர்கள் ‘செந்தமிழ்’ எனக் கருதுகின்றனர். பொதுவாகப் பேசப்படும் தமிழ் வழக்கு ‘கொடுந்தமிழ்’ எனவும் அழைக்கின்றனர்.

**“In this region there are two dialects of the Tamil language: I would call one High, the other the common. Some not very correctly call that which differs from the common, the Poetical dialect. But since we see the Tamulians use that dialect, no so much in those writings which have trammels of metre, as in all others which by the old authors skilled in this tongue are composed in prose also. Which is especially to be seen in the comentaries of the poets, that dialect will be better named the more elegant, or high, that the poetic. The Tamulians however call this high dialect nre;jkpo;;;; and the common nfhLe;jkpo;: as if they call that the elegant Tamil, this the rough”**

**- Constantius Joseph Beschi, 1728: 2**

வட்டாரவழக்கு ஆய்வுகளில் மௌரிஸ் பிலிப்ஸ் (Maurice Phillips) என்பவரால் 1873-இல் “Tamil in the Salem district: A report prepared for the

Madras Government" (Indian Antiquary, Vol. 2:223-228) எனும் தலைப்பில் வெளியிடப்பட்ட ஆய்வும், ஏ,ஸி.பர்னெல் (A.C.Burnell) என்பவரால் 1876-இல் “Specimens of South Indian dialects - Tamil of Tanjore" எனும் தலைப்பில் வெளியிடப்பட்ட ஆய்வும் முன்னோடி ஆய்வுகளாகும். பேச்சுத்தமிழில் உள்ள சமுதாயவழக்குக் கூறுகளை 1670-ஆம் ஆண்டிலேயே தந்தை அந்தோனியோ த பிரயோங்க (Fr. Antem de Proenca) அவர்கள் அடையாளங்காட்டியுள்ளார்கள். தமிழ் பேசும் பிராமணர்கள் தங்களின் பேச்சுவழக்கில் சமஸ்கிருத மொழியினைக் கலந்து பேசி மற்ற மக்களின் பேச்சுவழக்கிலிருந்து வேறுபட்டு நிற்பதை எடுத்துக்காட்டியுள்ளார் (ஸ்டீபன், 2006:69).

**“Tamil Brahmins used Sanskrit words even in their ordinary conversation”**

**- Stephen, 2006:69**

ஜூல்ஸ் பிளாக் (Jules Block) 1910-இல் “Castes et dialects en tamoul” எனும் தலைப்பில் வெளியிட்ட ஆய்வுக் கட்டுரை தமிழ் சமுதாய மொழியியல் ஆய்வுகளில் ஒரு தனி இடத்தைப் பிடித்துள்ளது. கிறித்தவப் பாதிரிமார்கள் தமிழுக்கு ஆற்றியுள்ள தொண்டுகளைப் பற்றிக்கூறும் பொழுது ஜி.யு. போப் அவர்கள் கீழ்க்கண்ட கருத்தினைத் தெரிவித்துள்ளார்.

**“Christian Tamil, a dialect created by the Danish missionaries of Tranquebar; enriched by generations of Tanjore, German and other missionaries, modified, purified and refrigerated by swiss Renius and the very composite Tinnevelly school; expanded and harmonized by Englishmen, amongst whom Bower (a Eurosian) was Foreemost in his day; and finally, waiting now for the touch of some heaven – born genius among the Tamil community to make it as sweet and effective as any language on earth”.**

**- G.U. Pope, 1900: xii**

ஆர்.பி.சேதுப்பிள்ளையின் பாண்டியநாட்டுக் கிளைமொழி (Pandya Dialect of Tamil - 1949), செட்டிநாடும் தூயதமிழும் (Chettinad and pure Tamil - 1960) போன்ற ஆய்வுகள் தமிழ் வட்டாரமொழிகளைச் சங்ககால நாடுகளோடு ஒப்பிட்டுப் பார்ப்பனவாக அமைகின்றன. ஆர்.பி. சேதுப்பிள்ளையின் இலக்கியத்தமிழும்

பேச்சுத்தமிழும் (Tamil Literary and Colloquial - 1939, 1944-1945, 1953) பற்றிய ஆய்வுகள் எழுத்து வழக்கிற்கும் பேச்சுவழக்கிற்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை விளக்கும் ஆய்வுகளாகும்.

மொழியியல்துறை இந்தியப் பல்கலைக்கழகங்களில் நிறுவப்பட்ட பின்பு தமிழ்மொழியின் வட்டார, சமூக, தொழில் வழக்குகள் பற்றிய பற்பல ஆய்வுகள் நடத்தப்பட்டுள்ளன. இதில் அண்ணாமலைப் பல்கலைக்கழக மொழியியல் துறை முன்னோடியாகத் திகழ்ந்துள்ளது. அண்ணாமலைப் பல்கலைக்கழக மொழியியல் துறையில் முனைவர், ஆய்வியல் நிறைஞர், முதுகலைப்பட்ட ஆய்வுகளாகவும், பல்கலைக்கழக மானியக்குழுவின் நிதி உதவியுடன் பல திட்ட அறிக்கைகளாகவும் பல ஆய்வுகள் நடத்தப்பட்டுள்ளன. இவைகள் தவிர கேரளப்பல்கலைக்கழகம் (திருவனந்தபுரம்), டெக்கான்கல்லூரி (பூனா) (Deccan College - Poone), மத்தியப் பல்கலைக்கழகம் (ஹைதராபாத்) (Central University - Hyderabad), மதுரை காமராசர் பல்கலைக்கழகம், பாரதியார் பல்கலைக்கழகம், சென்னைப் பல்கலைக்கழகம் ஆகிய பல்கலைக்கழகங்களிலும் பல ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. தமிழகத்தில் உள்ள தமிழ் மக்கள் அல்லாது கேரளா, கர்னாடகம், ஆந்திரப்பிரதேசம், மகாராஷ்டிரம் ஆகிய மாநிலங்களிலும் புதுச்சேரி, அந்தமான் நிக்கோபார் தீவுகள் போன்ற யூனியன் பிரதேசங்களிலும் ஆய்வுகள் மேற்கொள்ளப்படப்பட்டுள்ளன. தமிழகத்தில் தமிழ்மொழி பேசும் பழங்குடி மக்களாகிய காணிக்காரன், முதுவன், கொள்ளிமலை மலையாளி, கல்வராயன்மலை மலையாளி, பச்சைமலை மலையாளி, பழியன் ஆகிய பழங்குடி மக்களின் பேச்சு வழக்குகளும் ஆய்வுசெய்யப்பட்டுள்ளன.

வெளிநாடுகளில் வாழும் தமிழர்களின் பேச்சு மொழிகளும் ஆராயப்பட்டுள்ளன. வெளிநாடு வாழ் தமிழர்களின் தமிழ்மொழி பற்றிய ஆய்வுகளில் இலங்கை முதலிடம் வகிக்கின்றது. இலங்கை தவிர மலேசியா, சிங்கப்பூர், பிஜி, மௌரிஸியஸ், இங்கிலாந்து, தென் ஆப்பிரிக்கா போன்ற நாடுகளில் வாழும் தமிழர்களின் மொழிவழக்கைப் பற்றியும் மொழிச்சூழல் பற்றியும் ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

சங்ககாலம் முதல் இலக்கியத் தமிழ் மட்டுமே முக்கியத்துவம் பெற்றிருந்த நிலை ஐரோப்பியர்களின் வருகைக்குப் பின் மாறி பேச்சுவழக்கும் மொழியின் அங்கம் என்று பேச்சுமொழிக்கு ஆய்வுகளுக்கு என்று ஒரு தனியிடம் கொடுக்கப்பட்டு ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டன. போர்த்துக்கீசிய, டச்சு மற்றும்

ஆங்கிலேயப் பாதிரிமார்களின் முயற்சியால் பேச்சுமொழியின் அடிப்படையில் இலக்கணங்கள் எழுதப்பட்டன. முதலில் அவர்களுடைய மொழிகளாகிய போர்த்துக்கீசியம், இலத்தீன், கிரேக்கம், டச்சுமொழி, ஆங்கிலம், பிரெஞ்சு போன்ற மொழிகளில் தமிழின் இலக்கண நூல்களை எழுதினார்கள். இது ஐரோப்பியர்கள் தமிழை எளிதில் கற்பதற்காக அவர்கள் எடுத்த முயற்சிகளாகும். தமிழ்மொழியில் ஓரளவு தேர்ச்சியடைந்த பின்னர், தமிழ்மொழியிலும் இலக்கணம் மற்றும் அகராதி நூல்களை எழுதினார்கள். தமிழின் அகராதியியல் தமிழையும், தமிழர்களின் பண்பாடு மற்றும் கலாச்சாரங்களையும் மிகவும் சிரமப்பட்டு படித்துத் தெரிந்துகொண்ட கிறித்தவர்களையே சாரும் என்கின்றார் பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை (1926-1934: 35).

> **The development of Tamil Lexicography “owes much to the earnest Christians who took all pain to master not only Tamil language, but also the manners and customs of the Tamil land and people”**
>
> **- Tamil Lexicon, 1926-34: XXXV**

முதல் மலபார் - ஆங்கிலம் அகராதி 1779-லும், முதல் ஆங்கிலம் - மலபார் அகராதி 1786-லும் ஜான் பிலிப் பேப்ரிஸியஸ் (Johan Phillip Fabriciuc) என்பவரால் எழுதப்பட்டது. பின்னர் 1826-இல் , இவர் ஜான் கிரிஸ்டோபர் பிரெய்தௌப்டுன் சேர்ந்து இலக்கியம் மற்றும் பொதுப்பேச்சுத்தமிழ் அடங்கிய 9,000 சொற்களைக் கொண்ட அகராதியை வெளியிட்டார். ஜே.பி. ராட்லர் (J.P. Rottler) 1830-இல் தமது தமிழ்-ஆங்கில அகராதியை நான்கு பகுதிகளாக வெளியிட்டார். இவருடைய அகராதியை அடியொற்றித்தான், இறைத்தந்தை எம்.வின்ஸ்லோ (Rev. M. Winslow) தன்னுடைய அகராதியை 1869-இல் வெளியிட்டார். இந்த அகராதியின் விரிவான அகராதிதான் இறைத்தந்தை பி. பெர்சீவல் (Rev. P. Perceival), இறைத்தந்தை எல். ஸ்பௌல்டின் (Rev. L. Spaulding) மற்றும் இறைத்தந்தை எஸ். ஹச்சிங்ஸ் (Rev. S. Hutchings) ஆகிய மூவரும் சேர்ந்து வெளியிட்ட 67,000-க்கும் மேற்பட்ட சொற்களைக் கொண்ட தமிழ் - ஆங்கில அகராதியாகும். இந்த அகராதி இலக்கியச் சொற்களையும் பேச்சுவழக்குச் சொற்களையும் கொண்ட ஐரோப்பியப் பாதிரிமார்களால் உருவாக்கப்பட்ட அகராதிகளுள் மிகப்பெரியதாகும். தற்காலத்தில் சென்னைப் பல்கலைக்கழகத்தில் பேராசிரியர் வையாபுரிப்பிள்ளையின் தலைமையில் உருவாக்கப்பட்ட

தமிழ்ப்பேரகராதி (1926-1934, ஆறு தொகுதிகள், ஒரு பின்னிணைப்பு) 1,24,000 சொற்களைக்கொண்டது. இந்த அகராதியிலும் இலக்கியச்சொற்கள் மட்டுமல்லாது, வட்டார, சமூக மற்றும் தொழில் வழக்குச்சொற்களும் கொடுக்கப்பட்டுள்ளன. செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டத்தில் உருவாக்கப்பட்ட தமிழ்ப்பேரகராதியிலும் (தேவநேயப் பாவாணர், 1985) பேச்சுவழக்குச் சொற்கள் இடம் பெற்றுள்ளன. க்ரியா வெளியிட்டுள்ள ‘தற்காலத் தமிழ் அகராதி’, தமிழ்-தமிழ்-ஆங்கிலம் (2008) விரிவாக்கப் பதிப்பில் 21,000 சொற்கள் கொடுக்கப்பட்டுள்ளன. இதில் 1,700 சொற்கள் இலங்கைத் தமிழ் வழக்குச் சொற்களாகும். கிரியாவின் அகராதியில் (2008: XXXii) “கிராமப்புறத்தில் வாழும் மக்களும் நவீனத் தமிழ்ச் சமூகத்தின் அங்கம் என்ற உண்மையை உள்ளடக்கியிருக்கிறது. அவர்களுடைய வாழ்க்கை முறையில் பயன்படுத்தப்படும் முக்கியமான சொற்கள் குறிப்பிட்ட ஒரு வட்டாரத்திற்கோ ஒரு சமூகத்திற்கோ உரியவையாக இல்லாமல் இருந்தால் அவையும் தேர்வு செய்யப்பட்டிருக்கின்றன” எனக் குறிப்பிடப்பட்டிருப்பதன் மூலம் வட்டாரவழக்குச் சொற்கள், சமூக வழக்குச் சொற்கள், தொழில் வழக்குச் சொற்கள் இந்த அகராதியில் இடம்பெறவில்லை என்பது தெளிவு. இதுவரை வெளிவந்துள்ள அகராதிகள் தமிழின் “பொதுப்பேச்சுத்தமிழ் வழக்குகளில்” உள்ள சொற்களை மட்டும் அங்கீகரித்துள்ளன. வட்டார, சமூக மற்றும் தொழில் வழக்குச்சொற்களை முழுமையாக ஏற்றுக்கொள்ளவில்லை.

வட்டாரங்கள் எனப்படுவது சங்ககாலத்தில் சேரர், சோழர், பாண்டியர் எனும் மூவேந்தர்களின் ஆட்சிக்குட்பட்டிருந்த பெரும்பிரிவுகளாகவும் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என ஐந்துவகை நிலப்பாகுபாட்டாலும் வேளிர்கள் எனப்படும் சிற்றரசர்களால் ஆளப்பட்ட தென்பாண்டி, குட்டம், குடம், கற்கா, வேண், பூழி, பன்றி, அருவா, அருவா வடதலை, சீதம், மலைநாடு, புனல்நாடு எனும் 12 சிறு நாடுகளாகவும் வரையறுக்கப்பட்டுள்ளன. தற்பொழுது தமிழகம் 33 மாவட்டங்களாகவும் 206 வட்டங்களாகவும் பிரிக்கப்பட்டுள்ளது. வட்டாரம் என்பது ஒரு நிலையான எல்லை வரம்புக்குள் இல்லாது காலப்போக்கில் மாறிக்கொண்டே வந்திருக்கிறது. எனவே, மௌரிஸ் பிலிப்ஸ் (Maurice Phillips) 1873-இல் ஆய்வு செய்த சேலம் மாவட்ட வழக்கும், ஏ.சி. பர்னல் (A.C. Burnell) 1876-இல் ஆய்வு செய்த தஞ்சாவூர் மாவட்ட வழக்கும், இன்றைய சேலம் மற்றும் தஞ்சாவூர் மாவட்ட வழக்குகளாகக் கருதமுடியாது. மேலும் சில மாவட்டங்களில் மாவட்டத்திற்குள்ளேயே தனித்தனி வட்டாரங்கள் உள்ளன. உதாரணமாக,

கன்னியாகுமரி மாவட்டத்தின் பகுதிகளை புறத்தாய நாடு (கன்னியாகுமரியும் அதன் சுற்றுபுறங்களும்) அகஸ்தீஸ்வரம், தோவாளை வட்டங்கள் உள்ளடக்கிய பெரும்பகுதி, மீதமுள்ள பகுதி நாஞ்சில் குடியரசு மற்றும் கல்குளம், விளவங்கோடு வட்டங்களை உள்ளடக்கிய பகுதிகள் வேணாடு என அழைக்கப்படுகின்றன (ஸ்டீபன் சாம், 1994: 10-11). இந்த நான்கு வட்டங்களில் அகஸ்தீஸ்வரம், தோவாளை வட்டங்கள் முந்தைய தென்பாண்டி நாட்டுப் பகுதிகளாகவும் கல்குளம், விளவங்கோடு வட்டங்கள் சேரநாட்டுப் பகுதிகளாகவும் கருதப்படுன்கிறன. மேலும் சில வட்டாரங்கள், பல மாவட்டங்களின் பகுதிகளை உள்ளடக்கியதாக உள்ளது. உதாரணமாக கொங்குவட்டாரம், கொங்குநாடு, கொங்கு மண்டலம் என்று அழைக்கப்படும் பகுதி "கோவை ஜில்லா முழுவதும், சேலம் ஜில்லாவில் ஓமலூர், திருச்செங்கோடு, சேலம், நாமக்கல் என்ற தாலுக்காக்களும், திருச்சி ஜில்லாவில் கரூர், குளித்தலை என்ற இரண்டு தாலுக்காக்களும், மதுரை ஜில்லாவில் பழநி, திண்டுக்கல் என்ற இரண்டு தாலுக்காக்களும் கொண்டதாக இருக்கின்றது" (கோ.ம. இராமநாதன் செட்டியார், 1987 மேற்கோள் பெருமாள் முருகன், 2000: 14). வட்டாரங்களைப் பேச்சுவழக்கின் அடிப்படையில் அந்தந்த வட்டாரத்தின் பெயர்களால் கூறுவது தவறான ஒன்றாகும். களப்பணிகள் மூலம் சொற்களைச் சேகரித்து சேகரிக்கப்பட்ட சொற்கள், இலக்கணக்கூறுகள் அடிப்படையில் பாகுபாட்டுக்கோடு (Isoglosses) போட்டு வரையப்பட்ட வரைபடம் (ஆயி) மூலமாக பல பாகுபாட்டுக்கோடுகள் கொண்ட ஒரு பகுதியைத்தான் வட்டாரங்களாகப் பிரிக்க முடியும். இதுவரை வெளிவந்துள்ள ஆய்வுகளின் அடிப்படையில் பல அறிஞர்கள் கமில் வி. சுவலபில் (Kamil V. Zvelebil, 1964) கி. கருணாகரன் (1970), வ. அய். சுப்பிரமணியம் (1973), கோ. சீனிவாச வர்மா (1976, 1977), சு. சக்திவேல் (1981), கே, மகாலிங்கம் (1987) தமிழகத்தைப் பேச்சுவழக்குக் கூறுகளின் எடுத்துக்காட்டுகளோடு சில வட்டாரங்கள் அல்லது மண்டலங்களாகவும் பிரித்து அதன் உட்பிரிவுகளையும் அடையாளங்காட்டியுள்ளார்கள். இவர்களில் கமில் வி. சுவலபில் (Kamil V. Zvelebil) சென்னை, திண்டுக்கல், ஈரோடு, இராமநாதபுரம், மதுரை, தூத்துக்குடி போன்ற பகுதிகளில் 1960-ஆம் ஆண்டுகளில் களப்பணிகள் செய்துள்ளார். இந்த வட்டார அல்லது மண்டலப் பிரிவுகளும் உட்பிரிவுகளும் முழுமையான அறிவியல் கோட்பாடுகளுடன் முழுமையான தரவுகளைக் கொண்டு எடுக்கப்பட்ட முடிவுகள் ஆகாது. ஏனெனில் எந்த ஒரு கள ஆய்வும் களப்பணி (Fieldwork) வினாநிரல் (Questionnaire) முறையக எழுதப்பட்டு, அத்தகைய வினாநிரலைப் பயன்படுத்தித் தரவுகளைச் சேகரிக்கவில்லை. மேலும் சில

ஆய்வாளர்கள் இதுவரை வெளிவந்துள்ள ஆய்வு முடிவுகளின் அடிப்படையில் வட்டாரங்களைப் பிரித்துள்ளனர்.

இதுவரை வெளிவந்துள்ள வட்டாரவழக்கு அகராதிகளில் டி. மகாலட்சுமி (2003: 14) வெளியிட்டுள்ள கோவை மாவட்ட வழக்குச்சொல் அகராதியில் சொற்களைக் கீழ்கண்ட 11 இலக்கண வகைகளில் பிரித்துக்கொடுத்துள்ளார்:

எ.ம.வி - எதிர்மறை வினை, ஏ.வி. - ஏவல் வினை, தொ. பெ. - தொழிற் பெயர், பெ. - பெயர், பெ. அடை - பெயரடை, பெ.எ. - பெயரெச்சம், வி. அ. பெ. - வினையாலனையும் பெயர், வி. அடை - வினையடை, வி. எ. - வினையெச்சம், வி. மு. - வினைமுற்று, வியங். வி. - வியங்கோள் வினை

பெருமாள் முருகன் (2000: 20) கீழ்க்கண்ட ஐந்து இலக்கண் வகைகளை மட்டும் சுட்டிக்காடிட்யுள்ளார்:

இ.சொ. - இடைச்சொல், பெ. - பெயர்ச்சொல், பெ. அ. - பெயரடை, வி. வினைச்சொல், வி. அ. - வினையடை

ஏனைய சொற்களுக்கு இலக்கணக்குறிப்புகள் கொடுக்கவில்லை. பிற அகராதிகளில் சொற்களின் பொருள் கொடுக்கப்பட்டுள்ளதேயன்றி அவைகளின் இலக்கணக்கூறுகள் கொடுக்கபப்டவில்லை. எனவே, வட்டாரவழக்கு அகராதியென்று வெளியிடப்பட்டுள்ள நூல்கள், சொற்களின் தொகுப்பேயன்றி, அறிவியல் சார் அகராதியியல் அடிப்படையில் தொகுக்கப்பட்ட அகராதிகளாகக் கருதமுடியாது.

கண்மணி குணசேகரன் பெரும்பாலான சொற்களுக்குப் (பெ) என்று குறிப்பிட்டுப் பெயர்ச்சொல் என்பதனைத் தெரிவிக்கின்றார். விரல்விட்டு எண்ணக்கூடிய சில சொற்களுக்கு மட்டும் (வி), (வி.அ) என்று குறிப்பிட்டுள்ளார்.

சொற்களைச் சேகரிப்பதில் ஒவ்வொரு நூலாசிரியர்களும் அவர்களுக்கேயுரிய வழிமுறைகளைப் பின்பற்றியுள்ளனர். பெருமாள் முருகன் முதலில் ‘சேலம் மாவட்டப் பேச்சுவழக்குச் சொற்கள்’ எனும் தலைப்பில் சொற்களைத் தொகுக்கத் தொடங்கியுள்ளார் (பக்.7). பொள்ளாச்சியைச் சேர்ந்த அவருடைய நண்பர் ஒருவரிடமிருந்த அந்தப் பகுதிச்சொற்களைப் பெற்றுள்ளார் (பக்.8). கொங்கு மண்டல சதகம் போன்ற நூல்கள் அண்ணன்மார் சுவாமி கதை உள்ளிட்ட நாட்டுப்புறக்கதை, பாடல் தொகுப்புகள், கொங்கு வட்டார நாவல்கள், சிறுகதைகள் முதலியவைகளில் காணும் பேச்சுவழக்குச் சொற்களை குறிப்பெடுத்துள்ளார்

(பக்.17). ஆனால், "குறிப்பிட்ட சாதியின் சடங்குகள் சார்ந்த சொற்களை எல்லாம் பதிவுக்கு எடுத்துக் கொள்ளவில்லை" (பக்.17). உணர்வுப்பூர்வமாக சாதி அடையாளங்களை தவிர்க்க முயன்றதை அவரே ஒப்புக்கொண்டுள்ளார். கண்மணி குணசேகரன் (2007: 8) சொற்கள் சேகரிப்பு முறையில்,

1. நினைவுகளிலிருந்து சொற்களைக் கொணர்ந்து எழுவது
2. பிறரிடமிருந்து சேகரிப்பது
3. இந்தப் பகுதி சார்ந்த இலக்கிய நூல்களிலிருந்து கண்டெடுப்பது

என மூன்று வகைகளைக் கையாண்டுள்ளார். சேகரிக்கப்பட்ட ஒட்டுமொத்தச் சொற்களிலிருந்து, இயல்புச்சொற்கள், நாஞ்சில், கொங்கு, மதுரை, கரிசல், செட்டிநாடு அகராதிகளில் உள்ள சொற்களும் நீக்கப்பட்டு எஞ்சிய சொற்களையே தம் அகராதியில் கொடுத்துள்ளதாகக் கூறுகின்றார் (பக்.13). நடுநாடு அல்லது நடுத்திட்டு என அழைக்கப்படும் இந்தப்பகுதி கெடிலம் ஆற்றிற்கும், பெண்ணை ஆற்றிற்கும் இடைப்பட்ட பகுதிகளாகும். இவை தற்கால கடலூர், பண்ருட்டி, திருக்கோயிலூர், விருத்தாச்சலம் (இன்னும் சில பகுதிகள் இருக்கலாம்?) உள்ளடக்கிய வட்டாரமாகும் (பக்.14) அனைத்து வட்டார அகராதி ஆசிரியர்களும், இப்படியொரு வழிமுறைகளைத்தான் பின்பற்றியுள்ளனர். எவரும், கட்டுக்கோப்பான ஒரு வினாநிரல் மூலம் களப்பணி செய்து அகராதிகளை முடிவு செய்யவில்லை.

மேலும் வழக்குச்சொற்களை குறிப்பெடுத்து எழுதிக்கொள்வதிலும், வழக்கொழிந்துவிட்ட சொற்களைச் சேகரிப்பதிலும் உள்ள சிக்கல்களும் வட்டாரவழக்கு அகராதிகளை எழுதுவதில் உள்ள முக்கியமான சிக்கல்களாகக் கருதப்படுகிறது. அழிந்துவரும் சொற்களைப் பற்றிக்கூறும்பொழுது, அ.கா. பெருமாள் (2004: 20) "நாஞ்சில் நாட்டுக் கிராமங்களிலிருந்து நாகர்கோவில் நகரத்துக்குக் குடியேறிய சாதியினர் சாதி வழக்காறுகளிலிருந்து அந்நியப்பட்டுக் கொண்டு வருவது போலவே சாதிக்கே உரிமையுடைய சொற்களைத் தவிர்த்துப் பேசுவதில் கவனமாக இருக்கின்றனர்" என்கின்றார். இவ்வாறு நகரங்களில் குடியேறும் மக்கள் தங்களின் சாதிசார் சொற்களைத் தவிர்ப்பதன் மூலம் அவர்களின் பாரம்பரியத் தொழில்சார் சொற்களெல்லாம் அழிந்து வருவதற்குக் காரணமாக அமைகின்றது. இன்றையக் காலக்கட்டத்தில் ஒரு வட்டாரத்திலுள்ளவர்கள் பல சமூகப், பொருளாதாரக் காரணங்களுக்காக வேறொரு வட்டாரத்தில் குடியேறும் பொழுது தங்களின் வட்டாரவழக்குச் சொற்களைத்

தவிர்த்து 'பொதுப்பேச்சுத் தமிழுக்கு' மாறி வருகின்றார்கள். பிற வட்டாரங்களில் அல்லது நகரங்களில் குடியேறும் மக்கள் தங்களின் சாதியை வெளிப்படுத்த விரும்பாத காரணத்தால் சமூகவழக்குச் சொற்களையும் தங்களுடைய பேச்சுவழக்கில் தவிர்த்து விடுகின்றனர். பாரம்பரியத் தொழில்புரிந்து வாழ்ந்து வந்த சமூகத்தினர்கள் தற்கால இயந்திரமயமாக்கத்தின் தாக்கத்தால் தங்களின் கைத்தொழில்களை விட்டுவிட்டு வேறு தொழில்களுக்கு மாறுகின்ற காரணத்தால் தொழிவழக்குச் சொற்களும் அழிந்து வருகின்றன. சரியான தரவுகள் சேகரிக்கத் தகுந்த தகவலாளிகளும் கிடைப்பதில்லை. எனவே, இவ்வாறாக மக்கள் பிற வட்டாரங்களுக்குக் குடியேரும் பொழுது வட்டாரவழக்குச் சொற்களும் சமுதாயவழக்குச் சொற்களும் அழிந்துவருகின்றன என்பது மொழி ஆய்வாளர்களின் கருத்தாகும். இத்தகைய சூழ்நிலையில், களப்பணி மூலம் தரவுகள் சேகரிக்கப்படுவது மிகவும் அவசியமான ஒன்றாகக் கருதப்படுகிறது. மேலும், களப்பணி என்பது சிறிய கிராமப்புரங்களில் வாழும் வயதான மக்களிடம் மட்டும் செய்யவேண்டியது கட்டாயமான ஒன்றாகும். இவ்வகையான, வட்டாரவழக்குச் சொற்களைச் சேகரிப்பதில் எந்தவொரு சாதியையும், தொழிலையும் ஒதுக்கிவிடாமல், வட்டாரமக்களிடையே வழங்கப்படும் பொதுவான சொற்களோடு இத்தகைய சொற்களையும் சேகரிக்கும் பொழுதுதான், அது ஒரு வட்டாரத்திற்குரிய முழுமையான தகவல்களை உள்ளடக்கிய அகராதியாகவோ, சொற்தொகுப்பாகவோ அமையும் என்பதில் மாற்றுக்கருத்து எதுவும் இல்லை.

ஒரு வட்டாரவழக்குச் சொற்களின் அகராதி தயாரிக்கும் முயற்சியில் ஈடுபடும்பொழுது அந்த வட்டாரத்திற்குரிய அனைத்துச் சொற்களும் சேகரிக்கப்பட வேண்டும். அந்த வடாரத்திற்கேயுரிய சொல்லா? அல்லது வேறு வட்டாரங்களிலும் அச்சொல் பயன்பாட்டில் உள்ளதா? என்பதை தமிழகம் மற்றும் புதுச்சேரிகளில் உள்ள எல்லா வட்டாரச்சொற்களுடன் ஒப்பிட்டுத்தான் முடிவு செய்யமுடியும். ஆகையால், ஒரு வட்டாரவழக்குச் சொல் அகராதியில் அந்த வட்டாரத்தில் உள்ள அனைத்துச் சொற்களும் இடம்பெற வேண்டும். தமிழகராதி என தமிழ்மொழியின் ஒட்டுமொத்தச் சொற்களையும் சேகரிக்கும்பொழுது, ஒரு வட்டாரத்திற்குரிய சொற்கள் அந்தந்த வட்டாரத்தைச் சார்ந்ததாகவும், ஒரு சமூகத்தினற்குரிய சொற்கள் அந்தந்த சமூகத்தைச் சார்ந்த சொற்களாகவும், தொழில்சார் சொற்கள் அந்தந்த தொழிலைச் சார்ந்த சொற்களாகவும் பாகுபடுத்தப்பட்டு, பொதுச்சொற்களிலிருந்து வேறுபடுத்திச் சுட்டிக்காட்டப்படும். ஒரு குறிப்பிட்ட சாதியினரின் வழக்குச்சொற்கள் பதிவு செய்யப்படாத பொழுது, பல முக்கியமான

சொற்கள் விட்டுப்போக வாய்ப்புகள் உள்ளன. உதாரணமாக அகம் எனும் சங்ககாலச் சொல் அகத்துக்காரர் 'கணவர், வீட்டுக்காரர்' எனும் பொருளில் ஆத்துக்காரர் எனும் சொல்லாக அந்தணர்களின் பேச்சுத்தமிழில் மட்டுமே உள்ளது. பட்டிகாணுதல் என்பது கொங்கு வேளாளர் சமூகத்தினரின் திருமணச்சடங்குகளில் ஒன்றாகும். திருமணமான புதுமணத்தம்பதியினர் திருமணமானபின் மணமகன் வீட்டின் தொழுவத்திற்குச்சென்று அவர்களின் ஆடுமாடுகளைப் பார்ப்பதே இந்தச்சடங்காகும். புரவி 'குதிரை' எனும் சங்ககாலச் சொல், புரவி எடுத்தல் எனும் சொல்லில் காணக்கிடக்கிறது. கொங்குப்பகுதியில் ஐயனார் வழிபாடு செய்யும் மக்கள் நேர்த்திக்கடனாக மண்ணால் செய்த குதிரை வடிவப் பொம்மையைக் கோவிலுக்கு எடுத்துச்செல்வர். இதையே 'புரவி எடுத்தல்' எனக்கூறுகின்றனர். மேலும், ஒரே பாரம்பரியத் தொழிலைப்புரியும் மக்கள் பல வட்டாரங்களில் வாழ்கின்றனர். அவர்கள் செய்யும் தொழில் ஒரே தொழிலாக இருந்தாலும், தொழில் செய்யும் முறைகளிலும் உபயோகிக்கும் கருவிகளிலும் வேறுபாடுகள் உள்ளன, மற்றும் ஒரே கருவிக்கு வேறு வேறு சொற்களும் இருக்கலாம். ஆகையால், வட்டாரவழக்குச் சொற்களைத் தொகுக்கும் பொழுது அனைத்துத் தரப்பட்ட மக்களிடமும் களப்பணி செய்வது மிகவும் ஏற்றதாகும். அகராதி தயாரிக்கும் பணியில் ஈடுபட்டுள்ள ஆய்வறிஞரே அவருடைய விருப்பப்படி சொற்களைத் தேர்வு செய்து அவைகளை ஒரு வட்டாரத்திற்குரிய அல்லது வட்டாரத்திற்கே உரிய சொற்கள் எனத்தொகுக்கும் பொழுது மாறுபட்ட கருத்துக்கள் எழுகின்றன. இவைகளை எடுத்துக்காட்டும் விதமாக பெருமாள் முருகன் மற்றும் அ.கா.பெருமாள் ஆகியவர்களின் வட்டாரவழக்குச் சொல்லகராதியிலிருந்து எடுத்துக்காட்டுகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன:

### நாஞ்சில் நாட்டு வழக்குச் சொல்லகராதி - அ.கா.பெருமாள்

**நாஞ்சில் நாட்டில் வழங்கப்படும் சொற்கள்**

1. அவையான் - பெருச்சாளி
2. அழுக்கன் - கஞ்சன்
3. அளிக்கதவு - மரச்சட்டத்தால் ஆன கதவு
4. அறங்கூடு - படுக்கை அறை
5. கிண்டி உணர்த்தல் - சிரத்தையாகக் குடும்ப காரியங்களைக் கவனித்தல்
6. கித்தாட்டி - மூடி மறைத்துப் பேசுதல்

7. தீயல் - நாரந்தங்காயில் தயாரிக்கப்படும் ஊறுகாய் வகைகளில் ஒன்று
8. துரக்காரர் - கோவில் நிலங்களுக்குரிய வரியை வசூலிக்கும் அதிகாரி
9. தெங்கு - தென்னை மரம்
10. பட்டி - நாய்

**பிற வட்டாரங்களிலும் வழங்கப்படும் சொற்கள் (நாஞ்சில்நாட்டு வழக்குச் சொல்லகராதியில் பதிவாகியுள்ளவை)**

1. அவஸ்தை - வேதனை, இடையூறு
2. அழிமானம் - அழிந்ததின் மதிப்பு
3. காவு கொடுத்தல் - பலி கொடுத்தல்
4. காவோலை - நன்றாகக் காய்ந்த பனை ஓலை
5. கிடை வைத்தல் - வயல் தோட்டத்தில் ஆடுகளை அடைத்து வைத்தல்
6. கிண்டுதல் - கிளறுதல்
7. தீட்டரிசி - தவிடு நீக்கிய அரிசி
8. துப்புரவு - சுத்தம்
9. தூக்கு - ஒரு எடை
10. தெம்மாடி - கையாலாகாதவன்

## கொங்கு வட்டாரச் சொல்லகராதி - பெருமாள் முருகன்

**கொங்கு வட்டாரத்தில் வழங்கப்படும் சொற்கள்**

1. ஆரியக்கல் (பெ.) - திருவல், மாவு அரைக்கப்பயன்படும் கல்
2. ஆரியம் (பெ.) - கேழ்வரகு
3. இட்டேரி (பெ.)-நிலங்களுக்கிடையே எல்லையாக அமைக்கப்பட்ட பெரிய வரப்பு
4. இஸ்கார் (பெ.) - தேவையற்ற தொல்லை
5. ஒகடியம் (பெ.) - கேலி, கிண்டல்
6. ஒட்டு (பெ.) - பால் கறக்கும் மாடு
7. கொடும்பு (பெ.) - செடியைச் சுற்றி அடைக்கும் கூண்டு போன்ற வேலி
8. கொப்பு (பெ.) - வயல்களுக்குள் செல்லும் சிறிய வாய்க்கால்
9. சாலு (பெ.) - நீர் நிறைத்து வைக்கும் பெரிய தவலை

10. சிட்டி மூங்கில் (பெ.) - கனமும் வலுவும் கொண்ட மூங்கில்

**பிற வட்டாரங்களிலும் வழங்கப்படும் சொற்கள் (கொங்கு வட்டாரச் சொல்லகராதியில் பதிவாகியுள்ளவை)**

1. ஆத்தா (பெ.) - அப்பாவின் அம்மா
2. ஆயா (பெ.) - பாட்டி
3. ஆரக்கால் (பெ.) - மாட்டுவண்டிச்சக்கரத்தில் சுற்று வட்டத்தையும் மையத்தையும் இணைக்கும் கட்டை
4. இந்த வாட்டி (வி.அ.) - இந்த முறை
5. இளம்பயிர் (பெ.) - முளைத்துச் சிறிது நாட்களே ஆன பயிர்
6. ஏறுவெயில் (பெ.) - காலையிலிருந்து நண்பகல் வரை அதிகரித்துக் கொண்டு வரும் வெயில்
7. ஏனம் (பெ.) - பாத்திரம்
8. கொழி (பெ.) - கையால் மசால் போன்றவற்றைச் சலித்தல்
9. சாவக்கட்டு (பெ.) - பந்தயம் கட்டி சேவல்களைச் சண்டையிட வைத்தல்
10. சித்த (பெ.அ.) – சிறிது

வட்டாரவழக்குச் சொற்களைச் சேகரிக்கின்ற பொழுது நல்லசொல்: கெட்டசொல், நல்லசொல்: கொச்சைச் சொல், வசைச்சொல் என வேறுபடுத்தாது அனைத்துச் சொற்களுமே பொருளோடு வரும் மொழிச்சொற்கள் என்ற அடிப்படையில் சேகரிக்கப்பட வேண்டும். சொற்களைச் சேகரிப்பவர் தன்னுடைய விருப்பு வெறுப்புகளுக்கு அப்பாற்பட்டுச் சுதந்திரமாகச் செயல்பட வேண்டும் என்பதே மொழியியலின் அடிப்படைக் கோட்பாடு. வசைச்சொற்றொடர்களில் கூட பண்டையக்காலச் சொற்கள் பயன்படுவதைக் கீழ்க்கண்ட எடுத்துக்காட்டுகள் உணர்த்துகின்றன:

**சல்லிக்காசு பெறமாட்டான்**

**தம்படிக்குப் பிரயோஜனமில்லாதவன**

இந்த இரண்டு சொற்றொடர்களிலும் வரும் சல்லி, தம்படி என்ற சொற்கள் வழக்கொழிந்து விட்ட பண்டையக் கால நாணயங்களின் பெயர்களாகும். நாணயங்களும் அதன் பயன்பாடும் அழிந்துவிட்டாலும், இத்தகைய சொற்றொடர்களில் இன்றும் இந்தச்சொற்கள் அந்தந்த நாணயத்தின் மதிப்போடு பயன்பாட்டில் உள்ளன. மேலும் சொற்களுக்கு வெளிப்படையாக உணர்த்தும் பொருளோடு, உட்பொருளும் இருக்கலாம். அத்தகைய சொற்களுக்கு இரண்டு வகையான பொருள்களையும் கொடுக்க வேண்டும்.

**எடுத்துக்காட்டுகள்:**

| சொல் | வெளிப்பொருள் | உட்பொருள் |
|---|---|---|
| நாமம் போடுதல் | ஒருவரின் நெற்றியில் வைணவ அடையாளமாகப் போடப்படும் நாமம் | வாங்கிய பொருளையோ பணத்தையோ திரும்பக் கொடுக்காமல் ஏமாற்றுதல் |
| மொட்டையடித்தல் | தலையில் உள்ள முடிகளை எடுத்துவிடுதல் | ஒருவருடைய பொருள் பணங்களை ஏமாற்றி விட்டு ஒன்றும் இல்லாமல் செய்தல் |
| தலை மொழுகுதல் | இறப்பு நடந்த வீட்டில் கடைப்பிடிக்கப்படும் ஒரு சடங்கு | ஒருவரை தன் உறவுமுறை அல்லது நட்புறவிலிருந்து அடியோடு நீக்கி விடுதல் |
| கைகழுவுதல் | கைகளில் படிந்திருக்கும் அழுக்கை கழுவி சுத்தம் செய்தல் | ஒருவேலையின் பொறுப்பிலிருந்து இடையில் விலகிவிடுதல் |
| முட்டை | பறவைகளின் முட்டை | சுழியன், 0 |

காலப்போக்கில் வட்டாரவழக்குச் சொற்கள் அழிந்து கொண்டுவருவதைப் பல அறிஞர்கள் சுட்டிக்காட்டியுள்ளனர். “வட்டாரமொழியில் உள்ள சொற்கள் உணர்வோடு தொடர்பு உடையவை, பொருள் செறிந்த சொற்கள்” என அதன் முக்கியத்துவத்தைக் கூறும் இரவிக்குமார் (2008: 16), “கொங்குமண்டலத்தில் வாழ்ந்து வந்த மக்கள் விவசாயத்திலிருந்து தொழில்துறைக்கு மாறியதன் காரணமாக சொற்கள் அழிந்து வருகின்றன” என்கின்றார் (பக்.17). “ஒரு நாளைக்கு பல சொற்கள் செத்துக்கொண்டிருக்கின்றன” என்பது கண்மணி குணசேகரனின் (2007:15) ஆதங்கமாகும். வட்டாரவழக்குச் சொற்கள் தமிழ்மொழியின்

செழுமையையும் தமிழர்களின் வாழ்வியல், பண்பாட்டுக்கூறுகளையும் தொழில் முறைகளில் கையாளப்படும் பாரம்பரிய வழிமுறைகளையும் எடுத்தியம்பும் சொற்களஞ்சியமாகும். சொற்களைச் சேகரித்து அகராதிப்படுத்த வேண்டிய காலக்கட்டத்தில் நாம் உள்ளதை எடுத்துக்கூறும் முனைவர் டி. மகாலட்சுமி ‘‘மிக விரைவில் கிளைமொழிச்சொற்கள் அகராதிப்படுத்தப்படவில்லையெனில் நம் முன்னோர்களின் சுவடுகளை மறந்தவர்களாகிப் போவோம் என்கின்றார்’’ (டி. மகாலட்சுமி, 2003: 1). மாறுபட்ட மொழிச்சூழல் காரணமாக, தமிழ்மொழியின் கருவூலப்பெட்டகமாய் விளங்கிய வட்டாரவழக்குச் சொற்களும் சமூகவழக்குச் சொற்களும் தொழில்வழக்குச் சொற்களும் மறைந்து அழியும் நிலையில் இருப்பதால் அத்தகைய சொற்களைச் சேகரித்து அவற்றைப் பேணிப் பாதுகாக்கவேண்டிய கட்டாயம் தற்சமயம் உருவாகியுள்ளது. இத்தகைய சொற்கள் தமிழ் மக்களின் பண்பாட்டுக்கூறுகளையும், வரலாற்றுச் செய்திகளையும், சமயச்சடங்கு முறைகளையும், சமூகச்சடங்கு முறைகளையும், நம்பிக்கைகளையும், தொழில்நுணுக்கங்களையும் விளக்கி நிற்பதோடு தமிழ்மொழியின் செழுமையையும் வளமையையும் உலகுக்கு எடுத்துக்காட்டுவனவாக உள்ளன.

இதுவரை வெளிவந்துள்ள வட்டாரவழக்குச் சொற்களின் அகராதிகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன (ச.மனோகரன்இ 2012: 48).

1. இரவிக்குமார், இரா., 2008, கொங்கு வட்டார வழக்குச் சொல்லகராதி, உடுமலைப் பேட்டை: கொங்கு மண்டல ஆய்வு மையம்.
2. இளங்கோவன், பெரி.சே., 2011, அறந்தாங்கி வட்டார வழக்குச் சொல் அகராதி, அகநி: வந்தவாசி
3. கண்மணி குணசேகரன், 2007, நடுநாட்டுச் சொல்லகராதி, தமிழினி, சென்னை.
4. கலைச்செல்வன்,எம்., 1976, தமிழில் வழக்குகள், கருக்காம்பட்டி: எம்.வேலுச்சாமி கவுண்டர்.
5. காளியப்பா, டி.எம்., 1991, கொங்குத் தமிழ், கோயமுத்தூர்: தேவி பதிப்பகம்.
6. சண்முகம், சுப., 1990, செட்டிநாட்டில் செந்தமிழ் வழக்கு, சென்னை: காவேரி தெரு.

7. தமிழகன், பி., 2009, வழக்குச்சொல் அகராதி, திருச்சிராப்பள்ளி: இளந்தமிழ்ப் பதிப்பகம்.

8. பழனியப்பா சுப்பிரமணியன், 2006, செட்டி நாட்டு வட்டார வழக்குச் சொல்லகராதி, சென்னை: பழநியப்பா பிரதர்ஸ்.

9. புலவர் மணியன், 2004, கொங்கு நாட்டுத் தமிழ், கோயம்புத்தூர்: வேம் அச்சகம்.

10. பெருமாள், அ.கா., 2004, நாஞ்சில் வட்டாரவழக்கு சொல்லகராதி, சென்னை: தமிழினி.

11. பெருமாள்முருகன், 2000, கொங்கு வட்டாரச் சொல்லகராதி, கோபிசெட்டிப்பாளையம்: குருத்து வெளியீடு.

12. மகாலட்சுமி, டி., 2003, கோவை மாவட்ட வழக்குச்சொல் அகராதி, சென்னை: தி பார்க்கர்.

13. முருகையா, ப., 2004, நெல்லை வட்டார வழக்குச் சொல்லகராதி, சென்னை: அமுதா பதிப்பகம்.

14. ராஜநாராயணன், கி., 1982, வட்டாரவழக்குச் சொல்லகராதி, மறுபதிப்பு 2008, சிவகங்கை: அன்னம்.

15. ராஜன், எ.மு., 2004, புதுச்சேரி கிராமியத் தமிழகராதி, புதுச்சேரி: புதுச்சேரி கூட்டுறவு புத்தகச் சங்கம்.

16. லேனா தமிழ்வாணன், 1987, வட்டாரச்சொற்களும் விளக்கங்களும், சென்னை: மணிமேகலைப் பிரசுரம்.

17. ஜீவபாரதி, கே. ரு வே. எழில்முத்து, 2001, ஜீவா தொகுத்த வழக்குச் சொல்லகராதி, சென்னை: ராஜேஸ்வரி பதிப்பகம்.

### தமிழ் நாட்டின் வட்டாரவழக்கு மண்டலங்கள்/வட்டாரங்கள்/உட்பகுதிகள்

**ஆண்ட்ரனொவ் (Andronov), 1962**

1. கிழக்குப் பகுதி பேச்சுவழக்கு - தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி மாவட்டங்கள், மதுரை மாவட்டத்தின் வடபகுதி

2. வடக்குப் பகுதி பேச்சுவழக்கு - சென்னை, செங்கல்பட்டு, வட ஆற்காடு, தென் ஆற்காடு மாவட்டங்கள்

3. தெற்குப் பகுதி பேச்சுவழக்கு - திருநெல்வேலி, இராமநாதபுரம் மாவட்டங்கள், மதுரை மாவட்டத்தின் தெற்கு - மேற்குப் பகுதிகள்

4. மேற்குப் பகுதி பேச்சுவழக்கு - நீலகிரி, கோயம்புத்தூர், சேலம் மாவட்டங்கள்

5. இலங்கை பேச்சுவழக்கு

**கமில், வி. சுவெலபில் (Kamil, V. Zvelebil), 1964**

| வட்டாரம் | உட்பகுதி | வட்டார மையங்கள் |
|---|---|---|
| வடக்கு (அருவா வடதலை, அருவா) | 1. வட - கிழக்கு<br>2. வட - மேற்கு<br>3. தென்னாற்காடு (ஒரு பகுதி) | சென்னை, செங்கல்பட்டு, வேலூர், சித்தூர், கிருஷ்ணகிரி |
| கிழக்கு (புனல், பன்றி) | 1. காவேரி பாசனம்<br>2. புதுக்கோட்டை | திருச்சி, தஞ்சாவூர், கரூர் |
| மேற்கு | 1. மேற்கு - வடக்கு<br>2. மேற்கு - தெற்கு | சேலம், திண்டுக்கல், ஈரோடு, கோயம்புத்தூர், பெங்க;ர் |
| தெற்கு (வடபாண்டி, தென்பாண்டி) | 1. மதுரை<br>2. தென் - மேற்கு<br>3. தென் - கிழக்கு | திருநெல்வேலி, நாகர்கோயில், இராமநாதபுரம், தூத்துக்குடி |
| இலங்கை | 1. வடக்கு<br>2. கொழும்பு?<br>3. வட - கிழக்கு<br>4. தென் - கிழக்கு | திரிகோணமலை, மட்டக்களப்பு |

**கி. கருணாகரன், (K. Karunakaran), 1970**

1. வடமாவட்ட வழக்கு: செங்கல்பட்டு, சென்னை, வட ஆற்காடு
2. கிழக்கு மாவட்ட வழக்கு
3. மேற்கு மாவட்ட வழக்கு: கொங்கு வழக்கு மற்றும் பிற வட்டங்கள்
4. தென் மாவட்ட வழக்கு
5. நாஞ்சில் நாடு வழக்கு

**வ. அய். சுப்பிரமணியம் (Subramoniam, V.I), 1973**

| | | |
|---|---|---|
| 1. நாஞ்சில் நாடு வழக்கு | - | கன்னியாகுமரி |
| 2. தென்மாவட்ட வழக்கு | - | திருநெல்வேலி, இராமநாதபுரம் |
| 3. நடுநாட்டு வழக்கு | - | மதுரை, திருச்சி |
| 4. மேற்கு மாவட்ட வழக்கு | - | கோயம்புத்தூர் |
| 5. கிழக்கு மாவட்ட வழக்கு | - | தஞ்சாவூர், தென் ஆற்காடு |
| 6. சென்னை வழக்கு | - | சென்னை, செங்கல்பட்டு |
| 7. வட மாவட்ட வழக்கு | - | வட ஆற்காடு |

**கோ.சீனிவாச வர்மா (K. Srinivasa Varma), 1976, 1977**

| | | |
|---|---|---|
| 1. தென்மாவட்ட வழக்கு<br>i. கன்னியாகுமரி உட்பகுதி | - | மதுரை, திருநெல்வேலி, இராமநாதபுரம், கன்னியாகுமரி மாவட்டங்கள |
| 2. நடுநாட்டு வழக்கு (சோழ நாடு)<br>ii. புதுக்கோட்டை உட்பகுதி | - | தென் ஆற்காடு, தஞ்சாவூர், திருச்சி (பெரும்பகுதி), புதுக்கோட்டை (சிலபகுதி) மாவட்டங்கள |
| 3. மேற்கு மாவட்ட வழக்கு<br>(கொங்கு வழக்கு) | - | சேலம், தர்மபுரி, கோயம்புத்தூர், நீலகிரி மாவட்டங்கள |
| 4. வட மாவட்ட வழக்கு | - | வட ஆற்காடு, செங்கல்பட்டு, சென்னை மாவட்டங்கள |
| 5. இலங்கை வழக்கு | - | மட்டக்களப்பு, திரிகோணமலை, யாழ்பாணம், நீர்கொழும்பு, மலைநாடு வழக்குகள் |

**சு.சக்திவேல் (S. Sakthivel), 1981**

1. வட மாவட்ட வழக்கு - சென்னை, செங்கல்பட்டு, வட ஆற்காடு மாவட்டங்கள்
2. நடுநாட்டு வழக்கு - திருச்சிராப்பள்ளி, தஞ்சாவூர், தென் ஆற்காடு மாவட்டங்கள்
3. மேற்கு மாவட்ட வழக்கு - சேலம், தர்மபுரி, கோயம்புத்தூர், நீலகிரி மாவட்டங்கள்
4. தென்மாவட்ட வழக்கு - மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி, கன்னியாகுமரி மாவட்டங்கள்

**கே. மகாலிங்கம் (K. Mahalingam), 1987**

1. சென்னை, செங்கல்பட்டு மாவட்டத்தின் கிழக்குப்பகுதி, தென் ஆற்காடு மாவட்டத்தின் வடக்குப் பகுதி.
2. திருச்சி, தஞ்சாவூர் மாவட்டங்கள், புதுக்கோட்டை மாவட்டத்தின் கிழக்கு மற்றும் வடக்குப் பகுதிகள், தென் ஆற்காடு மாவட்டத்தின் கிழக்கு மற்றும் வடக்குப் பகுதிகள்.
3. தென் ஆற்காடு மாவட்டத்தின் மேற்கு பகுதி, சேலம் மற்றும் தர்மபுரி மாவட்டங்கள்.
4. கோயம்புத்தூர் மற்றும் ஈரோடு மாவட்டங்கள்.
5. புதுக்கோட்டை மாவட்டத்தின் தெற்கு மற்றும் மேற்கு பகுதிகள், மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி மாவட்டங்கள்.
6. கன்னியாகுமரி மாவட்டம்

**இலங்கைத்தமிழ் வழக்காற்றுப் பகுதிகள்**

1. யாழ்ப்பாண வழக்கு
    - i) வன்னிமை (வவுனியா)
    - ii) மன்னார்

2. மட்டக்களப்பு

i) திரிகோணமலை

ii) மலைநாடு

வட்டாரவழக்கு மண்டலங்கள்/வட்டாரங்கள்/உட்பிரிவுகளின் எடுத்துக்காட்டுகள் கீழே தொகுத்துக் கொடுக்கப்பட்டுள்ளன. இந்த உதாரணங்கள் மொழியியல் அறிஞர்கள் கொடுத்துள்ள எடுத்துக்காட்டுகளில் இருந்து கொடுக்கப்பட்டுள்ளன.

**வடக்கு மண்டலச் சொற்கள்**

1. கய்தெ - கழுதை
2. சோமாரி - கெட்டவன், அயோக்கியன்
3. துட்டு - பணம்
4. நய்னா - அப்பா, தந்தை
5. நாஸ்டா - காலை உணவு
6. பேஜாரு - தொந்தரவு
7. ரவ/லவ - கொஞ்சம், சிறிது

**நடு.ஃ.கிழக்கு மண்டலச் சொற்கள்**

1. அம்மாயி - தாயின் தாய்
2. ஆயி - அம்மா, தாய்
3. இம்மாம் - இவ்வளவு
4. எம்ப்ளது - எண்பது
5. ஒருவது - பத்து
6. கம்னாட்டி - கணவனை இழந்தவள், மனைவியை இழந்தவர்
7. கேவுரு - கேழ்வரகு
8. பரியாரி - முடிவெட்டும் தொழில் செய்பவர்
9. மல்லாட்டெ - நிலக்கடலை, மணிலாக்கொட்டை

**மேற்குமண்டலச் சொற்கள்**

1. அணத்தான் - அணில்
2. அந்தி - மாலை நேரம்
3. ஆரியம் - கேழ்வரகு
4. எட்னூரு - எண்ணூரு
5. கடுவன் - குரங்கு
6. கொடிக்காயி - நிலக்கடலை, மணிலாக்கொட்டை
7. சத்தொம் - வரி
8. நங்கெ - அண்ணன் மனைவி, அண்ணி
9. பட்டாசாலெ - வெளிமுற்றம்

**தென்மண்டலச் சொற்கள்**

1. அண்ணாச்சி - அண்ணன்
2. அய்யா - அப்பா, தந்தை
3. அவுகெ, அவியெ - அவர்கள்
4. ஆச்சி - தாயின் தாய்
5. கும்பா - குழி விழுந்த உணவருந்தும் பாத்திரம்
6. கோப்பெ - உணவருந்தும் பாத்திரம்
7. சிய்யான் - தாத்தா, தந்தையின் தந்தை, தாயின் தந்தை
8. பாம்படம் - பெண்களின் காதணிகளில் ஒன்று
9. பைதா - சக்கரம்
10. பையெ - மெதுவாக, நிதானமாக
11. வெஞ்ஞனம் - சமைத்த காய்கறி வகைகள் (கூட்டு, பொரியல்)
12. இங்கிட்டு - இங்கே, இந்தப்பக்கம்
13. இம்புட்டு - இவ்வளவு
14. ஈருள்ளி - வெங்காயம்
15. கடுவன் - காட்டுப்பூனை

**நாஞ்சில் நாட்டுச் சொற்கள் (கன்னியாகுமரி மாவட்டம்)**

1. அக்கானி - பனைமரத்தின் பால்
2. அங்கோட்டு - அந்தப்பக்கம், அங்கே
3. ஆச்செ - வாரம், ஏழு நாட்கள்
4. கடுவ - புலி
5. கண்ணம்மா - பாட்டி, தாயின் தாய், தந்தையின் தாய்
6. காருவெ - உணவருந்தும் பாத்திரம்
7. சாடு - ஓடு, தாண்டு
8. தோக்கு - துப்பாக்கி
9. மயினி.்.மைனி - அண்ணன் மனைவி, அண்ணி

**செட்டிநாட்டுச்சொற்கள் (புதுக்கோட்டை ரூ சிவகங்கை மாவட்டங்களின் பகுதிகள்)**

1. அண்ணமுண்டி - அண்ணன் மனைவி, அண்ணி
2. அண்ணாவி - ஆசிரியர்
3. அம்மக்கன் - கணவன்
4. ஆஞா - தந்தை
5. காடெயன் - அயோக்கியன், கெட்டவன்
6. தொக்கடி - மலிவான
7. மைமல் - அதிகாலை, சூரிய உதயத்திற்கு முன்
8. லேஞ்சு - துவாலை. தலை துவட்டப் பயன்படும் சிறிய துணி
9. வத்தை - வாரம், குத்தகை

தமிழின் பொற்காலமாகக் கருதப்படும் சங்ககாலம் முதல் தற்காலம் வரை பற்பல இலக்கண, இலக்கிய நூல்கள் அந்தந்தக் காலக்கட்டத்தில் எழுதப்பட்டுள்ளன. அவைகளைக் கால அடிப்படையில் பேராசிரியர் மு. வரதராசன் (1972: 28-29) கீழ்க்கண்டவாறு பிரித்துக் காட்டியுள்ளார்கள்:

**பழங்காலம்**

சங்க இலக்கியம்: கி.மு. 500 முதல் கி.பி. 200 வரையில் அகம், புறம் பற்றிய பாட்டுகள். நீதி இலக்கியம்: கி.பி. 100 முதல் கி.பி. 500 வரையில்

திருக்குறள் முதலிய நீதி நூல்கள், கார்நாற்பது முதலிய வெண்பா, முத்தொள்ளாயிரம் நூல்கள். இரட்டைக்காப்பியங்கள்: கி.பி. 100-500 சிலப்பதிகாரம், மணிமேகலை முதலியன.

## இடைக்காலம்

பக்தி இலக்கியம்: கி.பி. 600 முதல் 900 வரையில் நாயன்மார், ஆழ்வார் பாடல்கள். பலவகைகள் நூல்கள்: கி.பி.700-1300

காப்பியங்கள்: கி.பி. 500 முதல் 1200 பெருங்கதை, சீவக சிந்தாமணி முதலிய சமண, பௌத்த நூல்கள், சேக்கிழார், கம்பர், ஒட்டக்கூத்தர், ஔவையார் முதலியவர்கள். ஊலா பரணி பிள்ளைத்தமிழ். இறையனார் களவியல் முதலிய இலக்கண நூல்கள்.

உரைநூல்கள்: கி.பி. 1200 முதல் 1500 வரையில் இளம்பூரணர் பேராசிரியர் முதலியவர்கள். வைணவ விளக்க நூல்கள், சைவசித்தாந்த சாத்திர நூல்கள், சிறு நூல்கள், தனிப்பாடல்கள்.

புராண இலக்கியம்: கி.பி. 1500 முதல் 1800 வரையில் புராணங்கள், தலபுராணங்கள்,இஸ்லாமிய இலக்கியம், கிறிஸ்தவர் தொண்டு, வீரமாமுனிவர் முதலானவர்கள். உரைநடை வளர்ச்சி

பத்தொன்பதாம் நூற்றாண்டு: கிறிஸ்தவ இலக்கியம், இராமலிங்கர், வேதநாயகர் முதலியவர்கள், நாவல் வளர்ச்சி, கட்டுரை வளர்ச்சி.

## இக்காலம்

இருபதாம் நூற்றாண்டு: பாரதி, கல்கி, புதுமைப்பித்தன், சிறுகதை, நாவல், நாடகம், வாழ்க்கை வரலாறு, கட்டுரை ஆராய்ச்சி முதலானவை.

எழுத்துவழக்கும் பேச்சுவழக்கும் ஒரே காலக்கட்டத்தில் வழக்கில் இருந்தாலும் வட்டாரங்களாலும் சமூகத்தாலும் தொழிலாலும் மதத்தாலும் பிரிந்து வாழ்ந்த தமிழ் பேசும் மக்களை ஒன்றுபடுத்திக் காட்டியது இலக்கிய வழக்கு அல்லது எழுத்து வழக்கு எனப்படும் எல்லாத்தரப்பட்ட மக்களுக்கும் பொது நிலையில் இருந்த வழக்காகும். இப்படியொரு பொதுவழக்கு இருந்திராவிட்டால் பன்னிரு நாடுகளைச் சார்ந்த வழக்குகள் காலப்போக்கில் தனித்தனி மொழியாக உருவெடுத்திருக்கும். எனவே தமிழகம், தமிழர்கள் என்ற மொழி,

பண்பாட்டுக்கூறுகளை சங்ககாலம் முதல் தற்காலம் வரை அடையாளங்காட்டிக் கட்டிகாத்த பெருமை இலக்கியவழக்கு அல்லது எழுத்துவழக்கையே சாரும்.

வட்டார, சமூக மற்றும் தொழில் வழக்குகள் பற்றிய பல ஆய்வுகள் பல அறிஞர்களால் நடத்தப்பட்டிருந்தாலும் அவைகள் அனைத்தும் தனியொரு ஆய்வாளர்களால் பல காலக்கட்டங்களில் ஆய்வுத்தேவைகளுக்கேற்ப களப்பணி செய்தோ அல்லது வெளிவந்துள்ள மற்றும் வெளிவந்திராத ஆய்வுகளின் அடிப்படையில் நடத்தப்பட்டவைகளாகும். தமிழ்ப் பேச்சுவழக்கு ஆய்வுகளில் வினாநிரல் உதவியுடன் முழுமையான வட்டார வழக்கு ஆய்வு மலேசியாவில் உள்ள கீழ்ப் பாரெக் (Lower Peark) பள்ளத்தாக்குப் பகுதிகளில் வாழும் தமிழர்களிடையே ராமசுப்பையா (1966) எனும் அறிஞர் நடத்திய ஆய்வுதான், வெளிவந்துள்ள வட்டாரவழக்கு ஆய்வுகளில் முழுமையான ஆய்வாக உள்ளது. தமிழ்மொழி பேசும் தமிழகம் மற்றும் புதுச்சேரியில் உள்ள வட்டாரங்களைப் பகுத்து அங்கு வாழும் பற்பல சமுதாயத்தினரையும், அவர்களின் பாரம்பரியத் தொழில்களையும் பட்டியலிட்டு ஒட்டுமொத்தமாக ஒரு கட்டுக்கோப்பான வினாநிரல் மூலம் களப்பணி செய்து வட்டார, சமூக மற்றும் தொழில் வழக்குச் சொற்களைச் சேகரித்து தமிழ்மொழியின் சொல் வளத்தையும், பொருள் வளத்தையும், கலாச்சார மற்றும் பண்பாடுகளையும் விரிவாகவும் தெளிவாகவும் ஒன்றுதிரட்டும் ஆய்வுகள் இன்றுவரை நடத்தப்படவில்லை. இத்தகைய தரவுகள் தொல்காப்பியர் காலம் முதல் தற்காலம் வரை பேசப்படும் தமிழ்மொழியின் வரலாற்று ஆய்வுகளுக்கு மிகவும் தேவையான ஒன்றாகும். இத்தகைய வரலாற்று ஆய்வுகள் தமிழ்மொழியின் காலத்தையும் அதில் உள்ள மாற்றங்களையும் திராவிட மொழி ஆய்வில் அதன் பங்கினையும் விளக்கும் வகையில் அமையும்.

## இயல்-2

## தொல்காப்பியமும் தமிழ் வட்டாரங்களும் வட்டாரவழக்குகளும்

சங்ககாலத் தமிழகம் சேரர், சோழர், பாண்டியர் எனும் மூவேந்தர்களின் ஆட்சிக்கு உட்பட்டிருந்தது என்பதை

**வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பின்**

**- தொல். 1336**

எனும் தொல்காப்பியச் சூத்திரத்தால் அறிய முடிகிறது. மேலும் ஔவையார் பாடியுள்ள தனிப்பாடல் ஒன்றில் அங்கவை, சங்கவைகளின் திருமணப்பந்தலில் சேர, சோழ பாண்டிய மன்னர்கள் மூவர்களும் அவர்களை வாழ்த்தியதாகக் கூறும் பாடலில் மூன்று பேரரசர்களுக்குரிய குறிப்பு வருகிறது:

**திங்கள் குடையுடைச் சேரனும் சோழனும் பாண்டியனும்**
**மங்கைக்கு அறுகிட வந்துநின் றோர்மணப் பந்தலிலே**
**சங்குஒக்க வெண்குருத்து ஈன்றுபச் சோலை சலசலத்து**
**நுங்குக்கண் முற்றி அடிக்கண் கறுத்த நுனிசிவந்து**
**பங்குக்கு மூன்று பழம்தர வேண்டும் பனந்துண்டமே**

**- அ. மாணிக்கம், 1988: 14**

இந்தியத் துணைக்கண்டத்துள் அடங்கும் நிலப்பகுதிகள் அனைத்தும் அசோகரால் ஒரு ஆட்சியின் கீழ் கொண்டுவரப்பட்ட காலத்திலும் அவருடைய ஆட்சிக்கு உட்பட்டிருந்த நிலப்பகுதிகளுக்குத் தெற்கே சேரர், சோழர், பாண்டியர், சத்தியபுத்திரகள் எனும் நான்கு நாடுகள் தனித்து இருந்ததை அசோகர் காலக் கல்தூண் இரண்டில் உள்ள கல்வெட்டுச் செய்திகள் மூலம் அறிய முடிகிறது. இக்கல்வெட்டின் காலம் கி.மு. மூன்றாம் நூற்றாண்டாகும். அசோகருடைய ஆட்சிக்கு உட்பட்டிருந்த நாட்டின் தென் பகுதியில் இருந்த நாடுகள் சோடஸ் (சோழர்), பாண்டியாஸ் (பாண்டியர்), சத்தியபுத்தாஸ் (துளு நாட்டைச் சேர்ந்த கோசர்), கேரளபுத்ராஸ் (சேரர்), தாம்ரபர்ணி (இலங்கை) எனும் ஐந்து நாடுகள் ஆகும். (சுப்ரமணியன், 1966). இவர்களில் சத்தியபுத்திரர்கள் துளு நாட்டைச் சேர்ந்த கோசர்கள் என்று கருதப்பட்டாலும், தற்காலத்தில் அது தகடூரை ஆண்ட அதியமான்களைக் குறித்தது எனக் கருதப்படுகிறது (நம்பூதரி, 1992: 55). தமிழ்

மொழி பேசப்படும் பகுதிகளின் எல்லைகளைத் தொல்காப்பியப் பாயிரத்தில் கீழ்க்கண்டவாறு பனம்பாரணர் கூறுகின்றார்:

**வடவேங்கடம் தென்குமரி**

**ஆயிடைத்**

**தமிழ்கூறும் நல்லுலகத்து**

தமிழகத்தின் எல்லைகளைச் சிலப்பதிகாரம் கீழ்க்கண்டவாறு வரையறை செய்கிறது:

**குமரி வேங்கடம் குண குடகடலா**

**மந்திணி மருங்கின் தந்தமிழ் வரைப்பில்**

**- சிலப்பதிகாரம், வஞ்சி, 1-2**

இவ்வாறு தமிழ்பேசும் பகுதிகளுக்கு எல்லைகளை வரையறை செய்த தமிழ்ப்புலவர்கள் தமிழகத்தைச் சேரர், சோழர், பாண்டியர் எனும் மூவேந்தர்கள் ஆண்டனர் என்று கூறினாலும், இம்மூன்று அரசர்கள் ஆண்ட சேரநாடு, சோழநாடு, பாண்டியநாடு எனும் நாடுகளுடன் தொண்டைநாடு, கொங்குநாடு எனும் நாடுகளையும் சேர்த்துத் தமிழகம் ஐந்து நாடுகளைக் கொண்டது எனும் கருத்துக்கு ஆதாரங்களும் உள்ளன. சங்க இலக்கியத் தொடர்களில் 'ஆடுகமு கொங்கர் நாடு', 'கொங்கு புறம் பெற்ற கொற்ற வேந்து', 'கொங்கர் படுமணி ஆயம்' போன்ற சங்க இலக்கியத் தொடர்கள் கொங்குநாடு எனும் ஒரு நாடு இருந்ததைத் தெரிவிக்கிறது (இராசு, 2007: 20). மேலும் ஔவையார் எழுதியதாகக் கருதப்படும் தனிப்பாடல் ஒன்று தமிழகத்து நாடுகளைக் கீழ்க்கண்டவாறு பட்டியலிடுகிறது:

**வேழம் உடைத்து மலைநாடு மேதக்க**

**சோழ வளநாடு சோறுடைத்து - பூழியர்கோன்**

**தென்நாடு முத்துடைத்துத் தென்நீர் வயல்தொண்டை**

**நன்னாடு சான்றோர் உடைத்து**

**- தனிப்பாடல்: 70 (புலவர் அ. மாணிக்கம், 1977: 13)**

இப்பாடலில், சேரநாடு, சோழநாடு, பாண்டியநாடு ஆகிய மூன்று நாடுகளையும் இயற்கை வளங்களோடு ஒப்பிட்டுக் கூறும் ஔவை, தொண்டை நாட்டை மட்டும்

சான்றோர் உடைத்து எனக் கூறுகின்றார். ஆதலின், பிற நாடுகளில் சான்றோர் எனப்படுவோர் இல்லையா என்ற கேள்வி எழுகின்றது. தமிழக மக்களை உயர்ந்தோர், தாழ்ந்தோர் எனும் பிரிவில் வரையறுக்கும் பொழுது சான்றோர் எனக் கருதப்பட்டவர்களே சமுதாயத்தில் மிகவும் உயர்ந்தவர்களாகக் கருதப்பட்டுள்ளனர். (கனகசபை, 1904: 113). எனவே சான்றோர் எனும் உயர்ந்தோர் எல்லா நாடுகளிலும் வாழ்ந்துள்ளனர். எனினும் சங்க காலத் தொண்டை நாட்டின் தலைநகரமாக விளங்கிய காஞ்சி மாநகரில் தமிழகச் சான்றோர்களோடு, சமண மதம், புத்த மதம், ஆரியர்களின் வேதக்கொள்கை ஆகிய பிற மதங்களைச் சேர்ந்த சான்றோர் என அழைக்கப்பட்ட உயர்ந்தோர்கள் தத்தம் சமயக் கருத்துகளை ஆராயும் அல்லது போதிக்கும் பலதரப்பட்ட சான்றோர்கள் வாழும் பகுதியாக இருந்த காரணத்தால் தொண்டைநாட்டை சான்றோர் உடைத்து என ஔவை கூறுகின்றார் (மனோகரன், 2018: 22). சான்றோர் என அழைக்கப்பட்ட தமிழர்கள் உயர்ந்த நிலையில் வைக்கப்பட்டதோடு மட்டுமல்லாது, ஆரியக் கொள்கைகளைக் கடைப்பிடிக்காத தமிழர்கள் இல்லத் திருமணங்களைச் சான்றோர்களே நடத்திவைத்துள்ளனர் (கனகசபை, 1904: 124).

> **"….. among the power classes residing in towns and among the hill tribes, who had not come under the Brahmanic influence, the marriage ceremony was performed by the ar̲ivar or cāṉṉōr, Tamil priests".**
>
> **- V. Kanakasabhai, 1904: 124**

தொல்காப்பியர் காலத்தில் சிற்றரசர்களால் ஆளப்பட்ட பன்னிரண்டு நாடுகள் இருந்துள்ளன. அவற்றுள் அருவாநாடு, அருவா வடதலைநாடு என்று அழைக்கப்பட்ட நாடுகள் தமிழகத்தின் வடபகுதி நாடுகளாக இருந்துள்ளன. இந்த வடபகுதி நாடுகளே தொண்டைநாடு, தொண்டைமண்டலம், கச்சியர்நாடு, தொண்டை மண்டல நாடு எனப் பல பெயர்களில் அழைக்கப்பட்டுள்ளது. தொண்டைநாடு ஒரு தனி நாடாகச் சங்ககாலத்தில் இருந்ததற்குச் சங்க இலக்கியங்களே சான்றுகளாக உள்ளன. இதற்குச் சான்றாகக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் இயற்றிய பெரும்பாணாற்றுப்படை அமைகிறது. பெரும்பாணாற்றுப்படை தொண்டை நாட்டின் வழக்காற்றுக் கூறுகளையும் பண்பாட்டுக் கூறுகளையும் நிலப்பகுதிகளையும் பற்றிய செய்திகளைத் தெளிவாகக் கூறுகிறது. தொண்டை நாட்டின் தலைநகராகக் காஞ்சி இருந்துள்ளது. தொண்டைநாடு மேற்கில் பவள மலையினையும், கிழக்கில் கடலையும், தெற்கில் பிணாகினி நதியையும் வடக்கில் திருவேங்கடத்தையும்

எல்லைகளாகக் கொண்ட நாடு என்று அபிதான சிந்தாமணி தெரிவிக்கிறது (சிங்காரவேலு முதலியார், 2004: 1092). இன்றைய ஆந்திர மாநிலத்தின் சித்தூர் மாவட்டம், தமிழ்நாட்டின் காஞ்சிபுரம், சென்னை ஆகிய மாவட்டங்கள் முழுமையாகவும் வேலூர் மாவட்டத்தின் கிழக்குப் பகுதியும் திருவண்ணாமலை மாவட்டத்தின் வடக்கு மற்றும் வடகிழக்குப் பகுதிகளும், விழுப்புரம் மாவட்டத்தின் வடபகுதியும் தொண்டை நாட்டுப் பகுதிகளாக இருந்துள்ளன.

கரிகால் சோழன் தொண்டை நாட்டில் உள்ள காடுகளை அழித்து நாடாக்கினான் என்று தமிழ் நூல்கள் கூறுவதற்குத் தற்கால ஊர்ப்பெயர்களான ஆர்காடு, ஆலங்காடு, வேற்காடு போன்ற ஊர்ப்பெயர்கள் சான்றுகளாக உள்ளன. மேலும் குன்றுகளும் காடுகளும் மலைகளுமே உள்ள வேங்கட மலைப்பகுதி தொண்டைமான் திரையனுக்கு உரியதாக இருந்த போதிலும் அப்பகுதிக்குத் தலைவனாக இருந்தவன் புல்லி எனும் களவர் கோமான் ஆவான். இவன் திரையனுக்கு உட்பட்டு ஆண்ட மன்னனாக இருந்துள்ளான். எனவே, “தொண்டைநாடு என்பது சிற்றரசர் பலரது ஆட்சியில் இருந்த போதிலும் சங்ககாலப் பகுதியில் திரையர் பேரரசு செலுத்தினர். மணிமேகலை வாழ்ந்த காலத்தில் தொண்டைநாடு சோழர் ஆட்சியின் கீழ் இருந்தது. கிள்ளி என்பவன் பேரரசனாகவும் இளங்கிள்ளி என்பவன் அவனுடைய பிரதிநிதியாகக் காஞ்சியிலிருந்து கொண்டு ஆட்சி செய்துள்ளான்” (மனோகரன், 2018: 21). இருப்பினும் ஏறத்தாழ கி.பி. 300-இல் தொண்டைநாடு பல்லவர் ஆட்சியின் கீழ்வந்துவிட்டது (இராசமாணிக்கனார், 2008: 61). தொண்டைமான் திரையன் வேங்கடமலைப் பகுதிவரை ஆண்டதைக் கீழ்க்கண்ட அகநானூற்றுப் பாடல் வரிகள் மூலம் அறியலாம்

**வென்வேல் திரையன் வேங்கட நெடுவரை**

**- அகம், 85**

**செல்வா நல்இசை பொலம்பூண் திரையன்**
**பல்பூங் கானல் பவத்திரி அன்ன இவண்**

**- அகம், 340**

திரையன் என்பவன் தொண்டையன் எனவும் பெயர் பெற்றிருந்தான். அவனது தலைநகரம் பவத்திரி ஆகும். இது வேங்கடமலைக்கு வடக்கே உள்ள நாடு. காஞ்சியைத் தலைநகரமாகக் கொண்டு தென் தொண்டை நாட்டைத் தொண்டமான் இளந்திரையன் ஆண்டு வந்தான் என்பதைப் பெரும்பாணாற்றுப்படை மூலம்

அறியலாம். எனவே, வட தொண்டை நாட்டைப் பவத்திரியிலிருந்து தொண்டைமான் திரையனும், தென் தொண்டை நாட்டைக் காஞ்சியிலிருந்து தொண்டைமன் இளந்திரையனும் ஆண்டு வந்துள்ளனர் என்பது புலனாகிறது. இவர்களைத் தவிர மற்றுமொறு தொண்டைமான் அதியமான் அஞ்சி என்பவன் காஞ்சியிலிருந்து ஆண்டு வந்த செய்தியையும், அவனிடம் ஔவையார் அதியமான் சார்பில் தூது சென்று வந்தார் என்பதையும் புறநானூற்றுப் பாடல் 95 மூலம் அறியலாம். கி.பி. ஆறாம் நூற்றாண்டிலிருந்து கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டு வரை தொண்டை நாடு பல்லவர் ஆட்சிக்கு உட்பட்டிருந்தது. விஜயாலய சோழன் அபராஜ் பல்லவனிடமிருந்து தொண்டை நாட்டைக் கைப்பற்றினார். குறும்பர்கள் தொண்டை நாட்டை ஆண்ட காலங்களில் அதை 24 கோட்டங்களாகவும் 79 நாடுகளாகவும் பிரித்து ஆண்டு வந்தனர். சோழ நாட்டுப் பிரிவினைகளுள் ‘கோட்டம்’ என்ற சொல் இல்லை. பின்னர் வந்த பல்லவரும் அவற்றைப் புதியனவாக உருவாக்கவில்லை. ஆதலால் சோழர் ஆட்சி தொண்டை மண்டலத்தில் ஏற்படுவதற்கு முன்னரே அத்தகையப் பிரிவினைகள் இருந்திருக்க வேண்டும் (இராசமாணிக்கனார், 2008: 66). குலோத்துங்க சோழன் ஆட்சிக்காலத்தில் சோழப் பேரரசு ஏழு மண்டலங்களாகப் பிரிக்கப்பட்டுத் தொண்டை நாட்டுப் பகுதி சயங்கொண்ட சோழமண்டலம் என அழைக்கப்படலாயிற்று சயங்கொண்ட சோழ மண்டலமாகிய தொண்டை நாடு மட்டும் பல்லவர் காலத்தில் இருந்தது போல 24 கோட்டங்களைப் பெற்றிருந்தது.

தொண்டை நாடு போன்றே கொங்கு நாடும் சங்ககாலத்திலிருந்தே தனியொரு பகுதியாக விளங்கியுள்ளது. இது சேரநாட்டின் ஒரு பகுதியாச் சில காலக்கட்டங்களில் இருந்துள்ளது. இருப்பினும் இது ஒரு தனி நாடாகவும் அடையாளங் காணப்பட்டுள்ளது. கம்பர் கொங்கு நாட்டிற்குச் சென்றபோது அங்குள்ள மக்கள் இவரை மதிக்காததால் அவர் கொங்கு நாட்டை இழித்துப் பாடிய பாடலாகக் கீழ்க்காணும் பாடல் அமைந்துள்ளது.

**நீரெல்லாம் சேற்று நாற்றம், நிலமெல்லாம் கல்லும் முள்ளும்**
**ஊரெல்லாம் பட்டி தொட்டி, உண்பதோ கம்பஞ்சோறு**
**பேரெல்லாம் பொம்மன் திம்மன், பெண்களோ நாயும் பேயும்**
**கார் உலகம் கொங்கு நாட்டைக் கனவிலும் நிலைக்கொ ணாதே**

**- தனிப்பாடல் 184 (அ. மாணிக்கம், 1977: 19)**

மேலும் சேர நாட்டின் எல்லைகளைக் கீழ்க்காணும் பாடல் மூலம் அறிய முடிகிறது.

**வடக்குத் திசை பழனி, வான் கீழ் தென்காசி**
**குடக்குத் திசைகோழிக் கோடாம் - கடற்கரையின்**
**ஓரமோ தெற்காகும், உள்எண் பதின்காதம்**
**சேரனாட்டு எல்லையெனச் செப்பு.**

**“சேர நாட்டுக்கு எல்லையாவன: வடக்கில் பழனி மலை எல்லை அடையாளமாக இருப்பது கிழக்கு எல்லை தென்காசி மேற்குத்திக்கு கோழிக்கோடு அல்லது கள்ளிக்கோட்டை தெற்கு எல்லை கடலின் விளிம்பு இந்த எல்லைகளுக்கு உட்பட்ட எண்பது காத தூரம் சேரநாட்டின் பரப்பு எனக் கூறுவாயாக”**

**- அ. மாணிக்கம், 1997: 16**

சோழ நாட்டின் எல்லைகளைக் கீழ்க்கண்ட பாடல் மூலம் அறிய முடிகிறது:

**கடல் கிழக்குத், தெற்குக் கரைபொருவெள் ளாறு**
**குடதிசையில் கோட்டைக் கரையாம் - வடதிசையில்**
**ஏணாட்டுப் பண்ணை யிருப்பத்து நாற்காதம்**
**சோணாட்டுக்கு எல்லை எனச் சொல்**

**“சோழ நாட்டின் கிழக்குத் திசையின் எல்லை கடல் ் அதனது எல்லை கரை மோதிச் செல்லும் வெள்ளாறு மேற்கு எல்லை கோட்டைக்கரை வடக்கு எல்லை ஏண் என்னும் பெயருடைய நாட்டின் வயல். இந்த எல்லைகளுக்கு உட்பட்ட பகுதி இருபத்துநான்கு காதம் எனச் சொல்வாயாக”**

**- அ. மாணிக்கம், 1977: 16**

பாண்டிய நாட்டின் எல்லைகளைக் கீழ்க்கண்ட பாடல் மூலம் அறியலாம்:

**வெள்ளா றதுவடக்காம் மேற்குப் பெருவழியாம்**
**தொள்ளர் புனல்கன்னி தெற்காகும் - உள்ளார்**
**ஆண்ட கடல்கிழக்காம் ஐம்பத்து அறுகாதம்**
**பாண்டிநாட்டு எல்லைப் பதி**

**“பாண்டிய நாட்டின் எல்லைகள்: வடக்கு எல்லை வெள்ளாறு மேற்குத்திக்கின் எல்லை அத்திக்கில் உள்ள பெருவழி தெற்குத் திக்கின் எல்லை தெளிந்த நீரோடும் கன்னி நதி கிழக்கின் எல்லை ஒரு காலத்தில் உள்ளே பொருந்தித் துறைமுகமாகப் பயன்பட்ட கடல். இந்நான்கு திக்குகளுக்கு இடைப்பட்ட ஐம்பத்தாறு காதம் பாண்டிய நாடு”**

**- அ. மாணிக்கம், 1977: 16**

தொண்டை நாட்டின் எல்லைகளைக் கீழ்க்கண்ட பாடல் மூலம் அறிய முடிகிறது:

**மேற்குப் பவளமலை வேங்கடம் நேர்வடக்காம்**
**ஆர்க்கும் உவரி அணிகிழக்கு் - பார்க்குள்உயர்**
**தெற்குப் பினாகி திகழ்இருப தின்காதம்**
**நல் தொண்டை நாடெனவே நாட்டு**

**“மேற்குத் திக்கில் எல்லை பவளமலை வடக்குத் திக்கில் எல்லை வேங்கடமலை அழகிய கிழக்குத் திக்கில் எல்லை ஒலிக்கும் கடல் தெற்குத் திக்கில் தென்பெண்ணையாறு, இவற்றின் இடையில் விளங்குவது இருபது காத தொலைவு. இதுவே தொண்டைமண்டலம் என உறுதியாகக் கூறுக”**

**- அ. மாணிக்கம், 1977: 17**

கொங்கு நாட்டின் எல்லைகளைக் கீழ்க்கண்ட கொங்கு மண்டலச் சதகப் படல் மூலம் அறியலாம்:

**மதிற்கரை கீட்டிசை தெற்குப் பழநி மதிகுடக்குக்**
**கதித்துள வெள்ளி மலைபெரும் பாலை கவின் வடக்கு**
**விதித்துள நான்கு எல்லை சூழ வளமுற்றும் மேவி விண்ணோர்**
**மதித்திட வாழ்வு தழைத்திடு நீள் கொங்கு மண்டலமே.**

**“கிழக்கே மதில்கரையும் (கோட்டைக் கரை) தெற்கே பழநி மலையும், நிலவு தோன்றும் மேற்கில் பெருமை மிகுந்த வெள்ளிமலையும் (வெள்ளியங்கிரி), அழகிய வடக்கில் பெரும்பாலையும் என்றவாறு நான்கு**

**திசைகளின் எல்லைகள் சூழ வளம் பொருந்தி, தேவர்களும் விரும்பத் தங்கிடும் பெருமை கொங்கு செழிப்பாக விளங்குவது கொங்குமண்டலம்".**

**- ந. ஆனந்தி, 2017: 3**

மேற்கண்ட பாடல்கள் மூலம் தமிழகம் சேரர், சோழர், பாண்டியர் ஆண்ட நாடுகளைத் தவிர தொண்டை நாடு, கொங்குநாடு எனும் இருபெரும் பிரிவுகளையும் சேர்த்து ஐந்து பெரும் நாடுகளாகத் திகழ்ந்தது என்பது தெளிவாகிறது. தொண்டை நாடு என்பது கர்நாடகப் பகுதியிலிருந்து வந்த குறும்பர் இன மக்களால் ஆளப்பட்டுப் பின்னர் சோழர்களால் ஆளப்பட்ட பகுதிகளாகும். சிலகாலம் பலல்வர்களின் ஆட்சியின் கீழ் இப்பகுதி இருந்தது. பின்னர் குலோத்துங்க சோழன் பல்லவர்களிடமிருந்து மீட்டெடுத்துச் சோழநாட்டுடன் இணைத்துக் கொண்டான். ஆனால் தொண்டை நாட்டின் பிரிவுகள் பல்லவர் காலத்தில் இருந்தது போலவே சோழர் ஆட்சிக் காலங்களிலும் இருந்துள்ளது. கொங்கு நாடு என்பது சேர நாட்டின் ஒரு பகுதியாக இருந்துள்ளது. ஆனால் தமிழக வரலாற்றின் பல காலக்கட்டங்களில் கொங்கு நாடு என்பது சிற்றரசர்களால் தனித்தும் ஆளப்பட்டுள்ளது. இவ்வாறு தமிழ் கூறும் நல்லுலகம் எனப்படும் தமிழகம் ஐந்து பெரும் பிரிவுகளாக இருந்தமையால் மக்கள் பேசும் பேச்சுவழக்குகளிலும் வேறுபாடுகள் இயற்கையாகவே தோன்றியிருக்க வேண்டும். இத்தகைய மொழிக்கூறுகள் அவர்கள் வாழும் நாட்டை அடையளங்காட்டுகின்றன. மேலும் தமிழகத்தில் உள்ள தற்காலச் சாதிகளின் பெயர்களில்: பாண்டிய வேளாளர், சோழிய வேளாளர், சோழியச் செட்டி, கொங்கு வேளாளர், கொங்கு வேளாளக் கவுண்டர், தொண்டை மண்டல முதலி போன்ற சாதிகளின் பெயர்கள் பண்டையத் தமிழகத்தின் பகுதிகளை நினைவூட்டுவனவாக உள்ளன. இத்தகைய ஐந்து பெரும் பிரிவுகளுடன் தமிழகம் என்பது 12 சிற்றரசர்கள் ஆண்ட 12 நாடுகளின் பெயர்களும் அவைகளை ஆண்ட மன்னர்களைப் பற்றிய குறிப்புகளும் சங்ககால இலக்கியங்களில் காணக்கிடக்கின்றன.

தொல்காப்பியர் தமிழ் மொழியின் சொற்களை இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் என்று நான்கு வகைகளாகப் பிரிக்கின்றார்:

**இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல் என்று**
**அனைத்தே செய்யுள் ஈட்டச் சொல்லே**

**- தொல்காப்பியம்: 880**

தொல்காப்பியர் சொற்களை நான்காகப் பிரித்தது போல் நன்னூல் ஆசிரியர் பவணந்தியாரும் சொற்களை நான்கு வகைகளாகப் பிரித்துப் பார்கின்றார்:

**அதுவே**

**இயற்சொல் திரிசொல் இயல்பிற பெயர்வினை**

**எனவிரண் டாகும் இடைஉரி யடுத்து**

**நான்குமாந் திசை வடசொல் அணுக வழி**

**- நன்னூல்: 270**

இயற்சொல்லுக்கு இலக்கணம் கூறும் தொல்காப்பியர்,

**அவற்றுள்**

**இயற்சொல் தாமே**

**செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணித்**

**தம்பொருள் வழாமை இசைக்கும் சொல்லே**

**- தொல்காப்பியம்: 881**

எனக் கூறுகின்றார். எனவே இயற்சொல் என்பது செந்தமிழ் பேசப்படும் நிலத்தில் வழங்கும் திரிதல் இல்லாது கற்றார்க்கும் கல்லாதார்க்கும் தம் பொருளை எளிதில் விளக்கும் தன்மையுடைய உலக வழக்குச்சொற்கள் ஆகும். திரிசொற்கள் என்பன ஒரு பொருள் குறித்து வரும் பல சொற்களும் பல பொருள்கள் குறித்து வரும் ஒருசொல்லும் என இருவகைப்படும் என்கின்றார் தொல்காப்பியர்:

**ஒருபொருள் குறித்த வேறுசொல் லாகியும்**

**வேறுபொருள் குறித்த ஒருசொல் ஆகியும்**

**இருபாற்று என்ப திரிசொல் கிளவி**

**- தொல்காப்பியம்: 882**

திசைச்சொற்கள் என்பன செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தினும் தத்தம் நாட்டில் இயற்சொல்லால் வழங்கும் சொற்களாகும்:

**செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தும்**

**தம்குறிப் பினவே திசைச்சொல் கிளவி**

**- தொல்காப்பியம்: 883**

வடசொல் என்பது சமஸ்கிருதம் பிராக்ருதம் போன்ற வடமொழிகளில் இருந்து கடன் வாங்கித் தமிழின் இலக்கண விதிகளுக்கு உட்பட்டு தமிழாக்கம் செய்து தமிழ்மொழிச் சொற்கள் போல் வழங்கும் சொற்களாகும்:

**வடசொற் கிளவி வடஎழுத்து ஒரீஇ**

**எழுத் தொடு புணர்ந்த சொல்லா கும்மே**

**- தொல்காப்பியம்: 884**

தொல்காப்பியர் திசைச்சொற்களைப் பற்றிக் கூறும்பொழுது ''செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தும்" (தொல்காப்பியம் 883) எனக் கூறுவதன் மூலம் தமிழ்மொழி பேசப்படும் பகுதிகளை மொழியில் காணும் வேறுபாடுகள் அடிப்படையில் 12 நாடுகளாகப் பிரிக்கலாம் எனக் கருதப்படுகிறது. நன்னூலாசிரியர் இவ்வகை நிலப்பகுதிகள் 12 என்பதை

**செந்தமிழ் நிலம்சேர் பன்னிரு நிலத்தினும்**

**ஒன்பதிற் றிரண்டினில் தமிழ்மொழி நிலத்தினும்**

**தங்குறிப் பினவே திசைச்சொல் என்ப**

**- நன்னூல்: 273**

முத்துவீரிய ஆசிரியரும்

**செந்தமிழ் நிலனைச் சேர்ந்த ஈராறு**

**நிலத்தினும் தங்குறிப்பின் திசைக்கிளவி**

**- முத்துவீரியம்: 52**

எனக் கூறுவதன் மூலம் தொல்காப்பியரின் கூற்றுப் பிற்கால இலக்கண ஆசிரியர்களாலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட கருத்தாகும்.

நன்னூலுக்கு உரைகூறும் ஆறுமுக நாவலர் செந்தமிழ் நிலத்தைச் சேர்ந்த பன்னிரண்டு கொடுந்தமிழ் நிலங்களிலும் பதினெண்மொழிகளுள்ளே தமிழ்நிலம் ஒழிந்த நிலங்களிலும் உள்ளோர் தங்குறிப்பினவாய் அத்திசைகளினின்றும் செந்தமிழ் நிலத்து வந்து வழங்குவன திசைச்சொல் என்று புலவர் சொல்கின்றனர் என்பார் (ஆறுமுக நாவலர், 1992: 23-24). தண்டபாணிதேசிகர் செந்தமிழ் நிலத்தை பன்னிரண்டு கொடுந்தமிழ் நிலத்தின் கண்ணும் பதினெண்மொழியுள் தமிழும் மேற்கூறும் வடசொற்குக் காரணமாகிய ஆரிய மொழியும் ஒழிந்த பதினாறு

மொழியும் வழங்கும் பனினாறு நிலத்தின் கண்ணும் உள்ளோர் தங்குறிப்பினவாய்ச் செந்தமிழோர் குறிப்பினவன்றி அத்திசைச்சொல் எனப் புலவர் கூறுவர் என்கின்றார் (தண்டபாணிதேசிகர், 2008: 225) செந்தமிழ் நாட்டைச் சேர்ந்த பன்னிரண்டு கொடுந்தமிழ் நாடுகளிலும் பதினெட்டு மொழிகளுள் தமிழ் ஒழிந்த ஏனைய மொழிகள் வழங்கும் நாடுகளிலும் வாழும் மக்கள் எந்தப் பொருளை எந்தச் சொல்லால் வழங்குகின்றனரோ அதே பொருளில் அச்சொற்கள் தமிழில் வந்து வழங்குமானால் அவை திசைச்சொற்கள் ஆகும் என்று கோ. வில்வதி (2003: 306) கூறுகின்றார்.

தொல்காப்பிய உரையாசிரியர் சேனாவரையர் கொடுந்தமிழ் அல்லது திசைச்சொற்கள் பேசப்படும் பன்னிரு நாடுகளைக் கீழ்க்கண்டவாறு பட்டியலிட்டுள்ளார்:

**தென்பாண்டி குட்டம் குடம் கற்காவேண்பூழி**
**பன்றி அருவா அதன் வடக்கு - நன்றாய**
**சீத மலாடு புனல்நாடு செந்தமிழ்சேர்**
**ஏதமில் பன்னிரு நாட்டெண்**

**- சேனாவரையர் (தொல்காப்பிய உரையாசிரியர்)**

இந்தப் பன்னிரு நாடுகள் தென்பாண்டி நாடு, குட்ட நாடு, புனல் நாடு, குட நாடு, கற்கா நாடு, பன்றி நாடு, சீத நாடு, பூழி நாடு, பொங்கர் நாடு, மலை நாடு, அருவா நாடு, அருவா வடதலை நாடு என அடையாளங்காணப்பட்டுள்ளன. இவற்றில் பொங்கர் நாடும் புனல் நாடும் வேணாடு, ஒளி நாடு எனவும் அழைக்கப்பட்டுள்ளன (கனகசபை, 1904: 12). மேலும் கி.பி. 11-ஆம் நூற்றாண்டில் வீரசோழியம் எனும் இலக்கண நூலை எழுதிய புத்தமித்திரர், தமிழகத்தைப் பேச்சுவழக்குகள் அடிப்படையில் கொங்கு (கொங்குநாடு), காவேரி (சோழநாடு), பாலாறு (பல்லவநாடு) என்று மூன்று பகுதிகளாக அடையாளங்காட்டியுள்ளார் (மீனாட்சி சுந்தரன், 1965: 194). இந்தப் பன்னிரு நாடுகளையும் தற்கால நிலப்பரப்பில் கீழ்க்கண்ட பகுதிகளாக அடையாளங் காணப்படுகிறது.

1. தென்பாண்டி நாடு - திருநெல்வேலி, தூத்துக்குடி மாவட்டங்களின் தென்பகுதி இதன் தலைநகரம் மோகூர் ஆகும். பாளையம் மாறன் என்பவன் இந்நாட்டின் அரசன் ஆவார்.

2. குட்ட நாடு - கேரள மாநிலம் கோழிக்கோடு, கோட்டயம் மாவட்டங்கள். இது ஏரிகள் உள்ள நாடாகக் கருதப்படுகிறது

3. குட நாடு - கேரள மாநிலம் வடக்கு மலபார் பகுதியும் கர்நாடக மாநிலத்தில் உள்ள குடகு மலைப் பகுதிகளும் ஆகும்

4. கற்காநாடு - மேற்குத்தொடர்ச்சி மலையின் கிழக்குப் பகுதியாகும். தற்போதைய கோயம்புத்தூர் மாவட்டம் கற்கள் நிறைந்த பகுதி. திருவனந்தபுர அரசின் வடமேற்குப் பகுதி இன்றும் கக்காநாடு என அழைக்கப்படுகிறது.

5. வேணாடு.׃.பொங்கர் நாடு - கேரள மாநிலம் திருவனந்தபுர மாவட்டத்தின் தென்பகுதியாகும். மூங்கில் காடுகள் உள்ள பகுதியாகும். இடுங்கோ வெண்மான் என்பவன் இப்பகுதியின் அரசன் ஆவார்.

6. பூழி நாடு - மணற்பாங்கான பகுதியாகும். தற்போது தமிழ் நாட்டில் உள்ள கன்னியாகுமரி மாவட்டம்

7. பன்றி நாடு - தற்போதைய தமிழ் நாட்டின் திண்டுக்கல் மாவட்டக் கொடைக்கானல் பகுதி முதல் நாகப்பட்டினம் வரை உள்ள பகுதிகளாகும். வேடுவர் அல்லது வேடர் எனும் இனத்தவர்கள் வாழும் பகுதி பன்றிகள் நிறைந்த நாடு

8. அருவா நாடு - தமிழ் நாட்டின் தற்போதைய விழுப்புரம், கடலூர் மாவட்டங்களின் கடற்கரைப் பகுதிகளாகும்.

9. அருவா வடதலை நாடு - தமிழ் நாட்டின் வடகோடிப் பகுதிகளாகும். இப்பகுதியில் வாழும் மக்கள் அருவாளர் அல்லது குறும்பர் ஆவர். காஞ்சிபுரம் இதன் தலைநகரமாகும். இப்பகுதியை ஆண்ட மன்னர்கள் தொண்டைமான் என அழைக்கப்பட்டனர். அருவா நாடும் அருவா வடதலை நாடும் மாவிலங்கை என அழைக்கப்பட்டது. திரையன், பல்வேந் திரையன், தொண்டைமான் என்பது இந்நாட்டை ஆண்ட மன்னர்களின் பட்டப்பெயர்களாகும்.

10. சீத நாடு - தற்கால தமிழ்நாட்டின் நீலகிரி மாவட்டமும் அதனைச் சேர்த்துள்ள கோயம்புத்தூர் மாவட்டப் பகுதிகளும் ஆகும். இது தமிழ்நாட்டின் குளிர் அதிகமாக உள்ள இடமாகும்.

11. மலாடு - மலைநாடு. இது பெண்ணார் நதிக் கரைப்பகுதியையும் முள்;ர் மலைப்பகுதியையும் உள்ளடக்கியது. கோவலூர் இதன் தலைநகர் ஆகும்.

12. புனல் நாடு.ீ.ஒளி நாடு - சோழ நாட்டுப் பகுதி. முழைக் காலங்களில் வெள்ளம் வரும் பகுதிகளாகும். தமிழ் நாட்டின் தற்போதைய தஞ்சாவூர், திருச்சி ஆகிய மாவட்டங்கள் அடங்கிய பகுதியாகும். இந்நாட்டு மக்கள் ஒளி நாகர் என அழைக்கப்பட்டனர்.

(கனகசபை, 1904 சீனிவாச ஐயங்கார், 1929 நீலகண்ட சாஸ்திரி, 1972 சுந்தரராஜன், 1991 ச. மனோகரன், 2014).

தற்கால நிலப்பரப்புகளோடு ஒப்பிட்டுப் பார்த்தால் வேணாடு, குடநாடு, குட்ட நாடு ஆகிய சங்ககாலத் தமிழ் வழக்காற்றுப் பகுதிகள் தற்போதைய மலையாளம் பேசப்படும் கேரள மாநிலப் பகுதிகளிலும் கர்நாடக மாநிலக் குடகு மாவட்டப் பகுதியிலும் உள்ளன. ஏனைய பகுதிகள் தற்போதைய தமிழ்நாடு, புதுச்சேரி எனும் மாநில மற்றும் யூனியன் பிரதேசப் பகுதிகளில் உள்ளன. இவ்வாறாக மூவேந்தர்களாலும் பன்னிரண்டு சிற்றரசர்களாலும் ஆளப்பட்ட தமிழகத்தின் மக்கள் பேசும் தமிழிலில் வேறுபாடுகள் உண்டாவது இயற்கையே. ஆனால் இத்தகைய வட்டாரவழக்குச் சொற்கள் இலக்கிய வழக்குகளில் பயன்படுத்தப்பட்டதா இல்லையா என்ற கேள்வி எழுகின்றது. மேலும் இலக்கிய வழக்கு என்பது எல்லா நாடுகளிலும் வாழ்ந்த மக்களால் பொதுவாக ஏற்றுக்கொள்ளப்பட்ட வழக்காகும். எனவே, இலக்கியவழக்கு தமிழ்பேசும் மக்களின் நாட்டுப் பகுதிகளோடு ஒன்றினைத்துத் தமிழ் கூறும் நல்லுலகம் அல்லது தமிழகம் எனும் பெயரோடு தமிழ் பேசும் அனைத்து நாட்டு மக்களையும் ஒன்றிணைக்கும் பாலமாக அமைந்துள்ளது. இலக்கிய வழக்கு என்றதொரு பொதுவழக்கு சங்ககாலம் முதல் வழங்கி வந்த காரணத்தால் தமிழ்மொழி சிதையாது தனிமொழியாக இன்றுவரை வழக்கில் உள்ளது. இப்படியொரு இலக்கிய வழக்கு எனும் பொதுவழக்கு இல்லாது இருந்திருந்திருந்தால் பன்னிரண்டு நாடுகளில் பேசப்பட்ட தமிழ்ப் பேச்சுவழக்குகள் தனித்தனி மொழிகளாகக் காலப்போக்கில் உருவாகியிருக்கும். இலக்கிய வழக்கு தமிழ் மக்களை ஒன்றிணைத்து வைத்திருந்தது. இருப்பினும் சங்க கால சேரநாட்டுப் பகுதிகள் தற்கால மலையாள மொழி பேசும் பகுதியாக உறுவெடுத்து மலையாளம் எனும் தனிமொழி தமிழ் மொழியினின்று உறுவாகியது இங்கு குறிப்பிடத்தக்கது.

தமிழக எல்லைகளைப் பற்றிக் கூறும்பொழுது அவைகளை அகத்தனவும் புறத்தனவும் என இருவகைகளாக அறிஞர்கள் பிரிக்கின்றனர். இதில் அகத்தனவும் எனும் எல்லைகள் காலங்காலமாகத் தமிழ்மொழி பேசப்படும் பகுதிகள் அல்லது நாடுகள் ஆகும். புறத்தனவும் எனும் பகுதிகள் தமிழகம் அல்லது பிறநாடுகளில் பேசப்படும் தமிழ்மொழியையும் அந்நாடுகளில் வாழும் மக்களையும் குறிப்பனவாகும். தமிழகத்தின் அகத்தனவும் உள்ள மூவேந்தர்களின் நாடுகளையும் சிற்றரசர்கள் ஆண்ட பன்னிருநாடுகளையும் பற்றி அறிந்து கொண்டோம். புறத்தனவும் உள்ள நாடுகளைக் கீழ்க்கண்ட அகத்தியரின் பாடல் விளக்குகிறது.

**கன்னித் தென்கரை கடற்பழந் தீவங்**
**கொல்லங் கூவகஞ் சிங்கள மென்னும்**
**எல்லையின் புறத்தவும் ஈழம் பல்லவங்**
**கன்னடம் வடுகு கலிங்கந் தெலுங்கம்**
**கொங்கணந் துளுவங் குடகங் குன்றன்**
**என்பன குடபா விருபுறச் சையத்**
**துடனுறுறைபு பழகுந் தமிழ்திரி நிலங்களும்**
**முடியுடை மூவரு மிடுநில வாட்சி**
**யரசு மேம்பட்ட குறுனிலக் குடிகள்**
**பதின்மரும் உடனிருப் பின்வரும் படைத்த**
**பன்னிரு திசையிற் சொன்னய முடையவும்**

**- அகத்தியர் (இராகவையங்கார், 1941: 16-17)**

மேற்கண்ட சூத்திரத்தில் கூறப்பட்டுள்ள இப்பதினேழு நாடுகள் தவிர, மேலும் சில நாடுகளின் பெயர்கள் நன்னூலுக்கு உரையெழுதிய மயிலைநாதரின் விளக்கத்தில் காம்போதி, கூவகம், பல்லவம் ஆகிய மூன்று நாடுகள் கூடுதலாக இடம் பெற்றுள்ளன.

**சிங்களஞ் சோனகஞ் சாவகஞ் சீனத் துளுக்குடகம்**
**கொங்கணங் கன்னடங் கொல்லந் தெலுங்கம் கலிங்கம் வங்கம்**
**கங்க மகதங் கடாரங் கடவுங் கடுங்செலம்**
**தங்கும் புகழ்த்தமிழ் சூழ்பதி நேழ்நிலன் தாமிவையே**

**- மயிலைநாதர்**

மேற்கூறிய சூத்திரங்களில் கூறப்பட்டுள்ள நாடுகளைக் கீழ்க்கண்டவாறு பட்டியலிடலாம்.

1. சிங்களம் - தற்கால இலங்கை. அரேபியர்கள் இதைச் சேரம் தீவு என அழைத்துள்ளனர்.
2. சோனகம் - யவனர்கள் என்றழைக்கப்பட்ட கிரேக்கர் வாழும் நாடு. பிற்காலங்களில் அரேபிய வியாபாரிகளும் சோனகர் ‘தங்க வியாபாரி’ என அழைக்கப்பட்டனர்.
3. சாவகம் - மணிமேகலை எனும் சங்க கால இலக்கியத்தில் கூறப்பட்டுள்ள நாடு. நாகபுரம் என்பது இந்நாட்டின் தலைநகரமாகும்.
4. சீனம் - தற்கால சீன நாடு
5. துளு/துளுவம் - இது கோசர்நாடு எனவும் அழைக்கப்பட்டது. கர்நாடக மாநிலத்தின் வடக்கு அரபிக்கடல் பகுதியாகிய தற்கால தென்கனரா மாவட்டப் பகுதியாகும்.
6. குடகம் - தற்கால கர்நாடக மாநிலத்தின் குடகு மாவட்டப் பகுதியாகும்
7. கொங்கணம்/கொங்காணம் - மேற்கு கடற்கரைப் பகுதியான அரபிக்கடலோரப் பகுதிகளில் ஒன்று. தற்பொழுது கொங்கண் கடற்கரைப்பகுதி என அழைக்கப்படுகிறது. தற்காலக் கொங்கணி மொழி பேசப்படும் பகுதிகளாகும்.
8. கன்னடம் - தற்காலக் கர்நாடக மாநிலப் பகுதிகளாகும். இது கன்னட மொழி பேசப்படும் பகுதிகளாகும்.
9. கொல்லம் - கடற்கோலால் அழிந்த பகுதிகள் தவிர மீதமுள்ள கன்னியாகுமரிப் பகுதியாகும்.
10. தெலுங்கம் - தற்கால ஆந்திர, தெலிங்கானா மாநிலங்களாகும். இது தெலுங்கு மொழி பேசப்படும் பகுதிகளாகும்.
11. கலிங்கம் - ஏழுகலிங்கம் என அழைக்கப்பட்ட தற்கால ஒடிசா மாநிலப் பகுதியாகும்.

கடகம் எனும் ஊர் இதன் தலைநகரமாகும்.

12. கங்கம்/கங்கபாடி/ஏழரையிலக்கம் - தற்கால கர்நாடக மாநிலத்தின் மைசூர் அருகிலிருந்த பகுதியாகும். இதன் தலைநகர் தலைக்காடு அல்லது தலவனபுரம் என்பதாகும்.

13. மகதநாடு - கங்கையாற்றின் கரைப்பகுதியில் இருந்த ஒரு நாடு

14. கடாரம் - தற்கால மியான்மர் நாடாகும். இது ரமணம் அல்லது அரமணம் எனவும் அழைக்கப்பட்டது. இதன் தலைநகர் கடாரம் ஆகும்.

15. கவுடம் - தற்கால வங்காளத்தின் ஒரு பகுதி. இது வங்கம் அல்லது கங்கை நாடு எனவும் அழைக்கப்பட்டது.

16. வடுகு - தமிழகத்தின் வட எல்லையாகிய அருவா நாட்டையும் அருவா வடதலை நாட்டையும் ஒட்டிய பகுதிகளாகும். பொதுவாகத் தமிழர்கள் தமிழகத்தின் வட பகுதிகளில் வாழ்ந்த தெலுங்கு, கன்னட மொழிகள் பேசிய மக்களை வடுகர் என்று அழைத்தனர்.

17. கன்னித் தென்கரைக்கட் பழந்தீவம் - தற்கால இலச்சதீவுப் பகுதிகளாகும்.

18. காம்போதி - தற்காலக் கம்போடிய நாடு

19. கடவம் - கன்னியாகுமரிக்குத் தெற்கில் இருந்த நாடு.இது கடல்கோலில் அழிந்துவிட்டது.

20. பல்லவம் - பல்லவம் என்றழைக்கப்பட்ட தற்கால பெர்சிய மொழி பேசப்படும் பகுதியாகும்.

திசைச்சொல்லுக்குத் தொல்காப்பியனாரின் கருத்து மூலம் விளக்கம் தரும் பேராசிரியர் வெள்ளைவாரணர் ‘‘தமிழ்நாட்டின் உட்பிரிவுகளாகிய பன்னிரு நிலங்களிலும் வாழும் மக்கள் தத்தம் குறிப்பினவாக அவ்வள நாட்டின் எல்லைக்குட்பட்டு பேசப்படும் சொற்கள் அதே பொருளில் தமிழ் நாட்டின் பிற பகுதிகளிலும் வந்து வழங்குமாயின் அவை திசைச்சொற்கள் எனப்படும் என்பதே

தொல்காப்பியனார் திசைச்சொற்களைப் பற்றிக் கூறும் விளக்கமாகும்" (வெள்ளைவாரணர், 1987: 182). மேலும் திசைமொழி வழக்கிற்கும் வட்டாரவழக்கிற்கும் ஓரளவு தொடர்புள்ளது எனக்கூறும் பேராசிரியர் வெள்ளைவாரணர் "தொல்காப்பியனார் மொழிவழக்கினைச் சேரிமொழி எனவும், செய்யுள் மொழி எனவும் இரு திறமாகப் பகுத்துக் கூறியுள்ளார். அவற்றுள் சேரி மொழி என்பது கற்றோர், கல்லாதோர் எனும் வேறுபாடின்றி எல்லா மக்களுக்கும் தெளிவாகப் பொருள் புலனாகும்படி எளிய சொற்களால் அமைந்த பேச்சுமொழியாகும். செய்யுள் மொழியென்பது ஓரளவு மொழிப்பயிற்சியுடையோற்கு மட்டுமே புலனாவதாகும். இவ்விரு வகை மொழியமைப்பில் சேரி மொழியினை அடியொற்றியதே வட்டாரவழக்கு எனவும், செய்யுள் மொழியின் உறுப்பானவே இலக்கண நூலார் கூறும் திசைச்சொற்கள் எனவும் ஒருவாறு பாகுபாடு செய்துகொள்ளுதல் மொழியாராய்ச்சிக்கு ஏற்புடையதாகும்" என்பது அவரது கருத்தாகும் (வெள்ளைவாரணர், 1987: 184).

சங்ககாலப் பாடல்களாக அறியவருவன 2,381 ஆகும். இப்பாடல்களை இயற்றிய புலவர்களின் எண்ணிக்கை 473 ஆகும். இவர்களில் 31 பேர்கள் பெண்பாற் புலவர்கள். சங்க இலக்கியப் பாடல்களைப் பற்றிக் கூறும் பொழுது பேராசிரியர் மு. வரதராசனார் "பாடிய புலவர்களுள் சிலர் நகரங்களைச் சார்ந்தவர்கள். பலர் சிற்றூர்களைச் சார்ந்தவர்கள். கற்பிக்கும் ஆசிரியர், பொன் வாணிகர், ஆடை வாணிகர், மருத்துவர், தச்சர் முதலாகப் பல்வேறு தொழில் செய்து வாழ்ந்தவர்கள் புலவர்களாகப் பாடியுள்ளனர். அரசர்களாக அரசு குடும்பத்தைச் சார்ந்தவர்களாக இருந்து புலமை பெற்றுப் பாடியவர்கள் முப்பத்தொருவர் (வரதராசன், 1972: 48). மேலும், சங்ககாலப் புலவர்கள் பல நாடுகளைச் சார்ந்தவர்கள் மட்டுமல்லாது பல சமூகங்களைச் சேர்ந்தவர்களாதலால், இவர்களின் பாடல்களில் அவர்களது வட்டாரம், சமுதாயம் சார் தமிழ்ச்சொற்கள் ஒரு தாக்கத்தை ஏற்படுத்தியிருக்கக்கூடும். சங்ககாலப் புலவர்கள் வரிசையில் அந்தணர், வேளிர் போன்ற உயர்ந்த சமூகத்தைச் சார்ந்தவர்களும் பறையர், பள்ளர் போன்ற தாழ்ந்த சமூகத்தைச் சார்ந்தவர்களும் உள்ளனர். மேலும் பாணர், விறலியர், பொருநர், கூத்தர் போன்ற நாடோடிச் சமூகத்தைச் சார்ந்தவர்களும் பாடல்கள் புனைந்துள்ளனர். எனவே சங்ககாலப் புலவர்கள் ஒரு குறிப்பிட்ட சமூகத்தைச் சேர்ந்தவர்கள் அல்லாது பலவகைச் சமூகங்களைச் சார்ந்தவர்களாக இருப்பதால் அவர்களால் சமூகம் தொடர்பான செய்திகளை உள்ளவாறு தெரிவிக்க இயலுகிறது. எனவே, ஒவ்வொரு புலவர்களின் பாடல்களையும் புலவர்களின்

வட்டார, சமூகப் பின்புலங்களை ஆதாரமாக வைத்துப் பார்த்தால் தமிழர்களின் வட்டார மொழியில் உள்ள சமூகக்கூறுகள் வெளிப்படும்.

தமிழ் மொழி பிற மொழிகளிலிருந்து மாறுபட்டுத் தனித்தன்மையோடு விளங்குவதற்குக் காரணம், சமஸ்கிருதமும் ஏனைய வட இந்திய மொழிகளும் பிற திராவிட மொழிகளும் அந்தணர் எனும் குறிப்பிட்ட ஒரு சமுதாய மக்களால் வளர்க்கப்பட்டது போல் அல்லாது பலதரப்பட்ட வட்டாரங்களைச் சார்ந்த பலதரப்பட்ட தொழில்களைப் புரிந்து வாழும் பல சமூகங்களைச் சார்ந்த மக்களால் வளர்க்கப்பட்டதன் காரணத்தால் அதன் தனித்தன்மையை இழக்காது எல்லா வட்டாரங்களையும் சமூகங்களையும் தொழில்களையும் உள்ளடக்கிய சொற்களால் வளமிக்க மொழியாக உருவெடுத்துள்ளது என்பது இரால்பகதூர் பவானந்தம்பிள்ளை போன்ற மூத்த அறிஞர்களின் கருத்தாகும்.

**"The reason why Tamil is more independent of Sanskrit than the Northern languages and even than the other Dravidian tongues is, that it has been left, like those, principally to the cultivation of the Brahmans"**

**- Bavanandam Pillai, 1925: vi**

தமிழ் மொழி பேசும் தமிழர்கள் வாழும் நாடுகள் அகத்தனவும் எனவும் (அவர்கள் வாழும் பூர்வீகப் பகுதிகள்) புறத்தனவும் (அவர்கள் வாழும் பிற நாடுகள்) எனவும் பகுத்துப்பார்த்து பூர்வீக மக்களாக மூவேந்தர்கள் ஆட்சிக்குட்பட்ட நாடுகளிலும் பன்னிரு சிற்றரசர்கள் ஆட்சிக்குட்பட்ட நாடுகளில் வாழ்ந்து வருவதால் அரசமைப்பால் பிரிவுபட்ட மக்களாகத் திகழ்ந்துள்ளனர். மேலும் தமிழகத்தை அதன் நிலக்கூறு அடிப்படையில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என ஐந்து வகைகளாகப் பிரித்து இதை ஐந்து திணைகள் என்றனர். மலையும் மலைசார்ந்த நிலம் குறிஞ்சி எனவும், காடுகள் உள்ள நிலம் முல்லை எனவும், ஆற்றுப் பாசனப்பகுதி மருதம் எனவும், கடல் பகுதி நெய்தல் எனவும் பாலைவனப்பகுதி பாலை எனவும் அழைத்தனர். இதைத் தொல்காப்பியர்

**மாயோன் மேய காடுறை உலகமும்**
**சேயோன் மேய மைவரை உலகமும்**
**வேந்தன் மேய தீம்புனல் உலகமும்**
**வருணன் மேய பெருமணல் உலகமும்**

**முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்**
**சொல்லிய முறையால் சொல்லவும் படுமே**

**- தொல்காப்பியம்: 951**

என்று கூறியுள்ளார். மேற்கூறிய நூற்பாவில் பாலை பற்றிய செய்தி இல்லை. இதை

**அவற்றுள்,**
**நடுவண் ஐந்திணை நடுவணது ஒழியப்**
**படுதிரை வையம் பாத்திய பண்பே**

**- தொல்காப்பியம்: 948**

எனத் தொல்காப்பியர் கூறுவதன் மூலம் அறியலாம் "அவ்வேழில் நடுவில் இருக்கும் குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் என்ற ஐந்திணைகளுள் நடுவிலிருக்கும் பாலை நீங்க கடலால் சூழப்பெற்ற இந்நில உலகத்தைப் பகுத்துக்கொண்டனர்" (சுப்பிரமணியன், 2008: 262) என்பது தெளிவாகிறது. இருப்பினும் சிலப்பதிகார ஆசிரியர்

**முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து**
**நல்இயல்பு இழந்த நடுங்கு துயருற்று**
**பாலை என்பதொரு படிலம் கொள்ளும்**

**- சிலப்பதிகாரம், காடு: 64-66**

என்று பாலை நிலத்திற்கு விளக்கம் கூறியுள்ளார்.

"திணை என்ற கொள்கை தமிழுக்கு மட்டுமே உரியது. உலக மொழிகளில் திணை என்ற கொள்கை எம்மொழியிலும் இல்லை" (சுப்பிரமணியன், 2008: 256). இயற்கைச் சூழ்நிலைகளால் நிலப்பாகுபாடுகள் வரையறுக்கப்பட்டுள்ளது. திணை என்றழைக்கப்பட்ட ஒவ்வொரு நிலப்பகுதியும் வாழும் மக்கள், அவர்களது பாரம்பரியத் தொழில், இசைக்கருவிகள், இசைக்கும் பண், அத்திணை நிலத்திற்கே உரியதாகக் கருதப்படும் மிருகங்கள், பறவைகள், புல் பூண்டுகள், தெய்வங்கள் எனப் பல சமூகப் பண்பாட்டுக் கூறுகளால் ஒவ்வொரு திணையும் வரையறுக்கப்பட்டுள்ளன. இத்தகைய திணைக்கே உரிய கூறுகளின் பொருள்கள் மூன்றாகும். அவைகள் முறையே முதல் பொருள், கருப்பொருள், உரிப்பொருள் எனப்பட்டன.

**முதல், கரு, உரிப்பொருள் என்ற மூன்றே**
**நுவலுங் காலை முறைசிறந்த னவே**
**பாடலுள் பயின்றவை நாடும் காலை**

**- தொல்காப்பியம்: 949**

முதற்பொருள் என்பது நிலம், பொழுது என இரண்டின் தன்மை என அறிஞர் கூறுவர்:

**முதல்எனப் படுவது நிலம்பொழுது இரண்டின்**
**இயல்பு எனமொழிய இயல்புஉணர்ந் தோரே**

**- தொல்காப்பியம்: 950**

கருப்பொருள் என்பது வணங்கப்படும் தெய்வம், உணவு வகை, பயன்படுத்தப்படும் யாழ், பறை அந்நிலத்திற்கே உரிய மரவகைகள், பறவை வகைகள், மிருகங்கள் என எட்டு வகைகளாகப் பகுத்துக் கூறுகின்றனர்.

**தெய்வம் உணாவே மா மரம் புள் பறை**
**செய்தி யாழின் பகுதியோடு தொகைஇ**
**அவ்வகை பிறவும் கருஎன மொழிய**

**- தொல்காப்பியம்: 964**

இவ்வகைக் கருப்பொருள்களின் வேறுபாடுகள் கீழ்க்கண்ட அட்டவணையில் கொடுக்கப்பட்டுள்ளன:

| எண் | கருப்பொருள் | குறிஞ்சி | முல்லை | மருதம் | நெய்தல் | பாலை |
|---|---|---|---|---|---|---|
| 1. | தெய்வம் | சேயோன் (முருகன்) | மாயோன் (திருமால்) | வேந்தன் (இந்திரன்) | வருணன் | கொற்றவை |
| 2. | உணவு | ஐவனநெல், தினை, மூங்கில் அரிசி, கிழங்கு | வரகு, சாமை | வெண்ணெல், கரும்பு | மீன், உப்பு | கொள்ளையடித்த பொருள் |
| 3. | மா (விலங்கு) | புலி, யானை, கரடி, பன்றி | மான், முயல் | எருமை, நீர்நாய் | பகடு, சுறா | வலிமை இழந்த யானை, புலி, செந்நாய் |
| 4. | மரம் | அகில், சந்தனம், தேக்கு, வேங்கை, மூங்கில் | தோன்றி, காயா, பிடவம், குந்தம் | வஞ்சி, காஞ்சி, மருதம் | புன்னை, ஞாழல், கண்டல் | வற்றின இருப்பை, ஆமை, உழிஞை |
| 5. | புள் (பறவை) | கிளி, மயில் | காட்டுக்கோழி, சிவல் | தாரா, நீர்க்கோழி | அன்றில், அன்னம் | கழுகு, பருந்து, புறா |
| 6. | பறை | தொண்டகப்பறை | ஏறுகோட்பறை | மணமுழவு | மீட்கோட்பறை | சூறைகோட்பறை |
| 7. | செய்தி (தொழில்) | தேன் அழித்தல், கிழங்கு அகழ்தல், தினை விளைத்தல், வேட்டையாடல், கிளி கடிதல் | வரகு விளைத்தல், ஆநிரை மேய்தல், ஏரு தழுவுதல் | நெல்விளைத்தல், கடாவிடல் | மீன்பிடித்தல், உப்பு விளைவித்தல், படகு ஓட்டுதல் | ஆறவைத்தல், சூறையிடுதல் |
| 8. | யாழ் | குறிஞ்சியாழ் | முல்லையாழ் | மருதயாழ் | நெய்தல்யாழ் | பாலையாழ் |
| 9. | பண் | குறிஞ்சிப்பண் | முல்லைப்பண் | மருதப்பண் | நெய்தல்பண் | பாலைப்பண் |
| 10. | ஊர் | சிறுகுடி, குறிஞ்சி | பாடி, சேரி | ஊர்கள் | பட்டினம், பாக்கம் | பரந்தலை |
| 11. | நீர் | அருவி, சுனை | குறுஞ்சுனை, கான்யாறு | ஆற்று நீர், பொய்கை | உவர்க்குழி, மணற்கிணறு | ஆறுநீக்கூவல் |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 12. | பூ | காந்தள், வேங்கை, கனைக்குவளை, குறிஞ்சிப்பூ | குல்லை, முல்லை, தோன்றி, பிடவம் | தாமரை, கழுநீர்ப்பூ | கைதை, நெய்தல் பூ | மரா, குராம்பூ |
| 13. | மக்கள் | குறவன், குறத்தி | ஆயர், வேட்டுவர், ஆய்ச்சியர் | உழவர், உழத்தியர் | நுளையர், நுளைச்சியர் | எயினர், எயிற்றியர் |
| 14. | தலைமக்கள் | மலைநாடன், வெற்பன் | பொதுவன், வெற்பவன் | ஊரன், மகிழ்நன் | சேர்ப்பன், துறைவன், கொண்கன் | மீளி, விடலை |

இத்தகைய பாகுபாடுகள் ஒரு நிலப்பகுதியிலோ அல்லது ஒரு நிலப்பகுதியில் வாழும் மக்களிடத்திலோ காணப்படும் பொழுது அவர்களின் பேச்சுவழக்குகளும் அந்தந்தப் பகுதிகளுக்கே உரிய பண்பாட்டுக்கூறுகளுடன், தொழிற்கூறுகளுடன், பழக்கவழக்கங்களுடன், இயற்கைச்சூழ்நிலைகளுடன் ஒன்றிய சொற்களால் மாறுபடுவது இயற்கையே. அந்தந்த திணைப் பகுதியில் வாழும் மக்களிடத்தில் அந்தந்த திணைக்கே உரிய முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் ஆகியவைகளின் தாக்கத்தைக் காணமுடியும். அத்தகையத் தாக்கங்கள் மக்களை வேறுபடுத்தி அவர்கள் எந்தவகை நிலப்பகுதியில் வாழ்பவர்கள் என அடையாளங்காட்டும். அத்தகைய மொழிக்கூறுகள் அவர்கள் வாழும் இயற்கைச் சூழ்நிலைகளோடு ஒன்றியிருக்கும்.

எடுத்துக்காட்டாகத் தமிழர்களின் உணவுப் பழக்கங்களில் உள்ள வேறுபாடுகளைக் காணலாம். தமிழர்களின் உணவுமுறையில் நெல், சாமை, வரகு போன்ற பல தானியங்கள் இடம் பெற்றிருந்தாலும் நெல் மட்டும் எல்லா வகை நிலங்களிலும் அனைத்துத்தர மக்களாலும் விளைவிக்கப்பட்ட தானியமாக உள்ளது. எல்லா வகை நிலப்பரப்பிலும் வாழ்ந்த மக்களுக்குத் தானிய வகைகளில் நெல் ஒரு பொதுவான தானியமாக இருந்துள்ளது என்பதைச் சங்க கால இலக்கியங்கள் மூலம் அறிந்து கொள்ளலாம். மேலும் ஒவ்வொரு வகை நிலத்திலும் ஒவ்வொரு வகை நெல் பயிரிடப்பட்ட செய்திகள் அந்தந்த வட்டாரங்களின் வட்டாரமொழிக் கூறுகளாக உள்ளன. குறிஞ்சி நில மக்களின் உணவுப் பழக்கங்களில் ஐவன நெல் வகையும் வெதிற் நெல் வகையும் உணவின் ஒரு பகுதியாக இருந்துள்ளது (கந்தசாமி, 1987: 63). மருதநில மக்களின் முதன்மை நெல்வகைகள் செந்நெல்லும் வெண்ணெல்லும் ஆகும். நெய்தல் நிலத்திலும் மழைக்காலங்களில் நெல் விளைவிக்கப்பட்ட செய்திகள் நற்றிணைப் பாடல்கள் மூலம் அறிய முடிகின்றது

**பெயினே விடுமான் உழையினம் வெறுப்புத்தோன்றி**
**இருங்கதிர் நெல்லின் யாண ர.ஃ.தே**
**வறப்பின் மாநீர் முண்டகம் வெள்ளுப்பு விளையும்**

**- நற்றிணைஇ 31: 1-3**

முல்லை நில மக்களாகிய இடையர்கள் தினைவகைகளை மிகவும் பயன்படுத்திய செய்திகள் காணப்பட்டாலும் முல்லை நிலத்திலும் காடுகளை அழித்து, அழிக்கப்பட்ட செடி, கொடி, மரங்களை அந்தந்த நிலங்களில் தீயிட்டுக் கொளுத்தி

அந்தவகைச் சாகுபடியில் ஐவனநெல் (ஐவன வெண்ணெல்) அல்லது மலை நெல் சாகுபடி செய்யப்பட்ட செய்திகள் சங்க கால இலக்கியங்களில் காணக்கிடக்கின்றன

**ஐவன வெண்நெல் றூஉம் நாடனொடு**

**- நற்றிணை, 373: 4**

மேலும் அரிசி மாவினை நீரில் கரைத்துப் புளிக்கவைத்து வாசனைப் பொருட்களைச் சேர்த்து மணமுள்ள கள் வகைகளைத் தயாரித்ததையும், அத்தகைய கள்ளினைச் செல்வந்தர்கள் அருந்திய செய்திகளும் சங்க கால இலங்கியங்களில் காணக்கிடக்கின்றன (நீலகண்ட சாஸ்திரி, 1972).

தமிழர்களின் உணவுப் பழக்கவழக்கங்களைக் கூறவந்த தமிழ்ப்புலவர் ஒருவர் வெவ்வேறு நிலப்பகுதிகளில் வாழ்ந்த மக்கள் அவருக்கு எந்த வகையான உணவுகளைப் பரிமாறினர் எனக் கூறுகின்றார். பாலை நிலத்தில் வாழும் எயினர் நன்கு தீட்டப்படாத அரிசியில் பொங்கிய சோற்றுடன் உடும்புக் கறியைப் பரிமாறினர் என்றும் முல்லை நில மக்களாகிய இடையர் சோளம், கம்பு, வரகு மற்றும் தினை அரிசியோடு காய்கறிகளையும் சேர்த்துப் பாலில் வேகவைத்துக் கொடுத்தனர் என்றும் நெய்தல் நில மக்களாகிய மீனவர்கள் அரிசியில் சமைத்த சோற்றுடன் மீன்களை வறுத்துக் கொடுத்தனர் என்றும் மருத நில மக்களாகிய வேளிர் அல்லது உழவர்கள் வாழைப்பழம், பலாப்பழம், இளநீர் ஆகியவற்றைப் பரிமாறினர் என்றும் அந்தணர் உயர்ந்தரக அரிசியில் சமைத்த சோற்றுடன் மாங்காய் ஊறுகாயும், இளம் மாதுளம் பழங்களை வெண்ணெய் சேர்த்துக் கருவேப்பிலை போட்டுச் செய்யப்பட்ட கறியுடன் பரிமாறினர் என்றும் கூறுகின்றார் (கனகசபை, 1904: 125). இத்தகைய பண்பாட்டுத் தரவுகள் தமிழர்கள் அந்தந்த நிலப்பகுதிகளுக்கேயுரிய பண்பாட்டுக்கூறுகளுடன் வாழ்ந்த செய்தியைக் கூறுவதுடன் அவர்களின் மொழிக்கூறுகளிலும் அந்தந்த வட்டாரத்திற்கேயுரிய தாக்கங்கள் இருந்துள்ளதையும் எடுத்துக்கூறுகிறது. மருதநிலத்து மக்கள் விவசாயம் சார்ந்த தொழில் நுட்பத்தையும், குறிஞ்சி நில மக்கள் வேட்டையாடும் தொழில் நுட்பத்தையும், நெய்தல் நில மக்கள் மீன்பிடி தொழில் நுட்பத்தையும் கொண்டு வாழ்கின்றபொழுது அந்தந்த மக்களின் தொழில்சார் மொழிக்கூறுகள் அந்தந்த வட்டார வழக்குகளில் விரிவாகவும், விளக்கமாகவும், தெளிவாகவும் காணப்படுவது இயற்கையே. இத்தகையத் தொழில்சார் மொழிக்கூறுகள் மக்களை அவர்களுடைய தொழில் அடிப்படையில் அடையாளங்காட்டும் பொழுது அவர்கள்

எந்தவகை நிலத்தில் வாழ்பவர்கள் என்பதை எளிதாகத் தெரிந்து கொள்ள முடியும்.

மேலும் இந்த ஐவகை நிலப்பகுதிகளில் வாழ்ந்த மக்கள் குறவர், வேடர் (குறிஞ்சி) ஆயர், இடையர், வேட்டுவர் (முல்லை) வேளிர், வேளாளர், வெள்ளாளர் (மருதம்) பரதவர், வலையர், நுளையர் (நெய்தல்) எயினர், கள்ளர் (பாலை) எனத் தனித்தனிச் சமூகங்களாக வாழ்ந்துள்ளனர். இவ்வாறு நிலப்பாகுபாட்டின் அடிப்படையில் தமிழ் மக்கள் தனித்தனிச் சமூகங்களாக வாழ்ந்து வந்தமையால் ஒவ்வொரு சமூகத்தைச் சார்ந்த மக்களும் தத்தம் கலாச்சாரங்களாலும், பண்பாட்டுக்கூறுகளாலும் தொழில் அடிப்படையாலும் வேறுபட்டு நின்றதோடு, குறிப்பிட்ட சமூகத்திற்குள்ளேயே நடைபெறும் திருமண உறவு முறைகளால் தனித்தனிச் சமூகங்களாகச் செயல்பட்டு வந்துள்ளனர் என்பது பி.டி. சீனிவாச அய்யங்கார் கருத்தாகும்:

**Endogamy prevailed among these different social groups inhabiting different geographical regions, developing customs peculiar to the occupations which their physical environment imposed on them.**

**- P.T. Srinivasa Iyengar, 1929; 72**

ஐந்துவகை நிலப் பகுதிகளில் வாழ்ந்த மக்கள் மிருகங்களின் பயன்களை அறிந்து அவைகளைத் தத்தம் தேவைகளுக்கேற்பப் பயன்படுத்திக் கொண்ட செய்திகளைச் சங்க கால இலக்கியங்கள் எடுத்தியம்புகின்றன. ஆனால், முல்லை நில மக்களாகிய ஆயர் குல மக்கள் மட்டும் ஆடு, மாடுகள் வளர்ப்பதைத் தங்கள் குலத்தொழிலாகக் கொண்டிருந்தனர். மாடுகளின் பயனை அறிந்து கொண்ட தமிழர் அவற்றைத் தங்களின் கலாச்சாரப் பண்பாட்டுக்கூறுகளில் ஓர் அங்கமாகவே ஏற்றுக்கொண்டனர். அதன் காரணமாக மாடுகளைப் பற்றிய விரிவான சொல்லாட்சியைத் தமிழ் மொழியில் காணமுடிகிறது. மாடுகள் செல்லப்பிராணிகள் மட்டுமல்லாது ஒரு செல்வப் பிராணியாகவே கருதப்படுகிறது. கால்நடைகள் இன்றும் செல்வமாகவே கருதப்படுகிறது. தமிழர்களின் பண்பாட்டுக்கூறுகளில் ஆநிரை கவர்தல், ஏரு தழுவுதல் போன்ற பண்பாட்டுக்கூறுகள் மாடுகள் வளர்ப்பதன் அடிப்படையில் தோன்றிய சொற்களாகும். ஆநிரை கவர்தல் என்பது ஒரு நாட்டு அரசன் போர் துவங்கும் முன் பகை நாட்டு அரசின் ஆட்சிப் பகுதிக்குள் சென்று அந்நாட்டு மக்களின் ஆநிரைகளைத் தங்கள் நாட்டிற்கு ஓட்டிவருவதாகும். இதை வெட்சித்திணை எனத் தொல்காப்பியர் கூறுகின்றார்:

**வேந்துவிடு முனைஞர் வேற்றுப் புலக்களவின்**

**ஆதந்து ஓம்பல் மேவற் றாகும்**

**- தொல்காப்பியம்: 1003**

தமிழர்களின் வீர விளையாட்டுகளில் ஒன்றாகக் கருதப்படும் ஏறுதழுவல் அல்லது ஏறுகோடல் எனும் வீரவிளையாட்டு முல்லை நில மக்களின் நேரப்போக்கு விளையாட்டாகும் (நீலகண்ட சாஸ்திரி, 1972: 34). ஆனால், அது ஒரு பொழுதுபோக்கு விளையாட்டு மட்டுமல்லாமல், முல்லை நில மக்களாகிய ஆயர்களின் திருமண நிகழ்வுகளில் முக்கியமான ஒன்றாகவும் இருந்துள்ளது. முல்லை நில மக்கள் தங்கள் வீடுகளில் ஒரு பெண் பருவம் எய்தியவுடன் தங்களிடமுள்ள ஒரு ஆண்கன்றினைத் தேர்ந்தெடுத்து 'ஏறு தழுவுதல்' நிகழ்வுக்காக வளர்க்கின்றனர். இந்தக்கன்று காளைப்பருவம் அடைந்தவுடன் அதனை அடக்கும் வாலிபருக்கே தங்களுடைய பெண் பிள்ளையைத் திருமணம் செய்து கொடுத்துள்ளனர். முல்லை நில மாந்தர்கள், இவன் கணவன் ஏறுதழுவி வென்று இவளை மணமுடித்தவன் என்று ஊரார் பேசுவதைக் கேட்டு அகமகிழ்ந்து, அவ்வாறு ஊரார் கூறுவதை அவள் பெற்ற சிறந்த செல்வமாகக் கருதியதைக்

**கொல்ஏறு கொண்டான், இவள்கேள்வன் என்று, ஊரார்**

**சொல்லும்சொல் கேளா, அளைமாறி யாம்வரும்**

**செல்வம்எம் கேள்வன் தருமோ? - எம்கேளே!**

**- கலித்தொகை, 106: 43-45**

கலித்தொகை மூலம் அறிய முடிகிறது. முல்லை நில மக்களின் வாழ்வியலில் இது ஒரு பண்பாட்டுக்கூறாக அமைகின்றது. ஆயர் குல மக்களின் வாழ்வில் ஏழுதழுவல் அல்லது ஏறுகோடல் சிறப்பாகக் கருதப்பட்டமையைப் பின்வரும் கலித்தொகைப் பாடல்வரிகளால் அறிகின்றோம்

**பகலிடக் கண்ணியன் பைதற் குழவன்**

**சுவல்மிசைக் கோலசைத்த கையன் அயலது**

**கொல்லேறு சாட இருந்தார்க்கெம் பில்லிருங்**

**கடந்த லணைகொடுப்போம் யாம்**

**- கலித்தொகை, 101: 39-42**

மேலும் முல்லை நில மக்கள் திருமணமேடையில் பெண் எருமையின் கொம்பை நட்டு வழிபட்டனர் என்பதைக் கலித்தொகை மூலம் அறிகின்றோம் (சாமிநாதையர், 1929: 59)

**தருமணற் நாழப்பெய் தில்பூவ லூட்டி**

**எருமைப் பெடையோ டெமரீங் கரும்**

**பெருமணம்**

**- கலித்தொகை: 144**

எட்டுத்தொகை நூல்களில் ஒன்றான கலித்தொகையில் முல்லைக்கலியில் மட்டும் ஏறுதழுவல் தொடர்பான குறிப்புகள் ஏழு செய்யுட்களில் (கலித்தொகை: 101-107) காணக்கிடக்கின்றன. மேலும் தமிழகத்தில் பற்பல சிற்றரசர்கள் வேளிர் அல்லது வேளாளர் இனத்தைச் சார்ந்தவர்களாக இருந்தாலும், தமிழகத்தில் ஆண்வாரிசு தலைமையில் பெரிய குடும்பங்களும், உறவுமுறைக் குழுக்களும், அரசாட்சி முறையும் முதலில் முல்லை நிலத்தில் தோன்றி இருக்க வேண்டும் என்பது அறிஞர்களின் கருத்தாகும். எனவேதான், ‘கோ’ எனும் சொல் பசு, காளை என்ற பொருட்களில் மட்டுமல்லாது அரசன், தலைவன், பேரரசர் என்ற பொருள்களிலும் வழங்கப்படுகிறது என்பார் பி.டி. சீனிவாச ஐயங்கார் (1929: 10). இவ்வாறு ஒரு நிலப்பகுதிக்கேயுரிய பண்பாட்டுக்கூறையும் தொழிற்கூறையும் விளக்கும் சொற்கள் அனைத்தும் அந்த வட்டாரத்திற்கு உரிய சொற்களாக இருப்பது மட்டுமல்லாது அவ்வட்டாரப் பண்பாட்டுக்கூறுகளையும் தொழிற்கூறுகளையும் பிற வட்டார மக்களின் பண்பாட்டுக்கூறு, தொழிற்கூறுகளிலிருந்து பிரித்துப் பார்த்துத் தனித்ததொரு அடையாளமாக விளங்குவதைக் காட்டுகின்றன. ஐந்து திணைகளுக்குரிய நிலப்பகுதிகளில் பேசப்படும் தமிழ் இத்தகைய வட்டாரவழக்குகளைத் தன்னகத்தே கொண்டுள்ளது எனலாம்.

தொல்காப்பியர் திசைச்சொற்களுக்கு இலக்கணம் வகுத்தார். ஆனால் எந்த நாட்டில் எத்தகைய வழக்கு அல்லது சொற்கள் வழக்கத்தில் உள்ளன என்று எடுத்துக்காட்டுகளுடன் கூறவில்லை. ஆனால் தொல்காப்பியத்திற்கு உரை எழுதிய மயிலைநாதர், நச்சினார்க்கினியர் போன்ற உரையாசிரியர்கள் சில எடுத்துக்காட்டுகள் கூறி விளக்கியுள்ளனர். மேலும் திசைச்சொற்கள் பற்றிக் கூறும் பொழுது பன்னிரு நாடுகள் எனத் தொல்காப்பியர் கூறிவிட்டு அப்பன்னிரு நாடுகளைப் பட்டியலிடவில்லை. தொல்காப்பிய உரையாசிரியர் சேனாவரையர்

(கி.பி. 1275-1281) ஒருவரே அப்பன்னிரு நாடுகளை பட்டியலிட்டுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

தமிழகத்தின் பன்னிரு நாடுகளில் பேசப்பட்ட தமிழ் வட்டார வழக்குகளுக்கு எடுத்துக்காட்டுகளைப் பேராசிரியர் தெ.பொ. மீனாட்சிசுந்தரன் பட்டியலிட்டுள்ளார் (1965: 196-197). பேராசிரியர் ரா.பி. சேதுப்பிள்ளை (1956: 32) அவர்களும் பேராசிரியர் ஜெ. நீதிவாணன் (2007: 78) அவர்களும் உரையாசிரியர்களின் எடுத்துக்காட்டுகளைப் பட்டியலிட்டுள்ளனர். அவைகள் இங்கு கொடுக்கப்பட்டுள்ளன:

**நச்சினார்க்கினியர் உரை கூறுபவை:**

| | | |
|---|---|---|
| பெற்றம் (பசு) | - | தென்பாண்டி நாடு |
| தள்ளை (தாய்) | - | குட்ட நாடு |
| ஞெள்ளை (நாய்) | - | குட்ட நாடு |
| அச்சன் (தந்தை) | - | குட நாடு |
| கையர் (வஞ்சகர்) | - | கற்கா நாடு |
| எலுவன் (நண்பன்) | - | சீத நாடு |
| இகுளை (தோழி) | - | சீத நாடு |
| தந்துவை (மாமி, அத்தை) | - | சீத நாடு |
| ஞமலி (நாய்) | - | பூழி நாடு |
| பாழி (சிறுகுளம்) | - | பூழி நாடு |
| செறு (வயல்) | - | அருவா நாடு |
| கேணி (சிறுகுளம்) | - | அருவா நாடு |
| குட்டை (குறுணி-ஓர் அளவு) | - | அருவா வடதலை நாடு |

**- ரா.பி. சேதுப்பிள்ளை, 1956: 32**

**நன்னூல் உரை கூறுபவை:**

| | | |
|---|---|---|
| பெற்றம் (பசு) | - | தென்பாண்டி நாடு |
| சொன்றி (சோறு) | - | தென்பாண்டி நாடு |
| தள்ளை (தாய்) | - | குட்ட நாடு |
| அச்சன் (தந்தை) | - | குட நாடு |

| | | |
|---|---|---|
| கையர் (வஞ்சகர்) | - | கற்கா நாடு |
| கிழார் (தோட்டம்) | - | வேணாடு |
| பாழி (சிறுகுளம்) | - | பூழி நாடு |
| செய் (செறு-வயல்) | - | அருவா நாடு |
| கேணி (சிறுகுளம்) | - | அருவா நாடு |
| எகின் (புளி) | - | அருவா வடதலை நாடு |
| எலுவன் (தோழன்) | - | சீத நாடு |
| இகுளை (தோழி) | - | சீத நாடு |

**- ஜெ. நீதிவாணன், 2007: 78**

ரா.பி. சேதுப்பிள்ளை அவர்களின் எடுத்துக்காட்டுகளும் இங்கு கொடுக்கப்பட்டுள்ளன. பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை பதிப்பில் சென்னைப் பல்கலைக்கழகம் வெளியிட்ட தமிழ்ப்பேரகராதியில் வட்டாரம், சமுதாயம், தொழில், மதம் போன்ற கூறுகளின் அடிப்படையில் உள்ள சொற்கள் பிரித்துக் காட்டப்பட்டுள்ளன.

சேரிமொழி, கொடுந்தமிழ், இழிவழக்கு, பேச்சுவழக்கு எனப் பல சொற்களால் அறியப்படும் தமிழ்ப் பேச்சுவழக்குகள் பேசப்பட்ட நாடுகள் பன்னிரு நாடுகள் என்று அவைகளைத் தனித்தனியே பட்டியலிட்டும் கூறிவிட்ட நிலையில் செந்தமிழ் என அழைக்கப்படும் தமிழ் எங்கு பேசப்பட்டது? அத்தகைய மொழி வழக்கின் தன்மை அல்லது பயன்பாடு என்ன என்ற கேள்விகள் எழுப்பப்படுவது தமிழ் ஆய்வுக்கு உரிய கருத்துப்பொருட்களாகும்.

தொல்காப்பிய உரையாசிரியர் சேனாவரையர் ‘‘வைகையாற்றின் வடக்கும், மருதயாற்றின் தெற்கும், கருவூரின் கிழக்கும், மருவூரின் மேற்கும் அமைந்த சோழ நாடாகிய புனல் நாட்டினைச் செந்தமிழ் நாடாகக் கொண்டு இதனைச் சூழவுள்ள தென்பாண்டி முதலிய நாடுகளைச் செந்தமிழ் நாட்டினைச் சூழ்ந்த புறநாடுகளாகக் குறித்துள்ளார்’’. ‘‘யாப்பருங்கலக்காரிகையுரையாசிரியர் முதலியோரும் சோழநாட்டையே செந்தமிழ் நாடாகத் தம்முரையிற் குறித்துள்ளனர்’’ (வெள்ளைவாரணர், 1987: 180).

சேக்கிழாரடிகள் தமது பெரியபுராணத்தில் சங்கம் அமைத்துத் தமிழ் வளர்த்த பாண்டிய நாட்டினையே செந்தமிழ் நாடாகக் கருதுகின்றார். இவரது

கூற்றை சிவஞான முனிவரும் வலியுருத்தியுள்ளார். பேராசிரியர் ரா.பி. சேதுப்பிள்ளை (1971, பகுதி ஐஐ: 1) மதுரைத் தமிழ்ச்சங்கப் புலவர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்ட தமிழ் வழக்கே 'செந்தமிழ்' என தமிழக மக்கள் அனைவராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டதென்றும், பாண்டிய நாட்டையே செந்தமிழ் நாடாகக் கருதவேண்டும் என்றும் பாண்டிய நாட்டுப் பகுதிகளிலிருந்து கிழக்குத்தொடர்ச்சி மலைகள், மேற்குத்தொடர்ச்சி மலைகள் பிற பன்னிரு நாடுகளைப் பிரித்துள்ளன எனவும் கூறுகின்றார்.

> **"The language which commanded the acceptance of the Academy came in due course to be regarded as the standard language (Centamil̲). It is possible that this language was mainly based on the dialects of Tamil that was then prevalent in the Pandya country"**
>
> **- R.P. Sethu Pillai, 1971: Part II: 1**
>
> **"A distinction came to be drawn in course of time between the territory where the standard language prevailed (Centamil̲ Nāṭu) and the country where the dialects were spoken (Koṭuntamil̲ Nāṭu). Despite differences of opinion among the commentators regarding the terretorial limits of the Centamil̲ country, authoritative opinion has declared in unambiguous terms that the Pandya country was regarded as the Centamil̲ Nāṭu"**
>
> **"Natural barriers promoted the growth of dialects in South India. It is significant that most of the twelve countries compendiously described as Koṭuntamil̲ Nāṭu are separated from the Pandya country by sections of the eastern and western ghats"**
>
> **- R.P. Sethu Pillai, 1971, Part II: 2**

ஆனால், தற்கால தமிழ்க் கிளைமொழி வழக்குகளை ஆராய்ந்த உருசிய நாட்டு மொழியியலறிஞர் ஆந்த்ரனோவ் (Andronov) கிழக்கு வட்டாரத்தில் பேசப்படும் தமிழும் அதனை ஒட்டிய வடக்கு வட்டாரப் பகுதியில் பேசப்படும் தமிழும் தமிழின் செந்தமிழ் வழக்கிற்கு ஆதாரமாகவும் சங்க காலத் தமிழ் இலக்கிய வழக்கின் தொடர்ச்சியாகவும் விளங்குவதால், செந்தமிழ் என்று அழைக்கப்பட்ட

வரலாற்றுக்காலக் கிழக்கு வட்டாரத் தமிழ்மொழி செந்தமிழ்வழக்கு எனத் தன் ஆய்வு முடிவில் கூறியுள்ளார்.

> **“The national colloquial language has formed on the basis of the eastern dialect and on that of the northern one which is very close to the eastern dialect. The base of the literary language was ancient dialect of the eastern districts known as ‘Sendamiẓ’”**
>
> **- M.S. Andronov, 1969: 2**

‘செந்தமிழ்’ எனும் சொல் சங்ககாலத் தமிழ் வழக்கில் இருந்த இலக்கிய வழக்கினை மட்டும் குறித்ததா? அனைத்து வட்டாரங்களிலும் பலதரப்பட்ட சமூகங்களாகப் பிரிந்து வாழ்ந்த மக்கள் பொதுநிலையில் பேசப் பயன்படுத்திய ‘பொதுப்பேச்சுத்தமிழ்’ எனும் வழக்கைக் குறித்ததா? தொல்காப்பியப் பாயிரத்தில் பனம்பாரணர்

**வடவேங்கடம் தென்குமரி**
**ஆஇடைத்**
**தமிழ் கூறும் நல் உலகத்து**
**வழக்கும் செய்யுளும் ஆஇரு முதலின்**
**எழுத்தும் சொல்லும் பொருளும் நாடிச்**
**செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு**
**முந்து நூல்கண்டு, முறைப்பட எண்ணிப்**
**புலம் தொகுத்தோனே - போக்கறுபனுவல்**
**நிலம்தரு திருவில் பாண்டியன் அவையத்து,**
**அறம்கரை நாவின் நான்மறை முற்றிய**

எனக் கூறுவதன் மூலம் வடக்கே வேங்கடம் முதல் தெற்கே குமரி வரை உள்ள நிலப்பகுதியை தமிழகம் என வரையறுப்பதோடு தமிழகத்தில் வாழ்ந்த மக்களின் பேச்சுவழக்கையும் செய்யுள்வழக்கையும் நன்கு உணர்ந்து, புரிந்து எழுத்து, சொல், பொருள் என்ற மூன்றையும் கருத்தில் கொண்டு, செந்தமிழ் இயற்கையாக வழங்கும் பகுதியில் வழங்கும் மொழிக்குத் தொல்காப்பியர் இலக்கணம் வகுத்துள்ளார் என்பது புலனாகிறது. இதனையே தொல்காப்பியர்

நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலனெறி வழக்கம்

- தொல்காப்பியம்: 999

என்கின்றார். புனைந்துரை வகையானும் உலகியல் வழக்கானும் பாடல் சான்ற இலக்கண மரபான் அமைந்த ஒழுகலாறுகள் என்கின்றார் ச.வே. சுப்பிரமணியன், (2008: 273). மேற்கூறப்பட்ட தரவுகள் மூலம் கீழ்க்கண்ட கருத்துக்களை ஏற்றுக்கொள்ளலாம்.

1. தமிழ்மொழி வடக்கில் உள்ள வடவேங்கடம் முதல் தெற்கில் உள்ள குமரி வரை பேசப்பட்டது
2. செய்யுள்வழக்கு பேச்சுவழக்கு என இருவகை வழக்குகள் இருந்தன. அதில் முந்தையது பாடல் அல்லது செய்யுள் புனைவதற்கும் பிந்தையது மக்களிடையே நடக்கும் பேச்சுக்களுக்கும் பயன்பட்டன.
3. முந்தைய நூல்களைப் பின்பற்றித் தொல்காப்பியம் எழுதப்பட்டது
4. தமிழ்மொழியின் எழுத்து, சொல் பொருள் மூன்றையும் கருத்தில் கொண்டு எழுதப்பட்டது

தமிழ் கூறும் நல்லுலகம் வடக்கே வேங்கட மலைமுதல் தெற்கே குமரிவரை பரந்து கிடந்தது என்று சங்க இலக்கியங்கள் மூலம் அறியப்படுகிறது. ஆனால் தற்காலச் செக்கோசுலோவேக்கியா நாட்டு மொழியியல் அறிஞர் கமில் சுவெலபில் இலங்கையும் தமிழ் கூறும் நல்லுலகத்தில் அடங்கும் என்கின்றார்.

**“Tamil proper that is continental Tamilnad and Tamil Ceylon will always remain the Tamiḻ kūṟum nallulakam par excellence and therefore it should be of primary importance for any investigation of Tamil dialects”.**

**- Kamil Zvelebil, 1964: 239**

இவர் இலங்கையில் பேசப்படும் தமிழ்மொழியில் கீழ்க்காணும் வட்டாரவழக்குகள் உள்ளன என்று கூறுகின்றார் (கமில் சுவெலபி, 1964: 239):

1. வடக்கு யாழ்ப்பாணம்
2. கொழும்பு (?)
3. வடகிழக்கு திரிகோணமலை
4. தென்கிழக்கு மட்டக்களப்பு

இலங்கையின் கொழும்புப் (யாழ்ப்பாணம்) பகுதியில் பேசப்படும் தமிழ் சங்க காலத் தமிழின் தொடர்ச்சியே ஆகும் என்கின்றார் இலங்கைவாழ் மொழியியலறிஞர் கணபதிப்பிள்ளை (1958: 220). தொல்காப்பியர் காட்டிய மூன்று வகைச் சுட்டுப்பெயர்கள் அ, இ, உ இன்றளவிலும் கொழும்பு வட்டாரத் தமிழ்ப் பேச்சுவழக்கில் உள்ளதை இதற்கு ஆதாரமாகக் காட்டுகின்றார் மற்றொரு இலங்கைவாழ் மொழியியல் அறிஞர் சுசீந்திரராஜா (1993: 96). சங்ககாலத் தமிழ் இலக்கிய, இலக்கணங்களில் காணப்படும் இலக்கணக்கூறுகள் தற்காலத் தமிழகத்தில் வழங்கும் தமிழ் வட்டார, சமூக வழக்குகளில் இல்லாது, இலங்கை கொழும்புப் பகுதியில் பேசப்படும் தமிழ் வட்டாரவழக்கில் காணப்படுவது சங்க காலத் தமிழின் தொடர்ச்சியை இன்றளவிலும் இலங்கையில் பேசப்படும் ஒரு வட்டாரவழக்கில் காணமுடிகிறது. இத்தகைய மொழிக்கூறுகள் அதன் தொடர்ச்சியை மட்டுமல்லாது சங்ககாலந்தொட்டே தமிழகமும் இலங்கையும் ஒன்றோடொன்று மொழி, பண்பாட்டுத் தொடர்புகளுடைய நாடுகளாக விளங்கியுள்ளன என்பதும் தெரியவருகிறது.

இயல்-3

# தமிழின் சமூகக்கிளைமொழிகள் - சமூகவழக்குகள்: தொல்காப்பியம் முதல் தற்காலம் வரை



## இயல்-3

# தமிழின் சமூகக்கிளைமொழிகள் - சமூகவழக்குகள்: தொல்காப்பியம் முதல் தற்காலம் வரை

தமிழர்களின் சமுதாய அமைப்பு ஆரியர்களின் சமுதாய அமைப்பிலிருந்து மாறுபட்ட ஒன்றாகும். ஆரியர்கள் மக்களை அல்லது சமூகங்களை அந்தணர், வைசியர், சத்திரியர், சூத்திரர் எனும் வர்ணக்கொள்கைகள் மூலம் பிரித்துப்பார்த்தனர். சமூக ஏற்றத்தாழ்வுகளும், உயர்சாதி, கீழ்சாதி என்ற அமைப்புகளும் வர்ணக்கொள்கைகளை அடியொற்றியே எழுந்தன. ஆனால் தமிழர்களின் சமுதாயக் கொள்கைகள் மக்கள் வாழும் திணை எனும் நிலப் பகுதிகளின் அடிப்படையில் அமைந்ததாகும். ஓவ்வொரு நிலப்பகுதிகளில் வாழும் மக்களும் அவர்களின் தலைவர்களின் பெயர்களும் அந்தந்த நிலப்பகுதிக்குரியவர்கள் என்று அவர்களது இனப்பெயரையும் பட்டப்பெயரையும் வைத்துக் கூறமுடியும்.

| திணை | மக்கள் பெயர் | தலைமக்கள் பெயர் | ஊர்ப்பெயர் |
|---|---|---|---|
| குறிஞ்சி | குறவன், குறத்தி | மலைநாடன், வெற்பன் | சிறுகுடி, குறிச்சி |
| முல்லை | ஆயர், வேட்டுவர், ஆய்ச்சியர் | பொதுவன், வெற்பவன் | பாடி, சேரி |
| மருதம் | உழவர், உழத்தியர் | ஊரன், மகிழ்நன் | ஊர்கள் |
| நெய்தல் | நுளையர், நுளைச்சியர் | சேர்ப்பன், துறைவன், கொண்கன் | பட்டினம், பாக்கம் |
| பாலை | எயினர், எயிற்றியர் | மீளி, விடலை | பரந்தலை |

இவர்கள் அல்லாது அந்தணர், பார்ப்பர் அல்லது பார்ப்பனர், சான்றோர், கள்வர், மறவர், படையாட்சி, புலையர், விறலி, பாணன், பாணினி, கூத்தன், வேளிர் அல்லது வேளாளர், பறையர், கடம்பர், வேடர், குளியர், நாகர், உமணர், மல்லர், இருளர், களமர், துன்னகாரர், வெள்ளாளர், மீனவர், வாணியர், கடல்வாணிகன் போன்ற பல குடிகளின் அல்லது சமூகங்களின் பெயர்கள் தமிழ் இலக்கியங்களில் காணக்கிடக்கின்றன. இவைகளில் மீனவர், வேளிர் அல்லது வேளாளன் போன்ற சாதிகள் தொழிலால் பெயர் பெற்றவைகள். தமிழகத்தில் மீன்பிடித்து வாழும் மீனவ

சமுதாயங்கள் கடற்கரையோரம் உள்ள கிராமங்களில் பல சமூகங்களாக வாழ்கின்றனர். தற்காலத்தில் கீழ்க்கண்ட மீன்பிடிதொழில் புரியும் சமூகங்கள் உள்ளன. அவைகளை தெற்கே கன்னியாகுமரியிலிருந்து வடக்கே பழவேற்காடு வரை உள்ள கடற்கரைப் பகுதிகளில் வாழும் அடிப்படையில் முக்குவர், நுழையர், பரதவர்/பரவர், பரதர், செம்படவர், அம்பலக்காரர், வலையர், கரையான்/கரையாளன், கடையான், பூச்சிக்கடையான், படையாச்சி/மீன்பள்ளி, பர்வதராஜகுலம், சின்னப்பட்டினவர், பெரியபட்டினவர் எனும் சமூகப் பிரிவுகளாகும் (மனோகரன், 2011: 53). இவ்வகைச் சாதியினர் மீனவர் எனும் பொதுப் பெயரில் மீன்பிடி தொழில் புரிவோர் என அழைக்கப்பட்டாலும், சமூக அமைப்பு, திருமணமுறை, பண்பாட்டுக் கூறுகள் ஆகிய சமூகக் காரணிகளால் இவர்கள் வெவ்வேறு சமூகங்களைச் சார்ந்தவர்கள். தொழிலால் ஒன்றுபட்டாலும் ஒரு சமூகத்தின் வேறு ஒரு சமூகத்தினரிடம் திருமண உறவு வைத்துக் கொள்வதில்லை. மீனவ சமுதாயப் பிரிவுகளில் முக்குவர், பரதவர், கடையர், செம்படவர் ஆகிய சமூகத்தார்கள் தற்பொழுது கிறித்தவர்கள் மற்றவர்கள் இந்துக்கள். பரதவர்களில் சுண்ணாம்புப் பரதவர், சவளக்காரர் எனும் உட்பிரிவுகள் உள்ளன. சுண்ணாம்புப் பரதவர் கடல்வாழ் சிப்பி போன்ற உயிரினங்களின் ஓடுகளிலிருந்து சுண்ணாம்பு தயாரிப்பவர்கள் சவளக்காரர் மீன் வியாபாரம் செய்பவர்கள். மீன்வியாபாரம் செய்யும் சவளக்காரர் தங்களின் பொருளாதார முன்னேற்றத்தால் பிற பரதவர்களை விட உயர்ந்த சமூக நிலைக்காரர்களாகக் கருதப்படுகின்றார்கள். பர்வதராஜகுலம் சமூகத்தினர் கடலில் வேளாண்தொழில் புரிவோர் எனும் பொருளில் தங்களை நீர் வெள்ளாளர் என்று அழைத்துக்கொள்கின்றனர். நுழையர் இனத்தவர் கன்னியாகுமரி மாவட்டத்தில் வாழ்கின்றனர். இவர்கள் ஞாயிற்றுக் கிழமைகளில் மட்டும் மீன்பிடி தொழில் செய்கின்றனர். பிற நாட்களில் வேறு தொழில் செய்வர். மீனவர்களைப் போலவே வெள்ளாளர் அல்லது வேளாளர் என அழைக்கப்படும் இனத்தவர்களும் அவர்களின் விவசாயத் தொழிலால் பெயர்பெற்றுள்ளனர். இவர்களுள் கொங்கு வேளாளர், சோழிய வேளாளர், தொண்டை மண்டல வேளாளர், பாண்டிய வேளாளர், நாஞ்சில் வேளாளர் என அவர்கள் வாழும் நாடுகளை மையமாக வைத்துப் பல பிரிவுகளில் தனித்தனிச் சமூகங்களாக வாழ்கின்றனர். எனவே பாரம்பரியத் தொழிலால் ஒரே தொழிலைச் செய்யும் பல சமூகங்கள் ஒரு பொதுப் பெயரின் கீழ் அழைக்கப்படுவதையும் அறியமுடிகிறது. மேலும் பல சமூகங்கள் தனித்தனியே அவர்களது பாரம்பரியத் தொழில்களைச் செய்து கொண்டு பிற சமூகங்களிடமிருந்து தங்களின் தொழிலால் வேறுபடுத்திக் கொள்வதையும் தமிழ் இலக்கியங்கள் எடுத்துக்கூறுகின்றன. மேலும் அறிவாற்றல் படைத்த சமூகங்களை

அந்தணர், சான்றோர் என இருவகைகளில் பிரிக்கலாம். அந்தணர் என்போர் ஆரிய வேதங்களைக் கற்று வேதங்கள் ஓதுபவர்கள் ஆரியக் கொள்கைகளைப் பின்பற்றுபவர்கள். சான்றோர் என்போர் தமிழைக் கற்று தமிழர்களின் பண்பாட்டுக் கூறுகளைப் பின்பற்றுபவர்கள். ஆரிய வேதக் கொள்கைகளைப் பின்பற்றாத தமிழர் வீட்டுத் திருமணங்களை சான்றோர் அல்லது அறிவர் என அழைக்கப்பட்ட தமிழர்களே நடத்திவைத்துள்ளனர்.

**“..... among the power classes residing in towns and among the hill tribes, who had not come under the Brahmanic influence, the marriage ceremony was performed by the Aṟivar or Cāṉṟōr ‘Tamil priests’.**

**- Kanakasabhai, 1904: 124**

இவர்கள் அல்லாது யவனர் எனும் கிரேக்க - உரோமாபுரி நாட்டவர்கள், வியாபாரத் தொடர்புகள் காரணமாகத் தமிழகத்திற்கு வந்து கடற்கரை ஓரமாகவுள்ள மருவூர்ப்பாக்கம் எனும் இடங்களில் தங்கியிருந்தனர். கி.பி. 7-ஆம் நூற்றாண்டிற்குப் பின்னர் அரேபிய வியாபாரிகள் தமிழ்நாட்டில் வியாபாரத் தொடர்புகள் காரணமாக குடியேறத் தொடங்கினர். கிரேக்க, உரோமாபுரி நாட்டினர் தமிழ் மக்களோடு திருமண உறவுகள் வைத்துக் கொள்ளவில்லை. ஆனால், தமிழகத்தில் குடியேறிய அரேபிய வியாபாரிகள் தமிழகத்தில் உள்ள பெண்களைத் திருமணம் செய்து கொண்டனர். இத்தகைய திருமண உறவால் கயலர், இராவுத்தர், மரைக்காயர் போன்ற தமிழ்மொழி பேசும் இசுலாமிய சமூகங்கள் உருவாகியுள்ளன. பிற்காலத்தில் இசுலாம் மதம் தழுவிய தமிழர்கள் இலப்பை என அழைக்கப்பட்டனர்.

**“The Arabs conquered Syria, Egypt and Persia in the seventh century A.D. and became intermediaries of Indian commerce. The term Yavana gradually came to be applied to the Arab and later on to any Muhammadan of Foreign origin”**

**- Ragava Iyenga, 1929: 321**

வேதங்கள் கற்ற ஆரியர்கள் அல்லாது பிராக்குருதமொழியைப் பின்பற்றிய சமண மதத்தினரும், பாலி மொழியைப் பின்பற்றும் புத்த மதத்தினரும் தமிழகத்தில்

குடியேறி தத்தம் ஆசிரமங்களில் தங்கி வாழ்ந்துள்ளனர். எனவே சங்க காலத்திலேயே தமிழகத்தில் வழங்கிய மதக்கோட்பாடுகளை:

1. பூர்வீகத் தமிழர்களின் பாரம்பரிய மதக்கோட்பாடு அல்லது கோட்பாடுகள்
2. ஆரிய மதக்கோட்பாடுகள்
3. சமண மதக்கோட்பாடுகள்
4. புத்த மதக்கோட்பாடுகள்

என நான்கு வகைகளாகப் பிரித்துப் பார்க்கலாம். கி.பி. ஏழாம் நூற்றாண்டுக்குப் பின்னர் அரேபியர்களின் வருகை இசுலாம் மதத்தைத் தமிழகத்தில் நிலைநாட்டியது. கி.பி. 16-ஆம் நூற்றாண்டுக்குப் பின்னர் வந்த ஐரோப்பியர்களின் வருகையால் கிறித்தவ மதம் தமிழகத்தில் கால் ஊன்றியது. எனவே, பல சமூகப்பிரிவுகளாக பல நிலப்பிரிவுகளில் வாழ்ந்த தமிழர்களின் சமூகங்கள் அல்லது இனங்கள் பாரம்பரியத் தொழிலால், வாழும் இடத்தால் அல்லது நாட்டால், பின்பற்றிய மதக்கோட்பாட்டால் வேறுபட்டுத் தனித்தனிச் சமூகங்களாக (social group) வாழ்ந்த காரணத்தால் அவர்கள் பேசும் தமிழிலும் வேறுபாடுகள் தோன்றின. இத்தகை வேறுபாடுகள் சமூகக்காரணிகளால் (social factors) தோன்றுவது, சமூகங்களிடையே காணப்படும் மொழிவேறுபாடுகள் சமூகங்களை அடையாளங்காட்டுகின்றன. இத்தகைய மொழிவேறுபாடுகளைக் கொண்ட சமூகங்கள் பேசும் தமிழ் சமூக வழக்குகள் (social dialect) என அழைக்கப்படுகின்றன.

சங்க காலத்திற்கு முன் ஆரியர்களின் வர்ணக்கொள்கை தமிழகத்தில் ஊடுருவவில்லை. பிற்காலத்தில் ஆரியக் கொள்கைகளைக் கடைப்பிடிக்க ஆரம்பித்த அந்தணர்கள் தமிழக மன்னர்களை சூரியவம்சம், சந்திரவம்சம் என்று அரச சந்ததியர்களை உருவாக்கிய ஆரிய வழிமுறைகளைத் தமிழ் மன்னர்களையும் கடைப்பிடிக்க வைத்தனர் (ஐயங்கார், 1929: 19)

> **“the distinction of the four castes Brahman, Kshatriya, Vaisya and Sudra observed by the Aryans did not exist auonst the Tamils”**
>
> **– Kanakasabai, 1904: 113**

ஆனால் சமுதாயத்தில் உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்ற கோட்பாடு தமிழர்களிடையே நிலவியது. ஒவ்வொரு சமூகத்தினைச் சேர்ந்தவர்கள் தனித்தனித் தெருக்களில்

வாழ்ந்து வந்துள்ளனர். பாணர், கூத்தர், புலையர் போன்ற சமூகத்தினர் நகரத்தின் வெளிப்புறங்களில் உள்ள சேரிகளில் வாழ்ந்து வந்துள்ளனர். தமிழர்களின் உயர்ந்தோர், தாழ்ந்தோர் என்று சமூகங்களைப் பிரித்துப் பார்க்கும் வழக்கம் கீழ்க்கண்ட ஆறு வகைகளில் இருந்துள்ளது:

1. அறிவர் அல்லது சான்றோர் என அழைக்கபப்ட்ட கல்வியில் சிறந்து விளங்கியவர்கள் அனைத்து மக்களையும் விட உயர்ந்த இடத்தில் வைத்து மரியாதை செய்யப்பட்டனர்
2. நிலத்தை உழுது விவசாயம் செய்த மக்கள் இரண்டாவதாகக் கருதப்பட்டனர்
3. முல்லைநில மக்களாகிய ஆயர்களும் வேட்டுவர்களும் மூன்றாவது இடத்தில் இருந்தனர்
4. கொல்லர், குயவர், தச்சர், பொற்கொல்லர் போன்று கைத்தொழில் செய்து வாழ்பவர்கள் நான்காவது இடத்தில் வைக்கப்பட்டனர்
5. காவல்தொழில் புரிந்த படை ஆட்சியர் என்பவர்கள் ஐந்தாம் இடத்தில் வைக்கப்பட்டனர்
6. மீன்பிடி தொழில் புரியும் வலையர்களும், புலையர் இனத்தவரும் கடைநிலைக்குத் தள்ளப்பட்டனர்

(கனகசபை, 1904: 114). இருப்பினும் தொல்காப்பியர் காலத்தில் ஆரியர்களின் வர்ணக் கொள்கை தமிழகத்தில் ஊடுருவி இருப்பதற்குத் தொல்காப்பத்திலேயே சான்றுகள் உள்ளன. தமிழகச் சாதிகளை வகைப்படுத்தும் பொழுது பூணூல் அணியும் அந்தணர்களை முதலாவதாகவும், வேளிர்கள், வெள்ளாளர்களை இரண்டாம் நிலைச் சத்திரியர்களாகவும், பிற மக்களைச் சூத்திரர்களாகவும் பிரித்துள்ளது இதற்குச் சான்றாக அமைகிறது (கனகசபை, 1904: 116).

> **"… in the chapter in which he describes the classes of society, he places the Brahman who wear the sacred thread as the first. Further, the Vēḷir or Veḷḷāḷar belonging to the families of the kings and chieftains have been honoured as Kshatriya, the rest among them have been classed with the Sudra".**
>
> **– Kanakasabhai, 1904: 116**

தொல்காப்பியர் சமூகத்தைக் குடி என்றே அழைக்கின்றார். சாதி என்ற சொல்லை அவர் மக்கள் கூட்டத்தைச் சுட்டிக்காட்டப் பயன்படுத்தவில்லை. சாதி என்ற சொல்லை இரண்டே இரண்டு இடங்களில் நீர்வாழ் உயிரினங்களைக் கூறுகையில் பயன்படுத்துகின்றார்.

**நீர்வாழ் சாதியுள் அறுபிறப்பு உரிய**

**- தொல்காப்பியம், 1542**

(நீரில் வாழ்வனவாகிய சுறா, முதலை, இடங்கர், சுரா, வரால், வாளை இவற்றின் ஆண்களும் போத்து என்று கூறுவதற்குரியவை)

**நீர்வாழ் சாதியுள் நந்தும் நாகே**

**- தொல்காப்பியம், 1563**

(நீரில் வாழும் நத்தையின் பெண்ணும், நாகு என்று அழைக்கப்பெறும்).

ஒருவரின் குடி அல்லது சமுதாயம் அவர் எந்தக் குடியில் பிறந்திருக்கின்றார் என்பதை வைத்து முடிவு செய்யப்படுகிறது.

**பிறப்பே, குடிமை .......**

**- தொல்காப்பியம், 1219**

எனக் கூறும் தொல்காப்பியர்

**வழக்கு எனப்படுவது உயர்ந்தோர் மேற்றே**
**நிகழ்ச்சி அவர்கட்கு ஆகலான**

**- தொல்காப்பியம், 1219**

**“வழக்கென்று சொல்லப்படுவது உயர்ந்தோர் வழங்கிய வழக்கே் என்னை? உலகத்து நிகழ்ச்சியெல்லாம் அவரையே நோக்கினமையின் என்றவாறு”**

**- கணேசையர் (1943: 680)**

**“உயர்ந்தோர் கூறும் வழக்கால் மரபு தோன்றுகிறது வழக்கை உருவாகுவதும் செயல்படுத்துவதும் உயர்ந்தோரே”**

**- ச.வே. சுப்பிரமணியன் (2008: 432)**

எனவே, வழக்கு என்று சொல்லப்படுவது சமுதாயத்தில் உயர்ந்த நிலையில் உள்ள மக்கள் தங்களின் வாழ்க்கைமுறையில், பேசப்படும் பேச்சுவழக்கில் உள்ளவாறு உள்ளதாகும். பிற மக்கள் உயர்ந்தநிலையில் உள்ளவர்களின் வழக்குகளை ஏற்றுக்கொண்டு பின்பற்றுகின்றனர். உயர்திணைப் பெயர்களைத் தொல்கப்பியர் கீழ்க்கண்டவாறு வகைப்படுத்துகின்றார்

**நிலப்பெயர் குடிப்பெயர் குழுவின் பெயரே**

**- தொல்காப்பியம், 1219**

இதிலும் ‘குடி’ என்ற சொல்லையே பயன்படுத்துகின்றார்.

தொல்காப்பியர் 1570-ஆம் எண் சூத்திரம் முதல் 1584-ஆம் எண் சூத்திரம் வரை உள்ள 15 சூத்திரங்களில் ஒரு சமூகத்தின் சமுதாய நிலை, அவர்களது உரிமைகள் பற்றிக் கூறுகின்றார் (சுப்பிரமணியன், 2008: 428-430)

**அந்தணர்க்கு உரியவை**

**நூலே கரகம் முக்கோல் மணையே**

**ஆயும் காலை அந்தணர்க்கு உரிய**

**- தொல்காப்பியம், 1570**

(அறிவு நூல், கமண்டலம், முக்கோல், இருக்கைப்பலகை நான்கும் அந்தணர்க்கு உரியவை)

**அரசர்க்கு உரியவை**

**படையும் கொடியும் குடையும் முரசும்**

**நடைநவில் புரவியும் களிறும் தேரும்**

**தாரும் முடியும் நேர்வன பிறவும்**

**தெரிவுகொள் செங்கோல் அரசர்க்கு உரிய**

**- தொல்காப்பியம், 1571**

(நால்வகைப் படையும், தனக்கென ஒரு கொடியும், வெண்கொற்றக் குடையும், முரசும், குதிரையும், யானையும், தேரும், தனக்கென ஒரு மாலையும், தலையில் அணியும் முடியும், அரியணை, அரண் போன்றனவும், செங்கோல் அரசர்க்கு உரியவை)

**அந்தணர்க்கு உரியன அரசர்க்கும் பொருந்தும்**

**அந்த ணாளர்க் குரியவும் அரசர்க்கு,**

**ஒன்றிய வரூஉம் பொருளுமார் உளவே**

**- தொல்காப்பியம், 1572**

(அந்தணர்க்குரிய நூல், கமண்டலம், முக்கோல் போன்றவை அரசர்க்கும் பொருந்தும்)

**அரசர்க்குரியன அந்தணர்க்கு இல்லை**

**பரிசில் பாடண்திணைத் துறைக்கிழமைப் பெயர்,**

**நெடுந்தகை, செம்மல், என்றிவை பிறவும்,**

**பொருந்தச் சொல்லுதல் அவர்குறித்து அன்றே**

**- தொல்காப்பியம், 1573**

(பரிசில் பெறுவோர், நெடுந்தகை, செம்மல் என அரசரைச் சொல்லலாம். அந்தணரைச் சொல்லல் கூடாது)

**அரசுரிமை**

**அந்த ணாளருக்கு அரசுவரைவு இன்றே**

**- தொல்காப்பியம், 1574**

(அந்தணர் அரசராக முடியாது)

**ஊரும் பெயரும் கருவியும்**

**ஊரும் பெயரும் உடைத்தொழில் கருவியும்,**

**யாரும் சார்த்தி அவைஅவை பெறுமே**

**- தொல்காப்பியம், 1575**

நால்வகை இனத்தவர்க்கும் ஊர்ப்பெயர், கருவிப் பெயரோடு பெயரை இணைத்துக் கொள்ளலாம். நால்வகை இனத்தவர் என்பது ஆரியர்களின் வர்ணக் கொள்கையாகிய அந்தணர், சத்திரியர், வைசியர், சூத்திரர் எனும் பிரிவுகளைக் குறிக்கிறது. தமிழகப் புலவர்கள் பட்டியலில் கீழ்க்காணும் பெயர்கள் உள்ளன. அவைகளை எடுத்துக்காட்டுகளாகக் கொள்ளலாம்.

ஆசிரியன் பெருங்கண்ணன் - குறுந்தொகை, 239

ஆவூர் கிழார் - புறநானூறு, 322

ஈழத்துப் பூதன் தேவனார் - நற்றிணை, 366

இடையன் நெடுங்கீரனார் - அகநானூறு, 166

உறையூர் ஏணிச் சேரி முடமோசியார் - புறநானூறு, 13, 127, 128, 129, 130, 131, 132, 133, 134, 135, 241, 374, 375

கணியன் பூங்குன்றன் - புறநானூறு, 192

கணக்காயன் தத்தன் - குறுந்தொகை, 304

மதுரைக் கூத்தனார் - அகநானூறு, 334

மதுரைப் பெருங்கொல்லன் - குறுந்தொகை, 141

மதுரைக் கொல்லன் புல்லன் - குறுந்தொகை, 373

வெள்ளைக்குடி நாகனார் - நற்றிணை, 158, 196 புறநானூறு, 35

## தலைமைக் குணச்சொல்

இனத்தின் தலைமைப் பண்பு அவரவர்க்கு ஏற்ற நிலையில் கூறவும் பெறும். எனவே ஒரு இனத்தின் தலைமைப் பண்பு என்பது எல்லா இன மக்களுக்கும் உரிய பொதுவான பண்பு இல்லை. இத்தகைய தலைமைப் பண்பு ஒரு இனத்தை அடையாளங்காட்டுகிறது அல்லது ஒரு இனத்திற்கு உரிய பண்புகளாக சமூக இலக்கணம் வகிக்கிறது.

**தலைமைக் குணச்சொல்லும் தத்தமக்கு உரிய**

**நிலைமைக்கு ஏற்ப நிகழ்த்துப என்ப**

**- தொல்காப்பியம், 1576**

**வணிகர்**

**வைசியன் பெறுமே வாணிக வாழ்க்கை**

**- தொல்காப்பியம், 1578**

(வைசிகர் வாணிபத் தொழில் செய்து இலாபம் ஈட்டி வாழ்பவர்கள்)

**கூல வாணிகம்**

**மெய்தெரி வகையின் எண்வகை உணவின்,**

**செய்தியும் வரையார் அப்பா லான**

**- தொல்காப்பியம், 1579**

(எண்வகைக் கூலங்களான பயறு, உளுந்து, கடுகு, கடலை, எள், கொள்ளு, அவரை, துவரை உற்பத்தி செய்தலும் விற்பனை செய்தலும் வாணிகர்க்குரியது).

**வேளாளர்**

**வேளாண் மாந்தர்க்கு உழுதூண் அல்லது,**

**இல்லென மொழிய பிறவகை நிகழ்ச்சி**

**- தொல்காப்பியம், 1581**

வேளாளர்க்கு உழுதுண்டலே சிறந்த தொழிலாகும். வேளிர் எனப்படும் சிற்றரசர்கள் வேளாளர் குலத்தில் தோன்றியவர்களாகக் கருதப்படுவதோடு, வேளிர்களுக்கும் வேளாளர்களுக்கும் இடையே திருமண உறவுமுறைகள் இருந்ததையும் சங்ககால இலக்கியங்கள் மூலம் அறிய முடிகிறது.

ஒவ்வொரு இன மக்களுக்கும் உரியவைகளை பற்றிக் கூறும்பொழுது அந்தணர்க்கு உரியவை (சூத்திரம், 1570), அரசர்க்கு உரியவை (சூத்திரம், 1571), அந்தணர்க்கும் அரசர்க்கும் பொதுவாக உரியவை (சூத்திரம், 1572), அரசர்க்குரியவை சில அந்தணர்க்கு இல்லை (சூத்திரம், 1573) என்று தெளிவுபடுத்திய பின் அரசுரிமை என்பது அந்தணர்க்கு இல்லை எனத் தெளிவாகத் தொல்காப்பியர் கூறுகின்றார். அந்தணர் என்போர் சமூகங்கள் வரிசையில் உயர்ந்தநிலையில் இருந்தாலும் அவர்கள் அரசர்களாக முடியாது.

**அந்த ணாளர்க்கு அரசுவரைவு இன்றே**

**- தொல்காப்பியம், 1574**

அந்தணர்கள் அரசராக முடியாது அடுத்து வரும் சூத்திரத்தில் அரசர்க்கும் வணிகர்க்கும் உள்ள பொதுவானவைகளைப் பற்றிக் கூறுகின்றார்.

**கண்ணியும் தாரும் எண்ணினர் ஆண்டே**

**- தொல்காப்பியம், 1580**

அரசர்க்குரிய தலையில் சூடும் பூவும், மாலையும் வணிகர்க்கும் உண்டு. மேலும் அரசர்க்கும் வணிகர்க்கும் படைக்கலன்கள் உண்டு. பிற இனத்தவர்க்கு அவைகள் இல்லை என்கின்றார்.

**இடைஇரு வகையோர் அல்லது நாடின்,**

**படைவகை பெறாஅர் என்மனார் புலவர்**

**- தொல்காப்பியம், 1577**

அடுத்து அரசர்களிடமிருந்து வேளாளர்கள் படைக்கலன்களையும் கண்ணிப் பெருமையையும் பெறுவர் என்கின்றார்.

**வேந்துவிடு தொழிலின் படையும் கண்ணியும்,**

**வாய்ந்தனர் என்ப அவர் பெறும் பொருளே**

**- தொல்காப்பியம், 1582**

அரசர்களிடமிருந்து வேளாளர் படைக்கலன்களையும், கண்ணிப் பெருமையையும் பெறுவர். குறுநில மன்னர்களுக்குரியவைகளைக் கீழ்க்கண்ட சூத்திரத்தில் கூறிவிட்டு

**வில்லும் வேலும் கழலும் கண்ணியும்**

**தாரும் மலையும் தேரும் வாளும்**

**மன்பெறு மரபின் ஏனோர்க்கும் உரிய**

**- தொல்காப்பியம், 1583**

குறுநில மன்னர்களுக்கும் வில், வேல், வீரக்கழல், தலைக்கண்ணி, தார், ஆரம், தேர், வாள் போன்றவைகள் உரியவைகள்.

குறுநில மன்னர் போன்று செல்வந்தர்களாக இருப்பினும் வணிகர், வேளாளர் ஆகியோர்க்கு மேற்கூறியவைகள் இல்லை என்கின்றார். மேற்கண்ட சூத்திரங்களின் மூலம் சமூகங்களின் நிலைமை பற்றி அறியலாம்.

1. அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் ஆகியோர்களுக்குப் பொதுவாக உரியவைகள்
2. அரசர்க்கு மட்டும் அல்லது குறுநில மன்னர்களுக்கு மட்டும் உரியவைகள்
3. அரசர்க்கும் அந்தணர்களுக்கும் பொதுவாக உரியவைகள்
4. அரசர்க்கும் வணிகர்க்கும் பொதுவாக உரியவைகள்
5. வேளாளர் அரசர்களிடமிருந்து கேட்டுப் பெற்றுக் கொள்பவைகள்
6. ஒவ்வொரு இனத்தவரின் தனிப்பட்ட உரிமைகள்

எனவே, எல்லாச் சமூகங்களும் ஒன்றாகச் சமநிலையில் கருதப்படாது, சமூகத்திற்குரியவைகள் வாயிலாக அவைகளை வேறுபடுத்துவதோடு மட்டுமல்லாது ஒருவர் செல்வந்தராக இருந்தாலும் அவர் வணிகர் அல்லது வேளாளராக இருந்தாலும் தங்களைக் குறுநில மன்னர்களோடு ஒப்பிட முடியாது எனச் சூத்திரம் 1584-இல் தெளிவுபடுத்தியுள்ளார். சமூகத்தில் இருந்த உயர்ந்தோர், தாழ்ந்தோர் என்ற கருத்தினை இச்சூத்திரங்கள் வாயிலாக அறியமுடிகிறது. மேற்கூறப்பட்ட சூத்திரங்களில் அந்தணர், அரசர், குறுநில மன்னர், வணிகர், வேளாளர் ஆகிய சமூகங்கள் மட்டும் குறிப்பிடப்பட்டுள்ளன. சமூகங்களை மேலோர், கீழோர் என பாகுபடுத்திப்பார்த்தல் சூத்திரம் 1090-இல் கூறப்பட்டுள்ளது. தொல்காப்பியச் செய்யுளில் தொல்காப்பியர் உயர்ந்தோர், இழிந்தோர், ஒப்போர் எனக்கூறுவதன் மூலம் சமுதாய ஏற்றத்தாழ்வுகள் அறியப்படுகிறது.

தொல்காப்பியர் கற்பியியலில் தலைவன் தலைவிகளின் காதல் நிலைகளையும் அதை அவர்கள் வெளிப்படுத்தும் முறைமைகளையும் பற்றிக் கூறும்பொழுது தலைவன், தலைவி ஆகிய இருவருக்கும் இடையே பாலமாக இருப்பவர்களின் செயல்களைக் கூற்று என்கின்றார். மேலும் தலைவன், தலைவி ஆகியவர்களில் ஒருவரது உணர்வுகளை மற்றவர்க்குத் தெரிவிப்பதற்குரிய வாயில்களாகக் கூறும்பொழுது

**வாயில்கள்**

**தோழி, தாயே, பார்ப்பான், பாங்கன்,**

**பாணன், பாடினி, இளையர், விருந்தினர்,**

**கூத்தர், விறலியர், அறிவர், கண்டோர்,**

**யாத்த சிறப்பின் வாயில்கள் என்ப**

**- தொல்காப்பியம், 1139**

(தோழி, தாய், பார்ப்பான், பாங்கன், பாணன், பாடினி, இளையோர், விருந்தினர், கூத்தர், விறலியர், அறிவர், கண்டோர் எனும் இப்பன்னிரண்டு தலைவன், தலைவி வாழ்க்கை தொடர்புடைய வாயில்கள் என்று கூறுவர்). தலைவன், தலைவியர் வாழ்க்கையில் தொடர்புடைய வாயில்களாக வருபவர்களில் கூத்தர், விறலியர், பாணன், பார்ப்பான், அறிவர் போன்ற சமூகப் பிரிவினர்கள் அடையாளங்காணப்பட்டுள்ளனர். தமிழ் பேசும் மக்கள் பல சமுதாயங்களாகத் தமிழ்கூறும் நல்லுலகத்தில் வாழ்ந்தாலும் அவர்களிடையே பாகுபாடுகள் கீழ்க்கண்ட சமுதாயக் கூறுகளால் இருந்தன.

1. மக்கள் வாழும் நிலப்பகுதி (குறிஞ்சி, முல்லை, நெய்தல், மருதம், பாலை)
2. பாரம்பரியத் தொழில் (வணிகர், பாணர், அந்தணர், கூத்தர், வேளாளர், அரசர் (பேரரசர், குறுநில மன்னர்), சான்றோர் அல்லது அறிவர், வலையர், புலையர்)
3. சமுதாயத்தில் உயர்வு நிலையில் உள்ளோர் (மேலோர்)
4. சமுதாயத்தில் தாழ்ந்த நிலையில் உள்ளோர் (கீழோர், இழிந்தோர்)
5. சமுதாயத்தில் சமநிலையில் உள்ளோர் (ஒப்போர்)

இவ்வாறாகத் தமிழ்மொழி பேசும் சமுதாயங்கள் பல வட்டாரங்களில், பல நாடுகளில், பற்பல தொழில் புரியும் சமுதாயங்களாக வாழ்ந்த காரணத்தால் சமுதாயக் கிளைமொழிகள் எனும் சமுதாயப் பேச்சுவழக்குகளும் உருவாகியிருக்க வேண்டும். இதற்கு ஒரு எடுத்துக்காட்டாகத் தொல்காப்பியர் ஈ, தா, கொடு எனும் வினைச்சொல் ஒரே பொருளைக் குறித்தாலும் ஒருவர் பேசும்பொழுது எவரிடம் பேசுகின்றாரோ அவரது சமூகநிலை அடிப்படையில் சொற்கள் தேர்ந்தெடுக்கப்படுவதைக் கோடிட்டுக் காட்டியுள்ளார்.

**ஈதாகொடு எனக் கிளக்கும் மூன்றும்,**

**இரவின் கிளவி ஆகிடன் உடைய**

**- தொல்காப்பியம், 927**

(ஈ, தா, கொடு என்ற மூன்று சொற்களும், ஒருவன் மற்றவனிடம் இரத்தற்குக் கூறும் சொற்கள்)

**ஈ என் கிளவி இழிந்தோன் கூற்றே**

**- தொல்காப்பியம், 928**

(ஈ என்ற சொல் தாழ்ந்தோன் உயர்ந்தோனிடம் கூறி இரக்கும் சொல்)

**தா என் கிளவி ஒப்போன் கூற்றே**

**- தொல்காப்பியம், 929**

(தா என்ற சொல் தன்னை ஒத்தவன் ஒருவனிடம் இரக்கும் போது கூறும் சொல்)

**கொடு என் கிளவி உயர்ந்தோன் கூற்றே**

**- தொல்காப்பியம், 930**

(கொடு என்ற சொல் உயர்ந்தவன் தாழ்ந்தவனிடம் இரக்கும் போது கூறும் சொல்)

**"இதன் பொருளாவது ஈயென் கிளவி இரக்கப்படுவோனின் இழிந்துவிரவலன் கூற்றாம். தாவென் கிளவி அவனோடொப்பன் கூற்றாம். கொடுவென் கிளவி அவனினுயர்ந்தவன் கூற்றாம்"**

**- கணேசையர், சொல்லதிகாரம், 1955**

இந்தவகை எடுத்துக்காட்டுகள் தமிழ்ச் சமுதாயங்கள் உயர்ந்தோர், ஒப்போர், தாழ்ந்தோர் என்ற மூன்று நிலைகளில் அமைந்திருந்ததைச் சுட்டிக்காட்டுவதோடு, பயன்படுத்தப்படும் சொல் அவர்களின் சமூக நிலையைச் சுட்டிக்காட்டுவதன் மூலம் அத்தகைய சொற்களை சமுதாய வழக்குச் சொற்கள் அல்லது சமுதாயக் கிளைமொழிக் கூறுகள் என்றழைக்கலாம்.

தற்காலத் தமிழின் முன்னிலைப் பதிலிப் பெயர்கள் நீ, நீர், நீங்கள் என்ற மூன்று சொற்களில் நீ என்ற சொல் முன்னிலை ஒருமை மற்றும் உயர்ந்தோன் தாழ்ந்தோனிடம் பயன்படுத்தும் பதிலிப் பெயராகவும் நீர் என்ற சொல் முன்னிலை

ஒருமை மற்றும் தன்னை ஒத்த ஒப்போனிடம் பயன்படுத்தும் பதிலிப் பெயராகவும் நீங்கள் என்ற சொல் முன்னிலை மற்றும் உயர்ந்தோனிடம் பயன்படுத்தும் பதிலிப் பெயராகவும் மூன்று சமுதாய நிலைகளைக் காட்டும் பதிலிப் பெயர்களாக உள்ளன. மேலும்

**கொடுஎன் கிளவி படர்க்கை ஆயினும்,**

**தன்னைப் பிறன்போல் கூறும் குறிப்பின்,**

**தன்னிடத்து இயலும் என்மனார் புலவர்.**

**- தொல்காப்பியம், 931**

(கொடு என்ற சொல் பொது நிலையில் படர்க்கையில் வரும். தன்னைப் படர்க்கைபோல் கருதிய குறிப்பால் தன்மையிலும் கொடு என்ற சொல் வரும் என அறிவுடையோர் கூறுவர்). எனவே, கொடு என்ற சொல் உயர்ந்தவன் கூற்றாக இருப்பினும், அதே சொல் ஒருமையில் ஒருவரின் மரியாதைக்குறிய சொல்லாகவும் அமைகிறது. தற்காலத் தமிழில் அவர்கள் என்ற சொல் படர்க்கையில் உயர்திணைப் பன்மையில் வரும் பதிலிப் பெயராக இருப்பினும் அதே சொல் படர்க்கை ஒருமையில் மரியாதைக்குரிய பதிலிப் பெயராகவும் விளங்குகிறது. தமிழில்-கள் எனும் விகுதி பன்மையைக் குறிப்பதோடு ஒருமையில் மரியாதையைக் குறிக்கும் விகுதியாகவும் உள்ளது. சங்க காலத் தமிழில் யாம் என்ற சொல் தன்னிலை ஒருமை மரியாதையைக் குறிக்கும் பதிலிப்பெயராகவும், தன்னிலை பன்மை பதிலிப்பெயராகவும் இருப்பது இங்கு குறிப்பிடத்தக்கது.

பிற்காலத்தில் அரபிய வியாபாரங்கள் சோனகர் எனவும் அழைக்கப்பட்டனர். தமிழகத்தில் குடியேறி தமிழ்ப் பெண்களை மணந்து தனிச் சமுதாயங்களை உருவாக்கிய அரபு வியாபாரிகள் முதலில் அரபு மொழிக்குப் பயன்படுத்திய அரபி எழுத்துக்களால் தமிழையும் எழுதினர். இது அவர்களுக்கு மட்டும் புரியும் ஒரு தனித் தமிழ் வழக்காகவும் இருந்துள்ளது. எனவே, அவர்கள் பேசும் தமிழ் அரபுத் தமிழ் என அழைக்கப்பட்டது.

**“Until recently, Tamil, Moslems used a kind of Arabic alphabet”**

**- M. Andronov, 1969: 10**

ஆனால் தற்பொழுது அவர்கள் அரபு எழுத்துக்களைத் தங்களது மதம் சார் கருத்துப் பரிமாற்றங்களில் மட்டும் பயன்படுத்துகின்றனர். மற்றபடி தமிழ்

எழுத்துக்களையே எழுதுவதற்கும் பயன்படுத்துகின்றனர். தமிழ்பேசும் இசுலாமியர்கள் பிற உருது மொழி பேசும் இசுலாமியச் சமுதாயங்களிலிருந்து பேசும் மொழியால், கலாச்சாரப் பழக்க வழக்கங்களால் மாறுபடுகின்றனர்.

ஐரோப்பியர்களின் வருகையால் கிறித்துவ மதம் தமிழகத்தில் ஊடுருவியது. முதலில் போர்ச்சுக்கல், இங்கிலாந்து, இத்தாலி, ஹாலந்து, பிரான்ஸ் போன்ற பல ஐரோப்பிய நாடுகளில் இருந்து இவர்கள் வியாபாரம் தொடர்பாகவும், ஆட்சியாளர்களாகவும், கிறித்துவ மதப் போதகர்களாகவும் குடியேறினர். ஐரோப்பியர்கள் பரங்கியர் என்றும் ஹாலந்து நாட்டவர் உலாந்தக்காரர் எனவும் அழைக்கப்பட்டனர். எனவே தமிழகத்தில் வாழும் ஐரோப்பிய நாட்டவர்கள் தங்களின் பூர்வீக நாடுகளின் அடையாளத்திற்கு அப்பால் ஒன்றுபட்டு வாழ்ந்த காரணத்தால் ஐரோப்பிய சாதி (Europian) எனும் ஒரு தனிச் சமூகம் உருவாகியது. பின்னர் ஆங்கிலேயர்களின் ஆதிக்கம் அதிகமான காரணத்தால் பிற ஐரோப்பிய நாட்டவர்கள் தமிழகத்திலிருந்து வெளியேறத் தொடங்கினர். புதுச்சேரி, காரைக்கால் பகுதிகளில் மட்டும் பிரான்ஸ் நாட்டவர் ஆதிக்கம் செலுத்தினர். ஆங்கிலேயர்களின் ஆட்சிக்காலத்தில் இந்தியப் பெண்களை ஆங்கிலேயர்கள் திருமணம் செய்ய நேரிட்ட காரணத்தால் ஆங்லோ - இண்டியன் (Anglo - Indian) எனும் ஒரு தனிச்சாதி உருவாகியது. ஆனால் இந்திய விடுதலைக்குப் பின்னர் இவர்களிலும் பெரும்பாலோர் இங்கிலாந்து அல்லது இங்கிலாந்தின் ஆட்சியின் கீழ் இருந்த நாடுகளுக்குக் குடியேறத் தொடங்கினர். தற்பொழுது இவர்களது மக்கள்தொகை தமிழகத்தில் மிகக் குறைவாகவே உள்ளது. ஆங்கிலேயர்களின் வருகையால் ஆங்கில மொழி பயிற்று மொழியாகத் (language used in education) தமிழகத்தில் நிலைபெற்றுவிட்டது.

சமணமதமும், புத்த மதமும் சங்ககாலந்தொட்டுத் தமிழகத்தில் இருந்தன. களப்பிரர்கள் காலத்தில் இவ்விரு மதங்களும் தமிழகத்தின் முதன்மை மதங்களாக விளங்கின. களப்பிரர்களின் ஆட்சிக்குப் பின்னர் சைவமும், வைணவமும் தமிழகத்தில் தழைத்தோங்கியது. சமணமும், புத்தமும் ஆட்சியாளர்களின் ஆதரவு இல்லாததால் அம்மதங்களைப் பின்பற்றும் மக்களின் எண்ணிக்கையும் குறையத் தொடங்கின. மேலும் சைவ நாயன்மார்களின் சமயத்தொண்டும், வைணவ ஆழ்வார்களின் சமயத்தொண்டும் சமண, புத்த மதங்களை தமிழகத்தில் வளரவிடவில்லை. தற்பொழுது திருவள்ளுர், காஞ்சிபுரம் மாவட்டங்களில் சமண மதத் தமிழர்கள் மிகக் குறைந்த அளவில் வாழ்கின்றனர். புத்த மதம் தமிழகத்தில் அடியோடு அகற்றப்பட்டுவிட்டாலும் தமிழகத்திலிருந்து சென்ற தமிழ்

புத்தமதத்தினர்கள் இலங்கையின் தேசிய மதமாக மாறிவிட்ட புத்த மதத்தோடு தங்களை இணைத்துக் கொண்டனர். சமண மதம், புத்த மதம் தமிழகத்தில் இல்லையென்றாலும் பள்ளி, சங்கம், விகார் போன்ற சொற்கள் சமண, புத்த மதங்களின் தாக்கங்களை உணர்த்துகின்றன. இலங்கையில் குடியேறிய புத்தமதத்தினர் புத்தமதத்தை இலங்கையில் நிறுவியதோடு, அவர்கள் பின்பற்றிய பிராக்கிருத, பாலி மொழிகளிலிருந்து ‘சிங்களம்’ எனும் ஒரு தனி மொழியும் உருவாகக் காரணமாக இருந்துள்ளனர். தமிழகத்தில் ஆரியர்களின் வேத மொழியாகிய சமஸ்கிருதம், தமிழில் ஒரு தாக்கத்தை ஏற்படுத்தினாலும் சமண, புத்த மதத்தவர்களின் பிராக்ருத, பாலி மொழிகள் தமிழில் தங்களின் ஆதிக்கத்தைச் செலுத்தவில்லை. இதற்கு இம்மொழிகளின் பூர்வீக மொழி சமஸ்கிருத மொழியாக இருப்பது ஒரு காரணமாக அமைந்திருக்கலாம்.

## இயல்-4

## தற்கால வட்டாரவழக்குகள்

ஐரோப்பியர்களின் வருகைக்குப் பின் வட்டாரவழக்கு ஆய்வுகள் ஒரு தனிச் சிறப்பைப் பெற்றது. ஐரோப்பிய மொழியியல் அறிஞர்களும், தமிழக மொழியியல் அரிஞர்களும் தமிழகம் மட்டுமின்றி, இலங்கை, மலேசியா போன்ற வெளிநாடுகளில் பேசப்படும் தமிழ் மொழியையும் ஆய்வுக்கு எடுத்துக்கொண்டுள்ளனர். வட்டாரவழக்குச் சொல்லகராதிகள் பல தொகுக்கப்பட்டுள்ளன. அவ்வாறு தொகுக்கப்பட்டுள்ள வட்டாரவழக்குச் சொற்கள் சங்ககாலத் தமிழின் தொடர்ச்சியையும், வரலாற்றுக்காலங்களில் ஏற்பட்டுள்ள மாறுதல்கள், திரிபுகள் முதலியவற்றை விளக்குவதோடு, இந்த வட்டாரங்கள் சங்ககாலத் தமிழகம் பல நாடுகளாகப் பிரிந்திருந்தது இன்றளவிலும் பொருந்தும் எனும் உண்மையை எடுத்துரைப்பதாக அமைந்துள்ளன. கொங்கு நாடு, செட்டி நாடு, நாஞ்சில் நாடு, தொண்டை நாடு, நடு நாடு போன்ற பிரிவுகள் இதில் அடங்கும். இத்தகைய அகராதிகளில் உள்ள வட்டாரச் சிறப்புச் சொற்கள் இவ்வியலில் கொடுக்கப்பட்டுள்ளன.

கி. இராஜநாராயணன் வெளியிட்ட ‘வழக்குச்சொல் அகராதி’ எனும் நூல் தற்கால வட்டாரவழக்கு அகராதிகளுக்கு முன்னோடியாகக் கருதப்படுகிறது. இவர் தனது சொந்த ஊரான தற்போதைய தூத்துக்குடி மாவட்ட, கோவில்பட்டி வட்டத்தைச் சேர்ந்த கிராமப்புறத்தில் பேசப்படும் பேச்சுத்தமிழை அடிப்படையாக வைத்துத் தொகுத்துள்ளார். எனவே, இந்த வட்டாரவழக்குச் சொல்லகராதி தென்பாண்டி நாட்டு வழக்கு எனக் கருதலாம். இதுபோன்று குறிப்பிட்ட வட்டார நாட்டுப் பெயர்கள் இல்லாது அந்தந்த வட்டாரத்தின் பெயர்களிலும் வட்டாரவழக்குச் சொல் அகராதிகள் தொகுக்கப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டாக அறந்தாங்கி வட்டாரவழக்குச் சொல் அகராதியைக் குறிப்பிடலாம். இந்த அகராதியின் தலைப்பு அறந்தாங்கி வட்டாரவழக்குச் சொல்லகராதி எனும் தலைப்பில் வெளியிடப்பட்டிருந்தாலும் இது ‘செட்டிநாடு’ எனும் பகுதியைப் பிரதிபலிக்கிறது. இதுபோன்று நடு நாட்டுச் சொல்லகராதி சோழநாட்டின் ஒரு பகுதியைப் பிரதிபலிப்பதாக உள்ளது. இத்தகைய தற்கால வட்டாரச்சொல் அகராதிகள் அனைத்தும் சங்ககால இலக்கியங்களில் காணப்படும் நாடுகளின் பிரிவுகளை நினைவூட்டுவதாக இருப்பது மட்டுமின்றி, இன்றையத் தமிழகமும் அத்தகைய நாடுகளின் தொடர்ச்சியே என்பதை அறியமுடிகிறது.

## கொங்குநாடு

கொங்குநாடு என்பது தற்போதையக் கோயம்புத்தூர், சேலம், ஈரோடு, நாமக்கல், திண்டுக்கல் ஆகிய மாவட்டங்களை உள்ளடக்கிய பகுதியாகும். கொங்கு நாட்டின் எல்லைகளை கோ.ம. இராமச்சந்திரன் செட்டியார் தமது ‘கொங்குநாட்டு வரலாறு’ எனும் நூலில் வரையறுத்துள்ளது இங்கு கொடுக்கப்பட்டுள்ளது. “கொங்குநாட்டுப் படத்தை எழுதிப்பார்த்தால் நான்கு பக்கங்களிலும் மலைகளால் சூழப்பட்ட ஒரு சமநிலமாகக் காணலாம். அந்நிலத்தின் மத்தியில் நாட்டை இரண்டு பிரிவுகளாகப் பிரித்துக் கொண்டு இரு பகுதிகளிலிருந்தும் ஓடிவரும்படியான பல கிளைநதிகளைத் தன்னுடன் சேர்த்துக் கொண்டும் காவேரி நதியானது தென்கிழக்காக ஓடிச் சோழ நாட்டில் புகுகின்றது. கொங்கு நாட்டின் பரப்பானது தற்காலம் கோவை ஜில்லா முழுவதும் சேலம் ஜில்லாவில் ஓமலூர், திருச்செங்கோடு, சேலம், நாமக்கல் என்ற தாலுக்காக்களும், மதுரை ஜில்லாவில் கரூர், குளித்தலை என்ற இரண்டு தாலுக்காக்களும், மதுரை ஜில்லாவில் பழநி, திண்டுக்கல் என்ற இரண்டு தாலுக்காக்களும் கொண்டதாக இருக்கிறது” (பெருமாள் முருகன், 2000: 14). தற்கால கொங்கு நாட்டின் சில பகுதிகள் சங்ககால சேரநாட்டுப் பகுதிகளாகவும் சில பகுதிகள் சோழநாட்டின் பகுதிகளாகவும் இருந்துள்ளன என்பது வரலாற்றுச் செய்திகளாகும். இதுவரை கொங்குநாடு எனும் தலைப்பில் பெருமாள் முருகன் (2000), புலவர் மணியன் (2004), இரவிக்குமார் (2008) எனும் மூன்று அறிஞர்கள் பதிப்பித்துள்ள அகராதிகள் வெளிவந்துள்ளன.

## செட்டிநாடு

செட்டிநாட்டில் வாழும் மக்களில் பெரும்பாலோர் நாட்டார், நகரத்தார், நாட்டுக்கோட்டைச் செட்டியார் எனும் இனத்தவர்கள். சங்ககால வரலாற்றில் இவர்களது பூர்வீகம் சோழநாடு எனவும், பாண்டிய மன்னர்களின் அழைப்பில் இவர்கள் பாண்டிய நாட்டில் குடியேறி பர்மா, மலேசியா, சிங்கப்பூர், இலங்கை ஆகிய நாடுகளுடன் வியாபாரம் செய்தவர்கள் எனும் குறிப்புகள் பல காணக்கிடக்கின்றன. செட்டிநாட்டின் எல்லையை வெள்ளாற்றின் தெற்கு, பிரான்மலை என்றும் பறம்பு மலைக்குக் கிழக்கு, வைகைக்கு வடக்கு, வங்காளவிரிகுடாக் கடலுக்கு மேற்கு என்று வரையறுக்கப்பட்டுள்ளது. செட்டிநாட்டின் எல்லையே பாண்டியநாட்டின் எல்லையை உறுதிப்படுத்த உதவுவதாக திராவிட மொழிகளின் தந்தை என அழைக்கப்படும் முனைவர் கால்டுவெல் குறிப்பிட்டுள்ளார்:

**Dr. Caldwell says in his history of Tinnevelly: "There are certain geographical stanzas current in Tamil which given the boundaries and extent of the three Tamil kingdoms. The river Vellaru which is represented in the Pandya stanza as the northern boundary of the Pandya Country is also represented in the Chola stanza as the southern boundary of the Chola Country. The Vellaru referred to rises in the hills near Marungapuri in Tirchy District takes a south – easterly course through the Native State of Pudukotta and falls into the sea in Palk Strait south of Point Calymore. This identification of the Vellaru is confirmed by the circumstance that it was an old custom prevalent amongst the Nattukottai Chetties that their women should never be allowed to cross the Vellaru, it being considered an act of bad omen for women to cross boundaries"**

**- Bishop Caldwell – quoted by Somale, 1984: 6**

செட்டிநாட்டின் எல்லைகள் பூங்குன்றை வேலக்குடிக் கல்வெட்டில் உள்ள பாடல் ஒன்றில் காணப்படுகிறது:

**வெள்ளாறது வடக்காமேற் குப்பிரான் மலையந்**
**தெள்ளார் புனல்வகை தெற்காகும் - ஒள்ளிய நீ**
**நெட்டிக் கடற்கிழக்கா மி∴தன்றோ நாட்டரண்சேர்**
**செட்டிநாட் டெல்லையெணச் செப்பு**

**(சோமலெ, 1984: 7)**

செட்டிநாட்டு வட்டாரத் தமிழ்ப் பேச்சுவழக்குச் சொற்கள் சோமலெ (1984) எழுதிய செட்டிநாடும் செந்தமிழும், பெரி.செ. இளங்கோவன் (2011) எழுதிய அறந்தாங்கி வட்டாரவழக்குச் சொற்கள் ஆகிய நூல்களிலிருந்து சேகரிக்கப்பட்டுள்ளன.

**நாஞ்சில் நாடு**

நாஞ்சில் நாடு என்று அழைக்கப்படும் பகுதி தற்காலத் தமிழகத்தின் கன்னியாகுமரி எனும் வருவாய் மாவட்டமாகும். சங்ககாலத்தில் இதன் ஒரு பகுதி நாஞ்சில் நாடு என அழைக்கப்பட்டுள்ளது. இதன் ஒரு பகுதி பாண்டிய நாட்டின் கீழும் மற்றொரு பகுதி சேர நாட்டின் கீழும் இருந்துள்ளன. பாண்டிய மன்னர்களின் ஆட்சிக்குப் பின் இப்பகுதி புறத்தாயநாடு, நாஞ்சில் குடியரசு, வேணாடு என மூன்று

பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. தற்கால அகஸ்தீஸ்வரம், தோவாளை வட்டங்கள் புறத்தாய நாடு என்றும் இவ்விரு வட்டங்களில் உள்ள புறத்தாய நாடு நீங்கலான பகுதி நாஞ்சில் குடியரசு என்றும் கல்குளம், விளவங்கோடு ஆகிய இரு வட்டங்களும் வேணாடு எனவும் அழைக்கப்படுகிறது (ஸ்டீபன் சாம், 1994: 11-12). முந்தைய திருவிதாங்கூர் மன்னர்களின் ஆட்சியின் கீழ் இருந்த இப்பகுதிகள் 1956-ஆம் ஆண்டு நவம்பர் மாதம் முதல் நாளன்று தமிழகத்துடன் இணைக்கப்பட்டு கன்னியாகுமரி மாவட்டம் என்று அழைக்கப்படுகிறது. நாஞ்சில் நாடு என்று பொதுவான பெயரில் அழைக்கப்படும் இப்பகுதியில் உள்ள வேணாடு என்பது சங்ககாலப் பன்னிரு நாடுகளில் ஒன்று என்பது இங்கு குறிப்பிடத்தக்கது. தற்போதைய விளவங்கோடு வட்டம் கேரள மாநிலத்தை ஒட்டிய பகுதியாகும். எனவே, இங்குள்ள பேச்சுவழக்கில் மலையாளச் சொற்களும் பயன்பாட்டில் உள்ளன.

**தொண்டை நாடு**

தொண்டை நாடு எனும் பகுதி தனி நாடாகச் சங்ககாலத்தில் இருந்ததை “தென்நீர் வயல் தொண்டை நன்னாடு சான்றோர் உடைத்து” எனும் ஔவையாரின் தனிப்பாடல் வரிகளால் அறிய முடிகிறது. ஆனால் சேனாவரையர் பட்டியலிட்டுள்ள 12 நாடுகளில் தொண்டை நாடு எனும் நாடும் குறிப்பிடப்படவில்லை. இருப்பினும் அப்பன்னிரு நாடுகளில் உள்ள அருவா நாடு, அருவா வடதலை நாடு எனும் இரு நாட்டுப்பகுதிகளும் தொண்டை நாட்டில் அடங்கும் என்பது அறிஞர்களின் கருத்து. கரிகால் சோழன் காடுகளை அழித்து நாடாக்கினான் என்று தமிழ் இலக்கியங்கள் கூறுகின்றன. மேலும் குன்றுகளும் காடுகளும் மலைகளுமே உள்ள வேங்கட மலைப்பகுதி தொண்டைமான் திரையன் ஆண்ட பகுதியாகவும் அதன் தலைவன் புல்லி களவர் கோமான் என்றும் வரலாறுகள் தெரிவிக்கின்றன. எனவே, தொண்டை நாடு என்பது சிற்றரசர் பலரது ஆட்சியில் இருந்த போதிலும் சங்ககாலத்தில் திரையர் பேரரசு செலுத்தினார். மணிமேகலை வாழ்ந்த காலத்தில் தொண்டைநாடு சோழர் ஆட்சியின் கீழ் இருந்துள்ளது. கிள்ளி என்பவன் பேரரசனாகவும் இளங்கிள்ளி என்பவர் அவனுடைய பிரதிநிதியாகக் காஞ்சியிலிருந்து கொண்டு ஆட்சி செய்துள்ளான். இருப்பினும் ஏறத்தாழ கி.பி. 300-இல் தொண்டை நாடு பல்லவர் ஆட்சியின் கீழ் வந்துவிட்டது (இராசமாணிக்கனார், 2008: 61). விஜயாலய சோழன் அபராஜி பல்லவனிடமிருந்து தொண்டை நாட்டைக் கைப்பற்றினான். குலோத்துங்க சோழன் ஆட்சிக் காலத்தில் சோழப்பேரரசு ஏழு மண்டலங்களாகப்

பிரிக்கப்பட்டு தொண்டை நாட்டுப் பகுதி சயங்கொண்ட சோழ மண்டலம் என அழைக்கப்படலாயிற்று.

இன்றைய ஆந்திர மாநிலத்தின் சித்தூர் மாவட்டம், தமிழ் நாட்டின் காஞ்சிபுரம், சென்னை ஆகிய மாவட்டங்களை முழுமையாகவும், வேலூர் மாவட்டத்தின் கிழக்குப் பகுதியும், திருவண்ணாமலை மாவட்டத்தின் வடக்கு, வடகிழக்குப் பகுதிகளும், விழுப்புரம் மாவட்டத்தின் வடக்குப் பகுதியும் தொண்டை நாட்டைச் சார்ந்த பகுதிகளாக விளங்குகின்றன. தொண்டை நாட்டுச் சொற்களாகக் கொடுக்கப்பட்டுள்ள சொற்கள் தொண்டை நாட்டின் வடகிழக்குப் பகுதியாக விளங்கும் பழவேற்காடு எனும் பகுதியில் வாழ்ந்த மக்கள் பேசிய தமிழாகும். இவர்களது பேச்சுவழக்குச் சொற்கள் பூலிகட் அறிக்கை (Account of Pullicut) என்று ஆங்கிலத்தில் குந்தபன் (Cundapan) 1818-ஆம் ஆண்டு மே திங்கள் நான்காம் நாள் எழுதியதிலிருந்து கொடுக்கப்பட்டுள்ளது. இவ்வறிக்கை தமிழில் “பழவேற்காடு கைப்பித்து” எனும் தலைப்பில் வெளியாகியுள்ளது. இச்சுவடியிலிருந்து தமிழ்ச் சொற்கள் சேகரிக்கப்பட்டு இங்கு கொடுக்கப்பட்டுள்ளன.

**நடுநாடு**

நடுநாடு அல்லது நடுத்திட்டு என்று அழைக்கப்படும் பகுதி கெடிலம் ஆற்றிற்கும் பெண்ணை ஆற்றிற்கும் இடைப்பட்ட பகுதிகளாகும். இவை தற்கால கடலூர், பண்ருட்டி, திருக்கோயிலூர், விருதாச்சலம் ஆகியவற்றை உள்ளடக்கிய பகுதியாகும் என நடுநாட்டுச் சொல்லகராதியின் ஆசிரியர் கண்மணி குணசேகரன் கூறுகின்றார். இவ்வியலில் கொடுக்கப்பட்டுள்ள சொற்கள் அவருடைய அகராதியிலிருந்து எடுக்கப்பட்டுள்ள சொற்களாகும். நடு நாடு என்பது சோழநாட்டின் ஒரு பகுதியாகும். கீழ்க்கண்ட அகராதிகளிலிருந்து இவ்வாய்விற்குத் தரவுகள் எடுக்கப்பட்டுள்ளன:

1. ராஜநாராயணன் வழக்குச் சொல்லகராதி
2. நெல்லை வட்டாரவழக்குச் சொல்லகராதி
3. கொங்கு வட்டாரவழக்குச் சொல்லகராதி
4. தொண்டை மண்டல வழக்குச் சொல்லகராதி
5. நடுநாட்டுச் சொல்லகராதி
6. நாஞ்சில் நாட்டு வழக்குச் சொல்லகராதி
7. அறந்தாங்கி வட்டாரச் சொல்லகராதி/செட்டிநாடும் செந்தமிழும்

## 1. கரிசல்காட்டுப் பேச்சுவழக்கு
## (தூத்துக்குடி மாவட்டம் - பாண்டிய நாடு)

| | | |
|---|---|---|
| அக்கம் | - | இருப்பிடம் |
| அக்குசு | - | கவனம் |
| அக்குருவம் | - | அக்ரமம், கொடிய செயல் |
| அகக்காய்ச்ச | - | பெண்மோகம் |
| அகணி நார் | - | நார்க்கற்றாழை நார் |
| அகப்பை நோய் | - | பட்டினி |
| அகம் | - | பிடிவாதம், இறுமாப்பு |
| அகராதி | - | பேச்சை வளர்ப்பவன் அல்லது மாறிமாறிப் பேசுபவன் |
| அங்கணம் | - | திறந்தவெளிக் குளியலறை, பாத்திரம் கழுவும் இடம் |
| அங்கெனெ | - | அந்த இடத்தில் |
| அச்சலாத்தி | - | தொந்தரவு |
| அச்சாரம் | - | முன்பணம் |
| அசங்காம | - | அசையாது |
| அசப்பு | - | சாயல் |
| அசமந்தம் | - | மந்தபுத்தி |
| அசல் | - | அந்நிய, வியாபாரத்தில் மூலதனம் |
| அசேகம் | - | முழுவதும் |
| அஞ்சரப்பெட்டி | - | சமையல் பொருட்கள் வைக்கும் ஐந்து அறைகள் கொண்ட மரப்பெட்டி |
| அஞ்சல் | - | வேகம் |
| அஞ்ஞா | - | அம்மா |
| அட்டக்கரி | - | அடர்த்தியான கருப்பு நிறம் |

| | | |
|---|---|---|
| அட்டமணியம் | - | சம்பளம் வாங்காமல் செய்யும் அதிகாரம் |
| அட்டி, அட்டியல் | - | மூட்டைகளின் வரிசை |
| அடங்கல் | - | கிராம அதிகாரியிடமுள்ள நிலக்கணக்கு |
| அடங்கலும் | - | முழுவதும் |
| அடப்பக்காரன் | - | உதவிக்காக வைக்கப்படும் ஆள், ஜமீன்தார் வீட்டுச் சமையல்காரன் |
| அடப்பு | - | பக்க வயிறு, விலா |
| அடம் | - | பிடிவாதம் |
| அடி | - | இடத்தைக் குறிக்கும் சொல் |
| வீட்டடி | - | வீட்டு இடம் |
| அடிபோடுதல் | - | ஒரு காரியத்துக்கு முன்னேற்பாகப் பேச்சை ஆரம்பித்தல் |
| அடியான் | - | வசவு |
| அடிவானம் | - | கீழ்வானம் |
| அண்டி | - | காய்ப்பருவத்து முந்திரிக்கொட்டை |
| அண்டிப்பருப்பு | - | முந்திரிப்பருப்பு |
| அண்டகிடாரம் | - | அளவில்லாத |
| அண்டங்காக்கா | - | அடைகாக்கும் காக்கை, ஆண் காக்கை |
| அண்டப்புளுகு | - | பெரிய பொய் |
| அண்டல் | - | ஈடு செய்தல் |
| அண்டு | - | சிதைந்து, நெருங்கு |
| அண்ணமுண்டி | - | அண்ணன் மனைவி (செட்டி நாடு) |
| அண்ணாச்சி | - | அண்ணன் |
| அண்ணாடு | - | தினசரி |
| அண்ணு | - | அன்று |
| அணக்கம் | - | அறிகுறி |

| | | |
|---|---|---|
| அணைக்கிறது | - | ஒன்றோடு ஒன்று நெருக்குதல் |
| அத்த குத்தம் | - | அன்றாள வேலை |
| அத்தம் | - | கடைசி, அற்றம் |
| அத்தாசம் | - | அந்தரத்திலே |
| அத்துவானம் | - | கொடுமை |
| அதாட்டியம் | - | வல்லமை |
| அந்தமனைக்கி | - | அதோடு |
| அந்தாம் | - | உயரே |
| அந்தி | - | இரவு, மாலைநேரம் |
| அந்நா | - | அதோ, அங்கே |
| அப்பச்சி | - | ஐயா, மரியாதைச்சொல் |
| அப்பத்தா | - | அப்பாவின் தாய் |
| அப்பதெ | - | அப்பொழுது |
| அப்பல | - | அப்பொழுது |
| அப்புராணி | - | சாதுவான |
| அப்போ | - | அப்போது, அப்பொழுது |
| அம்பலம் | - | அதிகாரம், கிராமத் தலைவன் |
| அம்புட்டும் | - | முழுவதும் |
| அம்மங்காப்பு | - | வேப்பிலையும் மஞ்சளும் சேர்த்து அரைத்தது |
| அம்மணம், அம்மணக்குண்டி | - | உடலில் துணி எதுவும் இல்லாது இருத்தல் |
| அம்மாச்சி | - | தாயின் தாய் |
| அம்மாஞ்சி | - | ஒன்றும் அறியாதவன் |
| அம்மானு | - | தாயுடன் பிறந்த ஆள் |
| அம்பைப்பால் | - | அம்மைத் தடுப்பு மருந்து |
| அமட்டுது | - | உமட்டுது |

| | | |
|---|---|---|
| அமத்து | - | நிறுத்து, கால் நடைகளை ஒரு இடத்தில் அமர்த்துதல் |
| அமரம் | - | சிறு குழந்தைகளுக்கு வழும் கண் நோய் |
| அமானவரவு | - | எந்தக் கணக்கிலும் எழுத முடியாத தனிவரவு |
| அமுதுபடி | - | சாப்பாட்டுச் செலவு |
| அய் | - | ஆடு, மாடு ஈன்றவுடன் குட்டியின் மேல் ஒட்டிக்கொண்டிருக்கும் வழுவழுப்பான பசை |
| அய்யன் | - | சனியன் |
| அயத்துப்போச்சு, அயித்துப்போச்சி | - | மறந்துபோச்சு |
| அரக்கப்பரக்க | - | அவசர அவசரமாக |
| அரவம் | - | சத்தம், நடமாட்டம் |
| அரளக்கல் | - | வீடு கட்டுவதற்குப் பாறையில் உடைக்கப்பட்ட கல் |
| அருக்குளா | - | பெரியவகைச் சீலா மீன், நெய் மீன் |
| அருகி | - | குறைந்து |
| அருதிக்கிரையம் | - | குறைந்த விலை |
| கிரையம் | - | விலை |
| அரை | - | கால்நடைகளின் பெண்குறி |
| அல்லி | - | அலி |
| அல்லியங்கிடாய் | - | கொச்சக்கிடா |
| அலகு | - | தாடை |
| அலவர | - | அலவரை, பனங்கதிர் |
| அலவாக்கரை | - | கடற்கரை |
| அலாக்கா | - | இரு கைகளால் |
| அலுக்கு | - | பெண்களின் காதணி |

| | | |
|---|---|---|
| அலுங்காம | - | நகராமல், அசையாமல் |
| அவக்கேடு | - | கெட்ட பெயர் |
| அவப்பாடு | - | துன்பம் |
| பொழப்பு | - | பிழைப்பு |
| அவிங்க, அவங்க | - | அவர்கள் |
| அவிய | - | அவர்கள் |
| அவுசாரி | - | ஒழுக்கம் கெட்டவள் |
| அழிப்பாங்கதை | - | விடுகதை |
| அழிம்பு | - | அழிமானம், சேட்டை |
| அழிமாட்டம் | - | தோட்டம், காடுகளில் ஆடுகளைவிட்டு மேயவிட்டு பயிர்களை நாசப்படுத்துதல் |
| அழிவு, அழிபாடு | - | விற்பனை |
| அளி | - | சகதி, சேறு |
| அறமுடி | - | சிறு பெண் குழந்தைகளுக்கு அரைஞாண் கயிற்றில் போடும் மறைப்பு, அரைமூடி |
| அறுதப்பய | - | விதவையின் மகன் |
| அன்னவஸ்திரம் | - | ஜீவனாம்சமாகக் கொடுக்கப்பட்ட நிலம் அல்லது தானியம் |
| ஆக்கங்கெட்ட | - | விருத்தி கெட்ட |
| ஆக்கப்பாடு | - | மதிப்பு |
| ஆக்குப்பிறை | - | சமையல்கூடம் |
| ஆக்கை | - | விளாறு |
| ஆகாமல் | - | பொருந்தாமல், உறவுமுறை இல்லாமல் |
| ஆங்காலம் | - | நடக்கின்ற காலம் |
| ஆச்சி | - | ஆகிவிட்டது, தாயின் தாய் |

| | | |
|---|---|---|
| ஆச்சிக்குட்டி | - | கிடையின் பொதுவிலிருந்து தானமாக வழங்கப்படும் ஆட்டுக்குட்டி |
| ஆசு | - | மாதிரி அளவு |
| ஆஞ்சி | - | பறித்து |
| ஆட்டை | - | ஈடாக வைக்கும் பொருள், தடவை |
| ஆணம் | - | குழம்பு, கறி (விருதுநகர் பகுதியில் வாழும் இசுலமியர் வழக்கு) |
| ஆத்தமாட்டாத | - | இயலாத |
| ஆத்தா | - | தாயின் தாய் |
| ஆம்பளையான் | - | கணவன் (செட்டிநாடு) |
| ஆயி | - | தாய், தாய்க்கிழவி |
| ஆரல் | - | வீட்டைச் சுற்றிக் கட்டப்படும் கூரைமேய்ந்த மண் சுவர் |
| ஆலவட்டம் | - | சுழலும் விசிறி |
| ஆலி | - | சிறுதெய்வக் கோவில் முன்பு செய்து வைக்கப்படும் பெரிய உருவம் |
| ஆவலாதி, ஆவுலாதி | - | புகார், குற்றச்சாட்டு |
| ஆள்முட்டு | - | ஆள் உயரத்திற்கு உள்ள நீரின் அளவு |
| ஆளாயிட்டா | - | பூப்பெய்திவிட்டாள் |
| இங்கனக்குள்ளெ | - | இந்த இடத்திற்குள் |
| இங்ஙனெ | - | இவ்விடத்தில் |
| இசுவல் | - | இடைஞ்சல் |
| இட்டகுடி | - | பெண் கொடுத்த குடி |
| இடுக்கி, கடுப்பு | - | யானையை இடுக்கப் பயன்படுவது |
| இடுப்புவலி | - | பிரசவ வலி |
| இரும்பு | - | வம்பு |

| | | |
|---|---|---|
| இடுவை, இடுக்கு | - | நுழைமுடியாத சிறிய பாதை |
| இண்டாவி | - | சக்தி |
| இத்தாம் பெரிசு | - | இவ்வளவு பெரியது |
| இந்தமானைக்கு | - | இப்பொழுது, இப்படியே |
| இந்தவாட்டி | - | இந்த தடவை |
| இம்புட்டா | - | இவ்வளவா |
| இம்புட்டுக்காணு | - | மிகச்சிறிய அளவில் |
| இரங்கொத்தி | - | ஆண்டுக் குத்தகை |
| இருசி | - | அலி, ஆணும் பெண்ணும் இல்லாத நபர் |
| இல்லி | - | ஓட்டை |
| இவுக | - | இவர்கள் |
| இளிப்பு | - | சிரிப்பு |
| இறங்குபொழுது | - | உச்சியிலிருந்து சூரியன் இறங்கும் நேரம் |
| பொழுது | - | சூரியன் |
| இறுமான் | - | ஒருவகைப் பெருச்சாளி |
| இறைவட்டி, எரப்பெட்டி | - | நீர் இறைக்கும் வட்டி |
| இன்னா | - | இதோ, இங்கே |
| ஈசானியம், ஈசானிய மூலை | - | வடகிழக்கு திசை |
| ஈசுதல் | - | உரசிக்கொண்டு செல்தல் |
| ஈத்து | - | கால்நடைகள் கன்று ஈனுவது |
| ஈருள்ளி, ஈராங்கம், ஈராங்காயம் | - | வெங்காயம் |
| ஈருசு | - | மானம் |
| ஈருசுரு | - | கர்ப்பிணி (ஈர் - இரண்டு - உசுரு - உயிர்) |
| ஈவுசாவு | - | விட்டுக்கொடுத்துப் போதல் |

| | | |
|---|---|---|
| உச்சுவா | - | விடுமுறை |
| உசக்க | - | உயரே |
| உசத்தி | - | உயர்ந்த |
| உசுப்பு | - | எழுப்பு |
| உட்டுரு | - | விட்டுவிடு |
| உடுமாத்து | - | மாற்றுத்துணி |
| உடையடித்தல் | - | கால்நடைகளின் விரையை நசுக்குதல் |
| உடையதாரி | - | சொத்துக்கு, பொருளுக்கு உரியவன் |
| உணங்கி, ஒணங்கி | - | மெலிந்து |
| உதவி, ஒதவி | - | கால்நடையின் வற்றில் உள்ள ஜீரணமாகாத உணவு |
| உப்பங்காத்து | - | தென்கிழக்கிலிருந்து வீசும் காற்று |
| உப்புமூலை | - | தென்கிழக்கு மூலை |
| உரி | - | ஆடையைக் கழற்று |
| உருத்து | - | சொந்தபந்தத்தின் மேல் உள்ள அக்கறை |
| சுருத்து | - | தன்மானம் |
| உருமால் | - | வலைபோன்ற துணியால் கட்டும் தலைப்பாகை |
| உருவேத்துதல் | - | சாமியாடிக்கு அருள்வர மேளம் அடித்து அருளை வரவழைத்தல் |
| உருளி | - | கீழ்ப்பக்கம் உருண்டு இருக்கும் வெண்கலப் பாத்திரம் |
| உலகாசாரம் | - | உலக வழக்கம் |
| உலவு | - | இலவு மரம் |
| உலுப்புதல் | - | பிடித்து ஆட்டுதல், அசைத்தல் |
| உவத்திரியம் | - | உபத்திரவம், துன்பம் |
| உழவு | - | மாட்டின் வயதைக் குறிக்கும் சொல் |

| | | |
|---|---|---|
| உள்ளான் | - | ஒருவகைப் பறவை |
| உறக்கம் | - | தூக்கம் |
| சடவு | - | கோபம் |
| உன்னிப்பாக | - | நுட்பமாக |
| ஊச்சி | - | நத்தை |
| ஊட்டி | - | பன்றி |
| ஊட்டு கொடுக்கிறது | - | கோவில் பூசாரி காவு கொடுத்தல் |
| ஊட்டுப்பரை | - | சாப்பிடும் இடம் |
| ஊண்டி | - | ஊன்றி |
| ஊத்தால் | - | ஆற்றுத் தண்ணீரில் மீன்பிடிக்க உதவும் பிரம்புக்கூடை |
| ஊப்பரை | - | உதவாக்கரை |
| ஊர்க்கட்டு | - | ஊர்க்கட்டுப்பாடு |
| ஊரக்கருவாடு | - | உப்புவைத்துப் பதப்படுத்தப்பட்ட கருவாடு |
| ஊரத்தாழி | - | கழனித் தண்ணீர் இருக்கும் பானை |
| ஊராங்கி | - | ஊர்வலம் |
| ஊரான்வீடு | - | அடுத்தவரின் வீடு |
| ஊழைக்காத்து | - | வாடைக்காற்று |
| ஊறி | - | பெரிய உடம்பு அல்லது பெரிய வயிறு உடையவன் |
| எக்கச்சக்கம் | - | கணக்கில் அடங்காத, ஏராளமான |
| எக்காளம் | - | கும்மாளம் |
| எக்கு | - | கால் முட்டியால் உதைத்தால் |
| எசலிப்பு | - | போட்டி |
| எசவு | - | தோது, இசைவு |
| எட்டு | - | காலடி, தப்படி |

| | |
|---|---|
| எடுத்துப் போட | - உடலை அடக்கம் செய்ய |
| எடுப்பு | - விதைப்பதற்கு முன் உழும் உழவு |
| எணல் | - நிழல் |
| எத்து | - உள்ளங்காலால் மிதித்துத் தள்ளு |
| எத்துவாளி | - வேலை செய்யாது ஏமாற்றுபவன் |
| எதிரா | - வரும் ஆண்டு |
| எம்புட்டு | - எவ்வளவு |
| எம்போகி | - அகதி, பரதேசி |
| எமகாதப்பய | - பொல்லாதவன் |
| எய்யாது | - நிலைக்காது, தங்காது |
| எருக்குழி | - உரக்குழி |
| எல்கை | - எல்லை |
| எலக்கு | - பனை ஓலையின் தாள்ப்பகுதி |
| எளந்தரம் | - ஆண்குறி இருக்கும் இடம் |
| எளவாங்கி | - தையல் ஊசி |
| எளையகுடியா | - மனைவிகளில் இளையவள் |
| என்னியோரம் | - தினந்தோறும் |
| எனவன் | - தன் இனத்தவன் |
| ஏகக்குடும்பம் | - கூட்டுக்குடும்பம் |
| ஏகப்பட்ட | - கணக்கில் அடங்காத |
| ஏகாலி | - சலவைத் தொழிலாளி |
| ஏச்சு | - வசவு |
| ஏசு | - வை, திட்டு |
| ஏட்டுத் தவசிப்பிள்ளை | - தலைமை சமையல்காரர் |
| ஏடாகூடம் | - ஏறுக்குமாறாக |

| | | |
|---|---|---|
| ஏடாசி | - | வேடிக்கப் பேச்சு |
| ஏண்டமட்டும் | - | இயன்றமட்டும் |
| ஏண்டுக்கிட்டு | - | ஒருவருக்குச் சப்போட்டாக |
| ஏத்தகுடி | - | பெண் எடுத்த குடி |
| ஏராங்கடேசி | - | ஆகக் கடைசி |
| ஏரான் | - | முதலில் வந்தவன் |
| ஏல்க்கை | - | வசதி, செல்வம் |
| ஏழா | - | பெண்ணை முன்னிலையில் கூப்பிடும் சொல் |
| ஏளா, ஏட்டி | - | கணவன் மனைவியை அழைக்கும் சொல் |
| ஏனம் | - | பாத்திரம் |
| ஐயரவு | - | மனதில் தோன்றும் அருவருப்பு |
| ஒக்கிடுதல் | - | பாழாக்குதல், சரிசெய்தல் |
| ஒச்சம் | - | உடலில் உள்ள குறை |
| ஒசக்க | - | உயரே |
| ஒஞ்சாம | - | வெட்கப்படாமல் |
| ஒட்டடெ | - | சிலந்திவலை |
| ஓட்டை | - | கைப்பிடி அளவு |
| ஒண்டி | - | தனி ஆள் |
| ஒண்டித்தல் | - | சேர்த்தல் |
| ஒண்ணுக்கு | - | மூத்திரம் பெய்ய |
| ஒண்ணுக்கும் அத்த | - | ஒன்றுக்குமே உபயோகமில்லாத |
| ஒணக்கொடுத்தல் | - | கோவிலில் கிடாயை வெட்டுமுன் அது உடலைச் சிலிர்த்து சம்மதித்தல் |
| ஒத்தாசணை | - | ஒத்துழைப்பு, உதவி |
| ஒத்தாசை | - | உதவி |

| | | |
|---|---|---|
| ஒத்துமாப்பொடி | - | முகப் பவுடர், பூசுப்பொடி |
| ஒதக்காய் | - | பிஞ்சு முற்றிக் காயாகப் போகும் நிலை |
| ஒதப்பழம் | - | காய் முற்றிக் கனியாகப் போகும் பருவம் |
| ஒதலிப்பு | - | மழைநேரங்களில் ஏற்படும் ஈரக்கசிவு |
| ஒப்பிணியம் | - | ஊர்க்கட்டுப்பாடு |
| ஒய் | - | மறுதாம்புத் தழைவு |
| ஒரு ஆளம்பனை | - | 80 பனைமரங்கள் கொண்ட எண்ணிக்கை |
| ஒருக்க | - | ஒரு தடவை |
| ஒரு வீச்சில்ல | - | ஒரே நேரத்தில், ஒரே மூச்சி |
| ஒரு நடை | - | ஒரு தடவை |
| ஒருப்பத்து | - | எடுப்பு உழவு போடாமல் விதைத்துப் பின் உழுவது |
| ஒரும்பு | - | வறட்சி |
| ஒருவடியா | - | சொல்லத் தெரியாத உடல் நிலை மாற்றம் |
| ஒருவாக்கில | - | ஒரேயடியாய் |
| ஒரே கொடிவழி | - | ஒரே வம்சம் |
| ஒலுங்கு | - | கொசு |
| ஒழுக்கரப்பெட்டி | - | பணம் நகைகள் வைக்கும் இரும்புப் பெட்டி |
| ஒழுங்கை | - | இரு வீடுகளுக்கு இடையே உள்ள சந்து |
| ஒன்றறை வாடம் | - | ஒரு நாள்விட்டு ஒரு நாள் |
| ஓங்காளம் | - | அருவருப்பு |
| ஓட்டடைஞ்சி | - | வெகு நேரமாகி |
| ஓணி | - | மணமாகாத நபர் |
| ஓட்டாங்கணி | - | உடைந்த மண்பானைத் துண்டு |
| ஓமப்பல்லக்கு | - | பல்லக்கில் ஒருவகை |

| | | |
|---|---|---|
| ஓமாங்குளி | - | குரும்பலில் பழுத்த மிகச்சிறிய பனம்பழம் |
| ஓர்சல் | - | பற்றுவரவுக் கணக்குகளைத் தீர்த்தல் |
| ஓர்மை | - | ஞாமகம் |
| ஓர்ணோர் | - | சுமார் 20 ஏக்கர் நிலம் கொண்ட விவசாய நிர்வாகம் |
| ஓலைப்பிரை | - | ஓலை வேந்த மண் வீடு |
| ஓலை | - | செய்தி |
| கங்கல் | - | அரைகுறை |
| கங்காணம் | - | காவல், கண்காணிப்பு |
| கங்கை மூலை | - | வடகிழக்கு திசை |
| கச்சணம் | - | கோவணம் |
| கச்சந்தி | - | கோணிச்சாக்கு |
| கச்சாங்காத்து | - | தென்மேற்கிலிருந்து வீசும் காற்று |
| கச்சாத்து | - | வாங்கிய பொருட்களின் விலை விபரச்சீட்டு |
| கச்சோடம் | - | மீன் வியாபாரம் |
| கசாலை | - | மண்சுவரை ஓலையால் மூடி வைக்கும் அமைப்பு |
| கட்டக்காலன் | - | பன்றி |
| கட்டணம் | - | பாடை |
| கட்டத்தலம், கட்டைத்தலம் | - | மயானம், சுடுகாடு |
| கட்டுத்துறை | - | மாடுகட்டும் இடம் |
| கட்டைப்பனை | - | இளம்பனை |
| கடகம் | - | பனைநாரில் பின்னிய பெரிய பெட்டி |
| கடகால் | - | வாளி |
| கடவு | - | சந்து |
| கடும்பட்டம் | - | புரட்டாசி ஒன்று முதல் பத்து நாட்கள் கொண்டது, முதற்பட்டம் |

| | | |
|---|---|---|
| கடுவா நோட்டு | - | புலிப்படம் உள்ள நூறு ரூபாய் நோட்டு |
| கடைகண்ணி | - | கடைத்தெரு, வியாபாரம் நடக்கும் இடம் |
| கண்டுமுதல் | - | வியாபாரத்தில் புழங்கும் முதல் |
| கதிமை | - | கத்தியின் கூர்மை |
| கப்பட்டை | - | பிளந்த, பிளவு |
| கப்பி | - | வதந்தி |
| கம்சு | - | முழுக்கைச் சட்டை |
| கம்பரக்கத்தி | - | தானியக்கதிர் அறுக்க உதவும் கத்தி |
| கம்பு | - | தானிய வகை |
| கர்ப்பசங்கை | - | கர்ப்பிணி |
| கர்ப்பதானம் | - | குழந்தைக்காக கணவன் மனைவியோடு இருத்தல் |
| கர்ப்போட்டம் | - | சாதக நிலை |
| கரட்டை, கரட்டாண்டி, கரட்டோந்தி | - | ஓணான் |
| கரடு | - | புஞ்சையில் முளைத்த புல்வரப்பு |
| கரண், கரணு | - | கால் ஆணி |
| கரம்பை | - | உலர்ந்த களிமண் |
| கரிசல் | - | கருப்பு நிற மண் கொண்ட மானாவரிப் புஞ்சைப் பிரதேசம் |
| கரிசனை | - | அக்கரை |
| கருக்கடை | - | அக்கரை |
| கருக்கல் | - | இரவு நெருங்கும் நேரம், இருட்டு விலகி வெளிச்சம் வரும் நேரம் |
| கருக்கு | - | பனைமட்டையின் ஓரத்தில் உள்ள கூர்மையான பகுதி |
| கருத்து | - | தனி அக்கறை, அபிப்பிராயம் |

| | | |
|---|---|---|
| கருப்பு | - | பிசாசு, பேய் |
| கரைகாரர் | - | முதல் மரியாதைக்குரியவர் |
| கரைச்சல் | - | தொல்லை |
| கலக்குமட்டை | - | கலயத்தில் சுண்ணாம்பு தடவப் பயன்படும் மட்டை |
| கலப்பைக்குத்தி | - | கலப்பை செய்யப் பயன்படும் கருவ மரக்கட்டை |
| கலம் | - | முகத்தலளவயில் ஒரு அளவு |
| கலயம் | - | பதனீர் இறக்கப் பயன்படும் சிறியவகை மண்பானை |
| கலவடை ஓடு, கலவோடு | - | உடைந்த மண் பானையின் வாய்ப்பகுதி |
| கலிங்கல் | - | கலுங்கு, குளம் நிரம்பியவுடன் தண்ணீர் போகும் வழி |
| கவக்கால், கவக்கம்பு | - | பிளவுபட்ட கம்பு |
| கவுருது | - | கவிழ்கிறது |
| கவுல் | - | தந்திரம், வஞ்சனை |
| கவுல் எடுத்தல் | - | ஜமீன்தாரிடமிருந்து நிலத்தைக் குத்தகைக்கு எடுக்கும் முறை |
| கவைக்கம்பு | - | முட்களைத் தூக்கப் பயன்படும் கம்பு |
| கழியக்கூத்து | - | கோமாளித்தனம் |
| பொட்டு | - | சாமிக்குச் செய்யும் தாலி |
| கழுத்தேர் | - | இரண்டாவதாக வரும் ஏர் |
| கழுதப்பிரட்டு | - | கீழ்த்தரமான வேலை செய்தல் |
| கழுதைக்குப் பொதி ஏற்றுகிற நேரம் | - | 12 மணி முதல் ஒருமணி வரை உள்ள காலம் |
| கள் | - | புளிக்க வைக்கப்பட்ட பதநீர் |
| களஞ்சியம் | - | தானியம் வைக்கும் கட்டிடம் |
| களப்பு, களப்புக்கடை | - | ஓட்டல் |

| | | |
|---|---|---|
| களிம்பு | - | பித்தளைத் துரு |
| கன்னார் | - | ஒருமடைக்குறிய பாசனப்பகுதி |
| கன்னிமூலை | - | தென்மேற்கு திசை |
| கனத்த நாள் | - | அமாவாசை நாள் |
| காங்க | - | பார்க்க, காண்க |
| காங்கலை | - | காணவில்லை |
| காசலை | - | அக்கரை |
| காடத்தட்டு | - | காடைப் பறவையைப் பிடிக்கும் கண்ணித்தட்டு |
| காடி | - | கால்நடைகளுக்குத் தீனிபோடும் இடம், கூழ் |
| காணம் | - | கொள்ளு |
| காணி | - | உரிமை |
| காதவழி | - | சுமார் 10 மைல் |
| காதுவாலி | - | காதணிகலன் |
| குருட்டுப்பார்ரை | - | மேல்காது அணிகலன் |
| பூடி | - | பெண்களின் காதணிகலன் |
| பச்சச்சல் | - | பெண்களின் காதணிகலன் |
| குருட்டுக்குச்சி | - | பெண்களின் காதணிகலன் |
| தாண்டுக்குச்சி | - | பெண்களின் காதணிகலன் |
| கம்மல் | - | பெண்களின் காதணிகலன் |
| தோடு | - | பெண்களின் காதணிகலன் |
| குண்டலம் | - | பெண்களின் காதணிகலன் |
| வளையம் | - | பெண்களின் காதணிகலன் |
| தொங்கட்டான் | - | பெண்களின் காதணிகலன் |
| விசிறிக்கம்மல் | - | பெண்களின் காதணிகலன் |
| காதுவடித்தல் | - | பெண்களின் காது சோனையை அறுத்து காதை வளர்த்தல் |

| | | |
|---|---|---|
| காய் | - | சிதைந்த கர்ப்பம் |
| காரிக்கம் | - | வெளுப்பு இல்லாத மல்துணி |
| தண்டை | - | பெண்கள் அணியும் காலணிகலன் |
| முருக்குத்தண்டை | - | பெண்கள் அணியும் காலணிகலன் |
| வழுகுத்தண்டை | - | பெண்கள் அணியும் காலணிகலன் |
| கொலுசு | - | பெண்கள் அணியும் காலணிகலன் |
| ஜவிரலி | - | பெண்கள் அணியும் காலணிகலன் |
| பீலி | - | பெண்கள் அணியும் காலணிகலன் |
| மணிலடி | - | பெண்கள் அணியும் காலணிகலன் |
| நெட்டி | - | பெண்கள் அணியும் காலணிகலன் |
| மெட்டி | - | பெண்கள் அணியும் காலணிகலன் |
| சிலம்பு | - | பெண்கள் அணியும் காலணிகலன் |
| சலங்கை | - | பெண்கள் அணியும் காலணிகலன் |
| கரண்டை வளையம் | - | பெண்கள் அணியும் காலணிகலன் |
| கால்கட்டு | - | கல்யாணம் |
| காலகொண்டாடி | - | இரவில் குறி சொல்லிப் பிச்சை எடுப்பவர் |
| காலம் | - | விவசாயக் காலம், பருவம் |
| குாலிப்பய | - | வேலைசெய்யாது சுற்றித்திரிபவன் |
| காவு | - | பலி கொடுத்தல் |
| கிடாக்கன் | - | ஆண் எருமைக் கன்று |
| கிடுகட்டி | - | ஊர் சாட்டும்போது ஒலி எழுப்பும் சிறியவகை முரசு |
| கிடுகு | - | ஓலைக்கீற்றில் பின்னப்பட்ட தட்டி |
| கிடை எழுப்புகிற நேரம் | - | காலை சுமார் 10 மணி |
| கித்தாப்பு | - | திறமை |

| | | |
|---|---|---|
| கிரகசாரம் | - | தலைவிதி |
| கிராக்கி | - | தட்டுப்பாடு, அதிகவிலை |
| கியாதி | - | புகழ் |
| கிரமம் | - | இயற்கையாகக் கடைப்பிடிக்கும் நடைமுறை |
| கிளியாஞ்சட்டி | - | அகல் விளக்கு |
| கீதாரி | - | ஆட்டுக்கிடையின் தலைவன் |
| குச்சி, குச்சல் | - | குடிசை |
| குச்சில் | - | சடங்கான பெண்ணுக்குத் தாய்மாமன் கட்டும் குச்சல் |
| குசப்புல் | - | நாணல் புல் |
| குட்டித்தாச்சி | - | குட்டிபோட்ட தாய் ஆடு |
| குடிகேடி | - | வீட்டிற்கு ஆகாதவன், குடி கெடுக்கிறவன் |
| குடுவை | - | பதநீர் ஊற்றப் பயன்படும் ஓலைப்பாத்திரம் |
| குண்டல் | - | மிகப் பள்ளத்தினுள் அமைந்த ஊர் |
| குண்டு | - | வயலில் ஒரு சிறு பகுதி |
| குத்தம் | - | தவறு, குற்றம் |
| குத்தலை, குத்தாயி | - | உட்கார (குந்தவை) |
| குத்தி | - | பாட்டில், பொத்தல |
| குத்துப்பெட்டி | - | பனைநாரில் பின்னப்பட்ட சிறிய பெட்டி |
| குந்தாணி | - | நெல் குத்த உதவும் சாதனம் |
| கும்பா | - | சாப்பிடும் பாத்திரை, குழியான பாத்திரம் |
| கும்மல் | - | பனைமரங்கள் நெருக்கமாக இருத்தல் |
| குமட்டி | - | கரி போட்டு எரிக்கும் அடுப்பு |
| குரால் | - | ஈனாத ஆடு |
| குருட்டுக் கொசு | - | சிறுவகைக் கொசு |

| | | |
|---|---|---|
| குருணி | - | முகத்தல் அளவை |
| குலவை | - | குரவை பெண்கள் வாயினால் எழுப்பும் ஒலி |
| குழிதாடி | - | மாட்டுக்குத் தண்ணீர் காட்டும் மன்தொட்டி |
| குழிமுறை | - | ஒருவர் இறந்த பதினோராம் நாள் இறந்த வரைப் புதைத்த இடத்தில் செய்யும் சடங்கு |
| குள்ளம் | - | செரிமைக் கோளாறு |
| குறிப்பி | - | நீளமான கரண்டி |
| குறுக்கம் | - | 96 செண்ட் கொண்ட நிலம் |
| குறுக்குவலி | - | பிரசவ வலி |
| கூட்டாளி | - | நண்பன் |
| கூட்டி | - | அதிகப்படுத்தி |
| கூடுதல் | - | விலை அதிகமாதல் |
| கூப்பதினி, கூப்பனி | - | பாகுபோல் காய்ச்சிய பதநீர் |
| கூப்பு | - | மரக்குவியல் |
| கூமுட்டை | - | குஞ்சு பொரிக்காத முட்டை |
| கூராப்பு | - | மழை மேகம் |
| கூளம் | - | கால்நடைகளின் தீவனம் |
| கூனை | - | கமலையில் தண்ணீர் கொண்டுவரும் அண்டா |
| கெச்சம் | - | காலில் ஒயிலாட்டக்காரர்கள் கட்டிக்கொள்ளும் சதங்கை |
| கெடி | - | இரயில்வெ ஸ்டேசன் |
| கெணக்க | - | சாயல், மாதிரி |
| கெதி | - | உடல் ஆரோக்கியம் |
| கெப்பனக்காரி | - | கர்ப்பிணிக்காரி |
| கெலிக்கிறது | - | இனப்பெருக்கம் ஆகுதல் |
| கெலித்தல் | - | வெற்றிபெறுதல் |

கெவி - ஆழமான கிடங்கு

கெளிமதம் - திமிர்

கேடி - குற்றப்பின்னணி உள்ளவன்

கேதம் - சாவுவிழுந்த வீடு, துட்டி, இழவு

கேந்தி - கோபம்

முருக்கழகி - வெள்ளியில் செய்த கை அணிகலன்

கைகண்ட மருந்து - கைமேல் பலன் தரும் மருந்து, நல்ல மருந்து

கைகாவல் - அவசர தேவைக்கு உதவும் பணம்

கைசொளகு - சிறுமுறம்

கைம்பெஞ்சாதி - விதவை, கைம்பெண்

கையால் - உதவிக்காக வைத்திருக்கும் ஆள்

கைவலை - ஒருவரே வீசி மீன் பிடிப்பதற்குத் தோதான வலை

கைவாய்க்கால் - தோட்டங்களில் பெருவாய்க்காலில் இருந்து பிரிந்து போகும் தனி வாய்க்கால்

ஆஞ்சி - ஆய்ந்து

கொட்டாப்பெட்டி - பனைநார் அல்லது ஓலையில் பின்னப்படும் பெட்டி

கொட்டாரம் - பெரிய மேற்கூறையுடன் கூடிய நீண்ட அறை தீவனப் படப்பு, களம், குப்பைக்குழி ஆகிய மூன்றும் ஒன்று சேர அமைந்த இடம்

கொட்டான் - சிறியவகை நார் அல்லது ஓலையில் பின்னப்பட்ட பெட்டி

கொட்டு - மேளம், தவுல்

கொடங்கிவிட்டது - பழுதாகிவிட்டது

கொடுப்பினை - யோகம், விதி

கொடை - கிராமக்கோவில் திருவிழா

| | | |
|---|---|---|
| கொண்டிக்காவல் | - | ஊர்ப்பொதுவில் போடப்படும் காவல் |
| கொடக்கு | - | பழுதாக்கு |
| கொடங்கு | - | பழுதாகு |
| கொண்ணாந்து | - | கொண்டு வந்து |
| கொணச்சிட்டான் | - | புணர்ந்து விட்டான் |
| கொத்தாள் | - | தானியக்கூலி பெற்றுக்கொண்டு வேலை செய்யும் ஆள் |
| கொத்து | - | தானியமாகக் கொடுக்கப்படும் கூலி |
| கொதக்கு | - | கெடு |
| கொப்பாடை | - | அம்மைநோய் வகை |
| கொம்பன் | - | தலைவன், நிகரில்லாதவன் |
| கொமட்டுது | - | வாந்தி வருகிறது |
| கொரணி | - | புரளி |
| கொரளிவித்தை | - | தீயசக்திகளைக் கொண்டு செய்யும் வித்தை |
| கொல்லைக்கு | - | மலம்கழிக்க |
| கொள்ளநாள் | - | அதிக நாள் |
| கொள்ளு | - | பெண்குறியின் மூக்குப்பகுதி |
| கோட்டம் | - | வளைவு, நெளிவு, கோளாறு |
| கோடாங்கி | - | பெரியவகை உடுக்கை |
| கோழிக்காரம் | - | கோழிகளின் காய்ந்த மலம் |
| சடைப்பு | - | வருத்தம் |
| சத்தங்காட்டாம | - | அரவம் இல்லாது |
| சந்துக்கறி | - | ஆட்டின் தொடைக்கறி |
| சப்பட்டை | - | தட்டையான |
| சப்பாத்து | - | சப்பிப்போனது, ஆட்டின் பின் தொடைமாமிசம், பெண்குழி |

| | | |
|---|---|---|
| சவதம், சவலம் | - | விலைவாசி இறக்கம் |
| சம்சாரி | - | விவசாயி |
| சம்ப்ராயம் | - | பந்தயம் |
| சம்பல், சம்பு | - | மலிவு விலை |
| சம்பை | - | கடல்மீன் கருவாடு |
| சம்மாடி | - | வள்ளம் செலுத்தும் தலைவர் |
| சமுக்காரம், சவுக்காரம் | - | சோப்பு |
| சர்க்கோடு | - | பிரயாணம் |
| சரலை | - | தொடர்பு, உறவு |
| சருவம், சருவச்சட்டி | - | வாயகன்ற பித்தளைப்பாத்திரம் |
| சலம்புதல் | - | அர்த்தமில்லாது பேசுதல் |
| சவுல் | - | நாய்களின் சேர்க்கை |
| சன்னம் | - | கொஞ்சம், சிறியது |
| சாங்கம் | - | பாசாங்கு, கள்ளப்பாசாங்கு |
| சாடை | - | முகச்சாயல் |
| சாணக்கிழங்கு | - | ஒருவகைக் கிழங்கு, பஞ்சகாலத்தில் உண்ணப்பட்ட கிழங்கு |
| சாத்து | - | அடி, கதவை மூடு |
| சாதா | - | சாதாரணமான |
| சாம்புராணி | - | அரணை |
| சாமக்கோடாங்கி | - | இரவுநேரங்களில் குறிசொல்பவர் |
| சாரம் | - | சமையல் கொட்டம் |
| சாரவாடை | - | சாரல்வாடை, குளிர்வாடை |
| சாரோலை | - | முற்றிய பச்சைஓலை |
| சால் | - | மண்ணாலான பெரியவகைப் பானை |

| | | |
|---|---|---|
| சாவகாசம் | - | மெதுவாக |
| சாவாசம் | - | சகவாசம், பழக்கம் |
| சாளை | - | தற்காலிகமாக வாழப் போடப்படும் கூறை, சிறிய மண்குடிசை |
| சிக்காது | - | கிடைக்காது, அகப்படாது |
| சிங்கி | - | ஜால்ரா |
| சிங்கேறு | - | ஆண் சிங்கம் |
| சிட்டி | - | கள்ளுக்குடிக்க உதவும் சிறு மண் கலயம் |
| சித்து | - | மிகச்சிறிய |
| சிப்பி | - | சிரட்டை எலும்பு |
| சிப்பிலித்தட்டு | - | சோறுவடிக்க உதவும் கண்தட்டு |
| சிரங்கை | - | உள்ளங்கையில் அடங்கும் அளவு |
| சில்லை | - | குருவி |
| சில்லான் | - | சிறியவகை ஓனான் |
| சில்லுண்டித்தனம் | - | தரக்குறைவாக நடத்தல் |
| சிலாம்பு | - | பனங்கொட்டையின் நாம்பு |
| சிவப்புக் கத்திரி | - | தக்காளி |
| சிறுவாடு | - | பெண்கள் தங்களுக்காகச் சேர்த்துவைக்கும் பணம் |
| சிறை | - | பேரழகி |
| சீக்காளி | - | நோயாளி |
| சீத்துவம் | - | சக்தி, பலம் |
| சீப்பு | - | வாழைத்தாரில் உள்ள வாழைக்காய் தொகுப்பு |
| சீமை | - | வெளிநாடு |
| சீலம் | - | சேதாரம் |
| சீவு | - | வீடு மேய உதவும் ஒருவகை நாணல்புல் |

| | | |
|---|---|---|
| சுண்டான் | - | சிறியவகை எலி |
| சுணக்கம் | - | தாமதம் |
| சுத்தம் | - | முழுவதும், பூராவும் |
| சுதந்திரம் | - | சுடுகாட்டில் பிணத்தை எரித்தபின் வெட்டியான், வண்ணான், குழிதோண்டியவன் ஆகியவர்களுக்குக் கொடுக்கும் பணம் |
| சுதேசிக் கலர் | - | ஊதாக்கலர் |
| சுபாவி | - | அப்பாவி |
| சுருக்க | - | சீக்கிரம் |
| சுருக்காங்கண்ணி | - | ஒருவகை முடிச்சு |
| சுருத்து | - | உரிமை, அக்கரை |
| சுளவு, சொளகு | - | சுளகு, முறம் |
| சூச்சம் | - | எந்திரம், பொறி |
| சூதானமாய் | - | எச்சரிக்கையாக |
| செங்கட்டி | - | செங்கல் |
| செஞ்சி | - | செய்து |
| செட்டை | - | பறவையின் இறக்கை |
| செத்த | - | சிறிது நேரம் |
| செத்திங்காணு | - | கொஞ்சம்போல |
| செந்தட்டி | - | உடலில்பட்டால் அரிக்கும் தன்மை கொண்ட இலையுடைய செடி |
| செப்பு | - | தோள்பட்டை |
| செருவை | - | ஓலைச்சுவர் |
| செல்லம் | - | வெற்றிலை, பாக்கு, சுண்ணாம்பு வைக்கும் பெட்டி |
| செலவு | - | பெருச்சாளி தோண்டிய வளை |

| | | |
|---|---|---|
| செவிடு, செவுள் | - | கன்னம் |
| செள்ளு | - | கோழிப்பேன் |
| சென்னி | - | காதுப்பக்கமுள்ள நெற்றிப்பகுதி |
| சேக்காளி | - | நண்பன் |
| சேடான் | - | பூரான் |
| சேர்வை | - | பனங்காயைச் சீவிய துண்டு |
| சொக்காரர் | - | தாயாதி உறவுக்காரர் |
| சொச்சம், சொஞ்சாடி | - | மீதி |
| சொட்டை | - | இடுப்பு |
| சொடிதல் | - | நீர் வற்றுதல் |
| சொணங்காம | - | தாமதியாமல் |
| சொதை | - | ஜோடி |
| சொருகு | - | சுருக்கு, காம்பிலிருந்து ஒரு தடவை இழுக்கும்போது வெளியாகும் பாலின் அளவு |
| சொலவடை, சொலவம் | - | பழமொழி |
| சொள்ளு | - | வாய் நீர் |
| சோட்டை | - | பெரிய அளவு குத்துச்சட்டி |
| சோடு | - | மாட்டின் வயது |
| சோத்துக்கை | - | வலதுகை |
| சோமாரு | - | பரிமாறு |
| சோலி | - | வேலை |
| சோனகம் | - | தென்கிழக்குக் காற்று |
| ஞாயம் | - | நியாயம் |
| தக்கன் | - | கள்ளன் |
| தக்கை | - | கள்ளி |

| | | |
|---|---|---|
| தகை | - | தீராத தாகம் |
| தச்கூலி | - | சலவை, சவரத் தொழிலாளர் பெறும் தாணியக்கூலி |
| தச்சுமுழம் | - | 2¾ அடி அளவு |
| தட்டட்டி | - | மொட்டை மாடி |
| தட்டளித்தல், தட்டளிதல் | - | சிரமப்படுதல் |
| தட்டுச்சொளகு | - | வட்டமான சொளகு |
| தட்டுப்படுதல் | - | காணப்படுதல் |
| தட்டுமுட்டுச்சாமான் | - | வீட்டு உபயோகப்பொருட்கள், பாத்திரங்கள் |
| தடயம் | - | குற்றவாளி விட்டுப்போன அடையாளம் |
| தடிக்கணக்கு | - | தோராயமாகக் கணக்கிடுதல் |
| தடை | - | உலர்ந்த வாழை மட்டை |
| தண்டிப்பிள்ளைகள் | - | ஒரே வயது நண்பர்கள் |
| தத்து | - | கண்டம் |
| தப்பளம் | - | நெற்றியில் போடும் பற்று |
| தபா | - | தடவை |
| தம்பட்டை | - | கோவில்மாடு |
| தம்மாட்டை | - | மன்னிப்பு |
| தம்முசம் | - | பலம், சக்தி |
| தரங்கு | - | வேல்கம்பு |
| தரம் | - | தடவை |
| தரவை | - | வரவழைத்து |
| தரவளச்சி | - | உப்பங்கழி |
| தரிசு | - | விவசாயம் செய்யாத நிலம் |
| தருவை | - | சலவைக்கான உவர்மண் விளையுமிடம் |

| | | |
|---|---|---|
| தல்லு | - | நசுக்கு |
| தலைக்கட்டு | - | மணம்புரிந்து கொண்ட தம்பதியர் ஒரு தலைக்கட்டு |
| தலைக்கட்டு வரி | - | கிராமத்தில் பொதுச்செலவுக்காக வசூலிக்கப்படும் குடும்பவரி |
| தலைமடக்கு | - | உழவு சென்று திரும்பும் இடம் |
| தலை முழுக்கு | - | கருமாதி எனும் இறப்புச் சடங்கு |
| தலைமுறை தத்துவமாய் | - | பரம்பரையாய் |
| தலையெடுத்தல் | - | வாழ்க்கையில் முன்னேறுதல் |
| தவ்வாளி | - | பாய்ச்சல் |
| தவ்வுதல் | - | உயரக் குதித்தல் |
| தவங்கி | - | உடல் தளர்ந்து |
| தவசம் | - | கம்பு, தானிய வகை |
| தவசிப்பிள்ளை | - | திருமணம் போன்ற சடங்குகளில் சமையல் செய்பவர் |
| தவதாயம் | - | கஷ்டம், நொம்பலம் |
| தவிக்கி | - | தாகமாயிருக்கு |
| தழுக்கு | - | இரண்டு கைகளும் சேர்த்து அள்ளும் அளவு |
| தளிகை | - | கோவிலகளின் படைப்பும் பிரசாதம் |
| தளுகைச்சோறு | - | பூசை செய்யும் போது இலையில் வைக்கப்படும் சோறு |
| தளைநார் | - | பனையேறுபவர்கள் கால்களில் மாட்டிக்கொள்ளும் நாரினாலான தளை |
| தன்காலம் | - | கார்காலம் |
| தன்மூப்பு | - | சுயமாகச் சிந்தித்துச் செயல்படும் பக்குவம் |
| தன்னக்கட்டிப்போகும் | - | இலாபம், நட்டம் இல்லாமல் நடக்கும் |
| தனதாள் | - | தன்னுடைய ஆள் |

| | | |
|---|---|---|
| தனதேர் | - | சொந்த ஏர் |
| தாக்கல் | - | தகவல் |
| தாக்காட்டு | - | தாமதப்படுத்து |
| தாக்கு | - | குவியல், கன அளவு 2¾ அடி அகலம், நீளம், உயரம் கொண்ட கல் குவியல் |
| தாச்சல் | - | கோவணம் |
| தாச்சி | - | பதனீர் காய்ச்சும் இரும்பிலான பாத்திரம் |
| தாட்டாய் | - | தாராளமாய், விஸ்தாராமாய், அதிகமாய் |
| தாட்டியம் | - | பலம் |
| தாட்டு | - | சாக்குகளால் தைக்கப்பட்ட பெரிய பை |
| மருகை | - | பருத்தி அடைத்து வைக்கப்பட்ட தாட்டு |
| தாடிக்கொப்பு | - | மரத்தின் அடிக்கிளை |
| கொப்பு | - | மரக்கிளை |
| தாப்பு | - | பறவைகள், மிருகங்கள் வந்து தங்கிச் செல்லும் இடம் |
| தாம்போயி, தாம்போதி | - | ஒரு பாலம், தரைப்பாலம் |
| தாமுசம் | - | தாமதம் |
| சுணக்கம் | - | தாமதம் |
| தாய்ச்சி | - | நெல் அளக்க துத்தநாகம் அல்லது இரும்பில் செய்த பாத்திரம் |
| தார் | - | அகலம் குறைந்த நீளமான புஞ்சை |
| தார்சா | - | தாழ்வாரம் |
| மண்டைத்தாலி | - | தேவர் சமூகத்தினரின் தாலிவகை |
| கொண்டையங்கோட்டைத் தாலி | - | தேவர் சமூகத்தினரின் தாலிவகை |
| லிங்கத்தாலி | - | லிங்க உருவம் கொண்ட தாலி |

| | | |
|---|---|---|
| சொக்கர் மீனாட்சித் தாலி | - | சிவசக்தி உருவம் கொண்ட தாலி |
| சிறகுப்பிள்ளையார் தாலி | - | மூன்று விநாயகர் உருவங்கள் கொண்டதாலி |
| சன்மார்க்கத் தாலி | - | யானை, பசு, பிறை, சூரியன், குத்துவிளக்கு கரும்பு, வாழை இவை அமைந்த வட்டவடிவத் தாலி |
| தாவணி | - | மாட்டுச் சந்தை |
| தாவளம் | - | மீனவர் குடியிருப்பில் வாழ்பவர்கள் கடைவீதியைக் குறிக்கும் சொல் |
| தாவா | - | வழக்கு |
| தாவலை | - | தேவலை |
| தாவுதல் | - | தாண்டுதல் |
| தாளம் | - | சாப்பட்டுப் பாத்திரம் |
| தாளி | - | தாழி, பெரிய அளவிலான பானை |
| தாறுமாறு | - | வகையில்லாது |
| தானம், தானக்குழி | - | செடிகள் நட்ட வயலில் கூர்மையான குச்சியால் போடும் சிறுகுழி |
| தானவாய் | - | மிருகங்களின் மலத்துவாரம் |
| திட்டிவாசல் | - | பெரிய கதவில் அமைந்த பிள்ளைக்கதவு |
| திட்டுசட்டி | - | ஒருவகை மண்சட்டி |
| திமிறுதல் | - | எதிரியின் பிடியிலிருந்து மீளுதல் |
| திரண்டு குளிச்சவ | - | பூப்பெய்திய பெண் |
| திருப்பம் | - | சமையல் அறை |
| திருப்பூட்டு | - | திருமணத்தில் தாலிகட்டுதல் |
| திருவலக்குத்தி | - | தேங்காய்துருவி |
| திலா | - | ஏற்றம், துலா |
| தீத்து | - | பல்தேய் |

| | |
|---|---|
| தீந்துகட்டுதல் | - மனைவி, கணவனை விவாகரத்துச் செய்துவிட்டு மறுமணம் செய்தல் |
| தீர்த்தல் | - விவாகரத்து |
| தீர்வை | - விவாகரத்தன்று கொடுக்கப்படும் பணம் |
| தீரவில்லை | - விலைபோகவில்லை |
| துட்டி | - துஷ்டி, எளவு |
| துட்டு | - மலையாளத்து நாணயம் (4 தம்படி - ஒரு துட்டு, 10 துட்டு - 1 பணம், 48 துட்டு - 1 ரூபாய்) |
| துடுப்புக்கீரை | - புஞ்செய் நிலத்தின் களையாக வளரும் கீரைவகை |
| துண்டாய் | - தனியாய் |
| துணுக்கா | - தனியாக |
| துப்பட்டி | - போர்வை |
| துப்பில்லை | - வசதி இல்லை |
| தும்பு | - நார் |
| துரட்டி | - வளைந்த கத்தி பொருத்தப்பட்ட நீளமான கம்பு |
| துரத்தல் | - இருமல் |
| துவாலை | - பெண்களுக்கு வெளியாகும் வெள்ளை நீர் |
| துள்ளுமரி | - இளம் கிடா |
| துறவல் | - திறவுகோல், சாவி |
| துறை | - சலவைத்தொழிலாளிகள் சலவைசெய்யும் குளக்கரை |
| தூசி, தூரி | - நாணல் தட்டையால் செய்யப்பட்ட மீன்பிடி கூடு |
| தூணி | - மரக்கால், அளவைப்பாத்திரம் |
| தூர்வை | - தூரு, கிணற்றில் படிந்திருக்கும் சேறு |
| தூரு | - வீட்டைப் பெருக்கு |

| | | |
|---|---|---|
| தெத்திட்டான் | - | மறுத்துவிட்டான், ஏமாற்றிவிட்டான் |
| ஏச்சிட்டான் | - | ஏமாற்றிவிட்டான் |
| தெத்துவாளி, எத்துவாளி | - | ஏமாற்றுக்காரன் |
| தெம்மாடி | - | கையாலாகாதவன், பலம் இல்லாதவன் |
| தெம்மாளி | - | ஏமாளி |
| தெளிவு | - | பனம்பால் |
| தென்னுதல் | - | கடப்பாரை கொண்டு ஒரு கல்லைப்புரட்டுதல் |
| தேசாந்திரம் | - | பல தேசங்களைப் பார்க்கப் போகுதல் |
| தேட்டாளன் | - | உழைப்பாளன் |
| தேட்டு | - | உழைப்பு |
| தேர் | - | இறந்தவர்களை எடுத்துச்செல்லும் அலங்கார வண்டி, பாடை |
| தேரம் | - | வேளை, நேரம் |
| தேரி | - | பெரிய மணற்காடு |
| தொஞ்சிட்டு | - | தொய்ந்துவிட்டது |
| தொந்த | - | விதி |
| தொய்யல் | - | தொய்வு |
| தொய்ந்து | - | தொடர்ந்து |
| தொரட்டி | - | துரட்டிக்கம்பு |
| தொரத்தல் | - | இறுமல் |
| தொரவல் | - | திறவுகோல் |
| தொலவெட்டு | - | தொலைதூரம் |
| தொலைக்குழி | - | கிணற்றில் கூனை முங்கும் இடம் |
| தொவ்வல் | - | துவண்டு |
| தொள்ளக்காது | - | துளை விழுந்த காது |

| | | |
|---|---|---|
| தொள்ளு | - | துளை, துவாரம், ஓட்டை |
| தொளி | - | இளக்கமான மண்சேறு |
| தோண்டிப்பட்டை | - | பனைஓலையில் செய்த பட்டை |
| தோது | - | வசதி, உதவி |
| தோரவழக்கு | - | விடுபடமுடியாத வழக்கு |
| தோலாவழக்கு | - | பெரிய வழக்கு |
| தோவாளம் | - | கிணற்றின் கைப்பிடிச்சுவர் |
| நட்டணை | - | சேட்டை |
| நடப்பு | - | அன்றையவிலை |
| நடவாசல் | - | முன்வாசல் |
| நடுப்பட்டம் | - | புரட்டாசி மாதம் 10-ஆம் நாளிலிருந்து 20-ஆம் தேதிவரை உள்ள விதைப்புப் பட்டம் |
| நடையன் | - | கழுதை |
| நத்தம் | - | ஊர் அழிந்து போன மண்மேடு |
| நரகல் | - | மனித மலம், பீ |
| நருங்கி | - | வளர்ச்சி குன்றி |
| நருங்கல் | - | இடுப்பு, குறுக்கு |
| நருள் | - | மனித இனம் |
| நவுட்டு | - | நகர்த்து |
| நாக்கூட்டடுப்பு | - | நான்கு மண்பானைகள் வைத்துப் பதனீர் காய்ச்ச ஏதுவான அடுப்பு |
| நாசுவன் | - | குடிமகன், சவரத்தொழிலாளி |
| நாத்து | - | மாடுகளின் உணவுக்காகக் பயிரிடப்படும் காய்ந்த இருங்குச் சோளப்பயிர் |
| நாத்துச்சோளம் | - | இருங்குசோளம் |
| காக்காச்சோளம் | - | இருங்குசோளம் |

| | | |
|---|---|---|
| நாதி | - | ஆதரவானவர்கள் |
| நார்ப்பெட்டி | - | பனைநாரில் பின்னப்பட்ட பெட்டி |
| நாவுதல் | - | முறத்தில் பிடைக்கும் வகை |
| நாளண்ணைக்கு | - | நாளை மறுநாள் |
| நாளேர் | - | சித்திரை மாதம் நல்லநாள் பார்த்து உழவு தொடங்கும் விழா |
| நிந்தம் | - | லஞ்சம் |
| நிமுர | - | நிறைய |
| நிலமடித்தல் | - | மாட்டுக்குக் காயடித்தல் |
| நிறை | - | எடை |
| நீச்சுத்தண்ணி, நீர்த்தண்ணீ | - | நீராகாரத் தண்ணீர் |
| நீர்மாலை | - | இறந்தவர் உடலைக் குளிப்பாட்டி நீர்நிலைகளில் இருந்து நீர் கொண்டுவரும் சடங்கு |
| நீராளம் | - | சுண்ணாம்பு போடாத பதனீர் |
| நீராவி | - | குடிநீர்க்குளம் |
| நூலாம்படை | - | எட்டுக்கால் பூச்சியின் வலை |
| நெட்டாயம் | - | நீட்டுவசம் |
| நெட்டி | - | உடம்பில் உறுப்புகள் பொருந்திய இடங்கள் |
| நெத்தக்கத்திரி | - | தக்காளி |
| நெகம் | - | தினமும் |
| நெமை | - | இமை |
| நெரஞ்சநாள் | - | பவுர்ணமி, நிறைந்த நாள் |
| நெளிற அளிவு | - | ஒரு செயலில் உள்ள நுட்பம் |
| நேரியல் | - | சரிகை போட்டதுண்டு |
| நொட்டாங்கை | - | இடதுகை |

| | | |
|---|---|---|
| நொடி | - | வண்டிப்பாதையில் உள்ள பள்ளங்கள் |
| நோக்காடு | - | நோய் |
| நோக்கால் | - | மேக்கால் |
| பக்கம் | - | சுடுகாட்டில் காரியம் முடிந்தபின் தொழிலாளிகளுக்குக் கொடுக்கப்படும் பணம் |
| பக்கரை | - | வியாபாரப் பை |
| பகப்பட்டு | - | பகல்நேரம் |
| பகுதி | - | நிலத்தீர்வை |
| பகுரணை | - | பௌர்ணமி |
| பட்டம் | - | பருவம் |
| பட்டினிப்பணம் | - | இழவுவீட்டிற்கு வந்தவர்களுக்கு ஆகாரமளிக்க மற்றவர்கள் கொடுக்கும் பணம் |
| பட்டை | - | பனைஓலையில் செய்த பாத்திரம் போல் உள்ள சாதனம் |
| படம் | - | கலப்பைக் கொழுவின் கீழ் நுனி |
| பண்டிதன் | - | குடிமகன், நாவிதன் |
| பண்ணை | - | அதிக நிலம் உள்ள விவசாயக் குடும்பம் |
| பண ஏர் | - | வாடகை ஏர் |
| பணம் | - | திருவாங்கூரில் புழக்கத்திலிருந்த நாணயம், பத்து துட்டு ஒரு பணம். 48 துட்டு ஒரு ரூபாய் |
| பத்தயம் | - | எலி பிடிக்கும் கூண்டு |
| பத்தாயம் | - | சிறிய அளவில் தானியம் வைத்துக்கொள்ளும் மரத்திலான பெட்டி |
| பத்து | - | விரட்டு |
| பதக்கு | - | இரண்டு குறுணி முகத்தல் அளவு |
| பதட்டம் | - | பயம் |
| பதநி, பயநி, பய்நி, பதினி | - | பதநீர் |

| | | |
|---|---|---|
| பதவளை | - | காயத்தினால் கட்டும் நெறி |
| பதனம் | - | எச்சரிக்கை, பக்குவம் |
| பயிராகுதல் | - | பசு சினையாகுதல் |
| பரக்க | - | பரவலாக |
| பரவச்சட்டி | - | வாய் அகலமான சட்டி |
| பருக்கை | - | நெல் அரிசிச் சோறு |
| பருசம், பரிசம் | - | நிச்சயதார்த்தச் சடங்கு |
| பருது | - | மரக்கம்பில் செய்த ஏணிப்படி |
| பருப்பெட்டி | - | பனைஓலையில் பின்னப்பட்ட மீன்கூடை |
| பருவப்பனை | - | பெண்பனை, நுங்கு காய்க்கும் பனை |
| பலப்படுதல் | - | பசு சினையாகுதல் |
| பள்ளயம் | - | 21 பூடமுள்ள சாமி |
| பிளாவரி | - | வட்டமான முறம் |
| பனையேறி | - | பனைமரம் ஏறி பதநீர் இறக்குபவர் |
| பாச்சோரு | - | பச்சரிசியில் வெல்லம் சேர்த்துச் சமைக்கப்பட்ட சோறு |
| பாட்டக்காரர் | - | குத்தகைக்காரர் |
| பாட்டம் | - | ஒரு குறிப்பிட்ட கால அளவு |
| பாட்டாளி | - | உழைப்பாளி |
| பாட்டையா | - | தாத்தா |
| பாடாவதி | - | மோசமான |
| பாடு | - | வாழ்க்கை, வாழ்க்கைத்தரம் |
| பாப்பரப்பாசி | - | கம்பளத்தார், மறவர் இனப்பெண்கள் கழுத்தில் அணியும் பாசி |
| பார்வை | - | விசகடிக்கு வேப்பிலை வீசி மந்திரம் சொல்லி செய்யும் நாட்டுப்புற சிகிச்சை |

| | | |
|---|---|---|
| பாரியாள் | - | மனைவி |
| பிசி | - | கண்ணில் உள்ள பீளை |
| பிடிசாதனை | - | கொண்ட கொள்கையில் பிடிவாதமாக இருப்பது |
| பிராந்தி | - | பயம் |
| பிராயம் | - | வாலிபவயது |
| பீச்சாங்கை | - | இடதுகை |
| பீசம் | - | பன்றியின் விதர் |
| பீலை | - | பனங்கொட்டையிலிருந்து வந்துள்ள முதல் இலை |
| புட்டம், பிட்டம் | - | குண்டி |
| புடுக்கு | - | ஆண்குறி |
| ஊத்தாம்பட்டி | - | ஆட்டின் மூத்திரப்பை |
| புரணி | - | உண்மையை திரித்துக் கூறுதல் |
| புள்ளி | - | நபர், ஆள் |
| பூச்சி | - | உடைமரக் கன்று |
| பூச்சிக்காடு | - | உடைமரக் காடு |
| பூசை | - | அடி, உதை |
| பூழாப்பு | - | பொறாமை |
| பூனைக்காரப் பெட்டி | - | கிராம போன் பெட்டி |
| பெண்ணடி | - | பெண் வாரிசு, பெண் குழந்தை |
| பெரியய்யா | - | பெரியப்பா, தந்தையின் அண்ணன் |
| பெருவாரி | - | அதிக அளவுள்ள |
| பெரகாட்டிக்கு | - | அப்புறமாக |
| பேத்தியா | - | பாட்டி |
| பேர்காலம் | - | பிரசவம் |

| | | |
|---|---|---|
| பேர்வாதி | - | சரிபாதி |
| பேரனாரு | - | தாத்தா |
| பைதா | - | உருளும் சக்கரம் |
| பைய | - | மெதுவாக |
| பொக்கி | - | உதவாக்கரை |
| பொக்குனு | - | மிகச் சீக்கிரமாக |
| பொட்டாப்பெட்டி | - | மரத்தால் செய்த பெரியவகைப் பெட்டி |
| பொத்தல் | - | ஓட்டை, துளை |
| பொதும்ப | - | நிறைய, போதும் எனும் அளவுக்கு |
| பொதுமல் | - | நனைதல் |
| பொலிச்சல் | - | கால்நடைகளின் இனச்சேர்க்கை |
| பொலிப்பாட்டு | - | களத்தில் பிணையல் அடுக்கும் போது கவிராயர்கள் பாடுவது |
| பொழுது | - | சூரியன் |
| பொழுதுசாய | - | சாயந்தரம், சூரியன் அடையும் நேரம் |
| பொளி | - | எல்லை, வரப்பு |
| பொன்னஞ்சட்டி | - | பெண்மை கலந்த ஆண் வடிவம் |
| பொன்னாத்த | - | அம்மாவின் அம்மா |
| போக்கடி | - | புகழிடம் |
| போத்து | - | கால்நடைகளில் ஆண் (முக்கியமாக எருமைகளில்) |
| மக்யாநாள் | - | மறுநாள் |
| மகுமை | - | ஊர்ப்பொதுப்பணம், ஒரு இன மகுமை |
| மச்சம் | - | தடயம் |
| மட்டத்தரம் | - | ஒரே அளவுள்ள |
| மட்டி | - | உதடு |

| | | |
|---|---|---|
| மடக்கு ஏர் | - | துணை ஏர் |
| மண்டாடி | - | வள்ளத்தின் தலைவர் |
| மண்டாளம் | - | நல்லபாம்பு தானாகப் படமெடுத்து ஆடுவது |
| மண்வாரி | - | ஒருவகைச் சின்னம்மை நோய் |
| மத்துவம் | - | குறைவு |
| மதினி, மயினி | - | அண்ணன் மனைவி |
| மந்தைப்புஞ்சை | - | ஊரையடுத்துள்ள புஞ்சை |
| மப்பு | - | கொழுப்பு |
| மம்மல் | - | விடியும் முன் உள்ள காலம் |
| மரவை | - | உப்பு வைக்கப்பயன்படும் மரத்தாலான பாத்திரம் |
| மருவாதி | - | மரியாதி |
| மவுசு | - | மதிப்பு, கிராக்கி |
| மறி | - | வெள்ளாட்டின் ஈனாத பருவம் |
| மறுகால் | - | குளம் நறைந்து கலுங்கு வழியாக நீர் வெளியேறுவது |
| மனமாத்துச் செலவு | - | குடும்பச் செலவு |
| மாச்சல் | - | கூச்சல் |
| மாசூல் | - | மகசூல் |
| மாடன் | - | மருத்துவமனையில் துப்புரவுப் பணிபுரியும் ஆண் |
| மாடி | - | மருத்துவமனையில் துப்புரவுப் பணிபுரியும் பெண் |
| மாரகம் | - | மரணம் |
| மாரிமூலை | - | வடகிழக்கு மூலை |
| மாவடை | - | குதிரை கட்டும் இடம் |
| மிச்சம் | - | செலவுபோக மீதி, இலாபம் |
| மிஞ்சி | - | கால்விரல் அணிகலன் வகை |

| | | |
|---|---|---|
| மிடா, மொடா | - | பெரிய அளவிலான மண்பானை |
| மின்னி | - | பயத்தங்காய் போன்ற பருப்பு இனப்பயிர். காட்டில் தானாக முளைத்து வளர்வது |
| மீனின் பருப்பு | - | மீனின் சினை |
| மீன்பாடு | - | மீன்பிடித்தலில் கிடைக்கும் மீனின் அளவு |
| முக்காத்துட்டு | - | காலணா |
| முகடு | - | பணக்காரன், கூரை |
| முகுரணி | - | ஊருணி, கண்மாய் |
| முட்டிக்கலயம், முட்டி | - | சிறியவகை மண்பானை |
| முடுக்கு | - | விரட்டு |
| முடை | - | காளையை நினைத்து மாடுகளின் அறையில் கசியும் ஒருவகைத் திரவம் |
| முண்டச்சி | - | தாலியறுத்தவள், விதவை |
| முதுக்கங்காய் | - | ஒருவகைக் கொடியில் விளையும் காய் |
| முந்தாநேத்து | - | நேற்றைக்கு முந்தின நாள் |
| முந்தி | - | முன்னால் |
| மும்மரம், மும்முரம் | - | தீவிரம் |
| முருச வாய்க்கல் | - | தனிவாய்க்கால் |
| முளைப்பாரி | - | தானியவகைகளைச் சட்டியில் பரப்பி இருட்டு அறையில் வைத்துக் கோவில் விழாவிற்காக வளர்த்தல் |
| முளையரசி | - | கம்பரிசியை முளைப்பூரச் செய்த தின்பண்டம் |
| குறிப்பு | - | மாற்று மருந்து |
| முன்ன, முன்னக்க | - | முன்பு |
| மூஞ்சி | - | முகம் |
| மெக்காட்டு | - | கூலி |

| | | |
|---|---|---|
| மெட்டி | - | பெண்களின் கால்விரல் அணிகலன் |
| மெதம் | - | மட்டம் |
| மென்னி | - | கழுத்து |
| மென்னை | - | காதுக்கடியிலுள்ள பகுதி |
| மெனக்கெட்டு | - | பிரதிபலன் இல்லாது |
| மேக்கால் | - | நுகத்தடி |
| மேச்செலவு | - | சில்லரைச் செலவு |
| மேட்டுமை | - | உயர்வர்க்க கர்வம் |
| மேப்பேச்சு | - | ஒப்புக்காகப் பேசுவது |
| மேல் | - | உடம்பு |
| வரும்படி | - | சம்பாத்தியம் செய்யும் பணம் |
| மேவிடு | - | காது வளர்த்த பெண்கள் அணியும் சதுரவடிவ அணிகலன் |
| மைக்காநாள் | - | ஒரு குறிப்பிட்ட நாளுக்கு அடுத்த நாள் |
| மொகரை | - | முகரை, முகம் |
| மொகாசு | - | தலைமை |
| மொச | - | முயல் |
| மொடா | - | பெரியவகை மண்தாழி |
| மொந்தை | - | தடியான கலயம் |
| மொய் | - | 20 ஆடுகள் கொண்ட தொகுதி |
| மொனைப்பு | - | ஒரு வேலையில் காட்டும் வேகம், முனைப்பு |
| மோழல் | - | சிறுநீர் கழித்தல் |
| யாவாரி | - | வியாபாரி |
| யாவுகம் | - | ஞாபகம் |
| ரவைக்கு | - | இரவுக்கு |

| | | |
|---|---|---|
| ருசு | - | நிரூபணம் |
| ரெட்டிப்பு | - | இரண்டு மடங்கு, இரட்டிப்பு |
| ரொம்ப | - | நிரம்ப, அதிகமாக |
| லங்கோடு | - | கோமணமும் கால் சட்டையும் சேர்ந்தாற்போல் உள்ள ஒரு ஆடைவகை |
| லத்தி | - | யானையின் சாணம் |
| லாடஞ்செம்பு | - | வடநாட்டிலிருந்து இராமேஸ்வரம் யாத்திரை வருபவர்கள் பயன்படுத்தும் செம்புவகை |
| லாந்து | - | உலாவு |
| லோட்டா | - | தம்ளர் |
| வக்கா | - | ஒருவகை ஓணான் |
| வக்கு | - | வசதி |
| வங்கணம் | - | வைப்பாட்டி |
| வசக்குதல் | - | மாட்டை வண்டியில் பழக்குதல் |
| வசமானம் | - | ஏச்சு, திட்டு |
| வட்டம் | - | தடவை |
| வட்டி | - | 10 கிலோ கருப்பட்டி பிடிக்கும் அளவு உள்ள பனைஓலைப் பெட்டி |
| வடலி | - | சிறியவகைப் பனை |
| வத்திப்பெட்டி | - | தீப்பெட்டி |
| வப்பட்டி | - | வைப்பாட்டி |
| வம்செம் | - | பரம்பரை |
| வர்ணம் | - | இனம், குலம் |
| வரவாசி | - | வருமானம் |
| வலசை | - | புதிதாக வந்த குடியிருப்பு |
| வலுவந்தம், பலவந்தம் | - | பலாத்காரம் |

| | | |
|---|---|---|
| வளசல் | - | குடும்ப தொடர்பு முறை |
| வளவி | - | வளையல் |
| வளவு | - | ஒரே குடும்பத்திலிருந்து கிளைத்த பல வீடுகளைக் கொண்ட குடியிருப்பு |
| வலைச்சல் | - | உறவுமுறைச் சொந்தம் |
| வாக்கா | - | தோதுவாக |
| வாச்சி | - | ஒருவகைக் கோடாலி |
| வாசி | - | இலாபம் |
| வாட்டி | - | தடவை |
| வாடைக்காத்து | - | வடகிழக்குப் பருவக்காத்து |
| வாமடை | - | வாய்க்காலில் நீர் பாய்வதற்குத் திறந்து மூடும்வழி |
| வாற முலை | - | வடமேற்கு |
| வாரம் | - | விளைச்சலில் ஒரு பகுதியை நிலச் சொந்தக்காரருக்குக் கொடுத்தல் |
| வாரியல் | - | நீண்ட காம்பு |
| வார் | - | தோல் கயிறு |
| வாலம் | - | நீளவாட்டுப் பகுதி |
| வுாவரிசி | - | சுகமங்கலி, வாழ்வரசி |
| விசை | - | தடவை |
| விடலை, வெடலை | - | திருமணப் பருவம் எய்திய இளைஞன் |
| விடில் | - | தங்குவதற்கான ஓலைக்குடிசை |
| விடிலி | - | ஓலைக்குடிசை |
| விரசவக | - | வேகமாக |
| விளை | - | ஊர் |
| வீசம்படி | - | மாகாணிப்படி |

| | |
|---|---|
| வெஞ்சணம் | - தொடு கறி |
| வெடை | - பருவம் அடைந்த கோழி |
| வெம்பா | - பனி போன்ற மேகம் |
| வெரசா | - விரைவாக |
| வெருகு | - ஆண் காட்டுப்பூனை |
| வெரைக்கி | - குளிருது, வாடை அடிக்கிறது |
| வெள்ளன | - காலை, அதிகாலை |
| வேக்காடு | - புழுக்கம் |
| வேசாரி | - விபச்சாரி |
| வேதக்காரங்க | - கிறித்தவர்கள் |
| வேய்தல் | - கூரை மேய்தல் |
| வை | - திட்டு, ஏசு |
| அலவாங்கு | - கடப்பாரைக்கம்பி |
| இட்டேரி | - விளை நிலங்களுக்கு இடையில் அமைந்த குறுகிய வழி |
| இலுப்பாணி | - சிறியவகைக் கடப்பாரை |
| திட்டமாக | - மிகச்சரியாக |
| படுவம் | - நகச்சுத்து |
| மெத்தை | - வீட்டுமாடி |
| வல்லி | - தலைமொழுக எண்ணெய் தேய்த்துவிடுபவன் |
| வெள்ளவாரி | - மழைபெய்யும் போது மட்டும் ஓடும் நீரோடை |

## 2. நெல்லை வட்டாரப் பேச்சுவழக்கு/கிளைமொழி (தென்பாண்டிநாடு)

| | | |
|---|---|---|
| அக்குருவம் | - | அக்கிரமம் |
| அகத்தி | - | நகர்த்தி, காலை அகலமாக விரித்து |
| அகராதி | - | திமிர், அடங்காத குணம் |
| அங்கணம் | - | வீட்டில் பாத்திரம் கழுவும் இடம். கழிவுநீர் வெளியேற ஏற்படுத்தப்பட்டிருக்கும் பள்ளமான அமைப்பு |
| அங்கமாற | - | அந்தப் பக்கமாக |
| அங்கன | - | அங்கே |
| அங்கிட்டு | - | அங்கே |
| அசங்காம | - | அசையாது, அலுங்காது |
| அசல் | - | போட்ட முதல் பணம், பொருளின் விலை |
| அசலூர் | - | வெளியூர் |
| அசை | - | பொருட்கள் வைக்கப் பயன்படும் சதுரவடிவ மரச்சட்டம் |
| அட்டியல் | - | பெண்கள் அணியும் ஒருவகை அணிகலன் |
| அடப்பக்காரன் | - | அரசருக்கும், பெருமக்களுக்கும் வெற்றிலை மடித்துக் கொடுக்கும் வேலைக்காரன், ஜமீன்தார் வீட்டுச் சமையல்காரன் |
| அடவு | - | பொருட்களை வைக்கும் அடகு |
| அடிக்குச்சி | - | ஒரு அடி நீளம் கொண்ட அளவு கோல் |
| அடுக்களை.'.அடுக்காளை | - | வீட்டில் சமையல் செய்யும் இடம் |
| அடுப்பாங்கரை | - | வீட்டில் சமையல் செய்யும் இடம் |
| அண்டி | - | குதம், அடி வாழைக் கிழங்கிலிருந்து கிளம்பி வரும் புதுவாழைக்கன்றின் முளை |
| அண்ணாவி | - | ஆசான், குரு |

| | | |
|---|---|---|
| அணவடைப் பிள்ளை | - | கைக்குழந்தை |
| அத்தக்கூலி/அத்தக்கொத்து | - | தினக்கூலி |
| அத்துபடி | - | முழுமையாகக் கற்ற அல்லது தெரிந்த நிலை |
| அத்தவனக்காடு | - | அடர்ந்த காடு |
| அதுக்காட்டி | - | அதற்காக |
| அந்தமாற | - | அந்தப் பக்கமாக |
| அந்தாக்குல | - | அப்படியே |
| அந்தி | - | மாலைப்பொழுது |
| அப்போம் | - | அப்பொழுது |
| அப்பு | - | தேவைக்கு அதிகமாகப் பூசு, அடி, உதை |
| அப்பைக்கப்பம் | - | அவ்வப்பொழுது |
| அம்பாரம் | - | தானியங்களின் குவியல் |
| அமத்து | - | குழந்தைக்குப் பால்கொடுத்துப் பசியாற்று, விளக்கை அணை |
| அரங்கு | - | உள் வீடு |
| அரசாணிக்கம்பு | - | மணமேடையில் கன்னிமூலைக் காலில் கட்டப்படும் கம்பு. தாலி கட்டுவதற்கு முன்பு காப்புக்கட்டும் நிகழ்ச்சியை ஒட்டி மணமகன் இந்தக் கம்பிற்குத் தாலிகட்டுவார் |
| அரசிலை/அரமூடி | - | பெண் குழந்தைகளின் இடுப்பில் உள்ள கயிற்றில் கோர்க்கப்பட்டிருக்கும் அரசு இலை வடிவ அணிகலன் (அரம் - ஆடு, மாடுகளின் பெண் உறுப்பு) |
| அர்ணாக்கொடி/அரணாக்கொடி | - | அரைஞான் கொடி |
| அரவம் | - | சத்தம் |
| அருதலி | - | விதவை |

அருவாப்பெட்டி - பனையேறுபவர்கள் தன் இடுப்பில் கட்டியிருக்கும் பெட்டி

அலவு, அலகு - தாடை

அலப்பற - வீண் பேச்சுப் பேசுபவள்

அவங்க - அவர்கள்

ஆவிய - அவர்கள

அவிசாரி - விபச்சாரி

அவுக - அவர்கள்

அழிப்பாங்கதை - விடுகதை

அளிப்பத்து - குளத்திற்கு அருகில் உள்ல வயல்

அன்னவத்திரம் - முதுமைக் காலத்தில் ஒருவரின் உணவுக்கும், இதர செலவுகளுக்கும் ஆகும் பணத்தைச் சரிக்கட்டக் கொடுக்கப்படும் நிலம் அல்லது பணம்

அன்னா - அங்கே

ஆக்குப்புரை - திருமணம் போன்ற சடங்குகளில் சமையல் செய்யப் போடப்படும் பந்தல்

ஆச்சி - தாயின் தாய்

ஆட்டுக்கத்தி - ஆடுகளின் உரோமத்தைப் பறிக்கப் பயன்படும் கத்தி

ஆண்பனை - நுங்கு காய்க்காமல் கதிர்விடும் பனை

ஆண் முரி∴ஆண் மூடி - தேங்காயில் கண் இல்லாத பகுதி

பெண் முரி∴பெண் மூடி - தேங்காயில் கண் உள்ள பகுதி

ஆயக்கட்டு - குளத்துநீர், ஆற்று நீர் பாசனத்திற்கு உட்பட்ட வயல்

ஆயாசம் - தலைசுற்று, களைப்பு

ஆரம் - கழுத்தணிகலன், பூக்களின் தொகுப்பு

ஆரியம் - தினை

| | | |
|---|---|---|
| ஆவலாதி | - | புகார் |
| ஆவிசேர்த்து | - | ஆரத்தழுவி |
| ஆற அமர | - | நிதானமாக |
| இக்கட்டு | - | நெருக்கடி |
| இங்கன | - | இங்கே |
| இங்கிட்டு | - | இங்கே |
| இசவு | - | பேறுகால வேதனை |
| இட்டேரி | - | வண்டித் தடம், வண்டிப் பாதை |
| இடத்தை | - | இடப்பக்கம் |
| இடையன்புளி | - | ஆடு மேய்க்கும் இடையர்கள் தயாரிக்கும் குழம்பு வகை |
| இம்புட்டு | - | இவ்வளவு |
| இருசால் | - | நிலத்தீர்வை, நிலவரி |
| இருசி | - | வயதாகியும் பூப்படையாத பெண் |
| இலுக்காஞ்சட்டி | - | கார்த்திகை மாதம் வீட்டின் முன் வைக்கப்பட்டிருக்கும் அகல் விளக்கு |
| இளய குடியா | - | இரண்டாவது மனைவி |
| இறப்பெட்டி | - | தண்ணீர் இறைக்கப் பயன்படும் பனைநாரில் முடையப்பட்ட முக்கோண வடிவ பெட்டி போன்ற அமைப்பு |
| இறவக்காடு | - | கிணற்றுப் பாசன நிலம் |
| இறுக்கம் | - | அதிக வெப்பத்தால் ஏற்படும் புழுக்கம் |
| ஈயமாட்டான் | - | பிறருக்கு எதுவும் கொடுக்கமாட்டான் (ஈ ஈ 'கொடு') |
| ஈராய்ங்கம் | - | வெங்காயம் |
| ஈவிச்சுக் கொடு | - | சமமாகப் பங்கு வைத்துக் கொடு |
| உக்கிராண அறை | - | வீட்டில் பலரசக்கு வைக்கு அறை |

| | | |
|---|---|---|
| உசுப்பு | - | தூக்கத்திலிருந்து எழுப்பு |
| உடுமாத்து | - | அணிந்து கொள்ளும் ஆடைகள் |
| உப்பங்காற்று | - | கடலில் இருந்து வீசும் காற்று (ஈ உப்பு 'கடல் நீரிலிருந்து தயாரிக்கும் பொருள்') |
| உருக்குத்து | - | அம்மைநோய்த் தடுப்பூசி |
| உலுப்புதல் | - | மரம் , செடிகளின் கிளையை அசைத்தல் |
| உள்ளி | - | வெங்காயம் |
| சடவு | - | ஒருவர் மேல் ஏற்படும் மனத்தாங்கல் |
| ஊட்டி | - | பன்றி |
| ஊடு | - | வீடு |
| ஊரான் | - | அந்நியன், வேறு ஊரைச் சேர்ந்தவர் |
| ஊழியம் | - | சம்பளம் இல்லாது கோவில் போன்ற இடங்களில் செய்யும் வேலை |
| எங்கன | - | எங்கே |
| எசலிப்பு | - | ஒருவர் செய்யும் செயலுக்கு எதிராக வேலை செய்தல் |
| எச்சிக்கலத்தனம் | - | இழிவான செயல் (எச்சில் - உமிழ்நீர்) |
| குடி | - | குறிப்பிட்டுள்ள ஒரு சாதியினர் வாழும் பகுதி (ஈ குடி 'சாதி') |
| எடயன் | - | இடையன் |
| எணல் | - | நிழல் |
| எத்துவாளி | - | ஏமாற்றுக்காரன் |
| எம்புட்டு | - | எவ்வளவு |
| எரிதுரும்பு | - | விறகு |
| எடுப்பு | - | கவர்ச்சி |
| எத்து | - | காலால் உதை |

| | | |
|---|---|---|
| சவுட்டு | - | காலால் உதை |
| எம்புட்டு | - | எவ்வளவு |
| எருவுணி | - | கோழை, பயந்தவன் |
| எழவு | - | இழவு, இறப்பு |
| ஏசு | - | திட்டு |
| ஏண்ட உதவி | - | இயன்ற உதவி |
| ஏட்டுத் தவசுப்பிள்ளை | - | தலைமைச் சமையல்காரர் |
| ஏலல | - | இயலவில்லை |
| ஏழவக்கிழங்கு | - | மரவள்ளிக் கிழங்கு (ஈ ஏழு இலைக் கிழங்கு) |
| ஏனம் | - | பாத்திரம் |
| ஒசரம் | - | உயரம் |
| ஒசக்க | - | மேலே |
| ஒட்டட | - | நூலாம் படை |
| ஒடமஸ்தன் | - | உரிமைக்குரியவன் |
| ஒண்டியா | - | தனியாக |
| ஒத்தாசை | - | உதவி |
| ஒதுக்கல் | - | 16-ஆம் நாள் காரியத்துக்கு முந்திய நாள் நடக்கும் சடங்கு |
| ஒயத்து | - | உயர்த்து |
| ஒலுங்கு | - | கொசு |
| ஒறக்கம் | - | தூக்கம் |
| ஓட்டாண்டி | - | செல்வங்களை இழந்து பணம் இல்லாது இருப்பவன் |
| ஓப்படச்சி | - | கணவனின் சகோதரர்களின் மனைவி |
| பட்டை | - | பனை ஓலையில் செய்த கிணற்றிலிருந்து நீர் இறைக்க உதவும் சாதனம் |

| | | |
|---|---|---|
| கச்சாத்து | - | வாங்கிய பொருட்களின் விபரம் அடங்கிய சீட்டு |
| கசவாளி | - | அயோக்கியன் |
| கடுங்காப்பி | - | பால் ஊற்றாது தயாரிக்கப்படும் காப்பி |
| கடகம் | - | பனை ஓலையில் பின்னப்பட்ட பெரியவகைப் பெட்டி |
| கடலாடி மலையாடுதல் | - | திருமணத் தம்பதிகள் திருமணம் முடிந்த ஆறு மாதங்களுக்குள் திருச்செந்தூர் முருகன் கோவில் சென்று கடலில் குளித்துத் தரிசனம் செய்தபின் குற்றாலம், பாபனாசம் சென்று அங்குள்ள அருவி, ஆறுகளில் குளிக்கும் சடங்கு |
| கடாரி | - | இளம் பசு, கன்று ஈனும் பருவத்தில் உள்ள பசு |
| கடுவம் பூனை | - | ஆண் பூனை |
| கடுவா | - | புலி வகை |
| கண்ணு | - | மாமரக்கன்று |
| தென்னம்பிள்ளை | - | தென்னை மரக்கன்று |
| கத்திக்கம்பு | - | கத்தி பொருத்தப்பட்ட கம்பு |
| கப்பை | - | இரு தொடைகளுக்கு நடுவில் உள்ள பகுதி |
| கம்மம்புல் | - | கம்பு, தானியவகை |
| கரசுவான் | - | ஏலச்சீட்டு நடத்துபவர் |
| கரண்டை | - | வெற்றிலை போடும் பழக்கம் உள்ளவர்கள் வைத்திருகும் சுண்ணாம்பு சிமிழ் |
| கருக்கல் | - | மாலை நேரம் |
| கரையேத்துதல் | - | பெண்களைத் திருமணம் செய்து கொடுத்தல் |
| கல்லுக்குளி | - | இறந்தவ்ரின் 16-ஆம் நாள் நிகழும் சடங்கு |
| கவுளி, கெவுளி | - | பல்லி |

| | | |
|---|---|---|
| கள்ளப்பிராந்து | - | பருந்து |
| களுந்து உலக்கை | - | பூண் இல்லாத உலக்கை |
| கன்னாசாரி | - | செம்பு, பித்தளைப் பாத்திரங்கள் செய்யும் ஆசாரி |
| கணத்த நாள் | - | அமாவாசை, பௌர்ணமி போன்ற நாட்கள் |
| காட்டுப் பீ | - | பிறந்த குழந்தை முதன் முதலில் கழிக்கும் மலம் |
| கப்பரை | - | திருநீற்றுக் கலம் |
| காணம் | - | பயறு வகை, கொள்ளு |
| காதுகுத்து | - | காதுவலி, சிறுவர்களின் காதைக் குத்தி அணிகலன் அணிவித்தல் |
| காப்பரிசி | - | காது குத்து விழாவில் வழங்கப்படும் வெல்லப்பாகு கலந்த அரிசி |
| காய்விழுதல் | - | கருச்சிதைவு |
| காரவீடு | - | செங்கல், மணல், சுண்ணாம்பு வைத்துக் கட்டப்பட்ட வீடு |
| காலம்பற | - | காலையில் |
| கிடாரி | - | பெண்கன்று |
| கிள்ளாக்கு | - | ஊர்கோவிலில் திருவிழா நடத்த ஊர் பெரியதனக்காரரிடம் கொடுக்கப்படும் வெற்றிலை. அவர் இரண்டாகக் கிழித்துப் போட்டால் உத்தரவு கிடைத்து விட்டது என்று பொருள் |
| குச்சில் | - | மிகச் சிறியவகை வீடு, தென்னை, பனை ஓலைகளால் கட்டப்பட்ட வீடு |
| குட்டு | - | இரகசியம் |
| குத்துக்கல் | - | குளத்தில் உள்ள நீரின் அளவை அளக்க உதவும் அளவுக் கல்தூண் |
| கும்பா | - | வாயகன்ற குழிவான சாப்பாட்டுப் பாத்திரம் |

| | | |
|---|---|---|
| கும்மாயம் | - | குழையச் சமைத்த பருப்பு உணவு |
| குருட்டரிசி | - | கருப்பு நிற அரிசி |
| குலுக்கை | - | தானியங்கள் போடப் பயன்படும் பெரிய அளவிலான மண் பானை |
| குளுவன் | - | பன்றி வளர்த்து வாழும் ஒருவகை இனம் |
| குறுணி | - | எட்டுப்படி கொண்ட அளவு |
| குறுணி வெதப்பாடு | - | 8 செண்ட் பரப்பளவு கொண்ட வயல் |
| குனுக்கு | - | பெண்கள் அணியும் காதணி வகை |
| கூதி | - | பெண்குறி |
| கூப்பதினி | - | கூழாகக் காய்ச்சிய பதனீர் |
| கூரவு | - | கேழ்வரகு, தானியவகை |
| கூறு, கூறுபாடு | - | புத்திசாலித்தனம், அறிவு |
| கெதி | - | உடம்பில் உள்ள சக்தி |
| கேந்தி | - | சிவந்திப் பூ |
| கைப்பக்குவம் | - | நாட்டுப்புற வைத்தியம் |
| கைமாத்து | - | கடனாகப் பெறும் பணம் |
| கொட்டான் | - | மிகச் சிறியவகை பனைஓலை அல்லது நாரில் பின்னப்பட்ட பெட்டி |
| கொடை | - | நாட்டுப்புறக் கோவில் திருவிழா |
| கொத்து | - | வேலைகளுக்குப் பணத்திற்குப் பதிலாகக் கொடுக்கப்படும் தானியம் |
| கோட்டை | - | 8 நாழி அளவுள்ள 28 மரக்கால் அல்லது 8 படி அளவுள்ள 21 மரக்கால், 21 மரக்கால் அல்லது 1.75 ஏக்கர் நிலம் |
| சக்கர | - | ஆண் குழந்தையின் குறி |
| சகடை | - | அலங்கரித்த தெய்வங்களின் உருவத்தை இழுத்துவரும் வண்டி |

| | | |
|---|---|---|
| சங்காத்தம் | - | உறவு, நட்பு |
| சங்கு | - | குழந்தைகளுக்குப் பால் கொடுக்கப்பயன்படும் சிறியவகை கடல் சங்கு, பாலாடை |
| சடுகுடு | - | கபடி விளையாட்டு |
| சப்பாத்து | - | காலணி, செருப்பு |
| சம்மந்தி | - | கணவரின் தங்கை |
| சல்லடம் | - | சுடலைமாடன் சாமி ஆடுபவர் அணியும் கறுப்பு நிறக் கால்ச்சட்டை |
| சாடை | - | சாயல், முகச் சாயல் |
| சாம்பாக்கமார் | - | பறைவர் இனத்தவர் |
| சாரம் | - | கைலி |
| சிட்டை | - | வரவு செலவு கணக்கு எழுதும் புத்தகம் |
| சிப்பம் | - | பத்து கிலோ கருப்புக்கட்டி கொண்ட ஓலைப்பெட்டி |
| சிராய் | - | பனங்கட்டை, மரக்கட்டை போன்றவற்றைச் செதுக்கும் பொழுது வரும் சிறு மரத்துண்டு |
| சிறுவாடு | - | வீட்டுப் பெண்கள் சேமித்து வைக்கும் பணம் |
| சீக்காளி | - | நோயாளி |
| சீக்கு | - | நோய் |
| சுணக்கம் | - | தாமதம் |
| சுத்தமா | - | முழுவதும் |
| சுதந்தரம் | - | அறுவடையின் போது சேவகம் செய்யும் சாதியினர்கள் பெறும் தானியம் |
| சுருக்க, சுருக்கா | - | விரைவாக |
| சுவரொட்டி | - | ஆட்டின் மண் ஈரல், சிறிய சிமினி வகை விளக்கு |
| சுளவு | - | முறம் |

| | | |
|---|---|---|
| சூத்தை | - | காய் பழங்களில் உள்ள சொத்தை |
| சூலிப்பிள்ளை | - | கர்ப்பிணிப்பெண் |
| செங்காமட்டி | - | செங்கல் |
| செங்கணக்கு | - | பொய்க்கணக்கு |
| செம்மான் | - | தோல் உபகரணங்கள் செய்யும் தோல் கலைஞர் |
| செல்லடித்தல் | - | கடனைத் திருப்பிக் கொடுக்கையில் கடன் பத்திரத்தில் வரவு வைத்தல் |
| செலவுப்பெட்டி | - | சமையல் பொருட்கள் வைக்கப்பயன்படும் அஞ்சறைப் பெட்டி |
| சேக்காளி | - | நண்பன் |
| சேகரம் | - | குடும்பம், வம்சம் |
| சேடான் | - | பூரான் |
| சொக்காரன் | - | தந்தைவழி உறவினர் |
| சொச்சம் | - | செலவு செய்தது போக மீதி உள்ள பணம் |
| சொண்டான் கலயம் | - | சிறிய மண் சட்டி |
| சொதி | - | தேங்காய்ப்பாலில் செய்யப்படும் குழம்பு வகை |
| சொர்ணப்பம் | - | சாமி ஊர்வலம் வரும்போது சாமிக்குத் தேங்காய் பழம் வைத்து அர்ச்சனை செய்வது |
| சோட்ட | - | பருத்திக்காய் பிஞ்சு |
| சோமாறு | - | பரிமாறு |
| சோலி | - | வேலை |
| தகணு | - | தவின், முளைவிட்ட பளங்கொட்டையின் உள் இருக்கும் பொருள் |
| தகரால் | - | சிறு வாய்ச்சண்டை |
| தட்டாக்குடி | - | பொற்கொல்லர்கள் வாழும் பகுதி (குடி ‘இனம், சாதி’) |

| | | |
|---|---|---|
| தடயம் | - | தங்க நகை |
| தடியங்காய் | - | சாம்பல் பூசணி |
| தண்டட்டி | - | பெண்கள் அணியும் காதணி வகை |
| தண்டல் | - | தோணித்தலைவன் |
| தருவை | - | இரண்டு மணல் மேடுகளுக்கு இடையே உள்ள பசுமையான பகுதி |
| தவசுப்பிள்ளை | - | வீடுகளில் சமையல் வேலை செய்பவர் |
| தவட்டை | - | கன்னம் |
| தளகயறு, தளநாரு | - | பனை ஏறுபவர் காலில் மாட்டிக் கொள்ளும் வட்டவடிவக் கயறு |
| தாக்கல் | - | செய்தி, தகவல் |
| தாக்கோல் | - | திறவுகோல், சாவி |
| தாச்சல் | - | கோவணம் |
| தாம்போதி | - | தரைப்பாலம் |
| தாயாதி | - | உறவு முறைக்காரர் |
| தாவா | - | முறையீடு |
| தானாதி | - | பண்ணையார் வீட்டு மேலாளர் |
| திட்டுவாசல் | - | வீட்டின் பின்புற வாசல் |
| திருக்கண் சாத்துதல் | - | சாமியைத் தரிசித்தல் |
| திருக்குச்செம்பு | - | கூஜா |
| திருவலக்குத்தி | - | தேங்காய்துருவி |
| திருவை | - | மாவு அரைக்கப்பயன்படும் வட்டவடிவக் கல் இயந்திரம் |
| தீரவாசம் | - | நதிநீர்ப் பாசனம் பெறும் வயல் |
| தீவு | - | தண்ணீர் இல்லாது நெற்பயிர் முழுமையாக விளையாது கருகிப் போகுதல் |

துட்டி - சாவு, சாவுச்செய்தி

துடுப்புக்குழி - பிள்ளை பெற்ற பெண்கள் குளிக்கும் நீர் தேங்கும் பள்ளம்

துத்தி - பிரசவமான பெண்கள் வயிற்றில் ஏற்படும் வரித்தேமல்

துப்பரவா - முழுவதுமாக

துப்பாளு - பணத்திற்காகச் செயல்படும் உளவாளி

துரத்தல் - இருமல்

துலாம் - நூறு பலம் கொண்ட நிறுத்தல் அளவை

தலுக்கக்குடி - இசுலாமியர் வாழும் பகுதி

துலச்சல் - இரும்புக் கருவிகளைத் தீயில் இட்டு சூடாக்கி கூர்மையாக்குதல்

தெக்கமாற - தென்திசை நோக்கி

தேட்டம் - தேடிய செல்வம்

தேரி - மணல்மேடு, மணற்பாங்கான நிலம்

தொடுப்பு - கள்ள உறவு

தொண்டி - களவு போன பொருள்

தொவளம் - கிணற்றுச் சுவர்

தோண்டி - நீர் இறைக்கப் பயன்படும் ஓலையில் முடைந்த பட்டை

நட்டக் குத்தற - செங்குத்தாக

நத்தம் - கிராமத்தில் குடியிருப்புப் பகுதி

நல்லது - நல்லபாம்பு

நாண்டிட்டு - தூக்கிட்டுக் கொண்டு

நாளா அன்னக்கி.˙.நாளைக்கழிச்சி - நாளை மறுநாள்

நீத்தண்ணி/நீச்சுத்தண்ணி - பழைய சோற்றுத் தண்ணீர்

| | | |
|---|---|---|
| நீர் | - | சம அந்தஸ்து உள்ளவர்களுக்குப் பயன்படுத்தும் விளிச்சொல், நீங்கள் |
| நுணா | - | மஞ்சனத்தி மரம் |
| நுப்பது | - | முப்பது |
| நூனாழி | - | தறியில் ஓடும் ஓடம் |
| நெடுப்பம் | - | நீளம் |
| நேரியல் | - | ஜரிகைத்துண்டு |
| நேரத்தே | - | உரிய நேரத்தில் |
| நொட்டாங்கை | - | இடதுகை |
| நொடிச்சுப்போச்சு | - | வியாபாரத்தில் நஷ்டம் ஆகிவிட்டது |
| நோடி | - | சாலையில் உள்ள பள்ளம், குழி |
| பத்து | - | வயல் |
| பக்கா | - | படி, முகத்தலளவை |
| பக்கம் | - | நாள் |
| பகடை | - | அருந்ததி இனத்தவர் |
| பச்சவட்டுக்கல்லு | - | சுடாத செங்கல் |
| பஞ்சார | - | சீனி, வெள்ளைச் சர்க்கரை |
| பட்டி | - | ஆட்டுக்கிடை |
| படிச்செலவு | - | அன்றாடச் செலவு |
| பண்டுவம் | - | மருத்துவ சிகிச்சை |
| பண்டுவரி | - | மருத்துவர் |
| பதக்கு | - | இரண்டு மரங்கால் கொண்ட முகத்தல் அளவு |
| பதவல் | - | குப்பை |
| பயினி | - | பதநீர் |
| பலவட்டறை | - | பல ஆண்களுடன் தொடர்புள்ள பெண் |

| | | |
|---|---|---|
| பள்ளிவாசல் | - | மசூதி, இசுலாமியர்களின் தொழுகை இடம் |
| பாக்கி | - | செலவு போக மீதம் உள்ள பணம், கடன் |
| பாடு | - | மீன் பிடிக்கும் அளவு |
| பாம்படம் | - | பெண்கள் காது வளர்த்து அணியும் அணிகலன் |
| பிசானம் | - | தை, மாசி மாத அறுவடைக்காலம் |
| பிஞ்சை | - | புன்செய் நிலம் |
| புல்லமாடு | - | வெளிர் பழுப்பு நிற மாடு |
| பூட்டு | - | ஐந்து வாழை இலைகள் கொண்ட அடுக்கு |
| பூவரி | - | தென்னம் பூ |
| பெறாட்டி | - | பிறகு |
| பேருவாதி | - | சரிபாதி |
| பைதா | - | வண்டிச் சக்கரம் |
| பைய | - | மெதுவாக |
| பொக்கணம் | - | பரதேசிகள் பிச்சை எடுக்கும் பை |
| பொட்டச்சி | - | பெண் |
| பொத்தை | - | சிறு குன்று |
| பொதி | - | பருத்தியின் எடை அளவு |
| பொதியல் | - | களத்தின் முதல் மரக்கால் நெல்லை கடவுளுக்குக் காணிக்கையாகச் செலுத்துதல் |
| பொழி | - | இரண்டு நிலங்களுக்கு நடுவில் உள்ள வரப்பு |
| பொழுதடைய, பொழுதூற | - | சாயங்காலம், மாலை, பொழுது சாயுங்காலம் (பொழுது 'சூரியன்') |
| போக்காளன் | - | இளம் வயதில் இறந்து போனவன் |
| போக்குவெயில் | - | மாலைநேர வெயில் |

| | | |
|---|---|---|
| மடப்பள்ளி | - | கோவில் சமையல் அறை |
| மண்டையிடி/மண்டைக்குத்து | - | தலைவலி |
| மய்யம் | - | சவம், சடலம் |
| மயினி | - | அண்ணி |
| மாக்கான் | - | மூடன், மடையன் |
| மாச்சல் | - | சோம்பல், திகைப்பு |
| மாசில் | - | மகசூல், விளைச்சல் |
| மாட்டுத்தாவணி | - | கால்நடைச்சந்தை |
| மாணி | - | ஆண் குறி |
| மாப்பு | - | மன்னிப்பு |
| மிராட்டிச்சி | - | நரிக்குறவப் பெண் |
| முக்கட்டு | - | மூன்று கற்கள் வைத்துச் செய்யப்பட்ட ஆண்கள் அணியும் காதணி |
| முக்குறுணி | - | மூன்று மரக்கால் பரப்பளவு கொண்ட நிலம், 24 செண்ட் |
| மூசு | - | கலப்பில்லாத சுத்தத் தங்கம் |
| மூதி | - | வசைச்சொல் |
| மூணு | - | மூன்று |
| மேழி | - | கலப்பை |
| மேனி | - | நிலத்தின் சராசரி விளைச்சல் |
| மையவாடி | - | சுடுகாடு |
| ராயபுரி | - | நாட்டுச்சர்க்கரை |
| ருசுப்பித்தல் | - | நிருபித்தல், மெய்ப்பித்தல் |
| மேக்கமாற/மேக்கால.·.மேக்கநிக்க | - | மேற்கு நோக்கி |
| ரொக்கம் | - | கடன் இல்லாது கொடுக்கப்படும் முழுப்பணம் |

| | | |
|---|---|---|
| வங்கணம் | - | பட்டினி |
| லத்தி | - | யானை, குதிரைகளின் சாணம் |
| லாம்பெண்ணெய் | - | மண்ணெண்ணெய் |
| வடலி | - | இளம் பனைமரம் |
| வள்ளிசா | - | முழுவதுமாக |
| வல்லயம் | - | மாடசாமி கோவில் ஈட்டி |
| வலசை | - | இனப் பெருக்கத்திற்குப் பறவைகள் கூட்டமாகத் தொலைதூரம் இடம்பெயர்தல் |
| வாராங்கய் | - | வயலுக்குத் தண்ணீர்பாயும் வாய்க்கால் |
| வாச்சி | - | பனங்கம்பைச் செதுக்கப்பயன்படும் கோடாலி போன்ற கருவி |
| வாரி தண்ணி | - | வீட்டுக் கூரையிலிருந்து விழும் மழைத் தண்ணீர் |
| விசனம் | - | துக்கம் |
| விடல் | - | சூறைத்தேங்காய் |
| விடலை | - | இளம்பிராயத்து ஆண் மகன் |
| விதப்பாடு, வெதப்பாடு | - | புன்செய்க்காடு |
| வெஞ்சனம் | - | சமைத்த காய்கறி |
| வெம்பா | - | மூடுபனி |
| வெருகு | - | ஆண் பூனை |
| வெள்ளப் பூடு | - | பூண்டு |
| வெளம் | - | கோபம் |
| வேதக்கோவில் | - | கிறித்தவர் ஆலயம் |

## 3. கொங்கு வட்டாரப் பேச்சுவழக்கு/கிளைமொழி

## (கொங்குநாடு)

| | | |
|---|---|---|
| அக்கட்ட, அக்கட்டால, அக்கெட்டை, அந்தாண்ட | - | அந்தப்பக்கம் |
| ஆக்கர கண்டி | - | வாயாடி |
| அக்கியாணம் | - | தொல்லை, தொந்தரவு |
| அகிலாட்டி | - | தன் வேலைக்காக மட்டும் பிறரை அணுகும் பெண் |
| அகினி | - | பனைமட்டை நார் |
| அங்கத்த | - | அந்தப்பக்கம் |
| அங்கராக்கு | - | சட்டை |
| அங்காணி | - | துளை |
| அச்சானியம் | - | அபசகுனம் |
| அசரிக்கை | - | தூக்க மயக்கம் |
| அட்டுக்குஞ்சு | - | பிறந்து ஓரிரு நாட்களே ஆன பறவைக் குஞ்சி |
| அட்டுரு | - | ஓடட்டை |
| அடப்பம் | - | அடைப்பம், நாவிதரின் பெட்டி |
| அடிகரை | - | ஆறு, குளக்கரைகளை ஒட்டியுள்ள நிலப்பகுதி |
| அடுக்குமொடா | - | ஒன்றன்மேல் ஒன்றாக அடுக்கி வைக்கப்படும் ஏழு அல்லது ஒன்பது பானைகள் |
| அண்டை | - | தயிர், பால், உப்பு போன்றவற்றைப் போட்டு வைத்துக் கொள்ளும் மூங்கில் பாத்திரம் |
| அண்ணன் | - | தந்தை |
| அத்துவானக்காடு | - | ஆள் இல்லாத இடம் |
| அதிக்களம் | - | ஆணவம் |
| அதுக்கோசுரம் | - | அதற்காக |

| | | |
|---|---|---|
| அந்தவாட்டி | - | அந்த முறை |
| அந்தாணி | - | சாமான்கள் வைப்பதற்காக மரத்தால் செய்யப்படும் அடுக்குப் பலகை |
| அந்துசு | - | ஒழுங்கு, நேர்த்தி, அழகு |
| அப்பச்சி | - | தாயின் தந்தை |
| அப்பத்தா | - | தந்தையின் தாய் |
| அப்பாரு | - | தந்தையின் தந்தை |
| அம்பிலி | - | சோளக்கூழி |
| அம்மாயி, அமத்தா | - | அம்மாவின் தாய் |
| அமட்டு | - | அவ்வளவு |
| அரட்டை | - | மூங்கிலால் செய்யப்படும் தடுக்கு |
| அரம் | - | மாடுகளின் பெண்குறி |
| அல்லக்கயிறு, இடக்கயிறு | - | பனைமரங்களில் பதனீர் இறக்க ஏறுபவர் இடையில் கட்டிக் கொள்ளும் பிரம்பு போன்று பின்னப்படும் தோல் கயிறு |
| அல்லச்செவுரு | - | அல்லைச்சுவர், பக்கச்சுவர் |
| அலகு கருது | - | திருவிழாக்காலங்களில் நெற்கதிர்களைக் கட்டி வட்டமாகத் தொங்கவிடும் அலங்காரம் |
| அவடத்த | - | அங்கே |
| ஆவுதி | - | அவசரம் |
| தொம்பை | - | பெரிய வகைக் கூடை |
| அன்னம் | - | சரியாக வேகாத சோறு |
| அனுசு | - | தாலியில் கோர்க்கப்படும் ஆறு சதுரம் கொண்ட நகை |
| ஆகிடியம் | - | தற்காலிகம் |
| ஆசாரம் | - | வீட்டு முற்றம், வரவேற்பு அறை |
| ஆசுவம் | - | பிச்சை |

| | | |
|---|---|---|
| ஆட்டுப்பட்டி | - | ஆடுகளை அடைத்து வைக்கும் பட்டி |
| ஆடி வெட்டை | - | ஆடி மாதத்தில் விதைப்பு இருக்கும். வரவு இருக்காது. கையிலிருந்தே பணம் செலவழிக்க வேண்டும். அத்தகைய செலவுகள் |
| ஆத்தா | - | அப்பாவின் தாய் |
| ஆமரம் | - | ஆண் பனைமரம் |
| ஆராட்டம் | - | பசி மயக்கம் |
| ஆரியக்கல் | - | தானியங்கள் அரைக்கும் கல்லால் ஆன இயந்திரம் |
| ஆரியம் | - | கேழ்வரகு |
| ஆரியரட்டு | - | கேழ்வரகுத் தவிடு |
| ஆலாம்படி | - | மாட்டு வகைகளில் ஒன்று |
| ஆவசோவை | - | தெம்பு |
| ஆளுக்காரன் | - | நிலம் இருப்போரிடம் ஆண்டுக்கூலிக்கு வேலைப்பார்க்கும் ஆள் |
| ஆயா | - | பாட்டி, அப்பாவின் தாய் |
| இக்கம் | - | இடுப்பு |
| இக்கட்ட | - | இந்தப்பக்கம் |
| இங்கத்த | - | இந்த ஊரினுடைய |
| இட்டேரி | - | இரு வயல்களுக்கு இடையில் உள்ள வரப்பு |
| இடும்பன் | - | குயவர் சக்கரத்தை நிலை நிறுத்திச் சுற்றும் வலிமையான கல் |
| இந்த வாட்டி | - | இந்த முறை |
| இருசி | - | கடினமான, இறுகிய |
| இருசு | - | வண்டி அச்சு |
| இருப்பணம் | - | கொடிக்காலில் வெற்றிலை கிள்ளக் கட்டைவிரலில் அணியும் கத்தி |

| | | |
|---|---|---|
| இல்லெடம் | - | வீடு, வசிப்பிடம் (இல்லம் - வீடு) |
| இவடத்த | - | இங்கே |
| ஈசுகன்னு | - | குறைப்பிரசவத்தில் மாடு ஈன்ற கன்று |
| ஈசுகுட்டி | - | குறைப்பிரசவத்தில் ஈன்ற ஆட்டுக்குட்டி |
| ஈத்து | - | ஆடு மாடுகளின் மகப்பேறு எண்ணிக்கை |
| உக்கலச்செயினு | - | கழுத்தோடு ஒட்டும் படியாக அணியும் அணிகலன் |
| உசுப்பேற்றுதல் | - | தூண்டுவிடுதல் (உசுப்பு - எழுப்பு) |
| உம்பான் | - | உணவு |
| உயிர்நிலை | - | ஆண்குறி |
| உருமாலை | - | தலைப்பாகை |
| உருவு | - | நோய் நொடி வராமல் இருக்க நேர்த்திக் கடனாகக் கோவிலில் வைக்கும் மண்ணால் ஆன உருவம் |
| உழப்பு | - | சேற்றையும் தண்ணீரையும் சேர்த்துக் கலக்குதல் |
| உறிச்சட்டி | - | உறியில் உள்ல மண் சட்டி |
| ஊசை | - | கெட்டுப்போன தானியம் |
| ஊட்டி | - | முன் கழுத்தின் நடுவில் இருக்கும் மூச்சுக்குழாய் |
| ஊடு கூட்டுதல் | - | குழந்தை பெற்ற பெண்ணை வீட்டுக்குள் அழைத்தல் |
| ஊடுமுட்டி | - | பெருச்சாளி |
| ஊய்க்கா | - | எருமை |
| ஊர்க்கொத்து | - | நாட்டாண்மை |
| ஊர்சுத்தி | - | பன்றி |
| ஊர்ப்பண்ணாடி | - | ஊர்த்தலைவர் |

| | | |
|---|---|---|
| ஊறல் | - | சாரயம் காய்ச்சப்பயன்படும் பொருட்களின் கலவை |
| ஊன் | - | பழங்களின் சதைப்பகுதி |
| ஊனு | - | பலமாகத் தாக்கு |
| எக்கட்ட | - | எங்கே |
| எச்ச | - | அதிகம் |
| எசிலி | - | போட்டி |
| எட்டாநாளு | - | வரப்போகிற அல்லது கழிந்து போன வாரத்தின் இதே நாள் |
| எட்டு | - | வாரம், ஏழு நாட்கள் |
| எட்டி | - | வேகமாக |
| எடங்காடு | - | இடைஞ்சல் |
| எடவாடு | - | முறையற்ற ஆண் - பெண் உறவு |
| எதுப்பொண்ணு | - | ஒரெ வீட்டில் பெண் கொடுத்துப் பெண் எடுத்தல் |
| எம்மல்காரன் | - | ஏமாற்றுக்காரன் |
| எருமா மட்டை/எருவாட்டி | - | சாணத்தின் வரட்டி |
| எருவு | - | நிலத்திற்குப் போடப்படும் உரம் |
| எலிப்பூண் | - | எலிப்பொறி |
| எவ்வெட்டு | - | எட்டு எட்டாக |
| ஏகடியம் | - | கேலி, கிண்டல் |
| ஏரி | - | மிக உயரமான வரப்பு |
| ஏருபனை | - | கள், பதநீர், தரும் பனைமரம் |
| ஏனம் | - | பாத்திரம் |
| ஒச்சொடி | - | மெலிந்த, இளைத்த |

| | | |
|---|---|---|
| ஒட்டக் கூத்து, ஒட்ட நாடகம் | - | ஒட்டரைத் தலைவராகக் கொண்ட ஒருவகைக் கூத்து |
| ஒட்டுக்கூடை | - | சிறுவகைக் கூடை |
| ஒடக்கான் | - | ஓணான் |
| ஒட்டுக்கஞ்சோறு | - | பொங்கலில் சிறுது எடுத்துக் கடவுளுக்குப் படைக்கப்படும் சோறு |
| ஓடை | - | கால்நடைகளின் விரை |
| ஒண்டிக்காரி | - | வேலைகளில் உதவி செய்ய ஆள் இல்லாத பெண் |
| ஒண்டு | - | தேன் எடுப்பதற்கு மலைப்பகுதிகளில் பயன்படுத்தப்படும் ஒற்றை மூங்கில் |
| ஒதவு | - | ஆட்டின் இரைப்பையில் செரிக்காமல் இருக்கும் உணவு |
| ஒப்புட்டு | - | கடலைப்பருப்பும் மைதாமாவும் வெல்லமும் சேர்த்துத் தயாரிக்கப்படும் தின்பண்ட வகை |
| ஒரட்டாங்கை/சொன்னாங்கை | - | இடதுகை |
| ஒரப்பு | - | குண்டாக இருப்பது |
| ஒரு அட்டை | - | சமவயது |
| ஒருக்கா | - | ஒரு முறை |
| ஒரு சந்தி | - | ஒருவேளை மட்டும் உணவு உண்ணாமல் இருக்கும் விரதம் |
| ஒருபாடு | - | வேலையில் குறிப்பிட்ட ஒரு பகுதி |
| ஒரு விச | - | ஒருமுறை |
| ஒல்லு | - | உரல் |
| ஒலகு | - | நீரை வயலில் வடகட்ட ஒருபக்கமாகப் பறிக்கும் குழி |
| ஒலைத்தல் | - | நாய் குரைத்தல் |
| ஒளத்தி | - | சுவை |

ஓடை - நான்கைந்து வயல்களை உள்ளடக்கிய நிலப்பகுதி

ஓரி - உடன் பிறப்புகள் எவரும் இல்லாது ஒரே பிள்ளையாகப் பிறந்தவர்

ஓல - பெண்கள் அணியும் காதணிகலன்

ஓலவாய் - பொக்கை வாய்

ஓலைக் குடை - பனை ஓலையில் செய்த குடை

ஓவிடியம் - உபதேசம்

ஓவு - அடுப்பின் பக்க அடுப்பு

கக்கல் - நாள்பட்ட எண்ணெயிலிருந்து வரும் வாசம்

கங்கு - கிணற்றின் விளிம்புப் பகுதி

கச்சல் - குழப்பம்

கச்சாயம் - அரிசிமாவும் வெல்லமும் கலந்து எண்ணெயில் வேகவைத்த தின்பண்டம்

கட்டுக்குடுமி - ஆண்கள் வைத்திருக்கும் குடுமி

கட்டுச்சோறு விருந்து - ஐந்து அல்லது ஏழு வகையான சோறு சமைத்து உறவினர்களை அழைத்து விருந்திட்டுக் கருவுற்ற பெண்ணை அழைத்துச் செல்லும் சடங்கு

கட்டுத்திட்டம் - ஊருக்கோ, சாதிக்கோ உரிய சட்டதிட்டம்

கட்டுப்பானை - சாராயம் காய்ச்சப் பயன்படும் வாய் கட்டப்பட்ட பானைகளின் அடுக்கு

கட்டுப்பொண்ணு - ஒரு குடும்பத்தில் பெண் கொடுத்து பெண் எடுக்கும் முறை

கட்டுமானம் - ஊர்க்கட்டுப்பாடு

கடகால் - கடைகால், அஸ்திவாரம்

கடவு - முள்வேலியில் ஒரு ஆள் நுழையுமளவு தானாகவே ஏற்படும் சிறுவழி

| | | |
|---|---|---|
| கடுக்கு | - | கடுக்கண், ஆண்களின் காதணிகலன் |
| கடுப்பான் | - | புளி சேர்த்துச் செய்யும் துவையல் வகை |
| கடுவு | - | பருத்தி எடுக்கும் முறை அளவு |
| கடையாணி | - | அச்சாணி |
| கண்ணாரை | - | நெல் சேமிக்கக் கட்டும் தொட்டி போன்ற அமைப்பு |
| கண்ணாவி | - | பசி மயக்கம் |
| கண்ணுச்சூடு | - | கண்ணிமை |
| கதுக்கு | - | கூரிய விளிம்புப் பகுதி |
| கந்தாயம் | - | ஆண்டுக் குத்தகை |
| கம்பரக்கத்தி | - | தானியக் கதிர்களை அறுக்க உதவும் சிறுகத்தி |
| கம்மி | - | குறைவு |
| கரகுட்டி | - | ஈசுகுட்டி |
| கரம்பக்காளை | - | கருமை கலந்த வெள்ளை நிறக்காளை |
| கரம்பைக்காடு | - | சிறுசிறு கற்கள் நிறைந்த மண் நிலம் |
| கரச்சோறு | - | நீர், மோர் சேர்த்துக் கரைத்த சோறு |
| கரடு | - | சிறுகுன்று |
| கரவலோடு | - | பயிறுகளை வறுக்கும் ஓடு |
| கரிஞ்சிக்குட்டிச் செடி | - | மணத்தக்காளிச் செடி |
| கருக்கடை | - | பயம், அக்கறை |
| கருக்கல் | - | மழைபெய்யத் திரளும் மேகம் |
| கருகமணி | - | கன்னிமார் என்னும் சிறு தெய்வங்களுக்குக் கழுத்தில் அணியும் ஓர் அணிகலன் |
| கருது | - | தானியக் கதிர் |
| கருப்பு | - | பிசாசு, பேய் |

| | | |
|---|---|---|
| கருப்புக் கழித்தல் | - | பங்காளி வீட்டுச் சாவுக்காக எண்ணெய் தேய்த்துக் குளிக்கும் சடங்கு |
| கருமருந்து | - | திருநீறு |
| கருமானம் | - | காசைக் கருத்துடன் செலவழிக்கும் சிக்கனம் |
| கரெறும்பு | - | கறுநிறமுடைய எரும்பு |
| கல்லக்காய் | - | நிலக்கடலை |
| கல்லுமுடி | - | எளிதில் அவிழ்க்க முடியாதபடி போடப்பட்ட முடிச்சு |
| கல்மாரி | - | ஆலங்கட்டி மழை |
| கல்லறை | - | குருணையும் கற்களும் கலந்த கலவை |
| கலயப்பானை, கலயம் | - | அடிப்பகுதி அகன்றும் வாய்ப்பகுதி குறுகியும் உள்ள சிறு பானை |
| கவுச்சி | - | துர்நாற்றம் |
| கவுளி | - | 104 எண்ணிக்கை கொண்ட வெற்றிலை அளவு |
| கழிவு கொப்பு | - | நெல்வயலில் எஞ்சியுள்ள தண்ணீர் செல்லும் வாய்க்கால் |
| கழுத்தேரி | - | வரிசையில் இரண்டாவதாகச் செல்லும் ஏர் |
| கள்ளுத்தண்ணி/கள்ளுத்தெளுவு | - | கள் |
| களக்கொத்து | - | களைச் செடிகளை வெட்டி எடுக்கும் கருவி |
| கறவை, கறவைப்பண்டம் | - | பால் கறக்கும் மாடு |
| கன்னிவெடை | - | முதன் முதலாக முட்டையிடும் கோழி |
| காடுகாட்டரது | - | கணவன் இறந்த பின் மனைவியைப் பிறபெண்கள் நிலத்திற்குக் கூட்டிச் செல்லும் சடங்கு |
| காணிகாச்சி கோயில் | - | குல தெய்வக் கோவில் |
| காதுப்பொன் | - | காதில் சுருள்போல் அணியும் அணிகலன் |

காதோலை - கன்னிமார் எனும் சிறு தெய்வத்திற்குக் காதில் அணியும் அணிகலன்

காப்பு - பெண்கள் கையில் அணியும் பட்டையான அணிகலன்

காமஞ்சூலை - வானவில்

காராட்டு - நாய், பூனை போன்ற மிருகங்களின் புணர்ச்சி

காரி, காரிமாடு - கரு நிறமுடைய மாடு

காரொழவு - கார்கால உழவு, ஆவணி, புரட்டாசி மாதங்களில் விதைப்புக்கு முன் உழும் உழவு

கால்மிதி - காலடிச்சுவடு

காளி - கதிரின் காம்புப் பகுதி

காளை சேர்த்தல் - பசுமாட்டைக் காளையோடு புணரவிடுதல்

கானக்காடு - சுடுகாடு

கிச்சம் - அக்குள்

கிண்ணி - மேலே அகன்று அடியில் குவிந்துள்ள சாப்பாட்டுக்குரிய வெண்கல அல்லது பித்தளைப் பாத்திரம்

கிறுக்கி - அடைக்கோழி

கீகோடு - நிலத்தின் கிழக்குப் பக்க மூலை

குக்கல் - நாய்

குக்கு - உட்கார் (ஈ குந்து - உட்கார்)

குச்சிக்கெழங்கு - மரவள்ளிக் கிழங்கு

குச்சூடு - ஓலை அல்லது தட்டைகளால் வேயப்பட்ட சிறு வீடு (குச்சுவீடு)

குசலக்காரன் - கோள் சொல்பவன்

குசலம் - ஒருவரைப் பற்றி இன்னொருவரிடம் அவதூறு கூறுதல்

| | | |
|---|---|---|
| குட்டான் | - | குவியல் |
| குட்டை | - | அணப்பை விட மிகச் சிறிய நிலப்பரப்பு |
| குடி எழுப்புதல் | - | ஆதிக்கம் வாய்ந்தவர்கள் தங்கள் கீழிருப்பவர்களை வசிக்கும் இடத்தைவிட்டு விரட்டுதல் |
| குடிபடை | - | எல்லாச் சாதியையும் சேர்ந்த மக்கள் |
| குடிவளவு | - | உயர் சாதியினர் (குடியானவர்) குட்யிருப்புப்பகுதி |
| குடிவெளம்பி | - | குடும்பம் வாய்க்கப் பெறாதவன் |
| குடிவைத்தல் | - | உயர் சாதியினர் தங்களது தேவைக்காகக் கீழ்சாதியினரைக் தமது ஊரில் வசிக்கச் செய்தல் |
| குடுசு | - | பருவமடைந்த பெண் உட்காரப் பச்சை ஓலையால் கட்டப்படும் அமைப்பு (ஈ குடிசை) |
| குடுவு | - | இடுப்பு |
| குண்டி | - | ஆணின் விறை |
| குத்தரபெட்டி | - | கம்பு போன்ற தானியங்களை உரலில் போட்டு இடிக்கும் பொழுது சிதறாமல் தடுக்க அமைக்கப்படும் கூடை போன்ற சாதனம் |
| குதிரைப்பொலி | - | ஒரே இடத்தில் நிலம் அமையாமல் பிறருடைய நிலங்களுக்கு இடையே சிறிது சிறிதாக இருத்தல் |
| குதிரைமுகம் | - | முழங்காலுக்குக் கீழுள்ள காலின் முன் பகுதி |
| குந்தலை, குந்து | - | காலை மடக்கிப் பின்பகுதி நிலத்தில் படாது உட்காருதல் (குந்து 'உட்கார்') |
| குந்தானி | - | நெல் உமி நீக்கப் பயன்படும் மரத்தாலான உரல் |
| குமுணி | - | குன்றிமணி |

| | | |
|---|---|---|
| குலம் | - | கொங்குப்பகுதிக் கவுண்டர் சாதியினுள் இருக்கும் செடி, கொடி, பறவை பெயர்களைச் சின்னமாகக் கொண்ட பிரிவு |
| குழிவாசல் | - | பிணம் புதைக்க வெட்டும் குழியின் வாயில் |
| குழுதாழி | - | மாடுகளுக்குக் கழிவு நீர் வைக்கும் தொட்டி |
| குள்ளவெட்டான் | - | குள்ள நரி |
| குளுவை | - | மாத்திரை |
| குறியாப்பு | - | தானியம், சிறு செலவுகள் ஆகியவற்றை இரவல் கொடுக்கும் கைமாற்று |
| குன்னு | - | சீர்வரிசையாகக் கொடுக்கும் மிடா அடுக்கின் கீழ்ப்பகுதியில் இருக்கும் மிகப்பெரிய மிடா |
| குனுக்கம் | - | நன்கு ஊன்றிக் கவனித்தல், தெளிவாக ஒரு வேலையைச் செய்தல் |
| குனுக்கு | - | கல் இல்லாத ஒருவகைக் காதணி |
| கூகை | - | பருப்பில்லாது தண்ணீர் மட்டும் இருக்கும் தேங்காய் |
| கூச்சம் | - | வீட்டைத் தாங்கும் மரத்தூண் |
| கூசி | - | ஒருவகை மண் பாத்திரம் |
| கூட்டம் | - | ஒரு குறிப்பிட்ட இனத்தவரின் குலம் |
| கூத்தியா | - | வைப்பாட்டி |
| கூதல் | - | குளிர் |
| கூம்பு | - | கோழி ஒருமுறை முட்டையிடும் பருவம் |
| கூலிக்காளை | - | பசுவுடன் புணரப் பயன்படுத்தும் காளை |
| கூவை, கூவக்காய் | - | உள்ளே பொக்கையான காய் |
| கூளை | - | குள்ளம் |
| கெக்கலி, கெக்கலக் கை | - | நாவை மடித்து எழுப்பும் ஒருவகை ஒலி |
| கெடங்கு | - | வெற்றிலைக் கொடிக்கால் போடும் நில அளவு |

| | | |
|---|---|---|
| கெடப்பு | - | இருப்பு |
| கெடாரி | - | மாடு, எருமைகளின் ஈனும் பருவத்தில் உள்ள பெண் கன்று |
| கொரம்புக்குச்சி | - | காதில் அணியும் அணிகலன் |
| கெளை | - | அதிகக் களைப்பு |
| கேழை ஆடு | - | மலைப்பகுதியிலுள்ள ஒருவகை ஆடு |
| கைச்செலவு | - | சிறுசெலவு |
| கையோடு | - | கூரை வேய விரித்த கை போலக் குயவர்களால் செய்யப்படும் சுட்ட மண்ஓடு |
| கைவிளக்கு | - | மண் விளக்கு |
| கொக்கிச்சல்லை | - | மரங்களில் காய், தழைகளைப் பறிக்கப் பயன்படும் வளைந்த கொக்கி பொருத்தப்பட்ட நீண்ட மூங்கில் |
| கொங்கங்காளை | - | காங்கேயங்காளை |
| கொங்கடை | - | கொங்காணி |
| கொங்க மழை | - | மிகக் குறைந்த நேரத்தில் பெய்து நின்றுவிடும் மழை |
| கொங்காயன் | - | வெகுளி |
| கொங்கினி முடிச்சி | - | ஒருவகைக் கொண்டை |
| கொட்டக்காய் | - | ஆமணக்குக் காய் |
| கொட்டப்பல் | - | குழந்தைகளுகு முதலில் முளைக்கும் பல் |
| கொட்டம் | - | மாடுகளுக்கு மருந்து ஊற்றப் பயன்ப்டும் மூங்கில் குழாய் |
| கொட்டமுத்து | - | ஆமணக்கு விதை |
| கொட்டாய் | - | கொட்டகை, ஓலை வேயப்பட்ட வீடு |
| கொட்டான் | - | வெற்றிலை பாக்கு இடிக்கும் சிறிய உரல் போன்ற பாத்திரம் |

| | | |
|---|---|---|
| கொட்டேர் | - | வீட்டுக்கு எடுத்துச் செல்லும் போது சாய்ந்து கட்டி மாடுகள் இழுத்துக் கொண்டு போகும் ஏர் |
| கொடங்கு | - | கிணற்றுக்குள் இருக்கும் பொந்து (ஈ கிடங்கு - பள்ளம்) |
| கொடாப்பு | - | ஆட்டுக் குட்டிகளை அடைக்கும் மூங்கிலால் பின்னப்பட்ட அமைப்பு |
| கொடி | - | தாலி காளை, கிடா போன்றவற்றின் ஆண்குறி |
| கொண்டயம் | - | போர், வீட்டுக்கூரை, மரம் போன்றவற்றின் உச்சிப்பகுதி |
| கொணை, கொன | - | நுனிப்பகுதி |
| கொத்துக்காரன் | - | வேலைக்கு அழைத்து வரும் ஆட்களுக்குப் பொறுப்பானவன் (கொத்து 'தானியமாகக் கொடுக்கும் கூலி') |
| கோப்பு | - | வயல்களுக்குச் செல்லும் சிறிய வாய்க்கால |
| கொயக்கன் | - | வலிமை இல்லாதவன் |
| கொல | - | வயிறு |
| கொழா | - | ஆடு மாடுகளின் பெண் குறியிலிருந்து வடியும் பசை போன்ற நீர் |
| கொழி | - | கையால் மணலைச் சலித்தல் |
| கொழுந்தனார் | - | கணவரின் தம்பி |
| கொழுந்தியாள் | - | மனைவியின் தங்கை |
| கொளுவு | - | கலப்பையில் உள்ள இரும்புப்பட்டை |
| கொறக்கூடை | - | தானியம் அள்ளப்பயன்படும் கூடை |
| கொறங்காடு | - | பயிர் செய்யாமல் போட்டு இறுகிப்போன நிலம் |
| கோசக்கய் | - | தர்ப்பூசணிக் காய் |

| | | |
|---|---|---|
| கோட்டை | - | பதநீர் குடிக்கப் பனை ஓலையில் செய்யும் பட்டை |
| கோடித்துணி | - | புதுத்துணி |
| கோடி | - | இறந்தவரது உறவினர்களுக்குக் கொடுக்கப்படும் புதுத்துணி |
| கோதளம் | - | மாட்டு வண்டியில் குப்பை கொண்டு செல்லப் பொருத்தப்பட்டிருக்கும் தட்டி |
| கோந்தாளை | - | நுனிக்கரும்பு |
| கோம்பு | - | காய்கறிகளின் காம்புப் பகுதி |
| கோம்பை நாய் | - | உயரமான கால்களுடைய ஒருவகை நாய் |
| கோரி | - | மூடுபனி, மேகமூட்டம் |
| கோழை | - | பிறந்த ஆடு, கன்றுகளின் குட்டி மேல் ஒட்டியிருக்கும் பசை போன்ற பொருள் |
| கோனப்புளிய மரம் | - | கொடுக்காப்புளி மரம் |
| கோனா | - | எருமைக்கிடா |
| சங்கட்டம் | - | நோய் முற்றி உயிர் போகும் நிலை |
| சங்கடை | - | குழந்தைக்குப் பால், மருந்து கொடுக்கப் பயன்படும் சங்கு, பாலாடை |
| சட்ட மாடு | - | இரண்டு மூன்று நிறங்கள் கலந்த மாடு |
| சட்டை | - | காய்ந்த மஞ்சளின் 100 கிலோ அளவு |
| சண்டிவலி | - | தொடர்ந்து இருக்கும் பிரசவ வலி |
| சந்தவம் | - | இடியாப்பம் |
| சந்தவமரம் | - | இடியாப்பம் பிழியும் எந்திரம் |
| சப்பட்டை | - | தட்டையான வடிவம் |
| சம்படம் | - | வட்டவடிவ மூடியுடன் கூடிய பாத்திரம் |
| சம்பல் | - | சகாயம், விலைகுறை |
| சல்லக்கத்தி | - | நீண்ட மூங்கிலில் கட்டப்பட்டிருக்கும் கத்தி |

| | | |
|---|---|---|
| சலகை | - | முப்பது வள்ளம் கொண்ட நெல் அளவு |
| சலகையெருது | - | தைப்பொங்கலின் பூ நோன்புக்குப் பின் ஓடவிடப்படும் மாடு |
| சலம் | - | கிணற்றில் நீர் ஊற்றுவரும் இடம் |
| சள்ளக்கூடை | - | அறுவடை செய்த தானியக் கதிர்களை எடுத்துவரப் பயன்படும் பெரியவகைக் கூடை |
| சாக்கனாக்கடை | - | சாராயக்கடைக்கு அருகில் உள்ள அசைவ உணவுக் கடை |
| சாக்காடு | - | சாக்குப்போக்கு |
| சாக்குருவி | - | நடுவில் இரவில் கத்திப்போகும் குருவி. இது போகும் திசையில் சாவு நடக்கும் என்பது நம்பிக்கை |
| சாங்கியம் | - | சடங்கு |
| சாஞ்சோறு | - | குழம்போடு சேர்த்துப் பிசைந்த உணவு |
| சாடு | - | தாண்டு, புளி, மஞ்சள் ஆகியவற்றின் அளவுப் பெயர் (7½ வள்ளம் கொண்டது ஒரு சாடு) |
| சாணை | - | கோவில் திருவிழாவில் எடுத்துச் செல்லும் மாவிளக்குக்காகப் பிடித்து வைக்கப்படும் மாவு |
| சாப்பல் | - | சாய்வு |
| சாமி சாட்டு | - | கோவில் திருவிழாவின் தொடக்க நிகழ்ச்சி |
| சாரமண் | - | வண்ணார் உபயோகிக்கும் உவர்மண் |
| சாலு | - | நீர் நிறைத்து வைக்கும் பெரிய தவலை |
| சாவக்கட்டு | - | பந்தயக் கோழிச்சண்டை |
| சாவகாசம் | - | சகவாசம் |
| சாவடி | - | ஊர்க்கூட்டம் நடக்கும் பொது இடம் |
| சாளை | - | கொட்டகை, சிறியவகை வீடு |
| சிங்கலாட்டம் | - | தீச்செயல் |

| | | |
|---|---|---|
| சிட்டாள் | - | வேலைக்கு உதவும் சிறுவன், சிறுமியர் (ஈ சிற்றாள்) |
| சிலுப்புதல் | - | அசைத்தல் |
| சிலுவாடு | - | இனம் |
| சீக்காடி | - | கொசு |
| சீமக்கருவை | - | வேலிக்கருவை மரம் |
| சீமெண்ணெய் | - | மண்ணெண்ணெய் |
| சீர் | - | பனைமரத்தில் முதலாவது வரும் பாளை |
| சீரணம் | - | மரத்தில் துளை இட உதவும் கருவி |
| சீவனாத்தி | - | குழந்தைப் பேரு இல்லாது கணவனை இழந்துவிட்ட பெண்ணுக்குக் கணவர் வீட்டில் கொடுக்கப்படும் உதவித்தொகை |
| சுக்கடா | - | மிகச் சிறிய பையன் |
| சுக்கிட்டி | - | மிகச் சிறிய பெண் |
| சுட்டி | - | சிறிய முகத்தல் அளவைக் கருவி, உழக்கு |
| சுண்டுவேரச் செலவு | - | வால் மிளகு, கருஞ்சீரகம், கசகசா, சோம்பு போன்ற பொருட்கள் சேர்ந்தது |
| சுண்ணாம்புத் தெளுவு | - | பதனீர் |
| சுப்பை | - | குச்சி விறகு |
| சுமை | - | 104 வெற்றிலை கொண்ட அளவு |
| சுள்ளாணி | - | மரத்தால் செய்யப்படும் ஆணி |
| சுட்டு மயிர் | - | கண்ணிமை முடி |
| சூடு | - | கண்ணிமை |
| சூலவேரிக்காத்து | - | கோடைக்காலத்தில் மண்ணையும் புழுதியையும் வாரி வரும் சிறு சுழல்காற்று |
| செக்காந்தம் | - | கிண்டல் |
| செகை | - | அனல், பலம் |

| | | |
|---|---|---|
| செங்கட்டை | - | செம்மண் நிலம் |
| செங்காயன் | - | சிவந்த நிறமுடையவன் |
| செட்டுக்காரர் | - | குயவர் |
| செருவு | - | கவலை (ஈ சடவு) |
| செத்த, சித்த | - | சிறிது |
| செதுக்கால் | - | அடி, உதை |
| செம்மாலி | - | கோவில் திருவிழாக்களில் சாமிக்குச் செய்து வைக்கப்படும் காலணி |
| செய்யான் | - | சிவப்பு நிறப் பூரான் |
| செலக்கா | - | தடவை |
| செலவுப்பெட்டி | - | சமையலுக்குத் தேவைப்படும் பொருட்கள் உள்ள பெட்டி, அஞ்சறைப்பெட்டி |
| செலாம்பு | - | மீன் செதில் |
| செவுனி | - | காதிற்குக் கிழ் உள்ள பகுதி |
| செனம் | - | சீக்கிரம் |
| செனக்கொழா | - | சினைக்கொழா, எருமை மாருகள் சினையாகும் பருவத்தில் அவற்றின் உறுப்பில் வடியும் கெட்டியான திரவம் |
| சேங்கன்று | - | காளைக்கன்று |
| சேரை | - | ஒரு கையளவு தானியம் |
| சேவா | - | பனம்பழத்தின் நீட்டுவாக்குத் துண்டு |
| சேவாக்காய் | - | நன்கு கனியாத பனம்பழம் |
| சொண்டு | - | பெருஞ்செலவு |
| சொதும்ப | - | இடைவெளியின்றி |
| சொப்பு | - | மண்ணாலான சிறு கலயம் |
| சொரலை | - | இலேசான வீக்கம் |

| | | |
|---|---|---|
| சொல்லை | - | மாட்டு ஈ |
| சொலமாட்டம் | - | திருட்டுத்தனமான நடமாட்டம் |
| சொள்ளை | - | கொசு |
| சோகை | - | தானியத் தட்டைகளின் தோகை |
| சோடை | - | இயலாமை (ஈ சோடை - நன்கு விளையாத தானியம்) |
| சோத்தாங்கை | - | வலதுகை |
| சோமாரம் | - | திங்கட்கிழமை |
| தகடை | - | நன்றாகப் புடைக்கப்படாத தானியம் |
| தகுப்பு | - | வேலை செய்த களைப்பு |
| தசுக்கன் | - | கஞ்சத்தனம் நிறைந்த ஏமாற்றுப் பேர்வழி |
| தட்டம் | - | பெண்கள் பூப்பு நன்னீராட்டின் போது உறவினர்கள் எடுத்துவரும் சீர்வரிசை |
| தட்டு | - | தானியத்தட்டை |
| தட்டூடு | - | தானியத்தட்டைகளைக் கொண்டு கூரை வேயப்பட்ட வீடு |
| தட்டைக்காய் | - | காராமணி, பெரும்பயறு |
| தண்டுவன் | - | திருமணமாகாதவன் |
| தண்டை | - | சிறுகுழந்தகளுக்குக் காலில் பொடும் அணிகலன் |
| தண்ணிக்கொட்டம் | - | குளியலறை |
| தப்பட்டை | - | தட்டையாக உள்ள இசைக்கருவி |
| தப்பை | - | பட்டையாக வெட்டிச் சீவப்பட்ட மூங்கில் அல்லது பனைமரத் துண்டம் |
| தமுரு | - | ஆடு மாடுகளின் முலைக்காம்பு |
| தலக்கட்டு | - | முதல் குழந்தை |
| தலச்சுழிப்பு | - | தலைவிதி |

| | | |
|---|---|---|
| தலமார் | - | உழவில் ஏர் திரும்பும் இடம் |
| தவக்கா | - | தடவை |
| தவசம் | - | தானியவகை, கம்பு |
| தழுங்குதல் | - | பின்வாங்குதல் |
| தழை | - | மூலிகை மருந்து |
| தளவு | - | நுனி, உச்சி |
| தளுகு, தளுகு சோறு | - | கோயில்பூசையில் படைக்கப்படும் சோறு |
| தளைக்கயிறு | - | மரம் ஏறும்போது இரண்டு கால்களையும் சேர்த்துப் போட்டுக்கொள்ளும் கால்கயிறு |
| தன்னப்பால | - | தனக்குத்தானே |
| தாக்கு | - | பகுதி, வயலின் குறிப்பிட்ட ஒருபகுதி |
| தாட்டி | - | தடவை |
| தாட்டுமை | - | காரியம் சாதிக்கும் சாமர்த்தியம் |
| தாண்டிக்கெணறு | - | விவசாயத்திற்குப் பயன்படுத்த முடியாத சிறு கிணறு |
| தாத்தன் | - | அப்பாவின் அப்பா |
| தாம்பு | - | தானியக்கதிரின் மேல் மாடுகளை ஓட்டித் தானியத்தைப் பிரித்தல், போரடித்தல் |
| தாரை | - | மனிதன், ஆடு, மாடு போன்றவற்றின் கால்ச்சுவடு |
| தாலிபெருகுதல் | - | தாலிக்கயிறு தேய்ந்து போதல் |
| தாவு | - | இருகைகளாலும் சேர்த்து அள்ளும் அளவு |
| தானாவதி | - | இருவீட்டாருக்கும் இடையில் தூது சென்று பேசித் திருமணத்தை ஏற்பாடு செய்பவர் |
| திக்கசம் | - | மிகப் பெரிய உருவம் |
| திடுமுட்டி | - | தொடைகளுக்கு நடுவில் வைத்து ஓசை எழுப்பும் இசைக்கருவி |

திண்டுமல்லன் - உருவத்தில் பெரியவன்

திறவை - பிரம்பு, கொடிகள் போன்றவற்றால் பின்னப்பட்ட பிரிமனை

திருகு தண்டம் - பிறரிடம் செய்தியைச் சொல்லாது மறைத்தல்

தீட்டூடு - இழவு வீடு

தீட்டுச்சோறு - இழவு வீட்டிலும் பூப்பு நன்னீராட்டு வீட்டிலும் பரிமாறப்படும் சோறு

தீம்பு - தீங்கு

துச்சணக்காரன் - கெடுதி செய்பவன்

துத்தாரி - அறுப்புக் காலத்தில் எல்லோரையும் எழுப்ப அதிகாலையில் ஊதும் சிறு இசைக்கருவி

துப்பட்டி, துப்புட்டு - போர்வை

தும்பி - ஒற்றம் இறைக்கப் படுகையில் நீர்மோண்டு வரும் தோலால் ஆன கூடை

துலுக்கு - சாமிக்கு பலியிடும் போது ஆட்டுக் கிடாய்கள் தீர்த்தம் தெளித்ததும் தலையை அசைத்து உடலைச் சிலிர்த்தல்

துள்ளுகெடா - வெட்டுக்கிளி

தூக்குப்போசி, தூக்குப்போணி - கையில் பிடிக்கும் வளைய முனய சோறு எடுத்துச் செல்லும் பாத்திரம்

தூரி - ஊஞ்சல்

தூரிக்கல்லு - கோயிலில் நிறுத்தப்பட்டிருக்கும் கல்லால் ஆகிய ஊஞ்சல்

தெகைதல் - அமைதல்

தெனாசு - மாட்டு மேலிருக்கும் ஈ

தெப்பலம் - உடல் மெலிவு

தெரட்டி - பூப்பு நீராட்டு விழா

தெவையம் - விரதமிருப்பவர்கள் சாப்பிட உப்பில்லாமல் பொங்கப்படும் சோறு

| | | |
|---|---|---|
| தெளுவு | - | பனை, தென்னை மரங்களில் இருந்து பெறப்படும் பானம் |
| தேங்காத்தொட்டி | - | சிரட்டை |
| தேட்டம் | - | விருப்பம் |
| தேவை | - | திருமணக்காரியம் |
| தொக்கடவு | - | மனிதர்கள் செல்லும் அளவுக்கு வேலியில் உருவாக்கப்படும் சிறுவழி |
| தொட்டிக்கட்டு வீடு | - | நாற்புரக் கூரைகளிலிருந்து நீர் வந்து விழும்படி மையம் கொண்ட வீடு |
| தொட்டு | - | நிலக்கடலைத் தோல் |
| தொடுப்பு | - | முறையற்று ஆணும் பெண்ணும் கொள்ளும் உறவு |
| தொண்டுப்பட்டி | - | மாடுகட்டும் தொழுவம் |
| தொப்பை | - | புளியம்பழத் தோல் |
| தொம்பை | - | தானியங்களைச் சேகரித்து வைக்க மூங்கிலால் பின்னப்பட்ட பெரியவகைக் கூடை |
| தொல்லி | - | காய்களின் தோல் |
| தொலாவுதல் | - | தேடுதல் |
| தொலித்தல் | - | உரித்தல், தோட்டை உடைத்தல் |
| தொழுவாடு | - | வழக்கம் |
| தொறப்பு | - | பூட்டு |
| தோணி | - | மழை நீர் கீழே போய் விழும்படி இரு கூரைகளுக்கிடையே சொருகும் தகரம் |
| தோப்பரை | - | தோலால் செய்த பெரிய பை |
| தோவமொட்டு | - | ஓடு முதிராத முட்டை |
| தோனை | - | வெண்குட்ட நோய் |
| நக்கிரி | - | கீரை |

| | | |
|---|---|---|
| நங்கை, நங்கையா | - | அண்ணன் மனைவி |
| நசியம் | - | மாடுகள் சினையாவதற்கான பருவ அறிகுறி |
| நஞ்சசோறு | - | கெட்டுப்போன சோறு |
| நட்டம் | - | செங்குத்து |
| நடமாத்து | - | மணப்பெண், மணமகன் நடப்பதற்கு விரிக்கப்படும் துணி |
| நத்தம், நத்தக்காடு | - | நீர் நிலையை ஒட்டிய பகுதியில் உள்ள நிலம் |
| நப்பு | - | லேசான ஈரம் |
| நரச்சப்போதல் | - | பதநீர் கெட்டுப்போதல் |
| நவண்டு | - | கீழ் உதடு |
| நன்னி | - | நன்றி |
| நாய்க்காசு | - | சிறு குழந்தைகளின் அரைஞாண் கயிற்றில் கோர்க்கும் நாய்ப்பீடம் போட்ட சிறு செம்புத் தகடு |
| நாய்ச்சிலுவா | - | புலிவகையைச் சார்ந்த புலியைவிடச் சிறிய நாய்களை உண்ணும் மிருகம் |
| நாலாமாசம் | - | அடுத்த மாதம் |
| நாளன்னை | - | நாளை மறுநாள் |
| நிமட்டை | - | கஷ்டம் |
| நிலக்குடுசு | - | வட்டவடிவில் அமைக்கப்பட்ட சிறுகுடிசை |
| நீச்சம் | - | கெட்ட நாற்றம் |
| நீர்ச்சிலை | - | கோவணம் |
| நூட்டம் | - | வசதி, பணபலம், செல்வாக்கு |
| நெவுறு | - | நிழல் |
| நெறைமுட்டு | - | பெண்ணின் மாதவிடாய் நாட்களில் முதல் நாள், குழந்தை பிறந்த முதல் மூன்று நாட்கள் |

| | | |
|---|---|---|
| நொக்கு | - | காயம்படும் வரை பலமாக அடி |
| நொடி | - | சாலையில் இருக்கும் குழி |
| நொடித்தடம் | - | குழிகள் நிறைந்த வழி |
| நொப்பம் | - | ஒருவரின் விருப்பத்திற்கேற்ற நாக்குச் சுவை |
| நொறுக்கு | - | வயதில் சிறியவள், சிறியவன் |
| நொனை | - | பிறரைப்பற்றி இல்லாததும் பொல்லாததுமாகப் பேசும் பேச்சு |
| நோப்பாளம் | - | பிணக்கு, மனஸ்தாபம் |
| நோம்பி | - | திருவிழா, பண்டிகை |
| பக்கி | - | பறவை |
| பசுவு | - | கிராமக்கோவில்களில் மாடுகளுக்கான வேண்டுதலுக்காக கோவிலில் வைக்கும் மாட்டு உருவத்தில் அமைந்த சுடுமண் சிற்பம் |
| பட்டம் | - | திருமணத்தின் போது மணமகன், மணமகள் நெற்றியில் கட்டும் தகடு |
| பட்டாசாளை | - | வீட்டு முற்றம் |
| பட்டி | - | ஆடுகளை அடைத்துவைக்கும் அமைப்பு |
| பட்டி ஆள் | - | நேரம் - பட்டிக்காவலுக்கு ஆட்கள் வரும் நேரம் |
| பட்டிநோம்பி | - | மாட்டுப்பொங்கல் |
| பாதாளசோதி | - | கிணற்றில் விழுந்த வாளியை எடுக்கப்பயன்படும் முட்கள் போன்ற அமைப்புடைய கருவி |
| பார்ப்பு | - | வேகமாகத் தொடங்கி ஒரு சில நிமிடங்கள் பெய்து ஓய்ந்து விடும் மழை |
| பாழி | - | பாறையில் நீர் தேங்கி நிற்கும்படியான பெரிய குழி |
| பிச்சு | - | ஈரல் |

| | | |
|---|---|---|
| பிதுரு | - | பேரன் அல்லது பேத்தியின் குழந்தை |
| பிசுக்கு | - | பொருள் வாங்கிய பின் கடைக்காரர் கொடுக்கும் கொசுரு |
| பிரவை | - | பெண் ஆட்டுக்குட்டி |
| பில்லை | - | வெள்ளை கலந்த சிவப்பு நிறம் |
| பீர் | - | மாட்டின் முலைக்காம்பை ஒருமுறை இழுத்தால் வரும் பாலின் அளவு |
| புட்டு | - | இட்லி |
| புடுக்கு | - | ஆணின் விதைப்பை |
| புடுதம் | - | தடவை (ஒரு புடுதம் - ஒரு தடவை) |
| புரடை | - | பதநீர் ஊற்றி வைக்கப்பயன்படும் சுரைக்குடுக்கை |
| புருரு | - | சிறுசிறு கட்டி |
| புளிக்கோது | - | புளியம்பழத்தில் உள்ள நார் |
| பூங்குட்டி | - | ஈன்று சிறிது நேரம் அல்லது சில நாள் ஆன குட்டி |
| பூச்சிக்காளை | - | இனப்பெருக்கத்திற்காக வளர்க்கப்படும் காளை |
| பூச்சி | - | பாம்பு |
| பூட்டு | - | தடவை (ஒரு பூட்டு - ஒரு தடவை) |
| பூவிலிறங்குதல் | - | கோவிலில் நடக்கும் தீமிதித்திருவிழா |
| பூவோடு | - | தீச்சட்டி, அக்கினிச்சட்டி |
| பெரகாண்ட | - | பின்னால் |
| பெரொலச்சட்டி | - | மாமிசம் சமைக்கத் தனியாக வைத்திருக்கும் சட்டி |
| பெரியகாரியம் | - | சாவு |
| பெரியையன் | - | பெரியப்பா, பெரிய தாத்தா |

பெறக்கான் - பெருச்சாளி

பெருந்தலைக்கக்கா - அண்டங்காக்கா

பெருந்தவள் - ஆணின் தங்கை

பெறந்தவன் - பெண்ணின் தம்பி

பொங்கச்சருவம் - பொங்கல் வைப்பதற்கான பித்தளைப் பாத்திரம்

பொங்கமொடா - பொங்கல் வைப்பதற்கான பெரிய பானை

பொங்கு - பறவைகளின் இறகு

பொடக்காலி - வீட்டின் பின்புற இடம்

பொத்துதல் - கூடை, முறம் முதலியவற்றிற்குப் பனைநாரால் பழுது பார்த்தல்

பொதி - நான்கு மூட்டை தானியம்

பொம்மரம் - பெண் பனைமரம், காய் காய்க்கும் பனைமரம்

பொலி - இருவரின் நிலங்களைப் பிரிக்கும் வரப்பு

பொழப்பு - வாழ்க்கை

பொறக்காண்ட, பொறத்தாண்ட - பின்னால்

பொறி - பறவை இறகு

பொறை, பொறைமோர் - பால் தயிராக ஊற்றும் சிறிதளவு மோர்

போப்புவண்டி - வாடகை மாட்டுவண்டி

போழை - பணம் வைத்துக் கொள்ளும் சிறு பை (பேழை ‘பெட்டி’)

போன எட்டு - போனவாரம்

மக்கிரி - பெரியவகைக் கூடை

மங்கலத்தான் - நாவிதன் (மங்களச் செயல்களில் முன்நிற்பதால் இப்பெயர்)

மச்சாண்டாரு - கணவனின் அண்ணன்

| | | |
|---|---|---|
| மசநாய் | - | வெறிபிடித்த நாய் |
| மடிப்பிச்சை | - | மடியேற்றி எடுக்கும் பிச்சை |
| மதிப்பெரட்டு | - | புத்திக் குழப்பம் |
| மயிலாஞ்சி | - | மருதாணி |
| மரமேறி | - | பனை, தென்னை மரங்களில் ஏறி கள், பதநீர் இறக்குபவர் |
| மல்லு | - | மூத்திரம், சிறுநீர் |
| மறுக்கா | - | மறுமுறை |
| மறுசெலவு | - | ஒருவரின் இறப்புக்குப் பின் மாமன், மைத்துனர் செய்யும் சடங்கு |
| மருவரால் | - | ஒருவரின் இறப்புக்குப் பின் மைத்துனர் செய்யும் சடங்கு |
| மனை | - | பயிர் நடவு, களையெடுப்பு வேலைகளில் ஓர் ஆளுக்கு உரிய பகுதி (மனை 'வீடு') |
| மனுவு | - | பத்துகிலோ கொண்ட எடை |
| மாக்கான் | - | புத்தியில்லாதவன் |
| மாப்பு | - | மன்னிப்பு |
| மாரக்காய்ச்சல் | - | காசநோய் |
| மாராயம் | - | வண்ணார், நாவிதர் ஆகியவர்களுக்குக் கொடுக்கும் ஆண்டுக்கூலி |
| மாரு | - | வெண்மை நிற வெற்றிலை |
| மிச்சி, மூச்சி | - | குழந்தைகள் விளையாடப் பயன்படும் மிகச் சிறியவகை முறம் |
| மிரமிளை | - | சாமி ஊர்வலம் |
| மின்னாண்டெ | - | முன்னால் |
| முக்குவலி | - | பிரசவ வலி |
| முகாமி, முகாமைக்காரர் | - | திருமணம் போன்ற சடங்குகளில் முன் நின்று ஏற்பாடு செய்பவர் |

முட்டி - 26 கவுளி வெற்றிலை அளவு, பனைகளில் கட்டப்படும் சிறு மண்பானை

முட்டு - மாதவிடாய்

முட்டுவழி - வேளாண்மைக்குப் போடும் மூலச் செலவு

முதித்தல் - காளை பசுவோடு புணர்தல்

முந்தா நாள் - நேற்றைக்கு முன்தினம்

முடுகு - ஆண்கள் காதில் அணியும் அணிகலன்

முருவாங்கறி - பன்றிக் கறி

மூட்டுக்குட்டி, மூடு - ஆட்டின் பெண் குட்டி

மேலாக்கு - பெண்கள் மேலே போட்டுக் கொள்ளும் துணி

மேலு - உடம்பு

மேலை - அடுத்த ஆண்டு

மொக்கப்பட்டம் - விளைச்சல் இல்லாது நட்டமாகிவிடும் வேளாண்மையின் விதைப்புப் பருவம்

மொகரை - முகம்

மொகுல் - முகில், மேகம்

மொட்டம் - தடவை (ஒரு மொட்டம் - ஒரு தடவை)

மொட்டுளி - நீர்க்குமிழி

மொடாக்கிடிக்காரன் - பிடிவாதக்காரன்

மொடங்கு - ஒருமுறை விழுங்கும் நீர் அளவு

மொடா - மிகப் பெரியவகைப் பானை

மொத்தக்கை - வசதியான ஆள்

மொய்ச்சோறு - கொடுத்த மொய்ப்பணத்தை வசூலிக்க ஏற்பாடு செய்யப்படும் விருந்து

மொல்லை - தரத்துக்கு மீறிய அளவுக்கு அதிகமான கடன்

| | | |
|---|---|---|
| மொழுக்கு | - | பாம்படம் போன்ற நகை |
| மோரி | - | பாலத்தின் இருபுறமும் கட்டப்படும் சுவர் |
| மோனைக்காரன் | - | வேலைக்கு ஆட்கள் ஏற்பாடு செய்து வேலைவாங்கும் ஆள் |
| ரச்சை | - | தொந்தரவு |
| ராவு | - | இரவு |
| ரோகம் | - | யோகம் |
| வக்கு | - | வசதி, வாய்ப்பு |
| வங்கி | - | பெண்கள் முழங்கைக்கு மேல் அணியும் அணிகலன் |
| வங்கு | - | எலி, பெருச்சாளி நிலத்தில் ஏற்படுத்தும் பொந்து |
| வட்டல் | - | உணவு உண்ணும் தட்டு |
| வண்டிச்சாளை | - | வண்டிகள் நிறுத்தும் கொட்டகை |
| வதி | - | சகதி |
| வரக்காப்பி, ஒருவகை ஆடு | - | பால் கலக்காத காப்பி. வரையாடு - மலைகளில் வாழும் |
| வழமொற | - | வழக்கம் |
| வள்ளம் | - | நான்கு படி தானிய அளவு |
| வளம் | - | குப்பை மண் |
| வாசி | - | எளிது |
| வாது | - | மரக்கிளை |
| வாயில்லாப் பண்டம் | - | ஆடு, மாடு முதலிய கால்நடைகள் |
| விங்கனம் | - | பிளவு |
| விசை | - | தடவை (ஒரு விசை - ஒரு தடவை) |
| விதாயம் | - | யோசனை, ஆலோசனை |

| | | |
|---|---|---|
| விருத்தி | - | பெருக்கம் |
| வீசுகுட்டி | - | ஆடு குறை மாதத்தில் ஈனும் குட்டி |
| வெசக்கா | - | தடவை (ஒரு வெசக்கா - ஒரு தடவை) |
| வெண்டு | - | கனமற்ற மரத்துண்டு |
| வெந்தண்டம் | - | திருமண வயது வந்தும் திருமணம் ஆகாத ஆள் |
| வெரசல் | - | சுறுசுறுப்பு |
| வெவுரி | - | விடியலில் இருள் பிரிந்து லேசாக வெளிச்சம் வரத்தொடங்குதல் |
| வெள்ளாமக்காடு | - | பயிர் செய்யப்பட்டுள்ள நிலம் |
| வெறுமானம் | - | அமாவாசைக்கு அடுத்த நாள் |

## 4. பழவேற்காடு வட்டாரப் பேச்சுவழக்கு
## (தொண்டை நாடு)

சொற்கள் அனைத்தும் பழவேற்காடு கைப்பித்து எனும் தாள் சுவடியிலிருந்து சேகரிக்கப்பட்டுள்ளன.

| | | |
|---|---|---|
| அக்குள்ளே | - | அதற்குள்ளே |
| அஞ்சு | - | ஐந்து |
| அத்தாச்சி | - | சாட்சி |
| அதுகளை | - | அவைகளை |
| அப்போ | - | அபொழுது, அந்தக்காலத்தில் |
| அம்பட்டர் | - | நாவிதர் |
| அம்மான் | - | தாய்மாமன் |
| அழைப்பித்து | - | அழைத்து |
| அள்ளாற்றி | - | காலின் கீழ்ப்பகுதிப் பருமனில் இரண்டு முழம் நீளத்தில் குளலு மீன் உருவத்தில் உள்ள ஆற்று மீன் வகை |
| அன்பது | - | ஐம்பது |
| அன்னிய | - | அன்றைய |
| அன்னூறு | - | ஐநூறு |
| ஆகார முள்ள விடத்திலே | - | உணவு கிடைக்கும் இடத்தில் |
| ஆண்பிளைகள் | - | ஆண்பிள்ளைகள் |
| ஆணு பெண்ணு | - | ஆணும் பெண்ணும் |
| ஆற்றுக் கதியிலே | - | ஆற்றுக் கழியில் |
| இங்கரீசு | - | இங்கிலீசு, ஆங்கிலேயர் |
| இடங்கையார் | - | இடங்கை பிரிவைச் சேர்ந்த இனத்தவர்கள் |
| இதுகள் | - | இவைகள் |
| இரண்டாள் | - | இரண்டு ஆள் |

இருங்கெளுத்தி - பெருந்தொடைப் பருமனில் இரண்டு முழம் நீளத்தில் உள்ள கறுப்பு நிற ஆற்று மீன் வகை. இதன் தலையிலும் கன்னத்திலும் நான்கு விரற்கிடை கனம் உள்ள முள்ளுகள் இருக்கும். இந்த முள்ளுக் குத்தினால் உயிர் பிழைப்பது கடினம்.

இறா - நான்கு விரல் பருமனில் ஒரு ஒட்டை நீளம் உள்ள ஆற்று மீன் வகை

உடுப்பாற்றி - கைப்பருமனில் ஒன்றேகால் சாண் நீளமுள்ள ஆற்று மீன் வகை

உண்டாக்கப்பட்டது - உருவாக்கப்பட்டது

உண்டு பண்ணிக் கொண்டார்கள் - உருவாக்கிக் கொண்டார்கள்

உல்லம் - ஒரு ஆள் பருமனில் ஒரு விரல் நீளம் உள்ள கடல்வாழ் மீன் வகை

உலாந்தக் கும்பினி - ஹாலன்ந் தேசத்தவரின் கம்பெனி (ர்ழடயனெநச’ள ஊழஅியலெ)

உலாந்தக்காரர் - ஹாலாண்டர், ஹாலன்ந் தேசத்தவர் (Holanders)

உளுக்காந்து - உட்கார்ந்து

உளுவை - கைப்பருமனில் ஒன்றே கால் சாண் நீளம் உள்ள கடல்வாழ் மீன் வகை

உளுவை - மூன்று விரல் பருமனில் ஒரு சாண் நீளம் உள்ள ஆற்று மீன் வகை

ஊடான் பொடி - கடலிலும் ஆற்றிலும் தூண்டில் போட்டுப் பிடிக்கப்படும் சிறிய ஆற்று மீன் வகை

ஊடான் - மூன்று விரல் பருமனில் இரண்டு கை அகலத்தில் உள்ள ஆற்று மீன் வகை

எட்டடி - எட்டு அடி

எடுத்தது - உருவாக்கியது, தோண்டப்பட்டது

எருமை நாக்கு - இரண்டு கை அகலத்திலும் ஒன்றரைச் சாண் நீளத்திலும் உள்ள கடல்வாழ் மீன் வகை

| | | |
|---|---|---|
| ஒட்டாம்பாறை | - | நான்கு விரல் பருமனில் கையகலம் உள்ள கடல்வாழ் மீன் வகை. இவ்வகை மீன் தரத்தில் மட்டமாகக் கருதப்படுகிறது |
| ஒட்டை | - | கைப்பெருவிரலையும் ஆள்காட்டி விரலையும் அகலமாக விரித்து வைத்தால் உள்ள தூரம் |
| ஒண்ணரை | - | ஒன்றரை |
| ஒண்ணு | - | ஒன்று |
| ஒண்ணேகால் | - | ஒன்றேகால் |
| ஒரு குனைக்கயற்றை | - | ஒரு பக்கக் கயிற்றை |
| ஓரா மீன் | - | கைப்பருமனில் சாண் நீளத்தில் கெண்டை வடிவில் உள்ள கடல்வாழ் மீன் வகை |
| ஓலை வாளை | - | இரண்டு விரல் பருமனில் ஒன்றே கால் முழம் நீளத்தில் நான்கு விரற்கிடை அகலம் உள்ள கடல்வாழ் மீன் வகை |
| ஓலைவலை | - | ஆற்றில் மீன்பிடிக்கப் பயன்படும் ஒருவகை வலை |
| கட்டுமரக்காறனும் | - | கட்டுமரத்தில் செல்பவர்களும் |
| கட்டுமரம் | - | மரக்கடைகளை ஒன்று சேர்த்துக் கட்டிக் கடலில் செலுத்தும் படகு வடிவம் |
| கடதாசி | - | கடிதம் |
| கண்ணி வலை | - | ஆற்றில் மீன்பிடிக்கப் பயன்படும் ஒருவகை வலை |
| கப்பலு | - | கப்பல் |
| கம்மாளர் | - | விசுவகர்மர், ஆசாரி |
| கருங்கற்றளை | - | நான்கு விரல் பருமனில் ஒரு சாண் நீளம் உள்ள மீன் வகை |
| கரையார் | - | மீன்பிடி தொழில் புரியும் ஒரு இனம் |
| கல்லுவலை | - | ஆற்றில் மீன்பிடிக்கப் பயன்படும் ஒருவகை வலை |
| கலாபத்திலே | - | போரிலே, சண்டையிலே |
| கவலைப் பொடி | - | ஒன்றரை விரல் பருமனில் ஒன்றரை விரல் நீளம் உள்ள மீன் வகை |

| | | |
|---|---|---|
| கள்ளுங் | - | கள்ளும் |
| கறடி | - | கரடி |
| கற்றளை | - | மூன்றுவிரல் பருமனில் ஒரு ஒட்டை நீளம் உள்ள கடல்வாழ் கடல்வாழ் மீன் வகை |
| கறுப்புத்திருக்கை | - | நான்கு ஆள் சுமை அளவு கொண்ட வட்டவடிவத்தில் எட்டு அடி அகலம் இருக்கும் கடல்வாழ் மீன் வகை |
| கனாயிலே | - | கரையில் |
| காசாம்பொடி | - | சுண்டுவிரல் பருமனில் ஒருவிரல் நீளம் உள்ள கடல்வாழ் மீன் வகை |
| காமாட்டிகள் | - | மண்வெட்டுவோர்கள் |
| கார்பொடி | - | சிறிய வகைக் கடல்வாழ் மீன் |
| காலா மீன் | - | பெருந்தொடைப் பருமனில் ஒன்றே கால் முழம் நீளம் உள்ள ஆற்று மீன் வகை |
| காவல் மிராசு | - | காவல் காக்கும் பணி |
| கானாக்கழுத்தன் | - | ஒரு கை அகலத்தில் நான்கு விரல் பருமனில் ஒரு ஒட்டை நீளம் உள்ள கடல்வாழ் மீன் வகை |
| கிச்சா மீன் | - | விரல் பருமனில் கெண்டை வடிவத்தில் உள்ள கடல்வாழ் மீன் வகை |
| கிழங்கான் | - | நான்கு விரல் பருமனில் ஒரு சாண் நீளம் உள்ள ஆற்று மீன் வகை |
| கிளங்கு | - | கிழங்கு |
| கிறாமம் | - | கிராமம் |
| கீளண்டை | - | கிழக்குப் பக்கம் |
| கீளண்டைக் கரையிலே | - | கீழ்ப்பக்கக் கரையில் |
| கீளே | - | கீழே |
| குடங்கிலே | - | கிடங்கிலே (godown) |
| குடிக்கிற படியினாலேயும் | - | குடித்துக்கொண்டிருப்பதன் காரணமாக |

| | | |
|---|---|---|
| குடிகள் | - | குடிமக்கள் |
| குடிகளிடத்திலே | - | சாதிமக்களிடத்தில் |
| குடுத்து | - | கொடுத்து |
| குடுப்பான் | - | கொடுப்பான் |
| குப்பம் | - | சிறு கிராமம் |
| கும்பினியார் | - | வர்த்தக வியாபாரக் கடைகளை நடத்துபவர்கள் |
| கும்புகள் | - | கூட்டங்கள் |
| குருவிப்பன்னா | - | மூன்று விரல் பருமனில் ஒரு சாண் நீளம் உள்ள கடல்வாழ் மீன் வகை |
| குழிமீன் | - | காலின் கீழ்ப்பகுதிப் பருமனில் மூன்று முழம் நீளம் உள்ள மீன் வகை. இதுவே ஆற்று விலங்கு வகை ஆற்று மீன் ஆகும் |
| குளலு மீன் | - | பெருந்தொடை பருமனில் இரண்டு முழம் நீளத்தில் முகம் நீண்டு இருக்கும் ஆற்று மீன் வகை |
| குளவை | - | தொடைப் பருமனில் மூன்று முழம் நீளத்தில் விலாங்கு போல் உருவம் கொண்ட ஆற்று மீன் வகை |
| குறு மீன் | - | கைப்பருமனில் ஒரு சாண் நீளம் உள்ள கடல்வாழ் மீன் வகை |
| குறைச்சானவிடம் | - | பொருள்கள் குறைவாகக் கிடைக்கும் இடம் |
| கூச்சாயிருக்கும் | - | கூர்மையாக நீண்டு இருக்கும் |
| கெவுனர் | - | கவர்னர் (governor) |
| கெளுத்தி | - | காலின் கீழ்ப்பகுதிப் பருமனில் ஒரு முழம் நீளம் உள்ள ஆற்று மீன் வகை. இதன் இரண்டு கன்னத்திலும் முட்கள் இருக்கும் |
| கெளுத்தி | - | தொடைப்பருமனில் ஒன்றே கால் முழம் நீளம் உள்ள கடல்வாழ் மீன் வகை |
| கைக்கிளவர் | - | கைக்கோளர் |
| கையிலே விஸ்தாரமாய் | - | கையில் அதிக அளவில், கை நிறைய |

| | | |
|---|---|---|
| கொஞ்சமிருந்தால் | - | கொஞ்சம் (சிறிது) இருதால் |
| கொட்டிறா | - | நான்கு விரல் பருமனில் ஒரு ஒட்டை நீளம் உள்ள கடல்வாழ் மீன் வகை |
| கொட்டுவாளந் திருக்கை | - | பத்து ஆள் சுமை அளவு கொண்ட இரண்டு கடைவாயிலேயும் கொம்புகள் உள்ள பதினாரடி அகலம் கொண்ட வட்டவடிவக் கடல்வாழ் மீன் வகை. திருக்கை வகை மீனில் சிறியதும் பெரியதுமாகப் பத்து வகை மீன்கள் உள்ளன. |
| கொடுவா மீன் | - | ஒரு ஆள் பருமனில் மூன்று முழம் நீளத்தில் பெருவலையில் பிடிக்கப்படும் ஆற்று மீன் வகை |
| கொண்டு | - | வாங்கி |
| கொண்டைவலை | - | ஆற்றில் மீன்பிடிக்கப் பயன்படும் ஒருவகை வலை |
| கொம்பு | - | கம்பு |
| கொள்ளுகிறபோது | - | வாங்கும் போது |
| கொஸ்த குறவந்தோறென்று | - | கொண்டு வந்தாரென்று |
| கோட்டுவாளந்திருக்கை | - | ஆறுகளில் உள்ள பெரியவகைத் திருக்கை மீன் |
| சண்டை பண்ணி | - | சண்டை போட்டு, போர் செய்து |
| சதாசிவராயரை | - | சதாசிவராயரை |
| சமுத்திரத்திலே | - | கடலில் |
| சரக்கு | - | வியாபாரப் பொருட்கள் |
| சரிப்படாமல் | - | ஒத்துவராமல், தங்குவதற்கு எற்றதில்லாது |
| சாணிகளம் | - | ஒருச்சாண் நீளம் |
| சாராயுங் | - | சாரயமும் |
| சிலவு | - | அனுமதி |
| சிவலென்றிருக்கும் | - | சிவீர் என்று இருக்கும் |
| சிவன்கோவில் பாப்பார் | - | பார்ப்பருள் ஒரு பிரிவு |
| சிறுவலை | - | ஆற்றில் மீன்பிடிக்கப் பயன்படும் ஒருவகை வலை |

| | | |
|---|---|---|
| சின்னக் கோல்வாச்சி | - | இரண்டு விரல் பருமனில் ஒரு சாண் நீளம் உள்ள கடல்வாழ் மீன் வகை |
| சின்னக்கப்பித்தான் | - | சிறிய தளபது, துணைத் தளபது (ஏஉைஎந ஊயிவயபை) |
| சீமையிலே | - | அயல்நாட்டில் |
| சுதுப்பனாங்காறல் | - | மூன்று விரல் பருமனில் உள்ளங்கை அகலத்தில் அரைச்சாண் நீளம் கொண்ட கடல்வாழ் மீன் வகை |
| சுதும்பு | - | அரைக்கை பருமனில் ஒரு கை அகலத்தில் உள்ள கடல்வாழ் மீன் வகை |
| சுமை | - | தலைச் சுமைப்பார அளவு |
| சுறா மீன் | - | தொடையின் கீழ்ப்பகுதிப் பருமனில் ஒன்றரை முழம் நீளம் உள்ள கடல்வாழ் மீன் வகை |
| சூறை | - | பெருந்தொடைப் பருமனில் ஒன்றேகால் முழம் நீளத்தில் திரண்ட வடிவ கடல்வாழ் மீன் வகை |
| செகப்பு நிறம் | - | சிவப்பு நிறம் |
| செகப்பு | - | சிவப்பு |
| செத்தியாய் | - | உசத்தியாய், உயர்வாக |
| செம்படவர் | - | மீன்பிடி தொழில் புரியும் ஒரு இனம் |
| செம்மடக்கா | - | உள்ளங்கை அகலத்தில் உள்ளங்கைப் பருமனில் உள்ள ஆற்று மீன் வகை |
| செம்மடக்கா | - | உள்ளங்கைப் பருமனில் கையகலம் உள்ள கடல்வாழ் மீன் வகை |
| செம்மடவர் | - | செம்படவர் |
| செயிவார்கள் | - | செய்வார்கள் |
| செல்லுபடியாயிருந்தது | - | சேர்ந்திருந்தது, அடங்கியிருந்தது |
| செல்லுபடியான | - | சேர்ந்தது |
| செல்லும் படியா | - | சேர்ந்ததாக |
| செற்றுப் போனால் | - | செத்துப்போனால் |

| | | |
|---|---|---|
| செனங்களுடனே | - | சனங்களுடன் |
| செனம் | - | சனம் |
| சென்னாக்குனி | - | மிகவும் சிறிய வகைக் கடல் மீன் |
| சேசான் | - | மூன்று இலைப் பருமனில் ஒரு ஒட்டை நீளத்தில் உள்ள ஆற்று மீன் வகை |
| சேவகத்தினமா | - | சேவகர்களாக |
| சொர்னகாரத் தெருவு | - | சொர்னம் (தங்கம்) விற்பனை செய்யும் தெரு |
| சோனகர் | - | இசுலாமியர் |
| தங்கசாலை | - | நாணயம் தயாரிக்கும் இடம், ஆவைெ |
| தப்பிதம் பண்ணினால் | - | தவறு செய்தால் |
| தமிளிடையர் | - | தமிழ் பேசும் இடையர் சாதி |
| தரித்திரமாயிருக்கிறது | - | தரித்திரமாக இருப்பது. போதிய பணம் இல்லாது ஏழையாக இருப்பது |
| தளத்தோடே | - | ஆட்களுடன் |
| தளருப்பொடி | - | சிறியதாகத் தட்டையாக இருக்கும் ஆற்று மீன் வகை |
| தற்மமென்றும் | - | வழக்கமாக வணங்கும் |
| தறிக்காரர் | - | தறியில் துணி நெய்பவர்கள் |
| தாயாதி முறையாய் | - | தலைமுறை வாரிசாக |
| தானிணம் | - | பொருட்கள் |
| திருக்கை | - | நான்கு ஆள் சுமையளவுள்ள நீண்ட வால் உள்ள வட்ட வடிவக் கடல்வாழ் மீன்வகை |
| திருவ;ருக்கு | - | திருவள்;ருக்கு |
| தினுசிருக்கும் | - | வகையிருக்கும் |
| தீர்வை | - | வரி |
| தீவாணச் சேவுகன் | - | அரசாங்கச் சேவகன் |

| | | |
|---|---|---|
| தீவாணத்திலே | - | அரசாங்கத்திலே |
| தீவாணத்துக்கும் | - | அரசாங்கத்துக்கும் |
| துபாக்கி | - | துப்பாக்கி |
| துரத்தினம், துரத்தின | - | துரைத்தனம், அதிகாரம் உள்ளவர் |
| துலுக்கர் | - | இசுலாமியர் |
| துற்கி | - | துற்கை |
| துறைகள் | - | வர்த்தகத் துறைமுகங்கள் |
| தூக்கணாம் பாறை | - | ஒரு சாண் நீளத்தில் வட்ட வடிவத்தில் உள்ள கடல்வாழ் மீன் வகை |
| தூண்டிகளிலே | - | தூண்டில்களில் |
| தூரிவலை | - | ஆற்றில் மீன்பிடிக்கப் பயன்படும் ஒருவகை வலை |
| தெப்பல் திருனாள் | - | கோவில் தெப்பத்தில் மிதவை மீது சாமி ஊர்வலம் செல்லும் திருநாள் |
| தெப்பல் | - | கோவில் முன் உள்ள தெப்பம் |
| தெலை மீன் | - | கைப்பருமனில் ஒரு அடி அகலம் ஒன்றரை முழம் நீளத்தில் உள்ள ஆற்று மீன் வகை. இதன் இரண்டு கன்னத்திலும் தலையிலும் முள் இருக்கும் |
| தேங்காய்ப்பாறை | - | காலின் கீழ்ப்பகுதிப் பருமனில் இரண்டு கை அகலத்தில் ஒன்றரைச் சாண் நீளம் உள்ள கடல்வாழ் மீன் வகை |
| தேன்கூடு அழிக்கிறது | - | தேன் கூட்டைக் கலைத்துத் தேன் எடுத்தல் |
| தோல் பாறை | - | ஒரு கை அகலத்தில் கைப்பருமனில் ஒரு சாண் நீளம் உள்ள கடல்வாழ் மீன் வகை |
| நபாபு நாளையிலே | - | நவாப் காலத்தில் |
| நபாபு | - | நவாப் |
| நம்பிப்பாப்பார் | - | பார்ப்பருள் ஒரு பிரிவினர். பெரும்பாலும் இவர்கள் கேரளத்தைச் சேர்ந்தவர்கள் |
| நயமான இடம் | - | பொருள் அதிகம் விளையும் இடம் |

| | | |
|---|---|---|
| நவரை மீன் | - | கைப்பருமனில் ஒரு சாண் நீளம் உள்ள கடல்வாழ் மீன் வகை |
| நவ்வாலு பேர் | - | நாளு நாளு பேர் |
| நாமம் பாப்பார் | - | வைணவப் பார்ப்பர் |
| நாலஞ்சு ஆள் | - | நான்கைந்து ஆள் |
| நாலாள் | - | நான்கு ஆள் |
| நாலாள் சுமை | - | நான்கு ஆட்கள் தலையில் வைத்து சுமக்கும் சுமை அளவு |
| நாலு | - | நான்கு |
| நாழிவழி தூரம் | - | 24 நிமிடங்களில் ஒருவர் நடக்கக் கூடிய தூரம் |
| நாற்பதன்பது | - | நாற்பத்தி ஒன்பது |
| நிகளம் | - | நீளம் |
| நிகளமிருக்கும் | - | நீளம் இருக்கும் |
| நிமித்திய | - | காரியமாக |
| நியோகிப்பாப்பார் | - | பார்ப்பருள் ஒரு பிரிவு |
| நிறுவாக மில்லாதே போனால் | - | வசதி சந்தர்ப்பம் இல்லாமல் போனால் |
| நுணலை | - | மூன்று விரல் அகலத்தில் இரண்டு விரல் பருமனில் அரைச்சாண் நீளம் உள்ள கடல்வாழ் மீன் வகை |
| நூற்றிருபது | - | நூற்றி இருபது |
| நெற்றிலி | - | ஒரு விரல் பருமனில் ஒரு விரல் நீளம் உள்ள கடல்வாழ் மீன் வகை |
| பசகள் | - | குழந்தைகள் |
| பச்சை மீனும் | - | கடலில் இருந்து பிடித்து வரப்பட்ட மீன் |
| பட்சிகளை | - | பறவைகளை |
| பட்டணவர் | - | மீன்பிடி தொழில் புரியும் ஒரு இனம் |
| படிக்குச் செய்தல் | - | கூலி வேலை செய்தல் |

| | | |
|---|---|---|
| படிசாலர் | - | பட்டு சாலியர் |
| படித்தரத்துக்கு | - | கோவிலின் அன்றாடச் செலவுகளுக்கு |
| படித்தரம் | - | கோவிலின் அன்றாடச் செலவு |
| பணங்களும் | - | பணம் |
| பண்டியாயிருக்கும் | - | தடிமனாக இருக்கும் |
| பத்தாள் | - | பத்து ஆள் |
| பத்து முறை | - | பத்துத்தடவை |
| பத்து விசை | - | பத்துத்தடவை |
| பளவற்காடு | - | பழவேற்காடு |
| பறடிவலை | - | ஆற்றில் மீன்பிடிக்கப் பயன்படும் ஒருவகை வலை |
| பறி | - | மீன் போட்டு வைக்கும் கூடை |
| பன்னா | - | கைப்பருமனில் ஒரு முழும் நீளம் உள்ள கடல்வாழ் மீன் வகை |
| பனிரெண்டாள் | - | பன்னிரெண்டாள் |
| பனைவாயன் | - | ஐம்பது முழம் நீளம் ஏழு முழம் அகலம் உள்ள பெரியவகைக் கடல்வாழ் மீன் |
| பஷணம் | - | பலகாரம் |
| பாப்பார், பாப்பான், பாப்பாற் | - | பார்ப்பனர், அந்தணர் |
| பால் சுறா | - | காலின் கீழ்ப்பகுதிப் பருமனில் ஒரு முழம் நீளம் உள்ள கடல்வாழ் மீன் வகை |
| பால்நெற்றிலி | - | அரை விரல் பருமனில் முக்கால் விரல் நீளம் உள்ள கடல்வாழ் மீன் வகை |
| பாளையப்பட்டு | - | பாளையக்காரர் |
| பாறாசா | - | பாதுஷா |
| பாறை | - | தொடைப் பருமனில் மூன்று கை அகலத்தில் உள்ள கடல்வாழ் மீன் வகை |
| பிடிக்கி | - | பிடுங்கி |

| | | |
|---|---|---|
| பிழைக்கிறது வருத்தம் | - | பிழைக்கிறது அரிது, பிழைக்கிறது கடினம் |
| பிற்பாடு | - | பின்னால், அதன் பின்னர் |
| பின்னையும் | - | மறுபடியும், அதற்குப் பின்னாலும் |
| புகைச் சுறா | - | காலின் கீழ்ப்பகுதிப் பருமனில் ஒரு முழம் நீளம் உள்ள கடல்வாழ் மீன் வகை |
| புண்டு விரிஞ்சான் | - | இரண்டு விரல் பருமனில் அரைசாண் நீளம் உள்ள மீன் வகை |
| புருஷம் | - | தோள்பட்டை |
| பூற்வத்திலே | - | பூர்வீகத்திலே, ஆதியில் |
| பெண்டாட்டிக் காறனுக்கு | - | கணவனுக்கு |
| பெண்டுகள் | - | பெண்கள் |
| பெண்ணைக் கொள்ளுகிறது | - | பெண்ணைத் திருமணம் செய்து கொள்ளுகிறது |
| பெர்மானா | - | ஆணை (குயசஅயெ) |
| பெரிசு | - | பெரிய |
| பெரிய கோல்வாச்சி | - | மூன்று விரல் பருமனில் ஒன்றேகால் சாண் அகலத்தில் உள்ள கடல்வாழ் மீன் வகை |
| பெரியதினக்காறர் | - | சாதித்தலைவர், அம்பலகாரர் |
| பெருமன் | - | பருமன், தடிமன் |
| பெருவலை | - | ஆற்றில் மீன்பிடிக்கப் பயன்படும் ஒருவகை வலை |
| பேட்டை ஸ்தளங்களிலே | - | வியாபாரச் சந்தை இடங்களில் |
| பேட்டை | - | சந்தை கூடும் இடம் |
| பேத முண்டு | - | வேறுபாடுகள் உண்டு |
| போட்டு | - | விற்று |
| போடுவித்து | - | போடவைத்து |
| போறதுமில்லை | - | போவதும் இல்லை |
| போறப்படி | - | நடக்கிறபடி |

| | | |
|---|---|---|
| மட்டம் | - | தரத்தில் குறைந்தது |
| மட்டுவா | - | மூன்று விரல் பருமனில் இரண்டு கை அகலமும் ஒன்றேகால் சாண் நீளமும் உள்ள ஆற்று மீன் வகை |
| மடவை மீன் | - | காலின் கீழ்ப்பகுதிப் பருமனில் ஒரு முழம் நீளம் உள்ள ஆற்று மீன் வகை |
| மதுக்கெண்டை | - | ஒரு கைப்பருமனில் சாண் நீளம் உள்ள ஆற்று மீன் வகை. இது முள்ளுக்கெண்டையும் ஆகும் |
| மப்பு | - | மேகம், இருள் |
| மனுஷர் | - | மனிதர் |
| மாவலை | - | ஆற்றில் மீன்பிடிக்கப் பயன்படும் ஒருவகை வலை |
| மாற் | - | மார், இருகை நீட்டம் |
| மாறி | - | மழை, மாரி |
| மிழுங்கிற | - | முழுங்குகிற |
| மீத்தியாய் | - | மிகுதியாய், அதிகமாய் |
| மீன் பிடிக்கிற நிமித்திய | - | மீன் பிடிப்பதற்காக, மீன் பிடிக்கும் நிமித்தமாக |
| மீன் லாபக்காரர் | - | மீன் விற்பனையாளர் |
| மீனை யோட்டினால் | - | மீனை ஓட்டினால், மீனை விரட்டினால் |
| முசல் | - | முயல் |
| முதலானதுகளும் | - | முதலானவைகளும் |
| முப்பத்தஞ்சுபேர் | - | முப்பத்தைந்து பேர் |
| முள்ளாரு | - | உள்ளங்கைப் பருமனில் ஒரு சாண் நீளத்தில் உள்ள ஆற்று மீன் வகை |
| முள்ளுவாளை | - | கைப்பருமனில் ஒன்றரைக்கை அகலமும் ஒரு முழம் நீளமும் உள்ள கடல்வாழ் மீன் வகை |
| முள்ளுவாளை | - | மூன்று விரல் பருமனில் ஒன்றரைக் கை அகலத்தில் ஒரு முழம் நீளத்தில் உள்ள ஆற்று மீன் வகை |

| | | |
|---|---|---|
| முற்றினது | - | நன்கு வளர்ந்தது |
| முன்னாளையிலே | - | முந்நாளில் |
| மூணாள் | - | மூன்று ஆள் |
| மூணு | - | மூன்று |
| மூணுகை | - | மூன்று கை |
| மூவிரல் | - | மூன்று விரல் |
| மெத்தை படிக்கட்டின் | - | வீட்டு மாடிக்குச் செல்லும் படிக்கட்டின் |
| மேலண்டை | - | மேற்குப் பக்கம் |
| மேலண்டைக்கரையிலே | - | மேற்பக்கக் கரையில் |
| மொலுவு | - | இரண்டு முழம் அகலம் முன்று முழம் நீளத்தில் நான்கு ஆள் சுமை அளவில் கெண்டை வடிவில் உள்ள கடல்வாழ் மீன் வகை |
| யகப்படாது | - | அகப்படாது |
| யகப்படும் | - | அகப்படும் |
| யகலம் | - | அகலம் |
| யதிகமாய் | - | அதிகமாக |
| யதின் | - | அதன் |
| யது | - | அது |
| யதுக்குள்ளே | - | அதற்குள்ளே |
| யரைக்கை | - | அரைக்கை |
| யரைக்கைப் பருமன் | - | அரைக்கைப் பருமன் |
| யனுப்பிவித்தான் | - | அனுப்பிவைத்தான் |
| யாட்பாணமாகிய | - | யாழ்ப்பாணமாகிய |
| யிங்கே | - | இங்கே |
| யிடங்களிலே | - | இடங்களில் |
| யிடங்கையார் | - | இடங்கையார் |

| | | |
|---|---|---|
| யிடித்து | - | இடித்து |
| யிதாசக்தி | - | தனது சொந்தச் சக்தி அல்லது வசதி |
| யிதிலே | - | இதில் |
| யிதின் | - | இதன் |
| யிது | - | இது |
| யிதுகளிலே | - | இவைகளில் |
| யிதுவல்லாமல் | - | இதுவல்லாது |
| யிதுவும் | - | இதுவும் |
| யிந்த | - | இந்த |
| யிப்படி | - | இப்படி |
| யிப்போ | - | இப்பொழுது |
| யிருக்கப்பட்ட | - | இருக்கப்பட்ட |
| யிருக்குது | - | இருக்கிறது |
| யிருந்ததை | - | இருந்ததை |
| யிருந்தால் | - | இருந்தால் |
| யிருந்தாலு மிருக்கும் | - | இருந்தாலும் இருக்கும் |
| யிருந்து | - | இருந்து |
| யிருப்பத்து நாலு | - | இருபத்தி நாலு |
| யில்லை | - | இல்லை |
| யிவர்கள் | - | இவர்கள் |
| யிவர்களுக்கு | - | இவர்களுக்கு |
| யிழுத்து | - | இழுத்து |
| யிளந்தையா | - | இளம் தரமாக, இளம் வயதாக |
| யிறுநூறு | - | இருநூறு |
| யின்னமனேக | - | இன்னம் உள்ள அநேக |

| | | |
|---|---|---|
| யீசல் | - | ஈசல் |
| யீபவான் கோவில் | - | ஈசுவரன் கோவில் |
| யெட்டு விசை | - | எட்டுத்தடவை |
| யெட்டு | - | எட்டு |
| யெப்போதும் | - | எப்பொழுதும் |
| யெருக்கங்காட | - | எருக்கங்காட்டை |
| யெல்லா மாற்றிலேயு மிருக்கும் | - | எல்லாவற்றிலும் இருக்கும் |
| யெளிமைத்தினம் | - | எளிமைத்தனம் |
| யென்கிறவள் | - | என்கின்றவள் |
| யென்றால் | - | என்றால் |
| யென்னத்து நாலை | - | எதனால் |
| யேழெட்டுப்பேர் | - | ஏழெட்டுப்பேர் |
| யோட்டினால் | - | ஓட்டினால், விரட்டினால் |
| ரகசியமா | - | இரகசியமாக |
| ருசு | - | சாட்சி, சான்று |
| ரூபம் | - | வடிவம் |
| ரெண்டாளும் | - | இரண்டு ஆட்களும் |
| ரெண்டு பங்கு | - | இரண்டு பங்கு |
| ரெண்டு | - | இரண்டு |
| ரெண்டுக்கும் | - | இரண்டுக்கும் |
| ரெத்தப்பாறை | - | பெருந்தொடைப் பருமனில் ஒன்றரை முழம் நீளத்தில் சிவந்து காணப்படும் கடல்வாழ் மீன் வகை |
| லாபக்காரர் | - | விற்பனையாளர் |
| லாபக்காரர் துலுக்கர் | - | மீன் விற்பனை செய்யும் இசுலாமியர் |

| | | |
|---|---|---|
| வஞ்சிரம் | - | காலின் கீழ்ப்பகுதிப் பருமனில் ஒரு முழம் நீளம் உள்ள கடல்வாழ் மீன்வகை |
| வந்தெறங்கி | - | வந்து இறங்கி |
| வரும்படி | - | வருமானம் |
| வலங்கையார் | - | வலங்கை பிரிவைச் சேர்ந்த இனத்தவர்கள் |
| வலை முடைகிறது | - | வலை பின்னுகிறது |
| வவ்வால் | - | இரண்டு கை அகலத்திலும் ஒன்றரைச் சாண் நீளத்திலும் கை பருமனில் சிவப்பு நிறத்தில் உள்ள கடல்வாழ் மீன் வகை |
| வழிமட்டுக்கும் | - | வழிவரை |
| வற்தக் குடிகள் | - | வர்த்தகம் செய்யும் மக்கள் |
| வற்தகம் | - | வர்த்தகம், வியாபாரம் |
| வற்தகர் | - | வியாபாரிகள் |
| வறாகன் | - | வராகன் |
| வாங்கிக்கொண் றப்பாலே வந்தால் | - | வாங்கிக் கொண்டு வெளியில் வந்தால் |
| விக்கிறையமே யல்லாமல் | - | அளவே அல்லாது |
| விடுவார்கள் | - | கொண்டாடுவார்கள் |
| வித்துக் கொள்ளுவார்கள் | - | விற்றுக்கொள்வார்கள் |
| விபசாரத்துவம் | - | விபச்சாரம் செய்தல் |
| விபூதி பாப்பார் | - | சைவப் பார்ப்பர் |
| விலாங்க ரூபம் | - | விலாங்கு மீன் போல் உருவம் |
| விலையாகும் | - | விற்பனையாகும் |
| விழுந்து போனால் | - | இறந்து போனால் |
| விறக்கலு | - | கலங்கரைவிளக்கு |
| வுண்டான | - | உண்டான, உருவான |

| | |
|---|---|
| வுளுக்காந்து | - உட்கார்ந்து |
| வூர் | - ஊர் |
| வூரார் | - ஊரார் |
| வூருக்கு | - ஊருக்கு |
| வூருக்குள்ளே | - ஊருக்குள் |
| வூருகளிலே | - ஊர்களில் |
| வூருண்டான படியினாலே | - ஊர் உண்டானபடியால் |
| வெங்கண் | - கைப்பருமனில் இரண்டு கை அகலத்தில் ஒன்றரைச் சாண் நீளம் உள்ள கடல்வாழ் கடல்வாழ் மீன் வகை |
| வேணுமென்று | - வேண்டும் என்று |
| வைச்சுக்கொண்டு | - வைத்துக்கொண்டு |
| வெளவால் மீன் | - ஓராள் பருமனில் இரண்டு முழம் நீளம் உள்ள கடல்வாழ் மீன் வகை |
| வெளவாளை வவ்வால் | - அரைக்கை பருமனில் ஒரு கை அகலத்தில் உள்ள கடல்வாழ் மீன் வகை |
| றாசனாலே | - இராசாவினால் |
| றாத்திரியிலே | - இரவில், இராத்திரியில் |
| றாயப்பட்டம் | - இராயர்பட்டம் |
| றாவிலே | - இரவில் |

# 5. நடுநாட்டுப் பேச்சுவழக்கு

## (சோழநாடு)

| | |
|---|---|
| அகவான் | - வயல்வரப்புகளில் வாழும் எலி வகை |
| அகித்தியமா | - உடனடியாக |
| அங்கம் | - வயிறு |
| அஞ்சி மாசச்சீர், அரசீர் | - ஒரு பெண்ணின் முதல் பேறுகாலத்தில் கர்ப்பமுற்ற ஐந்தாம் மாதம் பெண்ணுக்குத் தாய் வீட்டிலிருந்து ஐந்து வகைச்சாப்பாடுகள் கொண்டுவந்து கொடுக்கும் சீர் |
| அடவா | - மனநிறைவாக |
| அடுவ போடுதல் | - காய்கள் பழுப்பதற்கு மண்ணில் குழி தோண்டி அதில் வைத்தல் |
| அம்மாங்காய் | - தாய்வழி உறவு |
| அந்தி எழவு | - இறந்தோரின் வீட்டில் 18-ஆம் நாள் சடங்கு வரை தினமும் மாலைநேரம் உறவினர்கள், தெருசனங்கள் ஒன்று கூடி ஒப்பாரி வைக்கும் சடங்கு |
| அந்தோமா | - அந்தப் பக்கமாக |
| அபிச்சி | - தந்தையின் இளைய சகோதரர் |
| அம்மான் வரிசை | - சடங்குகளில் தாய்மாமன் கொடுக்கும் சீர்வரிசை |
| அம்மாசி | - அம்மாவாசை |
| அம்மாம் | - அவ்வளவு |
| அரம்புலி | - சிறு பெண் குழந்தைகளின் பெண் உறுப்பை மூடுமாறு கட்டித் தொங்கவிடப்படும் அரச இலை வடிவ அணிகலன் |
| அரிச்சந்திரன் மொடக்கு ∴ அரிச்சந்திரன் மறப்பு | - சுடுகாட்டின் நுழைவாயில். இந்த இடம் வந்தவுடன் இதுவரை வீட்டை நோக்கி இருந்த பிணத்தின் தலைப்பகுதி சுடுகாட்டை நோக்கி இருக்கும்படி பாடையைத் திருப்புவர். |

அவையம் - கோழி அடை கூந்தல்

அழவன - பெண்கள் கையில் அழகுக்கு வைக்கும் மருதாணி

அறுநிழல் - அடர்த்தியில்லாது ஆங்காங்கு சூரிய ஒளி விழுந்திருக்கும் நிழல்

ஆக்கு - கயிறு போல் பயன்படுத்தப்படும் குச்சி

ஆச்சி - சித்தி, தந்தையின் இளைய சகோதரரின் மனைவி

அடசட்டி - சிறியவகை மண் சட்டி

ஆடிக்கருப்பு - ஒருவர் கையில் பணப்புழக்கம் இல்லாத காலம

ஆடிவழி - புதுமணத் தம்பதியினரை ஒன்று சேர விடாது ஆடிமாதத்தில் தனித்தனியே பிரித்து வைத்தல். பெண் தாய்வீடு சென்றுவிடுவாள்.

ஆதி - ஞாபகம்

ஆவலம் - ஆவல், ஆசை

இசு - சிறு குழந்தை (சிசு)

இசுவு - வலிப்பு நோய் (இழுப்பு)

இடி முடி - சவுரி முடி

இழி - கீழே இறங்கு

இரிசுப்பெண் - பருவ வயதைக் கடந்தும் பூப்படையாமல் இருக்கும் பெண்

இம்மாம் - இவ்வளவு

ஈங்கிசம் - தொந்தரவு

ஈவடை நாள் - மா, பலா போன்றவற்றின் அறுவடைக் காலம்

ஈவா - விளக்கமாக

உருட்டு - பெண்கள் கால் விரலில் அணியும் மெட்டி

உயிர்வேலி - வயலைச்சுற்றி நிரந்தரமாக இருக்குமாறு முட்செடிகளால் அமைக்கப்படும் வேலி

| | | |
|---|---|---|
| உமுரு | - | இளம் பிஞ்சி |
| உயிர்ப்பு கொடுத்தல் | - | புதிதாகச் செதுக்கப்பட்ட சிலைக்கு சடங்குகள் செய்து கண் திறத்தல் |
| உள்ளல் | - | பிணையலில் உட்பக்கம் கட்டப்படும் மாடு |
| உறுப்புக் கொடி | - | ஆடு, மாடு ஈன்றபின் வரும் நச்சுக் கொடி |
| ஊட்டி | - | தொண்டையின் கண்டப்பகுதி, கால்விரல்கள் பாதத்தோடு இணையும் பகுதி |
| ஊட்டுங்கன்னு | - | வீட்டில் வளர்த்த பசு ஈன்ற கன்று |
| ஊத்தாம்பானை | - | எலி வளைக்குள் புகையைச் செலுத்தி எலிகளைப் பிடிக்க வடிவமைக்கப்பட்ட பானை |
| ஊமத்தம் பிஞ்சு | - | பலாமரத்தில் உதிர்ந்துவிடும் தரத்தில் உள்ள சிறு பிஞ்சி/இளம் பிஞ்சி |
| எச்சிக் கொள்ளி | - | இறந்த ஒருவருக்குக் கொள்ளிவைத்த பின்னர் இரண்டாவது ஒருவருக்கு வைக்கப்படும் கொள்ளி |
| எதர்ன | - | வீண் செலவு |
| எதிர்மார் | - | இழவுக்கு வரும் சனங்களுக்கு பங்காளிப் பெண்கள் மார்பில் அடித்துக்கொண்டு போய் கட்டியணைத்து அழுவது |
| எரந்து குடித்தல் | - | பிச்சை எடுத்து உயிர் வாழ்ந்தல் (இரந்து ‘பிச்சை எடுத்து’ - இலக்கிய வழக்கு) |
| எழ மூச்சி | - | இறக்கு தருவாயில் உள்ள ஒருவரின் சுவாசம் |
| ஏணை | - | குழந்தைகளைத் தூங்க வைக்க உதவும் தொட்டில் |
| ஏந்தரம்.:.வரவு ஏந்தரம் | - | திருவல், திருகல் |
| ஒட்டாரம் | - | பிடிவாதம் |
| ஒட்டிக் கேட்குதல் | - | விலையைக் குறைத்துக் கேட்டல் |
| ஒண்டங்கை | - | இடது கை |
| ஒணவா | - | வாய்க்கு ருசியாக |

ஒத்த மோளம் - இறப்புச் சடங்கான பால்தெளி நிகழ்வன்று அடிக்கப்படும் தனி மேளம்

ஒதப்பு - பயம்

ஒப்புடி - விளைச்சல், மகசூல

ஒரக்கட்டை - மரத்தால் ஆன உரல் (உரல்கட்டை)

ஒரப்பாட்டு - ஒப்பாரிப் பாட்டு வகை

கேணி - கிணறு (இலக்கிய வழக்கு)

ஒறம்பரை - மாமன் முறையில் உள்ள உறவினர்கள்

ஓந்தி - பெரியவகைச் சுமைகளைத் தூக்கப்பயன்படும் இயந்திரம் (crane)

கச்சாப்படி - மூன்று அரைக்கால்படி கொண்ட முந்தைய கால அளவுப்படி

கட்டக்கால் - பன்றி

கட்டுக்கழுத்தி - சுமங்கலிப் பெண்

கட்டுத்தெரு - மாடுகள் கட்டப்படும் தொழுவம்

கட்டுப்பெண் - திருமணமாகி வாழ்விழந்த அல்லது கணவனால் கைவிடப்பட்ட நிலையில் இரண்டாவதாக திருமணம் செய்து கொள்ளும் பெண்

கடகந்தாயம் - கடைசி நேரம்

கடப்பான் - மிளகாய், வெங்காயம் கொண்டு செய்த காரச்சட்னி

கடல் வத்தல் - கருவாடு

கடிவால் - மொட்டையாக இருக்கும் மாட்டின் வால்

கண்ணாத்து - பெரிய வாய்க்கால்

கண்ணுண்டா - கவனமாக, உன்னிப்பாக

கதண்டு - ஒருவகைப் பூச்சி

கம்பத்தம் - கிராமங்களில் அதிகாரம் உடைய பெரிய நிலக்கிழார்

| | | |
|---|---|---|
| கம்ன | - | விதவை (கைம்பெண்டாட்டி - கம்மனாட்டி) |
| கரணைக்கழி | - | மாட்டுப் பொங்கல் அன்று மாடு விரட்டப் பயன்படுத்தும் கழி |
| கழி | - | கம்பு, குச்சி |
| கரிகால் | - | சாவுத்தீட்டு |
| கரிகால் கழுவுதல் | - | பிணத்துக்கு கொள்ளிவைத்தவரின் காலை மாமன்முறை உள்ளவர்கள் கொள்ளி வைத்த அன்றோ அல்லது மறுநாளோ கழுவும் சடங்கு |
| கருமாதித்துறை | - | இறந்தவருக்கு 16-ஆம் நாள் சடங்கு செய்யும் ஆறு, குளம், ஏரி இவற்றின் கரையை ஒட்டிய பகுதி |
| கல்க்காணம் | - | உதாரணம் |
| கல்சார்த்துதல் | - | இறந்தவரின் 16-ஆம் நாள் சடங்கின் விடியற்காலையில் வீட்டில் மூன்று செங்கற்களை வைத்து வழிபடுதல் |
| கல்லாம்பறிச்சி | - | சிறிய கற்கள் நிறைந்த நிலப்பகுதி |
| கல்லுக்கூடை | - | இறந்தவருக்கு 16-ஆம் நாள் சடங்கு செய்ய வேண்டிய பொருள்களை எடுத்துச் செல்லப் பயன்படுத்தும் கூடை |
| கல்லியஞ்சம்பா | - | ஆறு மாத மகசூல் பருவம் கொண்ட நெல்வகை |
| கலவடை | - | பானை, குடங்களின் உறுதியான வாய்ப்பாகம் |
| கறிப்பட்ட செலவு | - | அசைவச் சமையலுக்குத் தேவையான வாசனைப்பட்டை, ஏலக்காய், கிராம்பு போன்ற பொருட்கள் |
| கழுதக்கொறத்தி | - | கழுதைப் புலி |
| கழுதவள்ளி | - | ஒருவகைச் சர்க்கரைவள்ளிக் கிழங்கு |
| காகாசி/காசி | - | திருமணத்தில் மணப்பெண்ணின் நெற்றியில் கட்டப்படும் தங்கத்தால் ஆன நெற்றிப்பட்டம் |
| காங்கை | - | வெயிலின் வெப்பத்தின் தாக்கம் |

காசிக்கட்டி - அதிக அளவு வெண்கலமும் சிறிதளவு தங்கமும் சேர்ந்த ஒருவகை உலோகம்

காணம் - 12 படி கொண்ட எண்ணெய், தானியங்களின் அளவு

காணி - 1¼ ஏக்கர் நிலப்பரப்பு

காணிக்கால் - நிலத்தில் ஊன்றப்படும் அளவுக் கல்

காடாத்து - பிணங்களை எரித்த பின் உள்ள கரி, சாம்பலைத் தண்ணீர் ஊற்றி அணைப்பது

காமுட்டிக்கோயில் - மன்மதன் (காமன்) கோவில்

கார்வாரி - ஒரு நிலச்சுவான்தாரின் நிலங்களைக் கவனித்துக் கொள்ளும் சம்பளக்காரர்

காரியங்கவை - குடும்பங்களில் நடத்தப்படும் சடங்குகள்

காலங்கோலமா - அதிகாலை நேரத்தில்

கிளிஞ்சல் - மிகச்சிறு வெற்றிலை

கீனூட்டு - கேலிகிண்டல்

குஞ்சிக்கல்யாணம் - இசுலாமியச் சிறுவர்களின் ஆண்குறியின் முன்தோலை அறுத்து அகற்றும் சடங்கு

குடலி - ஆடுமாடுகள் கடிக்காமலிருக்க மரக்கன்றைச் சுற்றி அமைக்கப்படும் வட்டவடிவ வேலி

குடி நுழைதல் - புதுமனை புகுதல் விழா (குடி ‘வீடு’ - குடி ‘இனம்’)

குந்து - உட்கார் (இலக்கிய வழக்கு)

குண்டு - சோறு சமைக்கப் பயன்படுத்தப்படும் பாத்திரம

குதிப்பு - பாதையில் உள்ள பள்ளம்

குரங்கு முகம் - அறுப்பதற்கு முன்னதாக சிவந்த நிலையில் உள்ள நெல்மணியின் பதம்

குழி - ஒரு நில அளவை. 100 குழி ஒரு காணி. 3 அடி நீளம், 3 அடி அகலம், 3 அடி ஆழம் கொண்ட பள்ளம்.∵குழி

| | | |
|---|---|---|
| குள்ளப்புட்டி | - | சிறிய கூடை |
| கூத்தரசி | - | நெல்லாக வாங்கி அவித்து அரைத்து விற்கப்படும் அரிசி |
| கூரமா | - | கோபமாக |
| கூழ்சாதம் | - | கம்மஞ்சோறு |
| கூழ முட்டை | - | குஞ்சு பொரிக்காத முட்டை |
| கெடாக்காரன் | - | எருமைக் கிடாயை வாகனமாகக் கொண்ட எமன் |
| கெடேரி | - | மாடு, எருமைகளின் இளம்பிராய பெண்கன்று |
| கெர்ப்பம் | - | மரத்தின் நடுப்பகுதியில் இருக்கும் கடினமான பகுதி |
| கெர்ப்பவோட்டம் | - | கர்ப்பக் காலத்தில் வயிற்றில் சுழலும் சிசுவைப் போல், மார்கழி மாதத்தில் மேகங்கள் அடிக்கடி புரண்டு கொண்டிருப்பது |
| கேப்பனாசி | - | திருடி |
| கேவுரு | - | கேழ்வரகு |
| கேழ்வி | - | திட்டு, வசை |
| கைத்தாம்பலம் | - | நிச்சயதார்த்த நிகழ்வை விமரிசையாகக் கொண்டாடாமல் எளிமையாகச் செய்து கொள்ளும் சடங்கு |
| கைப்பெரளி | - | கைச்செலவுக்கான பணப்புழக்கம |
| கொக்கிக்கட்டை | - | எண்ணெய் பிழியும் மரச்செக்கின் நடுவில் உள்ள உலக்கையையும் கீழே மாடு இழுத்துச் செல்லும் மரத்தையும் இணைக்கும் மரத்துண்டு |
| கொங்கை | - | கம்மங்கதிரில் மணியத் தாங்கிக்கொண்டிருக்கும் உமி போன்ற பாகம் (கொம்மை) |
| கொட்டுவான் | - | தேள் (கொட்டு 'தேள் கொட்டுதல்') |
| கொடாப்பு | - | மிகக் குறுகலான பகுதி |

| | | |
|---|---|---|
| கொடுங்கை | - | இரு கைகளாலும் சேர்த்து அள்ளக்கூடிய வைக்கோல், விறகு போன்றவற்றின் அளவு |
| கொத்துமல்லி அம்மை | - | கொத்துமல்லி விதை அளவில் கொப்புளங்கள் உண்டாகும் அம்மை நோய் வகை |
| கொண்டை | - | மாட்டின் திமில் |
| கொண்டான் | - | கும்மியாட்டம் |
| கொரா | - | பெண் ஆட்டுக்குட்டி (குரால்) |
| கொழுந்தங்கோடி | - | அண்ணன் இறந்தபின் அவரின் தம்பிகள் அண்ணிக்கு எடுத்துக்கொடுக்கும் புதுப்புடவை |
| கொள்ளிக்காசு | - | இறந்தவரைப் பாடையில் சுடுகாட்டிற்குத் தூக்கிச் செல்லும்பொழுது இறந்தவரின் மாமன் முறைக்காரர்கள் மேளக்காரர்களுக்குக் கொடுக்கும் பணம் |
| கொளுறு | - | கொத்தனார் பயன்படுத்தும் கரண்டி |
| கொறவன் முறம் | - | வீடுகளில் பயன்படுத்தும் மூங்கிலில் பின்னபப்ட்ட முறம் |
| கொறட்டத்தண்ணி | - | பெண்ணின் கர்ப்பப் பையில் உள்ள பனிக்குட நீர் |
| கோங்கு இலவு | - | இலம்பஞ்சு மரம் |
| கோட்டை | - | நூறு எண்ணிக்கைகள் கொண்ட தையல் இலைகள் |
| கோரி ஓடுதல் | - | ஏரி, குளங்கள் நிரம்பி நீர் மறுகால் பாய்தல் |
| கோமாளி | - | மூங்கில் குருத்து |
| சகுடு | - | ஆழ்துளைக் கிணற்றில் நீர் ஊற்று மிகுந்த நொய் மணல் வகை |
| சட்டிபறி | - | பானையை வாய்க்காலில் புதைத்து மீன்பிடிக்கும் முறை |
| சம்பாரணை | - | வருமானம், சம்பாத்தியம் |

சம்மந்த பாக்கு - மணமக்களின் பெற்றோர்களுக்கிடையில் வைக்கப்படும் முதல் திருமண அழைப்பு

சம்மந்தம் போடுதல் - திருமணம் முடிந்த பின்பு இரு குடும்பத்துப் பெண்களும் எதிரெதிராக உட்கார்ந்துகொண்டு உறவை நெருக்கமாக்கிக் கொள்ளத் தலையைப் பிடித்து மோதிக் கொள்ளும் சடங்கு

சரடு - தாலிக்கயிற்றில் கோர்க்கப்படும் முதன்மையான அணிகலன

சராகம் - ஒரு திசையில் உள்ள நிலப்பகுதி

சருகலம் - உடம்பு, சரீரம்

சலாபத்தா - எளிதாக, இலகுவாக

சாகை - அம்மனுக்குக் கூழ்வார்க்கும் திருவிழா

சாடிப்பு - சாலையில் உள்ள பள்ளம்

சவுறிக்கறி - மாட்டுக்கறி, மாட்டு இறைச்சி

சாலுங்கரகம் - திருமணமேடையில் வைக்கப்பட்டிருக்கும் அலங்கரிக்கப்பட்ட பானை

சிட்டி - எண்ணெய் அளக்கும் சிறிய உழக்கு

சித்தாத்தா - சித்தி (சித் - ‘சிறிய’ ஆத்தாள் ‘தாய்’)

சித்திரை காலாவதி - மகசூல் இல்லாம் நிலம் வெறுமையாய் கிடக்கும் சித்திரைமாதம்

சில்லாக்கோல் - பாம்பு, எலி போன்றவற்றைக் குத்தப் பயன்படுத்தப்படும் மூங்கில் கம்பில் பொருத்தப்பட்டிருக்கும் கூரான ஆயுதம்

சில்லுப்பு நாள் - மழைக்காலம

சிலுக்க - நன்றாக

சின்னான் - ஒரு களியத்தைத் திறமையாகச் செய்து முடிப்பவன்

சீர்கஞ்சி/வெடாக்கஞ்சி - சாமி ஊர்வலங்களின் போது பொதுமக்களுக்கு வழங்கப்படுகின்ற வெல்லம் சேர்த்த கஞ்சி

| | | |
|---|---|---|
| சுருணை | - | சிறு கற்றை. கை கொள்கிற அளவிற்குச் சுருட்டி எடுத்துச் செல்லப்படும் வைக்கோல், சிறுகுச்சி |
| சூடலா | - | விலை அதிகமாக |
| சூனாங்காய் | - | ஊமத்தம் பிஞ்சி |
| சூல்காப்பு | - | கர்ப்பகாலத்தில் பெண்ணுக்கு வளையல் அணிவிக்கும் சடங்கு |
| சூன் | - | மூலை முடக்காக இருக்கும் மிகச்சிறு நிலம் |
| செகாரம் | - | நட்பு, வைப்பாட்டி |
| செங்காமுட்டி | - | செங்கல் |
| செண்டிப்பாக | - | செழிப்பாக |
| செய்னித்தி | - | விவசாயச் செலவு |
| செல்லை | - | ரெட்டி சமூகத்தாரின் திருமணமாகாத பெண்பிள்ளைகளை மற்ற சமூகத்தார் அழைக்கும் சொல் |
| செவ்வெண்ணெய் | - | பிறந்த குழந்தையின் வாயில் முதன் முதலாக வைக்கப்படும் விளக்கெண்ணெய் |
| செனப்பு நாள் | - | காயங்கள் எளிதில் ஆறாத பனி, மழை நாட்கள் |
| சேகை | - | நீரின் அடியில் தங்கியுள்ள சேறு |
| சேர் | - | கால் லிட்டர் கொண்ட பால் அளவு |
| சேர்மானம் | - | வைப்பாட்டி |
| சைவன் | - | சமையல் வேலை செய்பவர் |
| சைனம் | - | சகுனம் |
| வேப்பம்பூ மாரியாயி | - | வியர்க்குரு போன்ற சிறுசிறு கொப்புளங்களுடன் வரும் அம்மை நோய் |
| வெளவு | - | விபரம் |
| வேடுதம் | - | வியர்வை நாற்றம |

வெண்ணாக்கொடி - வெள்ளியில் செய்த அரைஞான் கயிறு

வெரகாலு - புழுதியில் விதைத்துப் பயிர்செய்யும் நெல் மகசூல்

வெடை - குடும்பத்தில் வயதிற்கு வராமல் இருக்கும் பெண்பிள்ளை (பேச்சு வழக்கில் குறிப்பிடுவது). (விடை 'முட்டையிடும் பருவத்தில் உள்ள கோழி')

வீடு ஒதுங்குதல் - பெண்கள் மாதவிலக்குக்கு உள்ளாகுதல்

விகுவா - குடினமாக

வித்தக் கிறுக்கு - பெரிய கலைஞர்களிடம் இருக்கும் சில மோசமான அற்ப குணங்கள்

வாரி - சிறிய ஓடை

வாய்க்கரிக் கூடை - இறந்தவரின் மாமம் முறை உறவுக்காரர்கள் இழவுக்கு வரும்போது உடன் எடுத்துவரும் இளநீர், பத்தி, கற்பூரம், நெல் நிரம்பிய கூடை

வங்கு - தொடைகளுக்கு இடைப்பட்ட பகுதி

வஞ்சிப்புண் - படுக்கையில் நெடு நாட்களாகக் கிடப்பதால் முதுகில் உண்டாகும் புண்

ரவ/ரவோண்டு - கொஞ்சம்

ரவப்பத்தினி - மிகவும் குறைவாக

மொறவாசல் - கோவில் அர்ச்சக வேலைகளைத் தினம் ஒரு குடும்பமாக ஏற்று நடத்துதல்

சொரப்பு உடுதல் - பால் கறத்தல்

சொல்லக்கர - சுடுகாடு (சுடலைக் கரை)

சோடையாக - சோர்வாக

டப்பட்ட மேளம் - இறப்பு நிகழ்வுகளுக்கு அடிக்கப்படும் சட்டி, தப்பு போன்ற மேளவகை

டாப்புபிடித்தல் - சடங்குகளில் பெறப்படும் அன்பளிப்புப் பணம், பொருட்களைப் பெற்றுக்கொண்டு கொடுத்தவரின் பெயரை எழுதிக் கொள்ளுதல்

தங்களான் - கிராமங்களில் பிரச்சனைகளைச் சுமுகமாகத் தீர்த்து வைப்பவர்

தட்டுத்தோள் - மேளங்களில் பொருத்தப்பட்டிருக்கும் தோல்

தமுர் மோளம் - பெரியவகை மேளம்

தம்பு - உயர் சாதியினரை, குறிப்பக ரெட்டி வகுப்பாரின் ஆண் பிள்ளைகளை மற்றவர்கள் அழைக்கும் சொல்

தவகடை - தலைவாசல்

தவக்கோழி - வைகறையில் கூவும் சேவல்

தலமான் - தலைவன் (தலை மகன்)

தவுக்குட்டியான் - தவளை

துளை - மிகச் சிறிய வயல்

தாக்கு - 20 மீட்டர் நீளம், ஒரு மீட்டர் அகலம், 40 செமீ ஆழத்தில் தோண்டப்படும் பள்ளம்

தாங்கரை - மூங்கில்பட்டையால் பின்னப்பட்ட அகலமான பெரிய தட்டு

தாத்துக்கல் - தானியங்களில் கலந்திருக்கும் கல்

தாத்துதல் - தானியம் வேறாக கற்கள் வேறாகப் பிரித்து எடுத்தல் (தூற்றுதல்)

தாதப்பிள்ளை - தலித்துகளின் அந்தணர், வள்ளுவர்

தாலிக் கூறைப் படைத்தல் - திருமணத்திற்கு முன்பு மாப்பிள்ளை வீட்டில் தாலி, முகூர்த்தப்புடவை போன்றவற்றை வைத்துப் படைத்து மணமக்களுக்கு விபூதியிடல்

தாலிக்கொடி - கரும்புத் தோட்டத்தில் படர்ந்திருக்கும் ஒருவகைக் கொடி

தாலி பிரித்துக் கோர்த்தல் - திருமணமான பதினைந்தாம் நாள் புதிய தாலிக்கயிற்றில் தங்கச்சரடு, தங்கக்காசு போன்றவற்றைக் கோர்த்து மணப்பெண்ணுக்கு அணிவிக்கும் சடங்கு

| | | |
|---|---|---|
| தாவறுதல் | - | தாலியை அறுத்தலுக்கு இணையான சிரமத்தை அடைதல் |
| தவனத்தண்ணி | - | உயிர் பிரிந்தவுடன், இறந்தவரின் ஆவியை வழியனுப்பிவிட்டு ஊர் எல்லையில் சுடுகாட்டிற்குப் போகும் பாதையில் கலயத்தில் வைத்துப் படைக்கப்படும் தண்ணீர் |
| தெறணி | - | சாணம் அள்ளப் பயன்படும் தட்டு |
| தெறவுசி | - | திறமை |
| தேதிக்காலம் | - | முகூர்த்த தேதிகள் நிறைந்த மாதம் அல்லது காலம் |
| தேட்டரவு | - | சாப்பிடுவதற்குரிய விருப்பம் |
| நச்சி | - | சிறிய திரட்சியற்ற இலுப்பைக் கொட்டை |
| நடப்பு | - | இறந்தவரின் வீட்டில் செய்யப்படும் சடங்கு. 25-ஆம் நாள் நடப்பும் மறுநாள் ஆலடி குளக்கரையில் கருமகாரியமும் நடைபெறும் |
| நடுப்பத்து | - | புரட்டாசி 10-ஆம் தேதியிலிருந்து 20-ஆம் தேதிவரை உள்ள நாட்கள். இந்த இடைப்பட்ட நாட்களில் நடவு நட்டால் விளைவு சிறப்பாக இருக்காது என்பர் |
| நந்தனம்/நெகா | - | ஒருவரின் நிலை |
| நமநாத்தம் | - | ஒருவரின் தொடர்பு, பழக்கவழக்கம் போன்றவை |
| நமோதா.ஃ.நெகாயா | - | நிச்சயமாக |
| நமோது | - | ஒப்புக்கு |
| நருள் | - | சனக்கூட்டம் |
| நழவான் | - | நல்ல திர்ட்சியான இலுப்பைக் கொட்டை |
| நறுக்கு | - | சாலையில் உள்ள சிறுசிறு பள்ளங்கள் |
| நாட்டாரு | - | நாட்டாண்மைக்காரர் |
| நாணல் | - | தாலிக்கயிற்றில் கோர்க்கப்படும் துளையுள்ள ஒரு குழாய் போன்ற ஆபரணம் |

நாத்திப்பட்டம் - திருமண நிகழ்வின்போது மணமக்களின் தங்கை மற்றும் அக்காள் மணப்பெண்ணின் நெற்றியில் கட்டும் பொற்காசு

நாத்திப்பணம் - மணப்பெண்ணுக்கு மணமகனின் அக்காள் தங்கை உறவு முறைகாரர்கள் கொடுக்கும் அன்பளிப்புப் பணம்

நாத்திவெளக்கு - மணமகளுக்குப் பின்னால் நின்று கொண்டு மணமகனின் தங்கை அல்லது அக்காள் பிடிக்கும் மீனாட்சி விளக்கு. இந்த விளக்கைப் பிடித்திருந்தற்குக் கூலியாக பெண்வீட்டாரிடம் இருந்து அன்பளிப்புப் பணம் பெற்றுக் கொள்வர்

தொக்கடை - திடீரென்று ஏற்படும் பணத்தேவை

தொட்டிக்கல் - கல்லால் ஆன தொட்டி, கல்லைக் குடைத்து செய்த தொட்டி

தொட்டிப்பானை - ஆடுமாடுகள் குடிக்கும் நீரைச் சேகரித்து வைக்கும் பானை

தொண்டைப்பூ - பூவானது வெளிவரும் நிலையில் உள்ள நெற்பயிரின் பருவம்

தொம்பை - தானியங்களைச் சேமித்து வைக்கப் பயன்படும் மரம் அல்லது மண்ணாலான குதிர்

தொலாங்கழிதல் - ஆவணி, புரட்டாசி, ஐப்பசி, கார்த்திகை மாதத் தொடக்கத்தில் குறிப்பிட்ட தேதிக்குள் பெய்யும் தூறல் மழை

ஆவணி - ஆறாந்தொலாம். ஆறாம் தேதிக்குள் தூறல் போட வேண்டும்

புரட்டாசி - நாலாந்தொலாம். நான்காம் தேதிக்குள் தூறல் போட வேண்டும்

ஐப்பசி - இரண்டாம் தொலாம் இரண்டாம் தேதிக்குள் தூறல் போட வேண்டும்

| | | |
|---|---|---|
| கார்த்திகை | - | ஓராந்தொலாம். முதல் தேதியன்று போடும் தூறல். இந்தத் தூறலின் தன்மைக்கு ஏற்ப அந்த மாதத்திய மழை நிலவரம் இருக்கும். அதிக மழையாகப் பெயத்தால் அந்தமாதம் அதிக மழை இருக்கும். வெறும் தூறலாகப் போட்டால் குறைவான மழை இருக்கும். அதோடு மட்டுமல்லாமல் தூறல் போடுகிற நேரம் காலை என்றால் மாதத்தின் தொடக்கத்திலும், மாலை என்றால் மாதத்தின் கடைசியிலும் மழைபொழியும் என்பர். |
| தொலும்பு | - | முந்திரிப்பயறு, நிலக்கடலை இவற்றின்மேல உள்ள தோல்கூடு |
| தோடம் | - | தோட்டம் |
| தோவப்பட்டை | - | தோள்பட்டை |
| நாந்து | - | இடுப்புக்கு மேல் உள்ள பகுதி |
| நாராயணந்தண்ணி | - | கூரையில் இருந்து விழும் மழைநீர் |
| நூவடம் | - | மெட்டி வகை |
| நிச்சயதாம்பலம் | - | நிச்சயதார்த்தம் |
| நீர்ச்சல் | - | கோவணம் |
| நெட்டுதல் | - | குடிதல் |
| நெட்டாறல் | - | ஆடி 23-ஆம் தேதிக்குப் பின்னதான பதினேழும் ஆவணி 7-ஆம் தேதிவரை உள்ள முன்னேழும் கொண்ட நாட்கள். இந்த நாட்களில் தொடர்ச்சியாக மழை பெய்ய வேண்டும் |
| நெடி | - | விசம் |
| நெய்பந்தம் பிடித்தல் | - | இறந்தவர்களின் உடலைச் சுற்றி பேரக்குழந்தைகள் நெய்யில் தோய்த்த சிறு பந்தம் பிடிக்கும் சடங்கு |
| நொச்சத்தனம் | - | சிறுபிள்ளைத்தனம் |
| நேக்குட்டி | - | நாய்க்குட்டி |

நோம்புதல் - தானியங்களை முறத்தில் இட்டுச் சுத்தம் செய்தல்

நோப்பாளம் - ஆத்திரம்

நோறு - வேண்டாத வாய்ப்பேச்சு

பக்கப்பனை - கம்பு, நெய், கேழ்வரகு போன்ற தானியப் பயிர்களின் அடியிலிருந்து கிளைக்கும் குருத்துக்கள்

பகமாத்தலா - சோம்பலாக, சோர்வாக

பங்காளித் தீட்டு - இறந்தவரின் பங்காளிக் குடும்பங்களில் 16-ஆம் நாள் சடங்குவரை அனுசரிக்கும் முறைகளின் தீட்டுப் பொருட்கள்

பச்ச இசுவு - பிறந்த குழந்தை

பச்சப்புளி - புளியங்காயிலிருந்து பெறப்படும் புளிக்கரைசல்

பச்சையாக இருத்தல் - நல்ல வசதிகளுடன் வாழ்தல்

பசுங்காய் - பசுமை நிறம் மாறாத முற்றிய நெல்மணி

பட்டடை - பெண்கள் காலில் அணியும் கொலுசு

பட்டத்து வெறப்பு - தகுதியான பருவத்தில் செய்யப்பட்ட விதைப்பு

பட்டம் - நிலங்களில் விதக்கப்படும் ஊடுபயிர்களின் வரிசை

பட்ட மொளா - மிளகாய் வற்றல் (பட்டுப்போன மிளகாய்)

பட்டறை - தானியக் குவியல்

பட்டாச்சிக்கட்டு - பட்டாசு, வெடி

படிப்பணம் - நாவிதர், வண்ணார் போன்றவர்களுக்குக் கொடுக்கப்படும் தானியமல்லாத கூலிப் பணம்

புடியாள்/பண்ணக்காரன் - வருடத்திற்கு இவ்வளவு தானியம் என்று பேசி குடும்பத்து விவசாய வேலைகளைச் செய்பவர்

படுவம் - நகச்சுற்று

பணிக்கன் - வீட்டின் கூரையைப் பிரித்து மேய்பவர்

பணிக்கு - ஒரு ஆள் ஒரு நாளில் கூரைவேயும் அளவு (பணி ‘வேலை’)

| | |
|---|---|
| பதனெட்டாம் போர் | - ஆடிப்பெருக்குத் திருவிழா |
| பதலை | - பெரிய அளவிலான உலோகப் பாத்திரம் |
| பந்தமுட்டிசாமான் | - வன்னியர்களில் ஒரு சாரார் திருமணமேடையில் அடுக்கடுக்காக வைக்கும் அலங்கரிக்கப்பட்ட பானைகளின் அடுக்கு |
| பயிர் | - மகன் அல்லது மகள் |
| புயலாள் | - வயது மூப்புத் தெரியாது வாலிப சாயலில் இருக்கும் ஆள் |
| பரிதி | - பதிலாக |
| பரிய சேலை | - நிச்சயதார்த்தச் சேலை |
| பரியம் | - ஒரு பொருளின் விலையடக்கம் |
| பருவம் | - பௌர்ணமி |
| பழினி | - பதநீர் |
| பழுத கவுறு | - நெற்தாள்களைக் கொண்டு திரிக்கப்பட்ட கயிறு |
| பழுவு | - மார்பு எலும்பு |
| பழையது நேரம் | - காலைச்சாப்பாட்டு நேரம் (பழையது 'பழையசோறு') |
| பள்ளக்கால் | - தாழ்வான நிலப்பகுதி (பள்ளம் 'குழி') |
| பள்ளையம் | - சிறு இலையில் சாமிக்குப் படைக்கப்படும் பொங்கல் |
| பறம் பைசா | - சிறிய தொகை, சிறு பைசா |
| பன்னிக்கரும்பு | - பொங்கல்விழாவன்று கடித்துத் திண்பதற்காகப் பயிரிடப்படும் கரும்புவகை |
| பனம்புடுக்கு | - ஆண்பனையின் காய்ந்த பூ (புடுக்கு 'ஆண்குறி) |
| பாக்குப்பணம் | - கோயில் மேளம், தெருக்கூத்துக் குழுவினர் வருகையை உறுதி செய்யும் பொருட்டு அழைப்பிதழுடன் கொடுக்கப்படும் தட்சணை |
| பாக்கு மாத்துதல் | - நிச்சதார்த்தம் செய்தல் |

| | | |
|---|---|---|
| பாக்கு வைத்தல் | - | மேளம், கச்செரி, தெருக்கூத்து போன்ற குழுவினரின் வருகையை உறுதி செய்து முன்பணம் கொடுத்தல். திருமணம் போன்ற சடங்குகளுக்கு அழைப்பிதழ் கொடுத்தல் |
| பாஞ்சி நாழி | - | பதினைந்து நாழிகை |
| பாட்டியம் | - | அமாவாசையின் மறுநாள் |
| பாட்டைக் கழிவு | - | நிலங்களுக்கு இடையே உள்ள பொதுப் பாதை |
| பாடு | - | நிலத்தில் பயிர்கள் வளர்வதற்குரிய சத்து |
| பாப்பா | - | விழியில் உள்ள கண்மணி |
| பாபடுக்கை | - | ஆண் பெண் உடலுறவு |
| பால்தெளி | - | இறந்தவரைப் புதைத்த அல்லது எரித்த இடத்தில் நடத்தப்படும் பால் ஊற்றும் சடங்கு |
| பாலாசி | - | பால் நண்டு |
| பாலி விடுதல் | - | திருமணம் முடிந்தபிறகு மணமக்கள் நவதானிய முளைப்புத் தட்டை மேளதாளத்துடன் சென்று ஏரியில் போடும் சடங்கு |
| பிச்சி | - | ஈரலில் இருக்கும் பித்தப்பை |
| பிரிதி | - | பாதி |
| பிருவம் | - | ஓரம், விளிம்பு |
| பின்னேழு | - | சித்திரை மாதத்தின் கடைசி ஏழு நாட்கள் |
| பீக்கருவை | - | வேலிக்கருவை |
| புட்டி/புட்டிக்கூடை | - | சிறிய அளவிலான கூடை |
| புண்ணியதானம் | - | இறந்ததிலிருந்து 11-ஆம் நாள் வீட்டில் அனுசரிக்கும் நீத்தார் இறுதிச்சடங்கு |
| புண்ணியமோடு | - | இறந்தவர்களை எரித்த சாம்பலை கரைக்கும் ஆற்றுப்பகுதி |
| புள்ளக்கவுல் | - | பிரசவம் நடந்த வீட்டில் அடிக்கும் உதிரம் மற்றும் பால் கலந்த நாற்றம் |

| | |
|---|---|
| புள்ள வளத்தி | - வசம்பு |
| புள்ளியா மூலை | - பிள்ளையன் மூலை, தென்மேற்கு மூலை |
| பூசாலி | - பூசாரி |
| பூசி | - வன்னியர் சாதியில் ஒரு பிரிவு |
| பூசை | - மூன்று விரல்களால் இடப்படு திருநீர்ப்பட்டை |
| பெரிய ரூவா | - ஆயிரம் ரூவாய் |
| பெலாக்கு | - மூக்குத்தண்டில் அணியும் நகை, புல்லாக்கு |
| பெறவடநாள் | - மாதவிடாய் நாட்கள் |
| பேசக்கால் | - சாமி எறும்பு, எறும்பில் ஒருவகை |
| பேர் சொல்லாதது | - அக்கி, கொப்புளங்கள் |
| பைத்தொறவு | - வட்டிக்குப் பணம் கொடுத்து வாங்கல் |
| பொசாய | - பொழுது சாய |
| பொட்டத்தரை | - செம்மண் தரை |
| பொட்டி | - 2.5 ஏக்கர் பரப்பளவுள்ள முந்திரி மரக்காடு |
| பொணை | - பிணையல் |
| பொதாரு | - புதர் |
| பொழி | - களத்துமேட்டில் உள்ள நல்ல தானியமணிக் குவியல் |
| பொறத்தி | - உறவுமுறை இல்லாத குடும்பத்தினர் |
| பொன்னேர் | - சித்திரை மாதத்தில் உழும் முதல் உழவு |
| போத்து | - நேராக வளர்ந்திருக்கும் மரக்கிளை |
| மகட்ட சோளம் | - மக்காச்சோளம் |
| மஞ்சத்தண்ணி | - பெண்பிள்ளைகளுக்கு நடத்தும் மஞ்சள் நீர் சடங்கு |
| மட்டு | - கிணறு தோண்டுதல் போன்ற வேலையில் 1½ அடி ஆழம் வைத்துப் படிப்படியாக வெட்டப்படும் அளவு |

| | | |
|---|---|---|
| மடக்கு | - | குடம், பானை ஆகியவற்றின் மூடி |
| மண்டற கெணறு | - | தூர்ந்துவிட்ட கிணறு |
| மண்வளையல் | - | கண்ணாடி வளையல் |
| மண் தொம்பை | - | மண்ணால் செய்த குதிர், நெற்கூடு |
| மதவ புத்தி | - | மழலைப் புத்தி, சிறுபிள்ளைத்தனம |
| மாதேரி | - | மரியாதை |
| மயிலடி | - | கால்விரல்களில் அணியக்கூடிய ஒருவகை அணிகலன் |
| மழுவு | - | தச்சர்கள் உளியை அடித்துச் செதுக்குவதற்குப் பயன்படுத்தும் இரும்பாலான சுத்தி |
| மள்ளாட்டை | - | நிலக்கடலை |
| மருதாம்பு | - | வெட்டிய கரும்பிலிருந்து முளைத்து வரும் கரும்பு |
| மறு மடங்கு | - | நெல் அறுவடை முடிந்த பின்பு தொடங்கும் அடுத்த நெல் மகசூல் பருவம் |
| மனக்கட்டு | - | வீடுகட்டும் நிலம் (மன, மனை ‘வீடு’) |
| மனைசாரி | - | வரிசையாக வீடுகளடங்கிய காலனி (மனை ‘வீடு) |
| மாங்கா | - | கொம்பு வடிவ இசைக்கருவி - இறப்பு வீட்டில் ஊதப்படும் |
| மாசி | - | வெண்மேகம் |
| மாட்டுக்கட | - | மாட்டுப்பொங்கல் |
| மாமிபணம் | - | திருமணத்தில் மணப்பெண்ணின் மாமியார் உறவு முறையில் இருப்பவர்கள் கொடுக்கும் அன்பளிப்புப் பணம் |
| மாமிபாக்கு | - | மணமக்களின் மாமியார் முறையில் உள்ளவர்களுக்கு வைக்கப்படும் பணத்துடன் ஆன திருமண அழைப்பு |
| மாரியேயி | - | அம்மை நோய |

| | | |
|---|---|---|
| மாளாவெட்டி | - | கர்ப்பம்தரித்து உடம்புக்கு முடியாமல் இருக்கும் நிலை |
| மிச்சப்படி/மிதப்படி | - | மற்றபடி |
| மிப்பத்துல | - | முன் பட்டத்தில் |
| மிம்மாக் கருக்கல் | - | முன் நேரத்து இருட்டு |
| மின்னண்ட | - | முன்னால் |
| மின்னேழு | - | வைகாசி மாதத்தின் கத்திரி வெயிலுக்குட்பட்ட முதல் ஏழுநாட்கள் |
| மீத்தம் | - | மீதி |
| முகூர்த்த ஓலை எழுதுதல் | - | நிச்சயதார்த்தம் செய்து திருமணத்தை உறுதி செய்தல் |
| மகூர்த்தம் கோலுதல் | - | கட்டிடம், கிணறு போன்ற வேலைகளைத் தொடங்குதல் |
| மூச்சி | - | முறம் |
| முட்டாங்கட்டை | - | முழு நிர்வாணம் |
| முட்டாட்டம் | - | திண்டாட்டம் |
| முட்டு | - | சிறு குவியல |
| முட்டுத்துணி | - | தீட்டுத்துணி |
| மோழிப்பரம்பு | - | சேற்று நிலத்தைச் சமப்படுத்தப் பலகையில் ஏர் போன்று மாடுகட்டி ஓட்டுமாறு உள்ள கருவி |
| மோது பாக்கு | - | ஊடைக்காத கொட்டைப்பாக்கு |
| மொறா ஓடு | - | குட்டை, ஏரிகளில் வாழும் சிப்பி போன்ற உயிரினத்தின் ஓடு |
| மொறவாசல் | - | கோயில் அர்ச்சனையை ஒருநாள் ஒரு குடும்பத்தார் என்று முறைவைத்துச் செய்வது |
| முத்துக்கொட்டை | - | ஆமணக்கு விதை |

முப்பது படைத்தல் - இறந்தவருக்கு 30-ஆம் நாள் செய்யும் சடங்கு

முழுங்கி - மூங்கில்

முழுப்பா - திரட்சியாக

முள்ளடிக்காசு - பிணத்தைப் புதைத்தவுடன் அதன்மேல் முட்கள் போடுவதற்கு வெட்டியானுக்குக் கொடுக்கப்படும் பணம்

முறிச்சி எழுதுதல் - வட்டியைக் கணக்கிட்டு அசலோடு சேர்த்து மறுபத்திரம் எழுதுதல்

மூக்கணாங்கொட்டை - மூன்று பருப்புகளையுடைய நிலக்கடலை

மூக்குத்தடை - தொடர்ந்து குழந்தைப் பேறு இல்லாது இருந்து சாமிக்கு வேண்டிய பின் கிடைப்பின் அதற்காகச் செய்யப்படும் சடங்கு. குழந்தை வயிற்றிலிருக்கும் பொழுது வாசலில் புது மூக்குத்தி ஒன்றைப் புதைத்து வைப்பர். குழந்தை பிறந்தவுடன் அந்த மூக்குத்தியைத் தோண்டி எடுத்து அதால் குழந்தையின் மூக்கைக் குத்துவர்

மூட்டி/விழுக்கான் - அவசரகாலத்தில் தப்பியோட எலி வைத்திருக்கும் வளை

மூடாக்கு - பாத்திரத்தின் மூடி

மூணாங்கால் - தாத்தாவின் அண்ணன்-தம்பி உறவு முறையினர்கள்

மூணாம் வழி - திருமணம் முடிந்த பின் மணமக்கள் பெண்ணின் தாய் வீட்டிற்குச் செல்லும் மூன்றாம் நாள் சடங்கு

மெரளி பொம்மை - திருஷ்டிப் பொம்மை

மெலுக்கா/மேனசா - நோகாமல், கடின உழைப்பில்லாது

ஏந்தரம் - திருவல் (ஏந்தரம் ஈ இயந்திரம்)

மொக்கத்தனம் - அவமதிப்பு, அவமானம்

மொடக்கு - வளைவு, திருப்பம்

| | | |
|---|---|---|
| மொத்தப்புள்ளி | - | மொத்தத்தொகை |
| மொலத்தண்ணி | - | பால், மோர், தயிர் போன்ற பொருட்கள் |
| மொழிடாப்பு | - | திருமணம் போன்ற நிகழ்வுகளில் கொடுக்கப்படும் அன்பளிப்பை நோட்டில் எழுதுதல் |
| மொறப்பாடு | - | ஒருவருக்கொருவர் மண்ணை வாரிவிட்டுப் போடும் சண்டையால் ஏற்படும் உறவு முறிவு. இத்தகைய நிகழ்வுக்குப் பின் ஒருவர் வீட்டில் மற்றவர் உண்பது குற்றம் |

## 6. நாஞ்சில் வட்டார வழக்கு சொல்லகராதி
## (தென்பாண்டி நாடு – வேணாடு)

| | | |
|---|---|---|
| அக்கச்சி | - | அக்காள் |
| அக்கா | - | மூத்த இசக்கி என்ற நாட்டார் பெண் தெய்வம், இருளடைந்த முகம் |
| அக்கானி, அக்கியானி | - | பதநீர் |
| அக்யானம் | - | சந்தேகம் |
| அகமுடையான் | - | கணவன் |
| அகரம் | - | வீடு |
| அகவுதல் | - | அழைத்தல் |
| அங்கண | - | அங்கே |
| அங்கணம் | - | முற்றம், அடுக்களையில் பாத்திரம் கழுவும் இடம், சலதரை |
| அங்ஙத்தை | - | ஊர் அதிகாரி, கோவில் நிர்வாக அதிகாரி |
| அச்சி | - | கேரளத்து வைப்பாட்டி |
| அசட்டாளம் | - | ஆரவாரம், ஒழுங்கீனம் |
| அசல் | - | அடுத்த குடும்பம், வியாபார முதல் |
| அசேசம் | - | முழுவதும் |
| அஞ்சறப்பெட்டி | - | சமையலறையில் மஞ்சள், கடுகு, சீரகம், வெந்தயம், பூண்டு முதலியவகை வைக்கப் பயன்படும் ஐந்து அறைளுடைய மரப்பெட்டி |
| அஞ்சாலி | - | கோவில் நிலங்களைப் பராமரிப்பவர்கள் செலுத்தும் வரி |
| அஞ்சே, அஞ்ச | - | அங்கே |
| அட்டியில்லாமல் | - | மறுப்பில்லாமல் |
| அடக்கம் | - | பிணத்தைப் புதைத்தல் |
| அடப்பு | - | விடுமுறை, வெலி |

| | | |
|---|---|---|
| அடவோலை, அடையோலை | - | குத்தகை ஒப்பந்த ஆவணம் |
| அடுபாடு | - | மாடு முதலியவற்றின் உழைப்பு |
| அடியந்திரம் | - | இறந்த 16-ஆம் நாள் நிகழ்த்தப்படும் சடங்கு |
| அடுக்களை | - | சமையலறை |
| அடுப்பங்கரை | - | அடுப்பை அடுத்துள்ள இடம், சமையலறை |
| அண்டி | - | முந்திரிப் பருப்பு, கொல்லான் கொட்டை பருப்பு |
| அண்ணத்தப்பாடு | - | அன்றைய பொழுது |
| அண்ணாவி | - | ஆசிரியர், வில்லிசைக் கலைஞர் |
| அணவடைப்பிள்ளை, அணோடைப்பிள்ளை | - | கைக்குழந்தை |
| அத்தம் | - | அற்றம், கடைசி |
| அத்தாளப் பட்டினி | - | இரவுப் பட்டினி |
| அத்தாளம் | - | இரவு, இரவுச் சாப்பாடு |
| அதுக்காச்சுட்டி | - | அதற்காக |
| அந்தராயம் | - | கோவிலுக்குப் பக்தர்களால் தினமும் கொடுக்கப்படும் உள் வருமானம் |
| அந்தால | - | அதோடு, உடனே, அப்புறம் |
| அப்பச்சர், அப்பச்சி | - | அப்பா |
| அப்புதல் | - | ஒட்டுதல், பூசுதல் |
| அபேச்சை | - | விண்ணப்பம் |
| அம்மச்சி | - | தாய் |
| அம்மாச்சான், காரணவர் | - | மாமா |
| அய்ய | - | அவர்கள் |
| அரக்கல்லு | - | அம்மி |
| அரங்கு | - | உக்கிராண அறை, உயர்ந்த பொருட்களை வைக்கும் அறை |

| | | |
|---|---|---|
| அரசாணி | - | ஏமாற்றி வாழும் பெண், திமிர்பிடித்த வாயாடிப் பெண் |
| அரசிலை | - | பெண் குழந்தைகளுக்கு இடுப்பில் அணியும் அரச இலை வடிவ ஆபரணம், பெண்குறி |
| அரவணை | - | சர்க்கரைப் பொங்கல் போன்ற இனிப்பு உணவு |
| அரிக்காரன் | - | தூதன் |
| அரிவட்டி | - | பனை ஓலையில் பின்னப்பட்ட சிறிய பெட்டி |
| அருவு | - | விளிம்பு |
| அரைக்கோட்டை | - | 10½ மரக்கால் அளவு |
| அலக்கு | - | தொரட்டி |
| அலவாங்கு | - | கடப்பாரை |
| அலுசுவம் | - | அதிசயம், இதுவரை இல்லாத |
| அவகாசி | - | உரிமையுடையவர் |
| அவசானம் | - | முடிவு |
| அவயம் | - | பெருங்கூச்சல் |
| அவிய | - | அவர்கள் |
| அவையான் | - | பெருச்சாளி |
| அளவன் | - | உப்பு விளைவிக்கும் இனத்தவர் |
| அறங்கூடு | - | படுக்கை அறை |
| அறப்பாத்தி | - | இறைச்சி வெட்ட உதவும் கத்தி |
| அறப்பு | - | வெட்கம் |
| அறுதலி | - | கைம் பெண், விதவை |
| அறை | - | கர்ப்பப்பை, பெண் குறி |
| அனத்தம் | - | சத்தம், அரவம் |
| ஆக்கினை | - | தண்டனை |

ஆக்குப்புரை - திருமணம், பிற சடங்குகளுக்குப் போடப்படும் ஓலைக்கொட்டகை, சமையல் பந்தல்

ஆக்ஞை - ஆணை

ஆச்சி - பாட்டி

ஆச்சியாடு - இலவசமாகக் கிடைக்கும் ஆடு

ஆச்சை - கிழமை

ஆணம் - கறிக்குழம்பு

ஆத்தா - பாட்டி

ஆதாளிக்காரன் - இடக்காகப் பேசுபவன்

ஆமக்கன் - கணவன், தந்தை

ஆமக்கா - பெண் குறி

ஆயம் - தீர்வை, நிலவரி

ஆவலாதி - புகார்

ஆவிச்சேர்த்து - ஆரத்தழுவி

இக்கட்டு - துன்பம், இடையூறு

இங்கன - இங்கே

இசப்புதல் - ஏமாற்றுதல்

இசவு - மகப்பேறு வேதனை, பிரசவ வேதனை

இஞ்ச - இங்கே

இஞ்சி - கோபம்

இடுக்குபானை - பதநீர் இறக்கும் பானை

இடையம்புளி - ஆடு மேய்க்கும் இடையர்கள் தயாரிக்கும் குழம்பு வகை

இப்பம் - இப்பொழுது

இரப்பெட்டி, இரைப்பெட்டி - குடல், இரைப்பை

இரவுதன் - குதிரை ஓட்டுபவன்

| | | |
|---|---|---|
| இரி | - | உட்கார் |
| இலைவாணியர் | - | வெற்றிலை விற்கும் செட்டியார் |
| இளப்பம் | - | சிறுவயது |
| ஈச்சை | - | ஈ |
| ஈசான மூலை | - | வடகிழக்கு மூலை |
| ஈத்துக்காரி | - | பிரசவம் பார்க்கும் தாதி |
| ஈத்துப்புரை, ஈற்றுப்பொறை | - | மகப்பேறு நடக்கப் புதிதாகக் கட்டப்படும் ஓலை வேந்த அறை |
| ஈரப்பனை | - | கூந்தப் பனை |
| ஈராங்கியம் | - | உள்ளி, வெங்காயம் |
| ஈறல் | - | இளம் மூங்கில் |
| ஈனன் | - | தலித் மக்களின் நாட்டார் ஆண் தெய்வம் |
| உக்கம் | - | கயிறு |
| உக்கிராணம் | - | பலசரக்கு வைக்கப்படும் அறை |
| உச்ச நேரம் | - | நடுப்பகல் |
| உடுமானம் | - | ஆடை |
| உணக்க மீன் | - | கருவாடு |
| உணங்குதல் | - | காய்தல் |
| உப்புதல் | - | நீரில் ஊறுதல் |
| உம்பளம் | - | லஞ்சம் |
| உம்பிளிக்கம் | - | தயவு |
| உரக்குண்டு | - | எருக்குழி |
| உரி | - | அரை நாழி |
| உருப்படி | - | தங்க நகை |
| உருமா, உறுமால், உறுமா | - | திருமண மேடையில் உறவுமுறைக்காரர்கள் மணமகன் தலையில் கட்டும் துணித் துண்டுகள் |

| | | |
|---|---|---|
| உலை | - | சோறு சமைக்க உதவும் அடுப்பு அல்லது பாத்திரம் |
| உள்ளி | - | சிறிய வெங்காயம் |
| உறடு | - | உதடு |
| ஊச்சாளி | - | போக்கிரி |
| ஊட்டி | - | கழுத்து |
| ஊட்டு கொடுத்தல் | - | பலி கொடுத்தல் |
| ஊட்டுப்புரை | - | கோவிலில் பிராமணர் உணவு உண்ணும் இடம் |
| ஊத்தாம்பட்டி | - | பலூன் |
| ஊப்பாடு | - | கத்தி |
| ஊரக்கருவாடு | - | உப்பு வைத்துப் பதப்படுத்தப்பட்ட மீன் |
| ஊராளி | - | தென்னை மரம் ஏறுபவன், மலைச்சாதியன் |
| ஊளியம் | - | சம்பளமின்றிப் பார்க்கும் வேலை |
| எக்கு | - | இரும்பு |
| எங்கிண | - | எங்கே |
| எடவாடு | - | ஆதாரம், ஆவணம், உறவு |
| எடுப்பு வரி | - | கட்டாயமாகக் கட்ட வேண்டிய வரி |
| எத்துதல் | - | ஏமாற்றுதல் |
| எத்துவாளி, எத்தன் | - | ஏமாற்றுக்கரன் |
| எதுப்பு | - | சகுனம் |
| எப்பம் | - | எப்பொழுது |
| எய்ச்சோறு | - | கிராமத்தில் இருந்த ஒருவகை வரி |
| எரிசேரி | - | சேனைக்கிழங்கு அல்லது வாழைக்காயில் தயாரிக்கப்படும் ஒருவகைக் கூட்டு |
| எருசிரிச்சான் மூலை | - | வடமேற்கு மூலை |
| எளவு | - | இறப்பு |

| | | |
|---|---|---|
| எறப்பு | - | கூரை |
| ஏகாங்கி | - | மலடி |
| ஏண்ட | - | இயன்ற |
| ஏந்தல் | - | உதவி |
| ஏழா நீர் | - | திருமணம் முடிந்த அடுத்த நாள் மனமக்களுக்கு நிகழும் சடங்கு |
| ஏனம் | - | பாத்திரம் |
| ஒக்க | - | ஒன்றாக, மிகுதியாக |
| ஒக்கப்பிள்ளை | - | இடுப்பில் தூக்கும் பருவத்துப் பெண் |
| ஒசக்க | - | மேலே, உயர |
| ஒட்டுக்கும் | - | முழுவதும் |
| ஒட்டை | - | ஒரே வயது |
| ஒடப்பிறந்தா | - | உடன் பிறந்தவள் |
| ஒடுக்கு | - | வரி, வரி வசூலித்தல் |
| ஒடுக்குப்படி | - | ஒருவகை வரி |
| ஒத்தன மரம் | - | ஒரு ஆள் மட்டும் செல்லும் கட்டுமரம் |
| ஒத்தேல | - | தனியாக |
| ஒணங்குதல் | - | காய்தல் |
| ஒருக்கக்கூட | - | மறுபடியும் |
| ஒருவாடு | - | மிக அதிக அளவில், பெரும் அளவில் |
| ஒலுங்கு | - | பெரியவகைக் கொசு |
| ஒழுக்கறைப் பெட்டி | - | பணம், நகை வைப்பதற்குரிய இரும்புப் பெட்டி |
| ஒழுகு | - | நிலத்தின் வரலாறு குறித்த கணக்கு |
| ஒறச்சு | - | உரக்கை, சப்தமாக |
| ஒரண்டை | - | எங்கும், ஓரிடத்திலும் |

| | | |
|---|---|---|
| ஓங்கரிப்பு | - | பொறாமை |
| ஓங்கிட்டே | - | உன்னிடம் |
| ஓச்சன் | - | காளி கோவில் பூசாரி, கம்பர் இனத்தவர் |
| ஓட்டன் | - | பெரும்பணக்காரர்களுக்கு, சிற்றரசர்களுக்குத் தூது செல்பவன் |
| ஓட்டாச்சில்லி | - | உடைந்த மண்பானைத் துண்டு |
| ஓமல், உமல் | - | மீன் விற்கப் பயன்படும் பெட்டி, குருத்தோலைப் பெட்டி |
| ஓர்மை | - | ஞாபக சக்தி |
| ஓலை | - | மரணச்செய்தி |
| ஓவு | - | கூரை வடிகால் |
| க | - | பலாச்சுளையில் உள்ள ஒரு பகுதி |
| கக்கம் | - | காய்ச்சிய எண்ணெயின் கசடு |
| கங்குகரை | - | அளவில்லாமல் |
| கச்சப்புறம் | - | பெண்கள் காலில் அணியும் அணிகலன் |
| கச்ச முறி | - | வெள்ளைச் சேலை |
| கச்சவடம் | - | வியாபாரம் |
| கச்சன் | - | மேல்திசை |
| கச்சா | - | மீனைச் சேர்த்துவைக்கப் பயன்படும் கூடை |
| கசண்டி | - | வழுக்கைத் தலை |
| கசவு | - | சரிகை |
| கஞ்சித்தண்ணி | - | பொங்கிய சோற்றிலிருந்து வடித்த நீர் |
| கட்டணம் | - | பிணத்தைச் சுமந்து செல்லப்பயன்படும் பாடை |
| கட்டளைக்காரன் | - | கோவிலில் உரிமை உடையவன், குடும்பக் கோவில் வரிகாரன் |
| கட்டுத் தோணி | - | ஆழமில்லாத கடற்பகுதியில் செல்ல உதவும் படகு |

| | | |
|---|---|---|
| கடக்கே | - | எட்டாத இடத்தில் |
| கடவம், கடகம், கடவாப் பெட்டி | - | வாய் அகண்ற பனை ஓலைப் பெட்டி |
| கடா | - | எருமைக் கடா |
| கடுவாய் | - | கரடி, கோபக்காரன் |
| கடையம் | - | கழுத்தில் அணியும் அணிகலன் |
| கண்டம் | - | சிறிய வயல் |
| கணிசமாய் | - | அதிக அளவில், பெரும் அளவில் |
| கதை | - | செய்தி, தகவல் |
| கப்பு | - | இரகசியம் |
| கம்பக்கெட்டு | - | வாணவேடிக்கை |
| கம்பக்கூத்து | - | கழைக்கூத்து |
| கம்பி கொடுத்தல் | - | தந்தி கொடுத்தல் |
| கழுந்துலக்கை | - | பூண் இல்லாத உலக்கை |
| கயந்தலை | - | குழந்தை |
| கரம் | - | தீர்வை |
| கரல் | - | ஈரல் |
| கருக்க நேரம் | - | மாலை நேரம் |
| கருக்கல் | - | இருள் சூந்த மாலை நேரம் |
| கருக்க | - | இளநீர் |
| கருப்பட்டி | - | பனைவெல்லம் |
| கருமாதி, அடியந்திரம், கல் குளித்தல், கல்லெடுப்பு | - | இறந்தவர்களுக்கு 16-ஆம் நாள் செய்யும் சடங்கு |
| கல்பனை | - | அரசரின் உத்தரவு |
| கல்பித்தல் | - | ஆணை இடுதல் |
| கலவடை | - | மண்பானை வைப்பதற்குரிய வைக்கோல் தட்டு |

| | | |
|---|---|---|
| கவளி | - | வெற்றிலைக் கட்டு |
| கவுனி | - | மரியாதைக்காக அணிவிக்கப்படும் பொன்னாடை |
| கவுரு | - | சூரியன் உதிப்பதற்கு ஒருமணி நேரம் முன் உள்ள நேரம் |
| கழி | - | காயல் |
| கழச்சி, களச்சி | - | உருண்டையான கோலிக்குண்டு |
| கழிநிலம் | - | உப்பளம் |
| கழுத்தேடு | - | முதல் ஏருக்கு அடுத்த ஏர் |
| கழனி, கழுநீர் | - | கால்நடைகள் குடிக்கும் நீர் |
| களபம் | - | சந்தன உருண்டை, சந்தனக் குழம்பு |
| களம் | - | நெல் குதிரைச் சூடடித்து வகையாக்கும் இடம் |
| களுந்து உலக்கை | - | பூண் இல்லாத சிறிய உலக்கை |
| கறட்டு வழக்கு | - | பிடிவாதம் |
| கறிச்சட்டி | - | மீன், மாமிசம் சமைக்க உதவும் மண் சட்டி |
| கன்னி இருட்டு | - | பொழுது விடியுமுன் ஏற்படும் இருட்டு |
| கன்னிப்பூ | - | ஆண்டின் முதல் சாகுபடி ஆவணிமாதம் அறுவடையாவது |
| கனம்ப | - | நிறைய |
| காக்கட்டை | - | தோட்டங்களில் தண்ணீர் கோரப் பயன்படும் இருபுறமும் வாளி பொருத்தப்பட்ட நீண்ட கம்பு போன்ற காவடி |
| காட்டம் | - | உறைப்பு, கோபம் |
| காடனத்து | - | இறந்தவரின் எலும்புகளைச் சேகரித்துப் பால்விடும் சடங்கு |
| காணம் | - | கொள்ளு |
| காணியாளன் | - | நில உடைமையாளன், காணிக்காரன் எனும் பழங்குடி இனம் |

காணியாட்சை - பரம்பரைச் சொத்தை உரிமையாக வைத்துக் கொள்ளுதல்

காப்பரிசி - தைப்பொங்கல் போன்றவற்றில் தயாரிக்கபப்டும் சர்க்கரை கலந்த அரிசி

காப்புக்கட்டுதல் - மணமேடையில் மணமகன், மணமகளுக்கு கையில் மஞ்சளை மஞ்சள் நூலில் சேர்த்துக் கட்டுதல்

காமணம் - பெரிய ஓலைப் பந்தல்

காய் - குறைமாதக் கர்ப்பம்

காய்விழுதல் - கர்ப்பச்சிதைவு

கார் - ஆவணி, புரட்டாசி மாத விளைச்சல்

காரணவர் - தாய் மாமா, மருமக்கள் வழி வேளாளக் குடும்பத்தின் தலைவன், பாதுகாவலன்

காராடுதல் - பூனை புணர்ச்சி விரும்பி சப்தமிடுதல்

காலம்பற - அதிகாலை

காவக்காரி - ஒழுக்கம் இல்லாத பெண்

காவு கொடுத்தல் - பலி கொடுத்தல்

கிச்சடி - தடியங்காயும் தயிரும் சேர்த்துச் சமைக்கப்படும் கறி

கிட்டம் - சமீபம்

கிடா - ஆண் எருமை

கிடாரி - பெண் கன்று

கிடுவு - தென்னைக் கீற்றினால் பின்னப்படும் பரந்த தட்டு, கிடுகு

கிண்ணி - சிறிய பாத்திரம், தொடை எலும்பு

கிருதி - சேட்டை செய்பவன், கர்வமுடையவன்

கிரையம் - விலை

கிளியாஞ்சட்டி - மண்ணால் ஆன சிறிய அகல் விளக்கு

குச்சு - சிறுமியின் காதணி

குசால் - சந்தோசம்

குசினி, குசினிப் பெரை - சமையலறை

குஞ்சாங்குறும்பு - குழந்தைகள்

குஞ்சாலம் - ஊஞ்சல்

குஞ்சி, குஞ்சு - குழந்தையின் ஆண் உறுப்பு

குட்டி - சிறிய பெண், சிறுமி, மகள்

குட்டுவம் - பெரிய செம்புப் பாத்திரம்

குடுக்கை - குடுவை

குண்டுணி - கோள் மூட்டுபவன்

குணட்டல் - கெஞ்சுதல், பகட்டுப் பண்ணுதல்

குந்தகம் - குற்றம், இடையூறு, குறை

குப்பக்காய்ச்சி - அரசு நிலம்

குப்பம் - குவியல்

குப்பாயம் - பெண்களின் மேலாடை, இரவிக்கை

கும்பப்பூ - தை மாத அறுவடைப் பயிர், இரண்டாம் போக சாகுபடி

கும்பளங்காய் - ஒருவகைப் பூணிக்காய்

கும்பா - உணவு உண்ணும் குழிவாக உள்ள பாத்திரம்

கும்பி - குடல், வயிறு, இரப்பை

குமரி - கன்னி

குமருதல் - பெண் பருவம் அடைதல்

குமைத்தல் - கிண்டல் செய்தல், பரிகாசம் செய்தல்

குருக்கள் - சைவ வேளாளர் சாதியினரில் சடங்குக் கிரிகை செய்பவர்

குருமண் - களிமண்

| | | |
|---|---|---|
| குலுக்கம் | - | வெட்கம், அவமானம் |
| குழியல் | - | சாப்பிடப் பயன்படும் பாத்திரம் |
| குளிகை, குளிசை, குளுசை | - | மாத்திரை |
| குளியாணி | - | கடல் பாறைகளில் சிக்கிய வலைகளை அகற்றும் பணியாளர் |
| குறுணி | - | 8 படி கொண்ட தானிய அளவு, ஒரு மரக்கால் |
| கூட்டுக்கச்சவடம் | - | கூட்டு வியாபாரம் |
| கூடைச்சோறு | - | கல்யாணத்தம்பதியர் தம் வீடு செல்லும் போது பெண் வீட்டிலிருந்து கொடுக்கப்படும் சோறு |
| கூப்பயினி | - | காய்ச்சிய பதநீர் கூழ் |
| கூராப்பு | - | மழை மூட்டம் |
| கூவரகு | - | கேழ்வரகு |
| கூளையன், கூனையன் | - | குள்ளமாக இருப்பவன் |
| கூறு | - | அறிவு, புத்தி |
| கெடை | - | ஆடுகளை வயலில் தங்கவைத்தல், மூங்கில் |
| கேள்வி | - | விசாரணை, வாய்மொழி உத்தரவு |
| கைசால | - | சமையலறை |
| கைசோலி | - | சமையல் வேலை |
| கைப்பணம் | - | சொந்தப்பணம் |
| கொக்கூசு | - | அச்சு முறுக்கு |
| கொச்சன் | - | சிறுபையன் |
| கொஞ்சு | - | காயலில் உள்ள இறால் மீன் |
| கொட்டக்குடலை | - | பாத்திரவகை |
| கொட்டாரம் | - | அரண்மனை |
| கொடை | - | கோவில் திருவிழா |
| கொண்டை | - | தென்னை, பனை மர உச்சி |

கொப்பு - ஒருவகை ஆபரணம்

கொல்லம் - வருடம்

கொல்லமாண்டு - மலையாள வருடம்

கொல்லாம்பழம் - கொல்லாமரத்தின் பழம்

கொழுந்தி - மைத்துனி, மனைவியின் தங்கை

கொள்ளாம் - பரவாயில்லை

கொறச்சல் - வெட்கம்

கோக்கதவு - பெரிய மிராசுதார் வீட்டுப் பின்புறக்கதவு

கோட்டை - 21 மரக்கால் அளவு

கோடத்தண்ணி - சாராயம் காய்ச்சும் ஊறல் தண்ணி

கோடி - புதிய துணி

கொணக்குதல் - பிணக்குதல்

கொத்து - வயல் அறுவடை செய்தவர்களுக்குக் கொடுக்கும் கூலி

கோணத்தண்டை - குழந்தைகளின் காலணிகலன்

கோணம் - ஒரே குடும்பத்தாருக்குரிய வயல்கள்

கோம்பையன் - விவரம் இல்லாதவன்

கோமரம் வருதல் - தெய்வ அருள் சாமியாடிக்கு அருள்

கோயில் பிள்ளை - கிறிஸ்தவக் கோயிலின் அதிகாரி

சக்கரக்காரன் - செல்வந்தன், பணக்காரன்

சக்கரம் - சுமார் மூன்று பைசா மதிப்புள்ள பழைய திருவிதாங்கூர் நாணயம்

சக்கரை - ஆண்குறி

சக்காய் - பலாக்காய்

சங்காத்தம் - உறவு, தொடர்பு

சஞ்சி - பை

| | | |
|---|---|---|
| சட்டம்பி, சட்டாம்பிள்ளை | - | திண்ணைப் பள்ளிக்கூட மாணவர்களின் தலைவன் |
| சட்டாம்பிள்ளை | - | கிறிஸ்தவ மத உபதேசியார் |
| சட்டர் | - | பகவதி கோவில் அதிகாரி |
| சட்டுவம் | - | தோசைக்கரண்டி |
| சடவு, சடைவு | - | அயவா, சோர்வு |
| சடையாரி | - | நாத்து |
| சண்ணினான் | - | சாப்பிட்டான் |
| சத்தம் | - | வண்டி வாடகை |
| சந்திவேளை | - | மாலை, பொழுது சாயுங்காலம் |
| சந்துக்காரை | - | ஒருவகை ஆபரணம் |
| சம்சியம் | - | சந்தேகம், நிச்சயமற்ற தன்மை |
| சம்படம் | - | திருநீறு வைக்கப் பயன்படும் பாத்திரம் |
| சம்பாரம் | - | பச்சைமிளகு, கறிவேப்பிலை கலந்த நீர் மோர் |
| சம்பிரதிப்பிள்ளை | - | கோவில், கிராமக் கணக்கைக் கவனிப்பர் |
| சம்மந்தி | - | துவையல் வகை, கணவனின் தங்கை |
| சமுட்டுதல் | - | மிதித்தல் |
| சம்சோரி | - | முருங்கைக்கீரைக் குழம்பு |
| சமுதாடு | - | கோவிலில் இருக்கும் நீண்ட வாள் போன்ற ஆயுதம் |
| சமைதல் | - | பெண் பருவமடைதல் |
| சர்த்திப்பு | - | ஓங்கரிப்பு |
| சரப்பளி | - | கழுத்தணிகலன் |
| சல்லடம் | - | சாமி ஆடுபவர் அணியும் கருப்பு நிறக் கால்ச்சட்டை |
| சல்லிக்காசு | - | மிகக் குறைந்த மதிப்புள்ள பழையகாலக் காசு |

| | | |
|---|---|---|
| சல்லியம் | - | இடையூறு, தொந்தரவு |
| சவடு | - | ஒருவகை ஆபரணம் |
| சவளக்காரர் | - | மீன் வியாபாரம் செய்யும் உள்;ர் மீனவர் |
| சவுக்களி | - | ஒருவகைக் காதணி |
| சவுக்காளி | - | நண்பன் |
| சவுட்டுதல் | - | மிதித்தல் |
| சள்ளை | - | இடையூறு, தொந்தரவு |
| சளம் | - | துன்பம், வேதனை |
| சளவோலை | - | திருமணப்பந்தலில் அழகுபடுத்தப் பயன்படும் ஒருவகை மலைப்பகுதிகளில் கிடைக்கும் ஓலை |
| சன்னம் | - | கொஞ்சம் |
| சாக்கோட்டி | - | கர்ப்பிணிக்கு வரும் மசக்கை |
| சாங்கியம் | - | இறப்புச் சடங்குகள் |
| சாமானம் | - | பொருள், ஆண் - பெண் உறுப்பு |
| சாயராட்சை | - | மாலை நேரம் |
| சாரம் | - | லுங்கி |
| சாபம் | - | கள்ளத்தனம் |
| சிங்கி | - | ஜால்ரா |
| சித்தாங்கம் | - | அடம்பிடித்தல் |
| சித்திரு | - | காதணி, தாலி |
| சிரிப்பாணி | - | சிரிப்பு |
| சில்லம் | - | உதிரியாதல் |
| சில்லு | - | சிறிய துண்டு |
| சிறகு | - | வேளாளர் தாலியில் பிள்ளையார் உருவத்தின் இருபுறமுள்ள பகுதி |
| சிறுக்கன் | - | சிறுவன், இளைஞன் |

| | | |
|---|---|---|
| சினைப்படுத்தல் | - | கர்ப்பமாக்குதல் |
| சினைப் பருவம் | - | கதிரில் நெல்மணி பிடிக்கும் பருவம் |
| சீக்காய் | - | பழுக்காத பனங்காய் |
| சீண்டாம் | - | தொந்தரவு |
| சீணம் | - | தளர்ச்சி, அலுப்பு |
| சீத்துவம் | - | திறமை |
| சீராடுதல் | - | கொஞ்சுதல் |
| சீலாந்தி மரம் | - | பூவரசு மரம் |
| சுக்குமாந்தடி | - | நாட்டார் தெய்வத்தின் ஒருவகை ஆயுதம் |
| சுண்டு | - | உதடு |
| சுணக்கம் | - | நோம் கடத்தல், காலதாமதம் |
| சுத்திரு | - | ஒருவகைக் கழுத்தணிகலன் |
| சும்மா | - | தொழில் இல்லாது இருக்கும் நிலை |
| சுருக்கம் | - | சிக்கனம், விரைவு |
| சுருணை | - | வைக்கோலால் செய்யப்பட்ட சிறு குதிர் |
| சுருள் | - | மொய், திருமணம் போன்ற சடங்குகளில் கொடுக்கப்படும் பணம் |
| சுவடி | - | ஒருவகை ஆபரணம் |
| சுள்ளாணி | - | மரத்தாலான ஆணி |
| சுளவு | - | முறம், சொளகு |
| சூசி | - | ஊசி |
| சூசின் | - | தோணி, வள்ளம் |
| சூத்து | - | ஆண் - பெண் குறி |
| சூரியப்பிறை | - | தலையில் அணியும் அணிகலன் |
| சூல்காப்பு | - | சீமந்தச்சடங்கில் கருவுற்ற பெண்ணுக்கு அணியும் வளையல் |

| | | |
|---|---|---|
| சூலைத்தூண்டில் | - | கடலில் மீன்பிடிக்கப் பயன்படும் தூண்டில் |
| செக்காலியன் | - | செக்காட்டி எண்ணெய் எடுக்கு இனத்தவர் |
| செட்டை | - | பறவையின் இறக்கை |
| செண்டை | - | ஒருவகைத் தோல் இசைக்கருவி |
| செணம் | - | சீக்கிரம், விரைவாக |
| செத்த | - | கொஞ்ச நேரம் |
| செத்தோல | - | கொஞ்சமாக |
| செம்பிலியாடு | - | செம்மறியாடு |
| செல்லம் | - | வெற்றிலைப்பெட்டி |
| செவிளை, சென்னை | - | கன்னம் |
| சேசம் | - | மிச்சம் |
| சேழம் | - | பகுதி, மீதி, எஞ்சியது |
| சேஷகாரன் | - | மருமக்கள் வேளாளரான காரணவரின் சகோதரி குழந்தைகள் |
| சொக்கவெள்ளி | - | விடிவெள்ளி |
| சொக்கன் | - | குரங்கு |
| சொக்காரன் | - | தந்தைவழி உறவினர்கள் |
| சொக்கான் | - | அரிசியில் உள்ள வண்டு |
| சொச்சம் | - | மீதி, மிச்சம் |
| சொட்டை | - | இடுப்பெலும்பு |
| சொதமண் | - | ஈரத்தன்மையுள்ள மண் |
| சொதை | - | ஜோடி, அழகு |
| சொரணை | - | சிறிய வைக்கோல் கட்டு |
| சொரிமிதிப்பு | - | ஒற்றுமை |
| சொள்ளை | - | குற்றம் |

| | | |
|---|---|---|
| சோணுவாடு | - | கடல் நீரோட்டம் மேற்கிலிருந்து கிழக்காக ஓடுதல் |
| சோத்துக்கட்டி | - | கோவிலில் இறைவனுக்குப் படைக்கப்படும் சாதம் |
| சோத்துக்கை | - | வலதுகை |
| சோதக்கிடா | - | இன இருத்தி செய்ய இயலாத கிடா |
| சோழக்காற்று | - | தெற்கிலிருந்து வீசும் கடல்காறறு |
| சோளி | - | கிளிஞ்சல் |
| சோனகம் | - | தென்கிழக்குக் காற்று |
| தக்கடி | - | கால் ஊனமுற்றவன் |
| தங்கரியம் | - | பாதுகாப்பகம் |
| தங்கூசு | - | தூண்டில் கயிறு |
| தட்டட்டி | - | திறந்தவெளி மாடி |
| தட்டளிவு | - | மனக்கலக்கம், மனம் அலைபாய்தல் |
| தட்டுக்கல் | - | வெற்றிலை தட்டப் பயன்படும் கல்லும் குழவியும் |
| தட்டுகுழி | - | பசு ஈனுவதற்கு சில நாட்களுக்குமுன் பெண்குறியில் தோன்றும் அறிகுறி |
| தட்டுப்பு | - | மாடிக்குச் செல்லும் படி |
| தடி | - | வயல், வயல் அளவு |
| தடிமாடு | - | எருமைமாடு |
| தண்டட்டி, தண்டொட்டி | - | காதணி |
| தண்டயப்பலகை | - | சமையலறையில் பாத்திரம் வைக்க உதவும் பலகை |
| தண்டல்காரன் | - | வரி வசூலிப்பவன் |
| தண்டு | - | ஆண் குறி, அகங்காரம் |
| தம்புரான் | - | தலைவன், அரசன், எஜமான் |
| தம்மானம் | - | கோவில் விழாக்களில் கலைஞர்களுக்குச் செய்யப்படும் சிறப்பு |

| | | |
|---|---|---|
| தரம் | - | தடவை, முறை |
| தரிசடிப்பு | - | முதல் உழவு |
| தருவை | - | உவர்மண் கிடைக்கும் இடம் |
| தல்லுதல் | - | அடித்தல், துவைத்தல் |
| தலைச்சோறு | - | மூளை |
| தவணைப்பால் | - | அய்யாவழிக் கோவில்களில் வழங்கப்படும் பச்சரிசிக் கஞ்சி |
| தவி | - | அகப்பை |
| தள்ளை | - | தாய் |
| தளைக்கயிறு, தளநார், தளைநார் | - | தென்னை, பனைமரம் ஏறுபவர்கள் கால்களில் போட்டிருக்கும் இணைக்கயிறு |
| தாக்கம் | - | நீரோட்ட சுழற்சி |
| தாக்கிழவன் | - | முதிய கிழவன் |
| தாக்கோல் | - | திறவுகோல் |
| தாத்தம்மை | - | பாட்டி |
| தாமசம் | - | இருக்கும் இடம், வாழும் இடம் |
| தாலிப்பெருக்கி | - | திருமணம் முடிந்த ஏழாம் நாள் தாலியை மஞ்சள் கயிற்றிலிருந்து தங்கச்சங்கிலிக்கு மாற்றுதல் |
| தாவளம் | - | தற்காலிகக் குடியிருப்பு |
| திகையா | - | பூர்த்தியாகாத |
| திங்காமல் | - | உண்ணாமல் |
| திரடு வயல் | - | வெளியிலுள்ள மேட்டுப் பகுதி |
| திரளுதல், தெரளுதல் | - | பெண்பிள்ளை சமைதல், பூப்படைதல் |
| திருக்கஞ்சாத்து | - | வீதிவழி வரும் வாகனத்துக்கு வழிபாடுசெய் |
| திருக்குப் பூ | - | பெண்கள் அணியும் ஒருவகைத் தலையணிகலன் |

| | | |
|---|---|---|
| திருவலக்குத்தி | - | தேங்காய் துருவ உதவும் கருவி |
| திருவை | - | தானியங்களை மாவாக அரைக்க உதவும் வட்ட வடிவக்கல் |
| தீச்சட்டி | - | அக்கினிச்சட்டி |
| தீட்டம் | - | மலம் |
| தீண்டல் | - | மாதவிடாய் |
| தீயல் | - | குழம்பு வகைகளில் ஒன்று |
| தீனம் | - | நோய் |
| துடி | - | அகங்காரம் |
| துண்டம் | - | மிகச் சிறிய வயல் |
| துப்பில்லை | - | வசதியில்லை |
| துரக்காரர் | - | கோவில் நிலங்களுக்குரிய வரியை வசூலிக்கும் அதிகாரி |
| துரிசம் | - | விரைவு |
| துவையல் | - | தாளிக்காத சட்னி |
| துளவை | - | துடுப்பு |
| தூட்டா | - | கடலில் மீன்பிடிக்கும் தூண்டில் இறை |
| தூண்டா | - | மீன்தூண்டில் |
| தூம்பு | - | சாக்கடை |
| தெகரம் | - | கஷ்டம் |
| தெங்கு | - | தென்னை மரம் |
| தெம்மாடி | - | கையாலாகதவன் |
| தெறி | - | வசவு, ஆணவப்பேச்சு |
| தென்றாடு | - | தேன்கூடு |
| தேர்ப்பாடை | - | பாடை |
| தேரி | - | வயல், தோட்டம் நடுவில் உள்ள மணல் திட்டு |

| | | |
|---|---|---|
| தேளுவை | - | தேவை |
| தொங்கட்டான் | - | காதணிகலன் வகை |
| தொட்டிவீடு | - | நடுமுற்றமுள்ள வீடு |
| தொண்டைக்கழி | - | குரல்வளை |
| தொரட்டி, தொரண்டி | - | இலை தழைகள் பறிக்க உதவும் நீண்ட கம்பு |
| தொலித்தல் | - | தேங்காய் மட்டையை உரித்துத் தேங்காயை எடுத்தல் |
| தொழி | - | சகதி |
| தொழு | - | மாட்டுக்கொட்டகை |
| தொறட்டு | - | சிக்கல், பிரச்சனை |
| தோண்டிப்பட்டை | - | கமுகம் பாளையிலான வாளி |
| கமுகம் | - | பாக்குமரம் |
| நங்குடைமை | - | மருமக்கள் வழிமுறையில் குழந்தையற்ற விதவைக்குக் கொடுக்கப்படும் உதவித்தொகை |
| நட்டு, நெட்டு | - | புகையிலைக் காம்பு |
| நடை | - | நிலைப்படி, முன்வாசல் |
| நண்ணி | - | நன்றி |
| நம்மட்டி | - | மண்வெட்டி |
| நல்லது | - | நல்லபாம்பு |
| நல்லப்பம் | - | முதன் முதலாக |
| நாகப்படத்தாலி | - | கழுத்து அணிகலன் வகை |
| நாசுவன் | - | நாவிதர் |
| நாதி | - | வேண்டியவர், ஆள் |
| நாலம்பலம் | - | நாட்டார் தெய்வக்கோவிலின் முன்பகுதி |
| நாலாம்சீர் | - | திருமண நாளில் முதலிரவுக்கு முன்பு மணமக்கள் செய்யும் சடங்கு |

| | | |
|---|---|---|
| நாவுதல் | - | புடைத்தல் |
| நாளாவட்டம் | - | நாளடைவில் |
| நாளைக்கழித்து | - | நாளை மறுநாள் |
| நிசாரம் | - | மிக எளிதாக |
| நிமிட்டுதல் | - | கிள்ளுதல் |
| நிமிர | - | நிறைய |
| நிரவுவீடு | - | மரப்பலகைச் சுவரால் ஆன வீடு |
| நீச்சுத்தண்ணி, நீத்தண்ணி | - | நீர் ஆகாரத்தண்ணீர் |
| நீராளி | - | குடிநீர் எடுக்கப் பயன்படும் பெரியவகைக் கிணறு |
| நீவாடு | - | நீரோட்டம் |
| நூலில்லாமாலை | - | ஒருவகைக் கழுத்தணிகலன் |
| நெஞ்சாங்குழி | - | தொண்டைக்குழி |
| நெய்த்து | - | நெசவு |
| நெரம்பெற | - | சீக்கிரமாய், உரிய நேரத்தில் |
| நொடி | - | குண்டும் குழியும் உள்ள இடம் |
| நொண்டங்காய் | - | பிஞ்சு புளியங்காய் |
| நையாண்டி மேளம் | - | நாட்டுப்புறக் கலையில் பயன்படுத்தும் மேளம் வகை |
| பக்கா | - | பெரிய நாழி |
| பகரம் | - | புதிலாக, மாற்றாக |
| பங்கரை | - | அரைகுறை |
| பங்காயம் | - | நீண்ட கரண்டி |
| பச்சப்புள்ளை | - | கைக்குழந்தை |
| பச்சைபிடித்தல் | - | பணவசதி பெருகுதல் |
| பசானம், பிசானம் | - | மாசி, பங்குனி மாத விளைச்சல் |

| | | |
|---|---|---|
| பஞ்சாரை | - | சீனி, சர்க்கரை |
| பட்டி | - | நாய் |
| படக்கு | - | பட்டாசு |
| படித்தரம் | - | சம்பளம், கூலி |
| படிப்புரை | - | திண்ணை, வராந்தா |
| படை | - | இரண்டுகைகளாலும் வாரிஎடுக்கும் அளவுள்ள நெற்கதிர் |
| பண்டு | - | ஆதிகாலம், முந்திய காலம் |
| பண்டுவன் | - | வைத்தியம் |
| பத்தயம், பத்தாயம் | - | நெல் போடுவதற்குரிய பெரிய மரப்பெட்டி |
| பத்திரமாக | - | கவனமாக |
| பதக்கு | - | இரண்டு மரக்கால் அளவு, இரண்டு குறுணி |
| பதனமாக | - | கவனமாக, பக்குவமாக |
| பதி | - | அய்யாவழிக் கோவில் |
| பந்தீரடிப் பூசை | - | பகல் 12 மணிக்கு உட்பட்ட நேரத்தில் நடக்கும் பூசை |
| பப்பு | - | மீன் உலர்த்தும் இடம் |
| பயினி | - | பதநீர் |
| பருமி | - | கட்டுமரத்தில் பாயைக்கட்டப் பயன்படும் மூங்கில் கம்பு |
| பருவம் | - | வயலில் விதைப்பதற்குரிய நேரம் |
| பலவெஞ்சனம் | - | பலசரக்குச் சாமான்கள் |
| பழஞ்சி | - | பழைய சாதம் |
| பனந்தூர் | - | பனைமரத்தின் அடிப்பகுதி |
| பாஞ்சிப்பழம் | - | சீத்தாப்பழம் |
| பாட்டம் | - | வயல் குத்தகை முறை |

பாணி - திமிலை என்ற தோலிசைக் கருவி

பாம்படம் - காதணிகலன் வகை

பித்தா நாள் - மறுநாள்

பிரதமன் - பயாசவகை

பிராயம் - வயது

பிலாக்கணம் - அழுகை கலந்த ஒப்பாரி

பிளாப்பெட்டி - பனை யோலைப் பெட்டிவகை

பிளாவு - முறம்

பீச்சக்கை - இடது கை

பீசாத்தி - சிறியவகைக் கத்தி

பீத்தை - கிழிந்த

புடவடை - புடவை கொடுத்து திருமணம் செய்தல்

புடுக்கு - ஆண் உறுப்பு

புத்தரிசி சாப்பிடல் - அறுவடைக்குப் பின் புதிய அரிசியைச் சமைக்கும் சடங்கு

புரிச்சம், பொரிச்சம் - சோதிடம்

புருத்திச்சக்கா - அன்னாசிப்பழம்

புரையிடம் - காலி மனை

புளிசேரி - மோர்க்குழம்பு

பூச்சை - பூனை

பூஞ்சு - பலாப்பழத்தின் நார்ப்பகுதி

பூதம் - பூரான்

பூராவும் - முழுவதும்

பூராவு - மகிழ்ச்சி

பூளு - நீளமான ஆண்குறி

| | | |
|---|---|---|
| பெண்ணடி | - | பெண் வாரிசு |
| பெரை | - | அறை |
| பேப்பட்டி | - | வெறிநாய் |
| பைதா | - | வண்டிச்சக்கரம் |
| பையா | - | மெதுவாக |
| பொக்கணம் | - | சிறிய மூட்டை |
| பொக்கன் | - | பெரிய அம்மை நோய் |
| பொங்கப்பெரை | - | சமையலறை |
| பொசறு | - | புயல் |
| பொட்டச்சி | - | பெண் |
| பொடக்கள | - | புழக்கடை |
| பொத்தை | - | சிறுகுன்று |
| பொத்தச்சி | - | உடல் பருத்த பெண் |
| பொதப்பு | - | போர்வை, மூக்கு |
| பொழி | - | கடலும் காயலும் சேரும் பகுதி |
| பொழுது | - | சூரியன், நேரம் |
| பொழுது அடைய | - | சூரியன் அஸ்தமிக்கும் நேரம் |
| பொறத்த | - | பின்புறம் |
| பொறவு | - | பின்னர் |
| போக்காளன் | - | இளமையில் இறந்தவன் |
| போத்தி | - | அர்ச்சகர், நாவிதர் உயர் சாதியினரை அழைக்கும் சொல், தாத்தா |
| மக்கள் தாயம், மக்கள் வழி | - | தகப்பன் சொத்து அவருடைய மகன்களுக்குச் செல்லும் முறை |
| மடுப்பெட்டி | - | வெற்றிலைப்பெட்டி |
| மணல்தேரி | - | மணல் குன்று |

| | | |
|---|---|---|
| மத்தவன் | - | மேற்படி ஆள் |
| மக்களே | - | குழந்தைகளை அழைக்கும் விழிச்சொல் |
| மகிழி | - | சேறு |
| மகுடம் | - | தப்பட்டம், கணியன் ஆட்டத் தோலிசைக்கருவி |
| மசிக்குப்பி | - | மைக்கூடு |
| மஞ்சத்தோறு | - | மஞ்சள் கிழங்கு, தாலி |
| மதினி, மயினி | - | அண்ணி |
| மந்துக்கல் | - | யானைக்கால் வியாதி |
| மம்மல் | - | அதிகாலை நேரம் |
| மயானம் | - | சுடுகாடு |
| மரக்கால் | - | முகத்தலளவு, முகத்தலளவைப் பாத்திரம் |
| மரவை | - | மரத்தால் செய்யப்பட்ட பாத்திரம் |
| மருமக்கள் தாயம், மருமக்கள் வழி | - | தந்தையின் சொத்து அவரது சகோதரியின் மகனுக்கு உரிமை கொண்ட முறை |
| மலக்கறி | - | காய்கறி |
| மலந்து | - | மல்லாந்து |
| மலையாழ்மை | - | மலையாள எழுத்தில் மலையாளமும் தமிழும் கலந்து எழுதப்படும் மொழி |
| மற்றநாள் | - | நாளைக் கழித்து, நாளை நின்று மறு நாள் |
| மறி | - | வெள்ளாட்டின் குட்டி |
| மறுப்பு | - | இரண்டாம் உழவு |
| மறுபடி | - | பதில், விடை |
| மாச்சல் | - | கூச்சம் |
| மாசியடித்தல் | - | பசு உடலுறவு கொள்ளுவதற்குரிய காலம் |
| மாடம் | - | குடிசை |
| மாத்தை | - | சலவைத் தொழிலாளி |

| | | |
|---|---|---|
| மாப்பு | - | மன்னிப்பு |
| மாராயப்பணம் | - | பாட்டத்திற்குரிய முன்பணம் |
| மாறாச்சன் | - | சாஸ்தா என்னும் தெய்வம் |
| மிச்சம், மிச்ச சொச்சம் | - | எஞ்சியது, மீதி |
| மிஞ்சி | - | பெண்களின் கால் விரல் அணிகலன் |
| மீன்கூடு | - | மீன்பிடிக்கும் கருவி |
| மீன்பாடு | - | மீன்பிடி தொழிலில் ஒரு நாளில் மீன் கிடைக்கும் அளவு |
| முட்ட | - | நிறைய, முழுவதும் |
| முடுகு | - | கையில் அணியும் ஆபரணம் |
| முடைதல் | - | நார், ஓலை கொண்டு பின்னுதல் |
| முண்டு | - | வேட்டி |
| முத்தேதி | - | மாத இறுதி நாள் |
| முந்தி | - | முன்னால் |
| முறையாம் பிள்ளை | - | நாஞ்சில் நாட்டு வேளாளர் கிராமங்களில் ஊர்க் காரியங்களைக் கவனிக்கும் குற்றேவல்காரர் |
| முன்னிருட்டு | - | மாலை முடிந்த பின் நிலவி வரும் நேரம் |
| மூங்கா | - | ஆந்தை |
| மூஞ்சி | - | முகம் |
| மூண்டாணி | - | மூன்று வீசம் |
| மூந்திக்கருக்கல் | - | மாலை நேரம் |
| மூப்பிலு | - | பெரியவர், வயதானவர் |
| மூலைகாத்தல் | - | இறந்தவரின் மனைவி நோன்பிருத்தல் |
| மெக்காட்டாளு | - | கூலியாள் |
| மெட்டு | - | தடை |
| மென்னி | - | கழுத்து |

| | | |
|---|---|---|
| மெனக்கெடு | - | நேரம் வீணாகுதல் |
| மெனக்கெடுதல் | - | வேறு வேலைகளை விட்டுவிட்டு வேறு ஒன்றில் சிரத்தை காட்டுதல் |
| மேமழை | - | இரண்டாவது மழை |
| மேலா | - | மேற்குத்திசை |
| மேணா | - | மணமக்கள் ஊர்வலம் வரும் பல்லாக்கு |
| மேனி | - | நெல்விளையும் அளவு |
| மைனி | - | மதனி |
| மொகரை | - | முறை, முகம் |
| மொய் | - | ஆடுகளின் தொகுதி |
| யாத்தினம் | - | மீன்பிடிப்பதற்குரிய பொருட்கள் |
| யானம் | - | பாத்திரம் |
| ராக்கடி | - | தலையணி வகை |
| ராவு | - | இரவு |
| ரீதி | - | முறையாக |
| லங்கோடு | - | ஆண் உள்ளாடை |
| லண்டன் சீனி | - | வெள்ளைச் சர்க்கரை |
| லாஞ்சி | - | தோணி |
| லெச்சை | - | வெட்கம் |
| லெவலேசம் | - | கொஞ்சம் கூட |
| லோட்டா | - | தம்ளர் |
| வக்கு | - | சொத்து, செல்வம் |
| வங்குசம் | - | வம்சம் |
| வஞ்சி | - | காணிக்கைப்பெட்டி, உண்டியல் |
| வஞ்சிபூமி | - | திருவிதாங்கூரின் தேசியகீதம் |

| | | |
|---|---|---|
| வஞ்சிப்பாட்டு | - | ஓடப்பாட்டு |
| வட்டச்செலவு | - | இரவுச்செலவு, மொத்தச்செலவு |
| வட்டில் | - | உணவு உண்ணும் பாத்திரம் |
| வடலி | - | சிறிய பனங்காய் |
| வடி | - | சிறுவயல் |
| வண்டல மாசியம் | - | இறந்த வீட்டில் 41-ஆம் நாள் செய்யப்படும் சடங்கு |
| வண்ணம் | - | பருத்த, தடிமனான |
| வய்யாளி | - | கடற்கரை |
| வல்லம் | - | தென்னங்கீற்றில் பின்னப்பட்ட கூடைவகை |
| வலித்தல் | - | பிடித்து இழுத்தல் |
| வள்ளம் | - | நாட்டுப் படகு, தோணி |
| வளரி | - | வயலில் முளைக்கும் களை |
| வாட | - | கிழக்குத்திசை |
| வாட கரிய | - | குடலின் வடகிழக்கு |
| வாட வெலங்க | - | கடலின் தென்கிழக்கு |
| வாரியல் | - | துடைப்பம் |
| விடலை | - | இளம் தேங்காய், இளைஞன், இளநீர் |
| விந்துதல் | - | நொண்டுதல் |
| விலாங்கு | - | மர நாற்காலி |
| விவரித்தூண்டில் | - | கடலில் மீன்பிடிக்கப் பயன்படும் தூண்டில் |
| விறிதா | - | தேவையில்லாமல், வீணாக |
| வெசயா | - | வேகமாக |
| வெஞ்சணம் | - | மளிகைச்சாமான் |
| வெட்டுமருந்து | - | மூலிகைமருந்து |

| | | |
|---|---|---|
| வெடலை | - | சிதறுதேங்காய், இளம் பையன் |
| வெலி | - | பலி |
| வெள்ளக்குடி | - | கூலியாட்களுக்கு நீர் ஆகாரம் குடிக்க அல்லது நண்பகல் உணவுக்குக் கொடுக்கும் கூலி |
| வெள்ளம் | - | தண்ணீர், கள், சாராயம் |
| வெள்ளன | - | விடியற்காலை |
| வெள்ளுள்ளி | - | வெள்ளைப்பூண்டு |
| வெற்றிலைச் செல்வம் | - | வெற்றிலைப் பெட்டி |
| வௌம் | - | ஆத்திரம், பழிவாங்கும் உணர்வு |
| வேதக்கோயில் | - | கிறித்தவர் ஆலயம் |
| வேய்ப்பரம்பு | - | மூங்கில் பாய் |
| வைச்சூற்றி | - | புனல் |

## 7. செட்டிநாடுப் பேச்சுவழக்கு/கிளைமொழி

## (செட்டிநாடு – பாண்டியநாடு)

| | | |
|---|---|---|
| அங்கிட்டு | - | அங்கு, இட்டு என்பது அசை |
| அங்ஙனே | - | அங்கே இங்கே = இடம் |
| அசத்துவிட்டான் | - | மறந்துவிட்டான் அயர்ந்விட்டான் என்பதன் மரூஉ |
| அட்டி | - | தடை, தடங்கல் |
| அடசல் | - | குப்பை கூளம் |
| அடசி | - | விலகி |
| அடங்கலுக்குப் புறத்தி | - | புறத்தி கட்டுப்படாதவன் |
| அடிச்சரக்கு | - | நல்ல சரக்கு |
| அடுத்தாள் | - | மேலாளுக்கு அடுத்த பதவி வகிப்பவர் |
| அண்ணாவி | - | உபாத்தியாயர், ஆசிரியர் |
| அத்தப் பரிகாரம் | - | தற்காலிக முடிவு |
| அந்தாசு | - | ஏறத்தாழ |
| அரசு | - | ஆண்குழந்தை, தாய் மகனை அழைக்கும் விழிச்சொல் |
| அலக்கழிப்பது | - | கேலி செய்வது, இன்று நாளை என்று நாள் கடத்துவது |
| அல்கா | - | கீழ்த்தரமான |
| அல்பனத்தி | - | குண்டூசி |
| ஆகச்சே | - | ஆகையால், ஆகவே (இச்சொல் பதிற்றுப்பத்தில் கையாளப் பெற்றிருக்கிறது) |
| ஆசாமிக்காரன் | - | வாடிக்கைக்காரன், பற்று வரவு கணக்கு உள்ளவன் |
| ஆபாளசோபாளம் | - | சொத்து சுகங்கள் |
| ஆமக்கன் | - | ஆண்மகன், கணவன் |

| | | |
|---|---|---|
| ஆவிச்சுக்கிறது | - | தன் நலத்துக்குப் பயன் படுத்திக் கொள்ளல் |
| ஆத்தாள் | - | தாய் |
| அப்பத்தா | - | அப்பாவின் தாய் |
| இங்ஙனே | - | இங்கே |
| இங்கிட்டு | - | இங்கே |
| இஞ்சி | - | கஞ்சன் |
| இஞ்சே | - | பெண்களை விளித்துச் சொல்வது, இங்கே என்பதன் மரூஉ |
| இசை குடிமானம் | - | திருமண இசைவு உடன்பாடு |
| இருசி | - | இரக்க மில்லாதவன் |
| ஈடுற | - | நிறைய (ஈடற என்பதன் மரூஉ) |
| ஈமஞ்சாமம் | - | பொழுது வரையின்றி (ஈமம்-பகல், சாமம்-இரவு) |
| ஈரட்டு | - | ஐயப்பாட்டுக்குரியது |
| உக்கிப்போவது | - | கவலையால் இளைத்துவிடுதல் |
| உக்கிராணம் | - | உணவுப் பொருட்கள் வைக்கும் இடம் |
| உண்டியக்கடை | - | சிறுவங்கி |
| உண்டனா | - | அதிகம், நிலம், நிறைய |
| உதிரி | - | எதிலும் சேராதது |
| உள்ளீடு | - | கறுப்புச்சந்தை |
| ஊருணி | - | குளம், குடிநீர் தேவையைப் பூர்த்தி செய்யும் குளம் (ஊருணி - இலக்கிய வழக்கு) |
| எக்கு | - | எனக்கு |
| எசகேடு | - | இடையூறு |
| எடுத்துக்கிணு | - | எடுத்துக்கொண்டு |
| எடுபிடி | - | பணிவிடை, முயற்சி |
| எதவாக | - | ஓரளவு |

| | | |
|---|---|---|
| எதவான குடும்பம் | - | நடு நிலையான பொருள் வசதியான குடும்பம் |
| எம்மூட்டு | - | எனது (எம் ஈட்டு) |
| எழவு | - | இழவு, நட்டம் |
| எனத்துட்டி | - | வராக்கடன் (இனத்துட்டி என்பதன் மரூஉ) |
| ஏப்பை சாப்பை | - | எளிதில் ஏமாறுபவர் |
| ஏவம் | - | இன்னொருவருக்காகப் பரிந்து பேசுவது, குற்றம் |
| ஐந்தொகை | - | ஐந்தூதொகை (விழுமுதல், வரவு, செலவு, இருப்பு, ஆதாயம் எனும் ஐவகை விவரம் காட்டும் கணக்கு) |
| ஒக்கிடுவது | - | ஒழுங்கு படுத்துதல், பழுதுபார்த்தல் (ஒக்க இடுதல்) |
| ஒட்டற | - | இறுதிவரை (ஒட்டு அற) |
| ஒடனத்த | - | உடன் ஒத்த, சமமான |
| ஒரு தலைக்கு நிற்கிறான் | - | சண்டைக்கு நிற்கிறான், பிடிவாதமாக இருக்கிறான் |
| ஒலுகு | - | தலையணை |
| ஒள்ளத்தி | - | கொஞ்சம் |
| ஒறண்டை | - | வம்பு (உறழ பகை) |
| கச்சடா | - | கீழ்த்தரமான |
| கடகால் | - | வாளி |
| கடவு | - | இடம் |
| கமையாய் | - | பெருமையாய் |
| கம்மல் | - | மப்பும் மந்தாரமும் உள்ள மேகம் |
| கமாம்சு | - | அலுவலகம் |
| கருக்கல் | - | காலைச் சூரியன் தோன்றுவதற்கு முந்தைய பொழுது |
| கருக்கடை | - | ஆர்வம் |
| கருங்கை ஆள் | - | வலிமை உடைய கையினர், தொழிலாளர் |
| கருமாயம் | - | விலை மிகுதி |

| | | |
|---|---|---|
| கல்மிசம் | - | சந்தேகம் |
| கல்லை பண்ணுவது | - | கேலி செய்வது |
| கவாத்து | - | உடற்பயிற்சி |
| கவை | - | தவணை, காலம் |
| கழுத்துரு | - | கழுத்து உரு (திருமாங்கல்யத்தோடு கோர்க்கும் பலவகையான தங்க உருக்கள்) |
| காடையன் | - | போக்கிரி (கடையன் என்பதன் மரூஉ) |
| காய்ச்சி ஊற்றுவது | - | ஒரு குடும்பத்தில் சிறப்பான (இன்பம் அல்லது துன்பம்) நிகழ்ச்சிக்குப் பின் அக்குடும்பத்தாருக்கு ஆறுதல் கூற நெருங்கிய உறவினர் வைக்கும் விருந்து |
| காரியக்காரர் | - | கோவில் காரியங்களைக் கவனித்துக் கொள்பவர் |
| கிருத்துவம் | - | குறும்பு |
| கிளை | - | நெருக்கம், நட்பு |
| குட்டி | - | வேலைக்காரச் சிறுமி |
| குதாவடை, குதாவிட | - | கெடுதல், அலங்கோலம் |
| குறளி | - | பொய் சொல்பவர் |
| கூதரை | - | இழிந்த குண முடையவர் |
| கூதல் | - | குளிர் |
| கூறு | - | பகுதி |
| கெடதலை | - | நோய் (கிடைதலை) |
| கெத்து | - | செல்வாக்கு |
| கேதம் | - | இறப்பு, சாவு |
| கேணி | - | கிணறு (இலக்கிய வழக்கு) |
| கேர்ஸ் பண்ணுவது | - | வாங்க வேண்டியதை வாங்கிக் கொடுக்க வேண்டியதைக் கொடுத்துக் கணக்குகளை ஒழுங்கு செய்தல் |

| | | |
|---|---|---|
| கேழ்வு | - | கப்பலில் பயணம் செய்யக் கொடுக்கும் பணம் |
| கொசுறு | - | சில்லறைக் கணக்கு, சிறுசிறு தொந்தரவு (குசர் என்பதன் திரிபு) |
| கொடசல் | - | கேலி |
| கொட்டம் | - | கொற்றம் |
| கொட்டாரம் | - | நெற்களஞ்சியம் |
| கோளாறு | - | பழுது |
| கோஞ்சல் | - | ஒரு மூலையில் வளைவாக இருப்பது |
| கைப்பெட்டி | - | பணம் வைக்கும் மரப்பெட்டி |
| கைகாவல் | - | அவசர உதவி |
| சக்கப்பியான் | - | மொழி பெயர்த்தல் (பர்மியச் சொல்) |
| சஞ்சாயம் | - | நாள் சம்பளம் |
| சகட்டுக்கு | - | மொத்தமாக |
| சகலாத்து | - | ஒருவகைக் கம்பளித் துணி (உருதுச் சொல்) |
| சத்தகம் | - | ஓலைப்பெட்டி முடைய உதவும் கத்தி வகை |
| சவங்கம் | - | சோம்பல் |
| சமையல்பொறை | - | சமையல் அறை, சமையல்கட்டு |
| சித்திராங்கி | - | வேலைகளைச் செம்மையாகச் செய்பவள் |
| சிலாங்கம் | - | தாராளம் |
| சிலாத்தி | - | மாவு அரிப்பு, சல்லடை |
| சிறுலக்கட்டை | - | அழகின்மை |
| சிறுலம் | - | சொரூபம் |
| சீப்படுதல் | - | மலிந்து கிடப்பது |
| சீடி | - | மாடி, மேல்வீடு |
| சீடிப்படி | - | மாடிப்படி |

| | | |
|---|---|---|
| சீனாம்பரம் | - | அபூர்வம் |
| சுருக்கா | - | சீக்கிரமாக |
| சுணக்கம் | - | தாமதம் |
| சூடிக்கை | - | சுறுசுறுப்பு |
| சூட்டா | - | கள்ளத்தனமாக |
| சூதானம் | - | சுற்றுச் சுவர், பாதுகாப்பு |
| சேக்கு | - | தலைமயிர் |
| சேவா | - | வாடகை |
| சொளகு | - | முறம் |
| சோமாத்தி | - | உதவி |
| சேமாறிவிட்டான் | - | நம்பிக்கை மோசம் செய்துவிட்டான், திருடிவிட்டான் |
| தகான் பண்ணுவது | - | நிருவகிப்பது, சமாளிப்பது |
| தக்குத்தகான் | - | வரையின்றி |
| தருமன் | - | நீர்க்கோலை (யாழ்ப்பாணத்திலும் இச்சொல் வழங்குவது) |
| தபால் | - | தடலை (ஒரு தபால் - ஒருதடவை) |
| தப்பிலி | - | தவறான செயல்களின் ஈடுபடுவர் |
| தண்ணிர்ப் புரளி | - | மலைகளில் பெய்யும் மழைநீர் (ஆறுகளுக்கு வரும் நீர்) |
| தலைப்பில் வாங்கினது | - | முதன் முறையாக வாங்கியது |
| தள்ளிவைப்பது | - | ஒத்திவைப்பது, சமூகத்திலிருந்து விலக்கி வைப்பது |
| தனது மாறல் பணம் | - | உரியவர்களுக்கு மட்டுமே கொடுக்க வேண்டிய பணம் |
| தன்மையான ஆள் | - | நம்பிக்கையான ஆள் |
| தன்னத்துப் போவது | - | இலாபம் நட்டமின்றி முடிவது |
| தாண் | - | காய்கறித் துண்டு |

| | | |
|---|---|---|
| தான் | - | நீ |
| திருப்பூட்டுதல் | - | மணமகள் கழுத்தில் தாலி கட்டுவது |
| தினராசி | - | ஒரு நாளைக்கு 100 ரூபாய்க்கு வட்டி எவ்வளவு என்பதைக்கணக்கிட்ட ஈவுத்தொகை |
| துட்டு | - | 4 பைசா அல்லது 2 பைசா |
| துப்பட்டி | - | போர்வை, கம்பளம் |
| திங்க | - | தின்னும் பொருள் |
| துராவை | - | கீழ்த்தரமான |
| துருசு | - | விரைவு |
| துறவல் | - | துப்பு |
| தெகிட்டு | - | தகராறு, கருத்து வேறுபாடு |
| தேவட்டை | - | தேய்ந்த நாணயம் |
| தேவிலை | - | தேவலை |
| தொக்கடி | - | மலிவு, குறைந்த விலைக்கு வாங்குதல் |
| தொறட்டு | - | வம்பு, வழக்கு |
| நடப்பு | - | பழக்கவழக்கம், அன்றையவிலை |
| நடப்பாக | - | இயல்பாக, இயற்கையாக |
| நடையன் | - | செருப்பு |
| நாட்டாமுட்டி | - | தரக்குறைவான சில்லரை வேலை |
| நட்டமே | - | நட்டாமல் |
| நரிவிரி | - | காலில் இரத்த ஓட்டமின்றி இருத்தல் |
| நருவிசு | - | கண்டிப்பு |
| நாண்டுக்கிணு சாவது | - | ஞான்று கொண்டு சாதல், கயிற்றில் தொங்கிக்கொண்டு இறப்பது (சீவகசிந்தாமணி) |
| நாண் | - | கயிறு |
| நிரவல் | - | சராசரி |

| | | |
|---|---|---|
| நொண்ணன் | - | உன் அண்ணன் |
| படி | - | ½ படி |
| பட்டுக் கிடப்பான் | - | போரில் இறந்து கிடத்தல் |
| பணம் | - | பொருள், இரண்டு அணா |
| பதவல் | - | செடி கொடி |
| பதவிசு | - | மிகக்கவனமாக |
| பதில்வெட்டு | - | போலிச்சாமான் |
| பழங்காய் | - | வாழைப்பழம் ¸ தேய்ங்காய் |
| பன்னா | - | செருப்பு |
| பின்னீடு | - | பிற்காலத்தில் |
| பிருசுபிடி | - | கெஞ்சுதல் |
| பீலி | - | பிலிற்றுதல் (யானை) |
| புள்ளி | - | திருமணமானவர்கள், தலைக்கட்டு |
| புறந்தரக்கோடி | - | பிறந்த இடத்துக் கோடி |
| பொணை | - | பொறுப்பு, பிணயம் |
| பொல்லாதவன் | - | கெட்டிக்காரன் |
| போக்கு | - | நட்டம் |
| போர்கேட்பது | - | பிள்ளைப்பேறு கேட்பது |
| மகார் | - | சிறுவர் |
| மகிற | - | நிறையும் வரை |
| மசண்டை | - | விடிவதற்கு முந்திய சிறு பொழுது |
| மடுவு | - | கெடுதல் செய்தல் |
| மடுவுகாரி | - | ஏமாற்றுபவள் |
| மய்யம் | - | நடு |
| மழைச் சூத்தா | - | மழை காலங்களில் பயன்படுத்தப்படும் செருப்பு |

| | | |
|---|---|---|
| மாம்பு வாசனை | - | பழமை நட்பு |
| மால் | - | வழி, முடிவு |
| மாறல் | - | வாயிலாக, மூலமாக |
| மாஸ் | - | பந்தயம் |
| மிதப்பு | - | பணவசதி |
| முக்கோசு | - | தொடக்கம் |
| முறி | - | ஓலையில் எழுதும் உடன்பாடு |
| முல்லை | - | இயல்பு |
| முதலிக்கிறது | - | நிரூபித்தல் |
| மேது நிலுவை | - | மெல்ல வசூலாகக் கூடிய கடன் |
| மேப்பு சாப்பு | - | பெயரளவுக்கு |
| மேலைக்கு | - | அடுத்த ஆண்டில் |
| மைமல் | - | கதிரவன் தோன்றும் முன் |
| மக்காநத்து | - | மறுநாள் |
| மொல்லமாறி | - | முல்லைமாறி (முல்லை கற்புக்கு உரிய பூ என்று அகத்திணை கூறும்) கற்பிழந்த பெண், நாணயமில்லாத வணிகர் |
| யாது | - | நினைவு (உருதுச் சொல்) |
| யோயோ | - | யோக்கியன் (பரமியச் சொல்) |
| ராப்தா | - | பழக்கம் |
| வாச்சாறு | - | தொல்லை, உதவியின்றி வருந்துதல் |
| லொங்குசு | - | கனமில்லாதது |
| லேஞ்சு | - | தலையில் கட்டும் துண்டு |
| வத்தை | - | குத்தகைக்கு எடுப்பது |
| வட்டி | - | சாப்பாட்டுத் தட்டு (வட்டில் என்பதன் மரூஉ) |
| வராகன் | - | ரூ 3.50, ரூ 3,500 என்று இடமறிந்து பொருள் கொள்ள வேண்டும் |

| | | |
|---|---|---|
| பெரிய ரூபாய் | - | ஆயிரம் ரூபாய் |
| ரூபாய் | - | ஒரு ரூபாய் |
| வயிராவி | - | கோவில் வேலையாட்களில் ஒருவன் |
| வல்லிசு | - | கறார் |
| வழுவல், வழுவட்டை | - | கொடுக்கல் வாங்களில் நேர்மையற்றவன் |
| வாவரசி | - | கணவன் உயிரோடிருக்கும் பொழுது உயிர் நீக்கும் பெண் (வாழ்வு அரசி) |
| வீதி | - | கடைவீதி |
| வெளம் | - | கோபம் |
| வெள்ளனா | - | அதிகாலை |
| வெள்ளி | - | மலேசிய நாணயம் |
| வாசி | - | அனுகூலம் |
| வெண்ணலை | - | கடன் |
| வெஞ்ஞனம் | - | உணவோடு சேர்க்கும் சமைத்த காய்கறி |

## 8. அறந்தாங்கி வடாரப் பேச்சுவழக்கு

## (புதுக்கோட்டை மாவட்டம் - பாண்டிய நாடு - சோழ நாடு)

அகணி - தென்னம்பாளையில் கிழித்தக் கட்டுக் கயிறு

அங்கன - அந்த இடத்தில் (எ.கா) அங்கன வச்ச புத்தகம் எங்க?

அங்கிட்டு - அந்தப்பக்கம் (எ.கா) அங்கிட்டு போகாத நரகல் கெடக்கு

அச்சாரம் - முன்பணம் (எ.கா) நாடகத்துக்கு அச்சாரம் கொடுக்க எப்பப் போகணும்?

அசத்து - சிறப்பாகச் செய்தல் (எ.கா) கடனஒடன வாங்கி கல்யாணத்தை அசத்திட்டான்

அசந்து மறந்து - கவனக் குறைவு (எ.கா) அசந்துமறந்து ஒருபொருளை போடமுடியல, பக்கிக லாவிடுதுங்க

அட்டக்கரி - அடர்த்தியான கருப்பு நிறம் (எ.கா) மாப்பிள்ளை செவப்பு பொண்ணு அட்டக்கரி

அட்டணக்கால் - தன் கால் மீது தன்காலைப் போட்டு அமருதல்

அட்டி - செங்கல் மற்றும் மூட்டை அடுக்குகையில் இடப்படும் அடி வரிசை (எ.கா) அட்டியை நல்லாப்போடு, நூறு மூட்டை அடுக்கணும்

அட்டியல் - பெண்கள் கழுத்தணி (கல்நகை) (எ.கா) வைர அட்டி எப்ப வாங்குன?

அடப்பு - வேலி (எ.கா) வயல்ல அடப்பு அடைக்கணும்

அடசல் - புதர்ச்செடிகள் மண்டியிருத்தல், தேவையற்ற பொருள்களின் குவியல் (எ.கா) அடசலை ஒழி

அடிபடுதல் - பொருளாதார நொடிப்பு, வாகன விபத்தில் சிக்குதல் (எ.கா) குடிச்சுட்டு போயி காருல அடிபட்டுட்டான்

அடைஞ்சு வைத்தல் - ஒழுங்கற்று செருக்கமாக ஒன்றன் மேல் ஒன்றாக அடுக்குதல்

| | | |
|---|---|---|
| அடைத்தல் | - | கடனைத் தீர்த்தல், கதவை மூடுதல், கோழியைப் பாதுகாத்தல் (எ.கா) நெலத்த வித்து கடன அடைச்சுட்டான், கதவை அடை, கோழியப் புடிச்சு அ(ன)ட |
| அண்டா | - | தண்ணீர் சேமிக்கும் வாய் அகன்ற பாத்திரம் |
| அண்டுதல் | - | உறவு/நட்பைச் சேர்ந்திருத்தல் (எ.கா) மாமன்மச்சினன அண்டமாட்டான் |
| அத்தக்கூலி | - | தினக்கூலி |
| அதப்பு | - | வீக்கம், பணவசதி (எ.கா) கன்னம் அதப்பா தெரியுது |
| அந்தம் | - | முடிவு, அழகு, நேர்த்தி (எ.கா) பொண்ணு அந்தமா இருக்கு |
| அப்பத்தா | - | அப்பாவின் அம்மா |
| அப்பாயி | - | அப்பாவின் அம்மா |
| அப்பு | - | குழந்தைகளை செல்லமாய் அழைத்தல், இசுலாமானவர்கள், கம்மாளர் (ஆச்சாரி) ஆண்களை அப்பா என்ற பொருள் பட அழைத்தல் |
| அம்புட்டு | - | அவ்வளவு (எ.கா) அம்புட்டு சோறும் கொழம்பும் மிஞ்சி அள்ளி ஊத்தினேன் |
| அம்புட்டுக் கிட்டான் | - | அகப்பட்டுக் கொண்டான் (எ.கா) தோப்புல தேங்காய் திருடும்போது அம்புட்டு கிட்டான் |
| அம்மாயி/அமாச்சி | - | அம்மாவின் அம்மா |
| அமட்டுதல் | - | பயமுறுத்தல் (எ.கா) புள்ளகள அடிக்காம் அமட்டுறதோட வச்சுகணும் |
| அமத்துதல் | - | பசியைத்தணித்தல், நெருப்பை அணைத்தல், எரியும் விளக்கை அணைத்தல் (எ.கா) வெளக்க அமத்து, புள்ள அழுகுது அமத்து |
| அரக்கட்டுதல் | - | உறவினர்களைப் புறக்கணித்தல் (எ.கா) மாமன் மச்சினன சேரவிடாம அரக்கட்டிட்டான் |
| அரங்கன் | - | கலகலப்பாகப் பேசாதவன் (எ.கா) கலகலன்னு பேசாம அரங்கனா இருப்பான் |

அரளை - கனசதுரக் கருங்கல் (எ.கா) அரளை தேவைக்கு அணுகவும்

அலக்கு - நீண்டகம்பில் இணைத்த சிறுஅரிவாள் (எ.கா) அலக்க எடுத்து ரெண்டு கொப்பு மாவிலை பறி

அலக்கொடுப்பு - தொந்தரவு (எ.கா) அவ புருசன் அலக்கொடுப்புதான் தாங்கமுடியல

அவதி - தொல்லை, சிரமம் (எ.கா) பெருங்குடும்பம் அவதிப்படுறான்

அவுக - அவர்கள் (எ.கா) கணவனை மரியாதையாய் மனைவி குரித்திடும் சொல்

அழிச்சாட்டியம் - வம்பு, பிடிவாதம்

அறுத்துக் கட்டுதல் - கைம்பெண்/மணமுறிவுற்ற பெண்ணுக்கு மறு திருமணம் செய்தல்

அனாமத்து - யாருக்கும் உரிமையிலாதது (எ.கா) அனாமத்தா நூறு குழி கெடக்கு

ஆக்கினை - அதிகாரம், கொடுமை (எ.கா) மாமியாக்காரி ஆக்கினை கொஞ்ச நஞ்சமில்லை

ஆத்தமாட்டாமல் - பொறுக்க முடியாமல், இயலமல் (எ.கா) புள்ளய சாகக்கொடுத்துட்டு ஆத்தமாட்டாம இருக்கா

ஆதாயவரவு - புதிதாக வணிகநிலையம் தொடங்கும் போது உறவினர், நண்பர் அளிக்கும் அன்பளிப்புத் தொகை

ஆயக்கால் - சுவாமி வாகனத்தில் உலா வரும்போது இளைப்பாற்ற இறக்கிவைக்கப் பயன்படும் ஊன்றுகோல்

ஆவிடை (ஆவுடை) - பெண்ணுறுப்பு திருபெருந்துறை கருவறையில் லிங்கம் இன்றி ஆவிடை மட்டும் உள்ளதால் ஆவுடையார்கோவில் என்றானது

ஆனையடிக்கல் - மொட்டை மாடியில் பதிக்கப்படும் சதுர சிவப்பு ஓடு (எ.கா) மாடியில ஆனையடிக்கல்லுப் பதிக்கணும்

| | | |
|---|---|---|
| இங்ஙனே | - | இந்த இடத்தில் |
| இங்கிட்டு | - | இந்தப் பக்கம் |
| இசுவினி | - | ஊமைக்குசும்பு |
| இஞ்சை | - | சிறுமிகள் தோழியை அழைக்கப் பயன்படுத்தும் சொல் (எ.கா) இங்ஙரு இஞ்ச கரடி பொம்ம எவ்ளோ அழகு |
| இடுக்கல் | - | இடுக்கு |
| இடுக்கு | - | மிகக்குறுகிய இடைவெளி |
| இடுப்பு ஒடிதல் | - | மிகுதியான வேலையால் ஏற்படும் களைப்பு (எ.கா) கல்யாண வேல இடுப்பு ஒடியிது ஒக்கார நேரமில்ல |
| இடைவார் | - | இடுப்பில் அணியும் தோல்வார் |
| இம்புட்டு | - | இவ்வளவு |
| இரண்டாம் கூட்டு பங்காளி | - | தாத்தாவின் வேறு மனைவிக்குப் பிறந்த ஆண் உறவினர்கள் |
| இவுக | - | இவர்கள் |
| இளங்குழம்பு | - | ரசத்திற்கும் குழம்பிற்கும் இடைப்பட்ட நீர்மத்தில் உள்ள குழம்பு |
| இளந்தோசை | - | முறுகலற்ற தோசை (எ.கா) எளந்தோசை அஞ்சு ரூபா |
| இழவு (எழவு) | - | மரணம் (இழப்பு என்பதிலிருந்து தோன்றியது) |
| இறங்கு பொழுது | - | பிற்பகல் |
| இருத்தல் | - | வடிகட்டுதல் |
| ஈடு | - | இட்டு அவிப்பது (இட்டலி முதல் ஈடு) (எ.கா) மூன்று ஈடு இட்லி ஊத்து |
| ஈவு | - | பங்கீடு |
| உக்கரா | - | சிற்றுண்டி (பாசிப்பருப்பில் நெய் இனிப்பு கூட்டி செய்வது) |

| | | |
|---|---|---|
| உக்கி | - | தோப்புக்கரணம் |
| உக்கிப்போச்சு | - | மக்கிவிட்டது |
| உக்கிராணம் | - | சமையல் பொருளறை |
| உசுப்புதல் | - | தூங்குபவரை எழுப்புதல் |
| உடன்பங்காளி | - | ஒரே பெற்றோருக்குப் பிறந்த சகோதரர்கள் |
| உண்டன | - | நிறைய |
| உருமா | - | தலைப்பாகை (எ.கா) காரியத்துக்கு உருமா கட்ட வேட்டி எடுக்கணும் |
| உவடு | - | சுவர் உப்புத்தன்மையால் பொரிந்து கொட்டுதல், உப்புத்தன்மையுள்ள மண் |
| உளை | - | சேறு, சகதி (எ.கா) உளையில நடக்காம, ஓரமா வா |
| ஊத்தா | - | மீன்பிடிக்கும் கூடு |
| ஊதக்காற்று | - | குளிர்காற்று |
| ஊர்ப்பட்ட | - | ஏராளமான, அதிகமான (எ.கா) ஊர்ப்பட்ட சொத்து இருந்தென்ன? ஆன புள்ள இல்லயே |
| ஊமைவெயில் | - | மிதமான வெயில் |
| எங்கிட்டு | - | எங்கே? எந்தப் பக்கம்? |
| எட்டாக்கை | - | தொலைவில்∵கண்காணாத இடத்தில் (எ.கா) எட்டாக்கையில் புள்ள வேல பாக்கிறான் |
| எத்தல் | - | உதைத்தல், தள்ளுதல், ஏமாற்றுதல், முந்தள்ளுதல் (எ.கா) பல்லு எத்தலா இருக்கு, எத்தல்லய்யே பொழைக்கிறான், பந்தை எத்தித் தள்ளு |
| எதுக்க | - | எதிரில் (எ.கா) எதுக்க நிக்குற எரும தெரியலையா? |
| எரசல் | - | சாரல் |

| | | |
|---|---|---|
| எருது கட்டு | - | எருதை சுமார் 15 அடி நீள கயிற்றில் கட்டிப் பிடித்துக்கொண்டு ஒருவர் ஓட, பலர் பின்னே சென்று வாலைத் தொட்டு வணங்கும் நிகழ்வு. அறந்தாங்கி அருகாமையில் உள்ள பேயாடிக் கோட்டை ஐயனார் கோவிலில் இத்திருவிழா நடைபெறும். பிறகு ஊர்மாடுகளை அந்த கயிற்றால் தொட்டு வாழ்த்தி அனுப்புவர் |
| ஏணம் | - | பாத்திரம் |
| ஏந்தல் | - | தாழ்வானப் பகுதி |
| ஏறுபொழுது | - | முற்பகல் |
| ஐந்தொகை | - | வரவு, செலவு, பற்று, கையிருப்பு, சொத்து இருப்பு ஆகிய ஐந்தின் கணக்கு |
| ஐயுரவு | - | சந்தேகம் (எ.கா) இவன பாத்தாலே ஐயுரவா இருக்கே |
| ஒக்கிடுதல் | - | பழுது நீக்குதல் (எ.கா) வண்டிய ஒக்கிட்டாதான் ஓட்டலாம் |
| ஒடனொத்த | - | சமமான (எ.கா) ஒடனொத்த பயலுக எப்படி படிக்கிறான். ஒனக்கு வெளக்கம் இல்ல |
| ஒத்தாசை | - | உதவி |
| ஒத்தி | - | குத்தகை |
| ஒருதலையா | - | பிடிவாதமாக |
| ஒள்ளத்தி | - | மிகக் குறைவாக (எ.கா) ஒள்ளத்தி பெருங்காயம் சாம்பாருல போட்டா போதும் வீடே மணக்கும் |
| ஒறண்டை | - | சண்டை, சச்சரவு, தகராறு |
| ஓட்டாஞ்சல்லி | - | மண்பாத்திரத்தின் உடைந்தத் துண்டு |
| கச்சடா | - | தேவையற்றது, மட்டமானது (எ.கா) கச்சடாவையெல்லாம் குமிச்சு வைக்காத |
| கச்சா | - | மீன்பிடிக்கும் கருவி |
| கசகல் | - | சிறுதகராறு, மனவருத்தம் (எ.கா) மச்சின்ன் வீட்டோட கசகல் போல, போக்குவரத்து கொறைஞ்சிடுச்சு |

| | | |
|---|---|---|
| கசறு | - | ஏலச்சீட்டில் பயனாளருக்குத் தரப்படும் இலாபப் பங்கீடு |
| கசாப்பு | - | ஆட்டிறைச்சி |
| கடசாரி | - | கடைசிக் குழந்தை (எ.கா) நாலு பயலுக, கடசாரிதான் பொம்பளப்புள்ள |
| கடாசுதல் | - | தேவையற்றதை வீசி எறிதல் |
| கடகாப்பெட்டி | - | பனைநார்ப்பெட்டி |
| கடகால் | - | வாளி, அடித்தளத்தில் இடப்படும் முண்டுக்கல் |
| கடவு | - | இடம் (எ.கா) கண்ட கடவில்லாம் தேடிட்டேன், கழுதையக் காணோம் |
| கண்டசரம் | - | கல்பதித்தக் கழுத்தணி நகை |
| கண்ணாம்பட்டை | - | கண்இமை |
| கண்டாங்கி | - | கட்டமிட்ட புடவை, பழைய கந்தல் துணி |
| கண்மாய் | - | சிறிய ஏரி |
| கண்டு முதல் | - | விளைச்சல், வணிக இலாபம் |
| கந்தர கோலம் | - | தாறுமாறு, அலங்கோலம் (எ.கா) ரெண்டு நாளா வீட்ல இல்ல, வீடே கந்தரகோலமா கெடக்கு |
| கந்தரப்பம் | - | கார்த்திகை வழிபாட்டில் முருகனுக்கு படைக்கும் வெண்மை நிற அப்பம் |
| கதண்டு | - | தேனீயில் பெரிதான வண்டு |
| கம்புபோடுதல் | - | சமுதாயப் புறம்பான பாலுறவு |
| கம்முதல் | - | மேகமூட்டம், குரல் வேறுபாடு (எ.கா) மா(வா)னம் கம்மலா இருக்கு, மழை வரும் |
| கமுக்கம் | - | இரகசியமாக (எ.கா) வெளியில தெரியாம கமுக்கமா செய்யுறதுல கெட்டிக்காரன் |
| கரச்சல் | - | தொந்தரவு, தொல்லை |
| கரிச்சான் | - | பந்தய மாட்டின் ஒருவகை |
| கருக்கல் | - | அதிகாலைக்கு சற்று முன் ஏற்படும் திடீர் கும்மிருட்டு |

| | | |
|---|---|---|
| கல்லாயணக் கொட்டகை | - | திருமணப் பந்தல் |
| கள்ளிப்பெட்டி | - | மரச்சட்டங்களால் உருவாக்கியப் பெட்டி |
| கழுங்கு | - | கண்மாயில் மிகுதி நீர் வெளியேற அமைக்கும் கல் மதகு |
| கன்னி இருட்டு | - | அதிகாலைக்குச் சற்று முன் ஏற்படும் கும்மிருட்டு |
| காக்கா | - | அண்ணன் (அறந்தாங்கி வட்டார கடற்கரைப் பகுதி இசுலாமானவர்கள் வழக்கு) |
| காங்கை | - | அனல், வெப்பம், சூடு (எ.கா) ஒடம்பு காங்கையா இருக்கே, கவனிச்சுப் பாரு |
| காசி அண்டா | - | விழாக்களில் உணவு சமைக்கப் பயன்படும் கீழ்ப்புறம் அரைக்கோளமான, பிடி காது உள்ள பெரிய அண்டா |
| காணியாச்சி | - | தலைமுறையாய் வரும் சொத்து |
| காப்புக் கட்டுதல் | - | கோயில்களில் திருவிழாத் தொடக்கமாகக் கொடியேற்றி தர்ப்பைப்புல் அட்டி தெயவத்தை நிலைப்படுத்துதல் |
| காப்புக்கயிறு | - | நல்நிகழ்வுகளில் மணிக்கட்டில் கட்டப்படும் மஞ்சள் நூல்கயிறு/மஞ்சள் துணி |
| காய்ச்சி ஊற்றுதல் | - | நல்ல/கெட்ட நிகழ்விற்கு மாமன் மைத்துனர் உறவுமுறை தரும் விருந்து |
| காரியம் | - | அலுவல், ஈமக்காரியம் |
| கால்மிதி | - | செருப்பு, வாசலில் விரிக்கும் விரிப்பு (எ.கா) கால்மிதிய அலசிப் போடு, ரொம்ப அழுக்காத் தெரியுது |
| காலம்பெற | - | அதிகாலை |
| காலாகாலத்தில் | - | உரிய நேரத்தில் (எ.கா) காலாகலத்தில பொண்ண கட்டிக்கொடுத்துட்டா பெரிய சொம கொறைஞ்சுடும் |
| காளஞ்சி | - | தேங்காய் மூடி, பழம், வெற்றிலை பாக்கு, பூ வைத்து தரப்படும் கோவில் மரியாதை |

| | | |
|---|---|---|
| கிட்டங்கி | - | பொருள் பாதுகாக்குமிடம் |
| கிடாப்பு | - | கோழிக்கூண்டு |
| கிடுகு | - | முடைந்த தென்னங்கீற்று (எ.கா) நூறு கிடுகு என்ன வெல? |
| கிண்ணி | - | உண்ணும்போது கறிகள் வைக்கப்பயன்படுத்தும் சிறு தட்டு |
| கிளை | - | மரக்கிளை, தாய்வழி உறவுமுறை, நெருக்கம் |
| கீதாரி | - | ஆடு மேய்ப்பவர் (இராமநாதபுரத்துகாரர்களை மட்டுமே இப்பெயரில் அழைப்பர்) |
| குச்சு | - | குடிசை |
| குட்டு | - | இரகசியம், தலையில் குட்டுதல் (எ.கா) குட்டு வெளிப்பட்டா எல்லாம் தெரிஞ்சுரும் |
| குடிபுகுதல் | - | புதுமனைப் புகுவிழா |
| குதிரைக் கொட்டகை | - | நடுவில் உயர்ந்து இருபக்கமும் சாய்வான அமைப்புடைய கொட்டகை (∆) வடிவம் (எ.கா) மழைக்காலம் மட்டக்காவணம் தாங்காது, குதிரைக்கொட்டகையா போடு |
| குப்பம் | - | பயிர் நாற்று முடிச்சுகளின் தொகுதி (எ.கா) இருபது குப்பம் நாத்து வாங்கி வந்தேன் |
| குழி | - | பள்ளம், 144 சதுர அடி நிலம் (எ.கா) எறநூறு குழியில உளுந்து போட்டுருக்கேன் |
| கூட்டு | - | தரையைப் பெருக்கு, தொழிலில் கூட்டு (பங்கு) காய்கறிக்கூட்டு. (எ.கா) கத்திரிக்காய் கூட்டு, குப்பையா இருக்கு தரையைக் கூட்டு பங்காளிக ரெண்டுபேருமா கூட்டுயாவாரம் பண்றாங்க |
| கூட்டுமாறு | - | விளக்குமாறு, துடைப்பம் |
| கூட்டு நாட்டு | - | உறவு |
| கூறு | - | நுண்ணறிவு (எ.கா) எந்தத்தொழிலைச் செய்தாலும் கூறுவேணும் |
| கெந்துதல் | - | நொண்டி நடத்தல் (எ.கா) காலுல அடிபட்டு கெந்துறான் |

| | | |
|---|---|---|
| கெந்துவட்டி | - | வட்டியை முன்கூட்டியே எடுத்துக்கொண்டு அசலை குறிப்பிட்ட நாள்களில் பெறுவது. இம்முறையை அறந்தாங்கி பூவத்தகுடி கிராமத்தினரே அறிமுகம் செய்தனர் |
| கேப்பை | - | கேழ்வரகு |
| கேதம் | - | மரணம் (சேதம் என்பதன் மரூஉ) |
| கொங்காப்பயல் | - | பெண்தன்மையுடைவன் |
| கொசுறு | - | கொஞ்சம் |
| கொட்டான் | - | பனை ஓலையில் முடைந்த சிறிய பெட்டி |
| கொடி ஆடு | - | உயரமான வெள்ளாடு |
| கொழுவன் | - | பல பெண்களுடன் பாலுறவு வைத்திருப்பவன் |
| கொழுவுதல் | - | முறைகேடான பாலுறவு |
| கொழுத்தாடை | - | கரும்பின் தோகையடியில் உள்ள பகுதி |
| கோஞ்சல் | - | முன்பரப்பு அகன்று பின்செல்லச் செல்ல குறுகிய இடம் (எ.கா) எடம் கோஞ்சலா இருக்கு மனைபோட செரமமாயிரும் |
| கைச்சரக்கு | - | இருப்பில் உள்ள சரக்கு |
| கைபார்த்தல் | - | பழுது நீக்குதல், சோதித்தல் (எ.கா) சித்திரையில் வீட்ட கைபார்க்கணும் (பழுது நீக்கல்), மூட்டைய கைபாத்து ஏத்து (சோதித்தல்) |
| கைமாத்து | - | இரவல் (எ.கா) கைமாத்தா நூறு ரூபா கொடுங்க |
| கையோடு | - | உடனே (எ.கா) மாமாவ கையோடு கூட்டிக்கிட்டு வா |
| சகடை/சப்பரம் | - | திருவிழாவில் உற்சவமூர்த்தங்களை வைத்து ஊர்வலம் வரும் வண்டி |
| சங்காத்தம் | - | தொடர்பு, உறவு |
| சஞ்சாயம் | - | தினக்கூலி |
| சடங்கு | - | பூப்புப் நீராட்டு, இறந்தவருக்கு செய்யும் எட்டாம் நாள் சடங்கு |

| | | |
|---|---|---|
| சம்படம் | - | மூடி போட்ட சிறிய உலோக டப்பா |
| சவடு | - | உவர்மண் |
| சள்ளை/சள்ளைக்கடுப்பு | - | உடல் அலுப்பு, வலி (எ.கா) ரெண்டுநாளா ஒடம்பு சள்ளக்கடுப்பா இருக்கு |
| சாத்துபடி | - | இறைவன் மூர்த்தங்களுக்குச் செய்யும் அழகு |
| சாயங்காலம் | - | மாலை |
| சாயல் | - | ஒத்தத்தன்மை, ஒரே தோற்றம் |
| சிறுவாடு | - | பெண்கள் சிறிது சிறிதாய்ச் சேர்க்கும் பணம் |
| சீரழிச்சிட்டான் | - | கெடுத்து விட்டான் |
| சீரழியுது | - | எராளமாக, தாராளமாக கிடைத்தல் |
| சொளகு | - | முறம்/சுளகு |
| சொளாவுதல் | - | வாரி அள்ளுதல் (எ.கா) ஒரு பொருள போட முடியாது சொளாவிருவா |
| சோத்தாங்கை | - | வலது கை (சோறு தாங்கும் கை என்பதன் மரூஉ) |
| சோத்துக்கை | - | உண்டு கொண்டிருக்கும் சோறுடன் உள்ள கை |
| சோமவாரம் | - | திங்கட்கிழமை |
| சோலி | - | பணி |
| தகட்டுக்கல் | - | அகலமான கருங்கல்பலகை |
| தட்டுவாணி | - | நடத்தைக் கெட்டவள் |
| தடவை | - | முறை (எ.கா) போன தடவை வந்தப்ப பார்க்க முடியல |
| தண்டாம | - | தனியாக, தொடர்பற்று (எ.கா) நான்பாட்டுக்கு தண்டாம குடியிருக்கேன் |
| தத்துவாமடை | - | வயலில் மிகுதியான நீரை வெளியேற்றும் மடை |
| தலைக்கட்டு | - | குடும்பங்களின் எண்ணிக்கை (எ.கா) தலக்கட்டு பெருத்த ஊரு |

| | | |
|---|---|---|
| தள்ளிவைப்பது | - | சமூகத்தை விட்டு விலக்கி வைப்பது |
| தளிகை | - | இறைவனுக்குச் சமர்ப்பிக்கும் உணவு (எ.கா) புரட்டாசிக் கடைசிச் சனி தளிகைப் போடுறோம் சாப்பிட வாங்க |
| தாம்பாளம் | - | அகன்ற தட்டு |
| தாய்மனை | - | வீட்டின்/கட்டிடத்தின் முதன்மைப் பகுதி |
| தாலி வாங்குதல் | - | கணவனின் இறப்பிற்குபின் மனைவி தாலி களையும் நிகழ்வு |
| தாவா | - | பிரச்சனை/வழக்கு |
| தாவு | - | பள்ளமான இடம் (எ.கா) தாவுல எடம் வாங்காத, வீடு கட்டுனா தண்ணி புடிக்கும் |
| திட்டம் | - | வேண்டிய அளவு |
| திரக்குக்குழம்பு | - | கெட்டிக்குழம்பு |
| திருகை | - | தானியம் அரைக்க/உடைக்க உதவும் கல்லால் ஆன கருவி |
| திருப்பூட்டுதல் | - | மங்கலநூலை மணமகன் மணமகளுக்கு அணிவித்தல் |
| திருவனந்தல் | - | ஆலயத்தின் அதிகாலை வழிபாடு |
| திருவாச்சி | - | கடவுள் சிலையின்பின் சிங்க வாயுடன் உள்ள வேலைப்பாடு |
| தினுசு | - | வகை (எ.கா) தினுசு தினுசா (பு) பொடவை கட்டுறா |
| தீர்த்தங்கொடுத்தல் | - | முதல் கருவுற்ற பெண்ணுக்கு நடத்தும் சடங்கு |
| தீர்த்துவிடுதல் | - | கடனை அடைத்தல், உறவை முறித்தல், மணமுறிவு ஏற்படுத்தல் |
| தீபக்கால் | - | தீபம் காட்டப் பயன்படும் கருவி |
| தீமித்தல் | - | கோவில் திருவிழாவில் தீக்குழியில் இறங்குதல் |
| துரட்டி | - | நீண்டகம்பில் வளைந்த கொக்கி போன்ற |

உலோக் கருவி இணைக்கப்பட்ட கருவி

| | | |
|---|---|---|
| தூபக்கால் | - | சாம்பிராணி போடப் பயன்படக்கூடிய கருவி |
| தேவலை | - | பரவாயில்லை (எ.கா) சந்தையில் தக்காளி வெல தேவலை |
| தொக்கடி | - | குறைந்த விலையில் வாங்குவது (எ.கா) தொக்கடியா வாங்கிப் போட்ட எடம், குழி லட்சத்தை தாண்டிடுச்சு |
| தொடிசு | - | தொடர்பு |
| தோண்டி | - | நீர் பிடிக்கும் சிறுகுடம் (எ.கா) எம்மக தண்ணி தூக்க தோண்டி வாங்கினேன் |
| தோதுபோல | - | இயல்புக்கு ஏற்றாற்போல் |
| நட்டம | - | நேராக/செங்குத்தாக (எ.கா) நட்டம நிப்பாட்டி வை |
| நடப்பு | - | வழக்கம், நடைமுறைப் பழக்கம் (எ.கா) பழச எல்லாம் பேசாத, நடப்புல என்ன இருக்கோ அதப்பேசு |
| நடை சாற்றுதல் | - | கோவிலை மூடுதல் |
| நடையன் | - | செருப்பு |
| நலியாமல் | - | ஓசைப்படாமல், தெரியாமல் (எ.கா) நலியாம அள்ளிட்டுப் போயிட்டா |
| நாதி | - | சுற்றம் |
| நிப்பாட்டு | - | நிறுத்து |
| நிலக்கடலை | - | வேர்க்கடலை |
| நிலாக் காலம் | - | வளர்பிறைக் காலம் |
| நிலவண்டை | - | நிலவு வெளிச்சமுள்ள நேரம் |
| நிலுவை | - | பாக்கித் தொகை |
| நீர்மலை | - | பிணம் குளிப்பாட்ட நீர் எடுத்து வருதல் |
| நீராகாரம் | - | சோற்றில் நீர் ஊற்றி மறுநாள் பருகும் தண்ணீர் |

| | | |
|---|---|---|
| நொக்கா | - | உன் அக்கா |
| நொங்குதல் | - | அதிகமாக அடித்தல்/உண்ணல் |
| நொடிப்பு | - | தாழ்வு (எ.கா) கடன் கொடுத்து நொடிச்சுப் போயிட்டான் |
| நொண்ணன் | - | உன் அண்ணன் |
| நொப்பா | - | உன் அப்பா |
| நொம்மா | - | உன் அம்மா |
| நோத்தா | - | உன் தாய் (எ.கா) நோத்தா கூப்புடுறா போடா |
| பங்காளி | - | தந்தைவழி ஆண் உறவுகள் |
| பங்காளி பகுத்தாளி | - | சுற்றாத்தார் |
| பட்டச்சோறு | - | அறந்தாங்கி வீரமாகாளியம்மன் கோவில் திருவிழாவில் ஊழியம் செய்பவருக்கு கொடுக்கப்படும் சோறு |
| பட்டப்பகல் | - | நண்பகல் |
| படுமுடிச்சு | - | அவிழ்க்கக் கடினமான முடிச்சு |
| பண்ணுதல் | - | செய்தல் (எ.கா) தீபாவளிக்கு அதிரசம், முறுக்கு பண்ணினேன் |
| பத்தாது | - | போதாது |
| பத்துதல் | - | விரட்டுதல், ஓட்டுதல் |
| பதனமா | - | நிதானம், மெதுவாக |
| பந்தல் | - | சாவு வீட்டில் போடப்படும் கீற்றுக்கொட்டகை (முன்கீற்று மடிப்பதில்லை) |
| பரங்கிக்காய் | - | சர்க்கரைப் பூசணி (பீரங்கி வைத்திருந்த ஆங்கிலேயர் பரங்கியர் எனப்பட்டனர். அவர்கள் கொண்டுவந்த காய் பரங்கிக்காய் ஆனது) |
| பவிசு | - | பெருமை, கௌரவம், மதிப்பு |
| பாட்டம் மழை | - | போதுமான மழை |

| | | |
|---|---|---|
| பாட்டய்யா | - | தாத்தா/பாட்டியின் அப்பா |
| பாட்டம் பாட்டமா | - | பகுதி பகுதியாக (எ.கா) மழை பாட்டம் பாட்டாமா கொட்டுது |
| பாடாவதி | - | மோசமானது (எ.கா) அவன் ஒரு சர்வ பாடாவதி பய |
| பாண்டல் | - | அசுத்தம், அழுக்கு, கீழ்த்தரம் (எ.கா) பண்டபய குளிக்கமாட்டாங்கிறான் |
| பாதாளக்கரண்டி | - | கிணற்றில் விழுந்த வாளியை எடுக்கப் பயன்படும் இரும்புக் கொக்கிகளின் தொகுப்பு |
| பாப்பாத்தி | - | வண்ணத்துப்பூச்சி |
| பிசகு | - | தவறு |
| பின்னீடு | - | பிற்காலத்தில் |
| பீத்தல் | - | கிழிசல் |
| புட்டமா | - | முகத்திற்குத் தடவும் வாசனைத்தூள் (Talcom Powder) |
| புடுக்கு | - | விரை, ஆணுறுப்பு |
| புரவி எடுப்பு | - | சுடுமண் குதிரைச் சிலைகளை ஐயனார் கோவிலுக்கு எடுத்து வரும் திருவிழா |
| பூஞ்சிட்டு | - | பந்தயமாட்டில் ஒருவகை |
| பெட்டகம் | - | பாதுகாப்பான இரும்புப்பெட்டி |
| பையப்பைய/பைய | - | மெதுவாக (எ.கா) முன்னாடி போ, நான் பைய வர்றேன் |
| பொக்குனு | - | விரைவாக (எ.கா) பொக்குனு கடைக்குப் போயிட்டு வா |
| பொச கெட்டவன்/ள் | - | வெட்டமற்றவன்/ள் |
| பொட்டல் | - | திறந்தவெளி |
| பொடிச்சி | - | பெண்கள் |
| பொண்டுக | - | பெண்கள் |

| | | |
|---|---|---|
| பொழி | - | எல்லை |
| போணி/போகணி | - | குவளை |
| மசண்டை | - | அதிகாலைப் பொழுது, இருட்டுகிற பொழுது |
| மண்டகப்படி | - | திருவிழாவின் நாள் |
| மணை | - | மணமக்கள் அமரும் மேடை |
| மம்மக்க தாழி | - | முதுமக்கள் தாழி (மாட்டிற்கு கழுநீர் வைத்துப் பயன்படுத்தினர்) |
| மரவை | - | மரத்தாலான கனமற்ற சிவப்புத் தட்டு |
| மறுகால் | - | வடிகால் |
| மறுவாட்டி | - | மருமுறை |
| மா | - | 100 குழி கொண்ட நிலம், மாமரம் |
| மாடக்குழி | - | விளக்கு வைக்க சுவரில் உள்ள குழிவானப் பகுதி |
| மாமிக்கூரை | - | மணப்பெண்ணின் தாய்க்கு மணமகன் அளிக்கும் புடவை |
| மாற்றுக் கட்டுவது | - | சுபநிகழ்ச்சிகளில் பந்தலின் உட்புறம் சீற்றை மறைத்துக் கட்டப்படும் வேட்டி |
| மாற்று விரிப்பு | - | இறப்புச்சடங்கில் நீர்மாலை எடுத்து வருபவருக்கு மேலே பிடிக்கும் வேட்டி |
| மானாமகன்.ஃ.ள் | - | ஆசாரிகள் இசுலாமானவர்களை அழைக்கும் சொல் |
| மானாவாரி | - | மழையை நம்பி விளைவிக்கும் பூமி (எ.கா) ஆத்துப்பாசனம் இல்ல மானாவாரிதான் |
| மிஞ்சி | - | மணமான பெண்கள் காலில் பெருவிரலுக்கு அடுத்த விரலில் அணியும் ஓசை தராத வெள்ளி வளையம் |
| மிஞ்சிவிட்டது | - | மீதப்பட்டது |
| முடுக்கு | - | முட்டுச்சந்து, குறுகிய இடைவெளி, தெரு மூலை |

| | | |
|---|---|---|
| முறி | - | வெண்கல உண்கலம் |
| முறைதலை | - | திருமணச் சீர், சுப/அசுப நிகழ்வுகளின் சடங்குமுறை |
| முனோடியான் | - | சிறுதெய்வம் (கறுப்பர், முனி) |
| மூக்கு இலை | - | வாழை இலையில் நுனிப்பகுதி |
| மூலவர் | - | கருவறையில் உள்ள கடவுள் சிலை |
| மெக்கட்டாள் | - | கொத்தனாரின் உதவி ஆண் |
| மெலுக்கு | - | மென்மை (எ.கா) மெலுக்கா திருஞ்சா நாலுகாசு சம்பாதிக்க முடியுமா? |
| மெழுகுதல் | - | தண்ணீரால் துடைத்து தூய்மை செய்தல் |
| மெனக்கெட்டு | - | வலிந்து (எ.கா) மெனக்கெட்டு போனாதானெ காரியம் முடியும் |
| மெனக்கெடுதல் | - | முயற்சி செய்தல் |
| மேஞ்செலவு | - | சில்லரைச் செலவு |
| மேல்வீடு | - | மாடிப்பகுதி |
| மேல்மட்டும் | - | உடல்மட்டும் (எ.கா) தலை குளிக்காம மேல்மட்டும் குளி |
| மை(மய்)க்காநாள் | - | மறுநாள் |
| மொகரை | - | முகம் |
| ரொம்ப இருக்கு | - | நிறைய இருக்கு என்பதன் மரூஉ. இல்லை என்பதை மங்கல வழக்காகக் கூறல் |
| ரோதை | - | சக்கரம் |
| லாயக்கு | - | பயன் |
| வக்கு | - | வழிவகை |
| வகிறு | - | பிளத்தல் (எ.கா) (மரக்) கட்டய வகிறு |
| வகையா இருக்கான் | - | வசதியாக இருக்கான் |
| வட்டி | - | முதலுக்கான வட்டி, வெண்கலத்திலான உண்கலம் |

| | | |
|---|---|---|
| வத்தை | - | சிறுபடகு |
| வதி | - | சேறு |
| வம்பாடுபட்டு | - | சிரமப்பட்டு, கடுமையாக உழைத்தல் |
| வரத்தாடு | - | இராமநாதபுர மாவட்டத்திலிருந்து மேய்ச்சலுக்கு ஓட்டி வரப்படும் செம்மறியாடு |
| வரத்துவாரி | - | நீர்வரும் வாய்க்கால் (எ.கா) வரத்துவாரிய மறுச்சு வீடுகட்டுனான், கடவுள் கல்யாணம் ஆகவிடாம மறுச்சுட்டான் |
| வரையோடு | - | வறுக்கப் பயன்படும் காதுள்ள ஏந்தலான மண்சட்டி |
| வள்ளாங்கை | - | இடது கை |
| வளவு/வளைவு | - | வீட்டின் உட்பகுதியின் ஒருபகுதி |
| வளவி | - | வளையல் |
| வழனை | - | சளி |
| வாகான ஆள் | - | அழகான ஆள், பொருத்தமான ஆள் |
| வாட்டி | - | தடவை (எ.கா) நாலு வாட்டி போயி பணம் கேட்டுட்டேன், தர மாட்டேங்கிறான் |
| வாசி | - | அனுகூலம் |
| வாரி | - | நீர்செல்லும் கால்வாய் (எ.கா) வாரி தூந்து கெடக்கு |
| வாரை | - | வீதியுலாவில் சுவாமி வைத்த படிச்சட்டத்தைக் தூக்கும் கம்பு |
| வாவரசி | - | சுமங்கலியாய் இறப்பவள் |
| வீராக்கண்ணு | - | விரால்மீன் |
| விண்ணம் | - | குறைபாடு (பின்னம் என்பதன் மரூஉ) |
| வெட்டிக்குளம் | - | அடிமைகளைக் கொண்டு வெட்டப்பட்ட குளம் |
| வெட்டிப்பயல் | - | அடிமைகளைக் கொண்டு பண்படுத்தப்பட்ட வயல் |

| | | |
|---|---|---|
| வெண்ணிலை | - | ஈடு இல்லாமல் கொடுக்கும் கடன் |
| வெரசா | - | விரைவாக (எ.கா) கடைக்குப் போயிட்டு வெரசா வாங்கிட்டு வா |
| வெருகு | - | காட்டுப்பூனை (வெருவு - அச்சம்) அச்சம் தருவதால் இப்பெயர் வந்தது |
| வெள்ளன | - | அதிகாலை (எ.கா) வெள்ளன எழுந்திருச்சு வேலைக்குச் போகணும் |
| வெள்ளாமை | - | வேளாண்மை |
| வெள்ளமா இருக்கு | - | நிறைய இருக்கு (எ.கா) அரைச்ச மாவு வெள்ளமா இருக்கு |
| வெவரம் | - | விவரம், சாமர்த்தியம் (எ.கா) மாப்பிள்ளை வெவரமான ஆள் |
| வேகாவரி | - | செங்கல் சூலையில் வேகாதக் கல்வரிசை |
| வேம்பா | - | தண்ணீர் கொதிக்க வைக்கும் கலன் |
| வைராவி | - | கோவில் காவலர் |

## இயல்-5

## வட்டாரவழக்கு இலக்கணக்கூறுகள்

சாதாரணமாகப் பேச்சுவழக்கில் உள்ள சொல் செய்யுட்களில் பயன்படுத்தப்படும் பொழுது சொல் குறிக்கும் பொருளின் பண்போடு சொற்கள் கையாளப்படும் என்கிறார் தொல்காப்பியர்.

**இனச்சுட் டில்லாப் பண்புகொள் பெயர்க்கொடை**

**வழக்காறு அல்ல செய்யுளாறே**

**- தொல்காப்பியம், 501**

**எடுத்துக்காட்டாக:**

இலக்கிய வழக்கில் பயன்படுத்தப்படும் பெயர்ச்சொல் அதன் பொருளின் தன்மை விளக்கும் பெயரடையோடு இலக்கியத்தில் பயன்படுத்தப்படுகிறது. ஞாயிறு எனும் சாதாரண வழக்குச்சொல் இலக்கியத்தில் பயன்படுத்தும்போது செஞ்ஞாயிறு என வருகிறது. எனவே, வழக்காறு எனக்குறிப்பிடப்படுவது வட்டாரவழக்குகளையும் சேர்த்துத்தான் என்று எடுத்துக்கொள்ள வேண்டும் என்பது அறிஞர்களின் கருத்தாகும்.

**தெரிந்த மொழியான் செல்விதின் கிளந்து**

**தேர்தல் வேண்டாது குறித்தது தோன்றின்**

**புலன் என மொழிப புலனுணர்ந் தோரே**

**- தொல்காப்பியம், 1497**

சொற்களை மக்களால் எளிதில் புரிந்து கொள்ளக் கூடிய தெரிந்த மொழி (வழக்கு மொழி, சேரிமொழி) எனவும், எளிதில் புரிந்து கொள்ள முடியாத செய்யுள் மொழி எனவும் வரையறுப்பதன் மூலம் வழக்கு மொழி என்பது செய்யுள் மொழியிலிருந்து வேறுபட்டாலும் இரண்டு வகைச் சொற்களுமே எழுத்து வழக்காகிய செய்யுள் வழக்கில் பயன்படுத்தப்பட்டன என்பது தெளிவாகிறது. ‘‘ஆசிரியர் தொல்காப்பியர் தம் காலத்தே செந்தமிழ் நாட்டில் வழங்கிய உலக வழக்கும் செய்யுள் வழக்குமாகிய இருவகை மொழி நடையினையும் அடிப்படையாகக் கொண்டு அவ்விருவகை வழக்கினும் பின்வரும் எழுத்திலக்கணத்தையும்

சொல்லிணக்கணத்தையும் பொருளிலக்கணத்தையும் ஆராய்ந்தார்" என்கின்றார் பேராசிரியர் வெள்ளைவாரணர் (1957: 39). தெரிந்த மொழி என்பதைக் கணேசையர் சேரிமொழி எனத் தமது தொல்காப்பிய நூலில் பதிப்பித்துள்ளார்.

**ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியும்**

**ஒன்றினைக் கூறும் பன்மைக் கிளவியும்**

**வழக்கி நாகிய உயர்சொல் கிளவி**

**இலக்கண மருங்கின் உயர்சொல் கிளவி**

**- தொல்காப்பியம், 510**

ஒருமையில் உள்ள சொற்களுக்குப் பன்மை விகுதி சேர்த்துக் கூறுவது இலக்கண வழக்குப்படி அமைந்த சொல்வழக்கு அல்ல. மாறாக உலக வழக்கில் காணப்படும் இலக்கூறாகும். தற்கால வட்டாரவழக்குகளில் அவன் என்பது ஒருமை அவர் எனபது பன்மை. அவர் என்ற சொல்லோடு அவர்கள் எனும் சொல்லும் பயன்பாட்டில் உள்ளது. அவர், அவர்கள் எனும் சொற்கள் பன்மையக் குறிப்பதோடு, ஒருமையில் ஒருவரை மரியாதையோடு அழைக்கும் சொற்களாக உள்ளன. எனவே, தமிழ் மொழியில் மரியாதை என்பது பன்மையில் உணரப்படுகிறது. ஆனால் இத்தகைய வழக்கு வட்டாரவழக்கு என்று கூறப்படுகிறது. தற்கால வட்டாரவழக்கிலும் இத்தகைய சொற்கள் பயன்பாட்டில் இருந்தாலும், இதன் பயன்பாடுகள் பெரும்பாலான மக்களால் பல வட்டாரங்களில் கடைப்பிடிக்கப்படுவதில்லை. ஒருமையிலேயே மரியாதைக்குரிய பொருளும் அடங்கும்படி இவர்கள் பேச்சுவழக்குகளில் அமைந்துள்ளன.

**"The use of plural forms to denote one person or one object (to denote honorific singular) was only allowed in speech (i.e. in colloquial dialect) at the time of Tolkāppiyar"**

**- M. Israel, 1973: 345**

பேராசிரியர் இசுரேல் கீழ்க்கண்ட எடுத்துக்காட்டும் கொடுத்துள்ளார்.

**கொடியர் அல்லர் எங்குன்று கெழு நாடர்**

**- குறுந்தொகை, 87**

இரண்டாம் வேற்றுமை உருபு -ஐ அநேகமாக எல்லா உயர்திணைப் பெயர்ச்சொற்களோடும், பொதுப்பெயர்ச்சொற்களோடும் சேர்ந்து வரும். ஆனால் சங்ககால இலக்கியங்களில் இரண்டாம் வேற்றுமை உருபு -ஐ இல்லாமலும் பயன்பாட்டில் உள்ளது. இத்தகைய வேறுபாடுகள் வட்டாரவழக்குகளைப் பிரதிபலிப்பனவாக உள்ளன. இதுபோல், பொதுவாக விழிவேற்றுமை உருபு -ஏ அனைத்து அ.்.றிணைச் சொற்களோடு சேர்ந்துவரும் என்பது தொல்காப்பியர் காட்டும் விதி. ஆனால் பல சங்ககால இலக்கியத் தொடர்களில் விழிவேற்றுமை உருபு இல்லாமலும் பயன்படுத்தப்பட்டுள்ளன.

செல், கொடு எனும் வினைச்சொற்கள் படர்க்கை ஒருமையில் வரும் பதிலிப்பெயரோடும் வா, தா போன்ற வினைச்சொற்கள் தன்னிலை, முன்னிலைப் பதிலிப்பெயர்களோடும் பயன்படுத்தப்படவேண்டும் என்பது இலக்கண விதியாகும். ஆனால் பல சங்கப்பாடல்களில் இந்த விதி மீறப்பட்டுள்ளது. இத்தகைய மாற்றங்கள் வட்டாரவழக்குகளின் தாக்கத்தால் ஏற்படுகிறது என அறிஞர்கள் கருதுகின்றனர்.

தன்னிலை ஒருமையில் வரும் வினைச்சொற்கள் -அன் விகுதியில் முடிவதைத் தொல்காப்பியர் தனது இலக்கண நூலில் தெரிவிக்கவில்லை. ஆனால், பல தன்னிலை ஒருமை வினைச்சொற்கள் பல சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன:

**அறிகுவன் - புறநானூறு 109**

**கூறுவன் - நற்றிணை 233**

**உள்ளினன் - நற்றிணை 326**

**இவன் - குறுந்தொகை 311**

தொல்காப்பியர் தமிழ் மொழியில் உள்ள எண்ணல் அளவை எண்ணுப்பெயர்களை எழுத்ததிகாரத்தில் விவரித்துள்ளார். கோடி எனும் எண்ணுப் பெயரை அவர் குறிப்பிடவில்லை. ஆனால் சங்க இலக்கியங்களில் கோடி எனும் எண்ணுப்பெயர் பதிவாகியுள்ளது (புறநானூறு 18,184,202,393 திருக்குறள் 377). மேலும் நந், நால்கு போன்ற எண்ணுப்பெயர்கள் நான்கு எனும் எண்ணுபெயரின் திரிபுகளாக வரும் என்று தொல்காப்பியர் கூறவில்லை. ஆனால் நந், நால்கு எனும் திரிபுகள் சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன:

**நந்- - அகநானூறு 104**

**நால்கு - அகநானூறு 104**

வேற்றுமை மயங்கியலில் தொல்காப்பியர் பல்வேறு வகையான மயக்கங்களை எடுத்துக்கூறுகின்றார். வேற்றுமை இயலில் 17 நூற்பாக்கள் உள்ளன. ஆனால், வேற்றுமை மயங்கியலில் 35 நூற்பாக்கள் உள்ளன. இதிலிருந்து வேற்றுமை மயக்கத்தின் தாக்கம் எத்தகையது என்பதை அறியலாம். வேற்றுமை மயக்கங்களை நோக்கும் போது எந்த வேற்றுமை உருபும் வேறு எதனோடும் மயங்காலாம் என்று எண்ணத் தோன்றுகிறது. ஆனால் இத்தகைய மயங்கங்கள் வட்டாரவழக்குகளின் தாக்கங்கள் என்பது அறிஞர்களின் கருத்தாகும்.

தமிழ்மொழியில் ஏழு வேற்றுமைகள் உள்ளன எனத் தொல்காப்பியர் கூறுகின்றார்:

**வேற்றுமை தாமே ஏழென மொழிப**

**- தொல்காப்பியம், 546**

ஆனால் விளிவேற்றுமையோடு சேர்த்து வேற்றுமைகள் எட்டு எனக் கூறுகின்றார் தொல்காப்பியர்:

**விளிகொள் வதன்கண் விளியோடு எட்டே**

**- தொல்காப்பியம், 547**

எட்டு வேற்றுமைகளின் வேற்றுமை உருபுகள் கீழ்க்கண்ட சூத்திரத்தில் கொடுக்கப்பட்டுள்ளது:

**அனவதாம்**

**பெயர், ஐ, ஒடு, கு**

**இன், அது, கண், விளி என்றும் ஈற்ற**

**- தொல்காப்பியம், 548**

1. பெயர் வேற்றுமை (தனி வேற்றுமை உருபு இல்லை)
2. ஐ என்ற இரண்டாம் வேற்றுமை (ஐ வேற்றுமை உருபு)
3. ஒடு என்ற மூன்றாம் வேற்றுமை (ஒடு வேற்றுமை உருபு)
4. கு என்ற நான்காம் வேற்றுமை (கு வேற்றுமை உருபு)
5. இன் என்ற ஐந்தாம் வேற்றுமை (இன் வேற்றுமை உருபு)

6. அது என்ற ஆறாம் வேற்றுமை (அது வேற்றுமை உருபு)
7. கண் என்ற ஏழாம் வேற்றுமை (கண் வேற்றுமை உருபு)
8. விளி வேற்றுமை (தனி வேற்றுமை உருபு இல்லை)

விளி வேற்றுமைக்குத் தனி உருபு இல்லை. விளி கொள்ளும் பெயரே விளிவேற்றுமையாகும். பெயர்வேற்றுமை எழுவாய் வேற்றுமை என்றும் அழைக்கப்படுகிறது. விழிவேற்றுமையாகப் பெயர் மட்டும் வெளிப்பட்டு நிற்கும். அதற்கென்று தனி உருபு இல்லை. இலக்கண அமைப்புகள் வட்டாரவழக்குகளின் தாக்கங்களால் உருவானவைகள் என்பது அறிஞர்களின் கருத்தாகும்.

**எடுத்துக்காட்டுகள்:**

**“உயர்திணையில் வரும் -அது என்ற ஆறாம் வேற்றுமை உருபு கெட்டு, நான்காம் வேற்றுமையாகிய -கு உருபு வரும்: எனது மகன், எனக்கு மகன்”**

**- ச.வே. சுப்ரமணியன், 2008: 160**

**“அச்சப் பொருளை உணர்த்தும் சொல் ஐந்தாம் இரண்டாம் வேற்றுமை உருபுகளுடனும் சொல்லலாம். பொருள் குறைவுபடாது: கள்ளரின் அஞ்சும், கள்ளரை அஞ்சும்”**

**- ச.வே. சுப்ரமணியன், 2008: 161**

தொல்காப்பியர் தமிழில் அ, இ, உ என்று மூன்று சுட்டுகள் உள்ளன என்கின்றார்:

**அ இ உ அம் மூன்றும் சுட்டு**

**- தொல்காப்பியம், 31**

ஆனால் சங்ககாலம் முதல் தற்காலம் வரை உகரச்சுட்டின் பயன்பாடு குறைந்து, தற்காலத்தமிழில் உகரச்சுட்டின் பயன்பாடு இல்லாத நிலை உருவாகியுள்ளது. ஆனால் உகரச்சுட்டு தற்கால இலங்கை யாழ்ப்பாணத் தமிழ் வட்டாரவழக்கில் இன்றளவிலும் பயன்பாட்டில் உள்ளது. எனவே வட்டார வழக்கு ஆய்வுகள் வரலாற்று ஆய்விற்கு உரிய தரவுகளையும் எடுத்துக்கூறலாம் என்பது தெளிவாகிறது:

**இருதிணைப் பிரிந்த ஐம்பால் கிளவிக்கும்**

**உரியவை உரிய பெயர்வயி னான**

**- தொல்காப்பியம், 646**

இவை உயர்திணைப் பெயர்களாக வரும் அவன், இவன், உவன் அவள், இவள், உவள் அவர், இவர், உவர் எனும் ஒன்பது சுட்டுப்பெயர்களும் யான், யாம், நாம் என்ற மூன்று தன்மைப் பெயர்களும் யாவன், யாவள், யாவர் என்று மூன்று வினைப்பெயர்களும் ஆகிய பதினைந்து பெயர்களாகும். மேலும், இவை ஆண்பால், பெண்பால், பலர்பால் என்ற முப்பாலும் உணர்த்துவனவாகும்:

**அவ்வழி**

**அவன் இவன் உவன் என வரூஉம் பெயரும்**

**அவள் இவள் உவள் என வரூஉம் பெயரும்**

**அவர் இவர் உவர் என வரூஉம் பெயரும்**

**யான் யாம் நாம் என வரூஉம் பெயரும்**

**யாவன் யாவள் யாவர் என்றும்**

**ஆவயின் மூன்றொடு அப்பதினைந்தும்**

**பால் அறி வந்த உயர்திணைப் பெயரே**

**- தொல்காப்பியம், 647**

மேலும், அ.்.றிணைப் பெயர்களாக வருவனவும் அது, இது, உது அ.்.து, இ.்.து, உ.்.து அவை, இவை, உவை அவ், இவ், உவ் என வரும் பன்னிரண்டு சுட்டுப்பெயர்களையும் யாது, யா, யாவை என வரும் மூன்று வினைப்பெயர்களையும் கொண்ட பதினைந்தும் ஒன்றன்பால், பலவின்பால்களை உணர்த்துவனவாகும்:

**அது இது உது என வரூஉம் பெயரும்**

**அவை முதலாகிய ஆய்தப் பெயரும்**

**அவை இவை உவை என என வரூஉம் பெயரும்**

**அவை முதலாகிய வகரப் பெயரும்**

**யாது யா யாவை என்றும் பெயரும்**

**ஆவயின் மூன்றொடு அப்பதி னைந்தும்**

**பால்அறி வந்த அ.ஃறிணைப் பெயரே**

**- தொல்காப்பியம், 652**

தொல்காப்பியரின் கூற்றுப்படி அ, இ, உ என வரும் மூன்று வகைச்சுட்டுகளும், சுட்டுப்பெயர்களாக வரும்பொழுது பதிலிப்பெயர்களின் முற்றுவிகுதிகளை சுட்டுச்சொற்களோடு சேர்த்து உருவாக்கப்படுகின்றன.

> **"Tolkappiyar says that a-, i-, u- are three demonstratives. So, it is evident that the above demonstrative pronouns are formed by adding the pronominal terminations to the demonstrative base a-, i- and u-. Tolkāppiyar identifies the demonstrative pronouns as 'Cuṭṭuppeyar' 'Cuṭṭuppeyarkkiḷavi' and 'Cuṭṭu Mutaṟpeyar'"**

**- M. Israel, 1973: 49**

தொல்காப்பியர் காட்டும் அ, இ, உ எனும் மூன்று சுட்டுகளும் சுட்டப்படும் பொருள் அல்லது நபர் இருக்கும் தூரத்தை வைத்து மூன்று வகையான பொருள்களை உணர்த்துகின்றன.

1. அ- - தூரம்
2.  - அருகாமை
3. உ- - அருகாமைக்கும் தூரத்திற்கும் இடைப்பட்ட தூரம்

இம்மூன்று வகைச் சுட்டுச்சொற்களை அடிப்படையாக வைத்து உருவாக்கப்படும் சுட்டுப்பெயர்களாவன:

| | **தூரம்** | **அருகாமை** | **இடைப்பட்ட தூரம்** |
|---|---|---|---|
| ஆண்பால் ஒருமை | அவன் | இவன் | உவன் |
| பெண்பால் ஒருமை | அவள் | இவள் | உவள் |
| பலர்பால் & மரியாதை | அவர் | இவர் | உவர் |
| ஒன்றன்பால் | அது | இது | உது |
| | அ.ஃது | இ.ஃது | உ.ஃது |
| பலவின்பால் | அவை | இவை | உவை |
| | அவ் | இவ் | உவ் |

மேற்கூறப்பட சுட்டுப்பெயர்களின் பயன்பாடு சங்ககால நூற்களில் நூலுக்கு நூல் வேறுபடுவதோடு எல்லாச் சுட்டுச்சொற்களுக்கும் சொற்கள் சம அளவில் கிடைப்பதில்லை. எடுத்துக்காட்டாக உ எனும் சுட்டுச்சொல்லோடு முற்றுவிகுதி சேர்த்து உருவாக்கப்படும் சுட்டுப் பெயர்ச்சொற்கள் மிகவும் குறைந்த அளவிலேயே சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன. பதிற்றுப்பத்துச் சொல்லடைவில் உள்ள சொற்கள் (அகத்தியலிங்கம், 1979) சங்ககால நூற்தொகுதிகளான எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகிய நூல்களின் சொல்லடைவுச் சொற்கள் (பாட்டும் தொகையும், 1958), சென்னைப் பல்கலைக்கழகம் வெளியிட்டுள்ள பேரகராதியில் காணும் சொற்கள் (வையாபுரிப்பிள்ளை, 1926-1934) இங்கு கொடுக்கப்பட்டுள்ளன:

**பேரகராதி - வையாபுரிப்பிள்ளை (1926-1934: 154-466)**

| | | |
|---|---|---|
| அவன் | இவன் | உவன் |
| அவள் | இவள் | உவள் |
| அவர் | இவர் | - |
| அவர்கள் | இவர்கள் | - |
| அது | இது | உது |
| - | ஈது | - |
| அவை | இவை | உவை |
| அந்த | இந்த | உந்த |
| அவண் | இவண் | உவண் |
| அதோள் | இதோள் | உதோள் |
| அதோளி | இதோளி | உதோளி |

**ச. அகத்தியலிங்கம் (1979, பதிற்றுப்பத்துச் சொல்லடைவு: 1-31)**

| | | |
|---|---|---|
| அ | இ | உ |
| அவம் | இவன் | - |
| அவர் | இவர் | - |
| - | ஈண்டு | - |
| - | ஈங்கு | - |
| - | இவள் | - |

| | | |
|---|---|---|
| அது | - | - |
| அவை | - | - |
| அவ் | - | - |
| அவண் | இவண் | - |
| - | இவணர் | - |
| அன்னவை | - | - |
| அன்னோர் | இன்னோர் | - |

**பாட்டும் தொகையும் (1958: 28-36)**

| | | |
|---|---|---|
| அ | இ | உ |
| - | - | உவன் |
| - | - | உது |
| அ.ஃது | இ.ஃது | - |
| அவ் | இவ் | ஊவ் உவ் |
| அவ்வே | இவ்வே | - |
| அங்கு | - | - |
| அஞ்ஞான்று | - | - |
| அம்பர் | இம்பர் | - |
| அன்னர் | இன்னோர் | - |
| அன்னவர் | - | - |
| - | இவண் | - |
| | இவற்கு | - |

மேற்கண்டுள்ள எடுத்துக்காட்டுகள் அகர, இகர, உகரச் சுட்டுக்களின் சுட்டுப்பெயர்ச்சொற்களில் எல்லாச் சுட்டுச் சொற்களுக்கும் இணையான சொற்கள் வழக்கில் கையாளப்படவில்லை என்பது தெளிவாகிறது. மேலும் உகரச்சுட்டினை அடியொற்றிய சுட்டுப் பயர்ச்சொற்கள் மிகக் குறைந்த அளவிலேயே சங்ககால, சங்கம் மருவிய கால இலக்கியங்களில் காணக்கிடக்கின்றன. சங்கம் மருவிய கால இலக்கியமாகிய பதினெண் கீழ்க்கணக்கு நூற்களில் சங்ககால இலக்கியத்தில் காணப்படும் சுட்டுப் பெயர்ச்சொற்களில் ‘உவள், உவர், உது, உ.ஃது, உவை’ ஆகிய சொற்கள் பயன்பாட்டில் இல்லை. மேலும் ‘உவன், உவ்’ ஆகிய இரண்டு

சுட்டுப் பெயர்ச்சொற்கள் ஒவ்வொன்றும் ஒரே ஓர் இடத்தில் மட்டும் கையாளப்பட்டுள்ளன:

**உளர உளர உவன் ஓடிச் சால**

**- திணைமாலை நூற்றைம்பது, 136: 3**

**உவக்காண்எம் காதலர் செல்வார் இவக்காண்என்**

**மேனி பிசபுஊர் வது**

**- திருக்குறள், 1185: 1**

கீழ்க்காணும் சுட்டுப்பெயர்ச்சொற்கள் மட்டுமே பதினெண்கீழ்க்கணக்கு நூற்களில் காணக்கிடக்கின்றன.

| | | |
|---|---|---|
| அவன் | இவன் | உவன் |
| அவள் | இவள் | உவள் |
| அவர் | இவர் | |
| அது | இது | |
| அ.்.து | இ.்.து | |
| அவை | இவை | |
| அவ் | இவ் | உவ் |

உ எனும் சுட்டும் அதைச் சேர்ந்த சுட்டுப் பெயர்ச்சொற்களும் தமிழகத்தில் தற்கால எழுத்து வழக்கு, பேச்சுவழக்கு, பொதுப்பேச்சுத்தமிழ் எனும் மூன்று வகை வழக்குகளிலும் அழிந்துபட்ட நிலையில் அவ்வகைச் சொற்கள் அனைத்தும் இன்றளவிலும் இலங்கையின் கொழும்பு வட்டாரத் தமிழின் எழுத்து வழக்கு, பேச்சுவழக்கு எனும் இருவகை வழக்குகளிலும் சரளமாகப் பயன்படுத்தப்படுகின்றன. எனவே உகரச்சுட்டு எனும் இலக்கணக் கூறு பலவகை இலக்கியங்களில் பலவாறாகக் குறைந்த அளவில் பயன்பாட்டில் இருந்துள்ள நிலையில் இன்றளவில் இலங்கை யாழ்ப்பாணத் தமிழ்ப் பேச்சுவழக்கில் மட்டும் காணப்படுவது இலக்கணக் கூறுகளின் பயன்பாடுகளும் வட்டாரத்திற்கு வட்டாரம் மாறுபடுவதை எடுத்துக்காட்டுகிறது.

இலங்கை வட்டாரத் தமிழ்க் கிளைமொழியை ஆய்வு செய்த பேராசிரியர் சண்முகம் பிள்ளை (1962) இலங்கையில் பேசப்படும் கொழும்பு வட்டாரத் தமிழ்க்

கிளைமொழியில் அந்த, இந்த, உந்த எனும் மூன்று சுட்டுச்சொற்கள் முறையே தூரம், அருகாமை, இடைப்பட்ட தூரம் எனும் மூன்று பிரிவுகளில் பயன்பட்டதைச் சுட்டிக்காட்டி அவைகளிலுள்ள ஒலியன்களின் ஒலிப்புத்தன்மையைக் கூறியுள்ளார்.

**"antæ 'that' remote demonstrative, intæ 'this' proximatx demonstrative, untæ 'between that and this' medial demonstrative have voiceless dental stops after nasale"**

**- M. Shanmugam Pillai, 1962: 92**

ஆண்ட்ரனோவ் எனும் உருசிய நாட்டு மொழியியல் அறிஞர் தமிழில் உ எனும் செவ்வியல் காலச் சுட்டுச்சொல் இலங்கைப் பேச்சுத்தமிழில் இன்றளவிலும் பேசப்படுவதைச் சுட்டிக்காட்டியுள்ளார்.

**"unta 'this, these' (referring to persons and objects, proximate to the person addressed, or tho those situated medially in space, i.e. between positions denoted by anta and inta respectively: ….. This pronoun is used only in Classical Tamil and in the dialect, spoken in Ceylon"**

**- M. Andronov, 1969: 115**

இலங்கையின் கொழும்புப் பகுதியில் பேசப்படும் தமிழ்க் கிளைமொழியின் ஒலியன்களை ஆய்வு செய்த இலங்கை வாழ் மொழியியல் அறிஞர் கே. கணபதிப்பிள்ளை இலங்கையின் வடக்குப் பகுதியில் பேசப்படும் தமிழ் வழக்கு சங்ககாலத் தமிழின் தொடர்ச்சியே என்கின்றார்.

**"….. Centamil was cultivated during that period in this part of Ceylon …. It is not totally wrong to assume that the colloquial dialect prevalent at present in North Ceylon is a continuation of the speech spoken during the period under discussion here"**

**- K. Kanapathi Pillai, 1958: 219**

இலங்கைவாழ் தற்கால மொழியியல் பேராசிரியர் சுசீந்திரராஜா (1993) தமது நூலில் கொழும்பு வட்டாரத் தமிழ் வழக்கில் காணப்படும் சுட்டுச்சொற்களையும் சுட்டுப் பெயர்ச்சொற்களையும் விளக்கமாகக் கொடுத்துள்ளார். கொழும்பு வட்டாரத் தமிழ் வழக்கிலும் சங்ககாலத் தமிழ் இலக்கிய வழக்கில் காணப்படும் அ, இ, உ

எனும் சுட்டுச்சொற்கள் முறையே ‘தூரம்’, ‘அருமை’, இடைப்பட்ட தூரம்’ எனும் மூன்று வகைகளாகப் பயன்பாட்டில் இருந்தவை இன்றும் காணப்படுவதையும் படர்க்கைப் பதிலிப்பெயர்கள் மேற்கண்ட மூன்று சுட்டுச்சொற்களை ஆதாரமாக வைத்தே உருவாக்கபட்டு இன்றளவிலும் அன்றாடப் பேச்சுத்தமிழ் வழக்கில் பயன்படுத்தப்படுவதையும் தமது ஆய்வுகள் மூலம் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார்:

**“Degree of proximity in the third person pronouns: proximate i-, intermediate u-, remote a-”**

**- Suseendirarajah, 1993: 96**

**எடுத்துக்காட்டுகள்:**

**அவன் இவன் உவன்**

**அவள் இவள் உவள்**

**அவை இவை உவை**

சங்ககால இலக்கண, இலக்கியங்களில் கையாளப்பட்டுள்ள இத்தகைய இலக்கண கூறு காலத்தால் தமிழகத்தில் பேசப்படும் தமிழ் வழக்குகளில் அழிந்துபட்ட நிலையில் இலங்கை யாழ்ப்பாணத் தமிழ்ப் பேச்சுவழக்கில் இன்றளவிலும் காணப்படுவது சங்ககாலத் தமிழின் தொடர்ச்சியைக் காட்டுவதோடு இத்தகைய இலக்கணக் கூறுகளும் வட்டாரவழக்குகளில் காணப்படுவதன் மூலம் வட்டாரவழக்கு ஆய்வுகள் தமிழ்மொழியின் வரலாற்றாய்வுக்கு ஆதாரமாகவும் விளங்குவதைக் காணமுடிகிறது.

## முடிவுரை

சங்க இலக்கியங்களில் வட்டார வழக்குச் சொற்கள் - ஓர் ஆய்வு எனும் தலைப்பில் நடத்தப்பட்டுள்ள இவ்வாய்வில் முன்னுரை, முடிவுரை நீங்கலாக கீழ்க்கண்ட ஐந்து இயல்களில் ஆய்வு செய்யப்பட்டுள்ளது:

இயல் 1 - வட்டார வழக்கு ஆய்வுகள் - தொல்காப்பியம் முதல் தற்காலம் வரை

இயல் 2 - தொல்காப்பியமும் தமிழ் வட்டாரங்களும் வட்டாரவழக்குகளும்

இயல் 3 - தமிழின் சமூகக் கிளைமொழிகள் சமூக வழக்குகள் - தொல்காப்பியம் முதல் தற்காலம் வரை

இயல் 4 - தற்கால வட்டாரவழக்குகள்

இயல் 5 - வட்டாரவழக்கு இலக்கணக்கூறுகள்

இவ்வாய்வு முடிவுகள் இங்கு கொடுக்கப்பட்டுள்ளன.

திராவிட மொழிக்குடும்பத்தின் மூத்த மொழியாக விளங்கும் தமிழ்மொழியின் இலக்கண இலக்கியப் பாரம்பரியத்தின் தொன்மை கருதி அது ஒரு செம்மொழியாக அறிவிக்கபட்டுள்ளது. உலகில் பேசப்படும் மொழிகளின் எண்ணிக்கை 3500 முதல் 4000 வரை இருக்கலாம் என்று கணக்கிடப்பட்டுள்ளது. ஆனால், உலக அளவில் கீழ்க்கண்ட எட்டு மொழிகள்: தமிழ், சமஸ்கிருதம், கிரேக்கம், இலத்தீன், ஹூப்ரு, அரபு மொழி, சீனம், பாரசீக மொழி மட்டும் செம்மொழி எனும் தகுதி பெற்றுள்ளன. அந்த எட்டுச் செம்மொழிகளில் தமிழ் இன்று வரை வாழும் செம்மொழியாகத் திகழ்வது அதன் தனிச் சிறப்பாகும். மேலும் தனித்தன்மை கொண்ட தமிழ்மொழியின் இலக்கண, இலக்கியப் பாரம்பரியங்கள் அதன் வரலாற்றுத் தொடக்க காலமாகிய சங்ககாலம் முதல் தற்காலம் வரை காத்து வருவது அதற்குரிய சிறப்புகளில் ஒன்றாகும். தமிழ்மொழியின் சிறப்பு பற்றிப் பேராசிரியர் தெ.பொ. மீனாட்சிசுந்தரன் கூறியிருக்கும் கருத்து:

> **“The Tamil Language like Janus, looks backward to the ancient world and looks forward to the modern world with the Future still in its womb. It is both a Classical Language, shaping itself with logical precision and wondrous rhythm as a beautiful and befitting medium for poetry and**

**philosophy, and a modern language shaping itself as a powerful and proper vehicle for the scientific and practical thoughts; for, unlike other classical languages, it has refused to die".**

**- T.P. Meenakshisundraran, 1961: 31**

இவ்வாறு அழியாது தொடர்ந்து வாழ்ந்துவரும் தமிழ் மொழியின் சிறப்பைப் பேராசிரியர் சுந்தரம்பிள்ளையவர்கள்

**ஆரியம்போல் உலகவழக் கழிந்தொழிந்து சிதயாஉன்**

**சீரிளமைத் திறம்வியந்து செயல்மறந்து வாழ்த்துமே**

எனப் பாடியுள்ளார்.

தமிழ்மொழியின் தொன்மை இந்தியத் துணைக்கண்டப் புராணக் கதைகளாகிய இராமாயணம், மகாபாரதம் போன்ற புராணக்கதைகளின் காலத்திற்கு முந்தையதாகும். இந்தப் புராணக்கதைகளில் தமிழ்மொழி பற்றியும் தமிழர்கள் பற்றியும் குறிப்புகள் காணப்படுவதால் தமிழ்மொழியின் வரலாறு இவ்விரு புராணக்கதைகளின் காலத்திற்கு முந்தையதாகக் கருதப்படுகிறது. மேலும் நமக்குக் கிடைத்திருக்கும் இலக்கண, இலக்கிய நூற்களில் தொல்காப்பியம் முதல் நூலாக விளங்குகிறது. இருப்பினும் தொல்காப்பியத்தின் காலத்திற்கு முன்பு அகத்திய முனிவரால் எழுதப்பட்ட அகத்தியம் எனும் தமிழ் இலக்கணநூல் இருந்தது தமிழ்மொழி வரலாற்றை தொல்காப்பியத்தின் காலத்திற்கு முன்பு எடுத்துச் செல்கிறது. அகத்தியர் எனும் முனிவர் வரலாறு கோதாவரி நதிக்கரையில் அமைந்திருக்கும் பஞ்சவடி எனும் இடத்தில் தொடங்கி, காவேரி நதி உறுவாகும் தலைக்காவேரி மற்றும் தமிழகத்தின் பொதிகை மலை ஆகிய இடங்கள் வரை காணப்படுகிறது. அகத்திய முனிவர் ஆரிய - திராவிட மொழிகள் பேசும் மக்களின் மதம்சார் கொள்கைகளின் ஒற்றுமைகளை விளக்குவதாக உள்ளது என்று நாராயண் நம்பூதிரி கூறுகின்றார்:

**"Agastya may be considered as the pioneer advocate of the concept of coexistence of different people and ideologists and the give and take policy of differing cultures of India".**

**- P.P. Narayan Nambudiri, 1992: 50**

இராவணன் வாழ்ந்த காலத்தில் தமிழகமும் இலங்கையும் ஒரே நிலப்பரப்பாக இருந்துள்ளது. இராவணன் எனும் பெயர் சமஸ்கிருதமாக்கப்பட்ட இறைவன் எனும் தமிழ்ச்சொல் என்கின்றார் பி.டி. சீனிவாச ஐயங்கார் (1929: 52). தமிழகத்தில் இராவணின் அழிவுக்குப் பின்னரே சேரர், சோழர், பாண்டியர் எனும் மூவேந்தர்களின் ஆட்சி தோன்றியது என்பது பி.டி. சீனிவாச ஐயங்காரின் கருத்தாகும். தொல்காப்பியர் காலத்திலேயே சமஸ்கிருத, பிராகுருதச் சொற்கள் தமிழில் கலந்துவிட்டன. எனவேதான் தொல்காப்பியர் சொற்களை நான்கு பிரிவுகளாக வகைப்படுத்தும்பொழுது வடசொல் எனும் ஒரு சொற்பிரிவையும் வைத்துள்ளார். மேலும் தமிழகத்தில் வாழ்ந்த அந்தணர்கள் தங்களின் தாய் மொழியாகிய தமிழோடு சமஸ்கிருத மொழியையும் கற்கத் தொடங்கியுள்ளனர்.

திராவிடமொழிகளின் மூத்த மொழியாகிய தமிழ்மொழி பிற திராவிட மொழிகளைவிட மிகவும் பண்பட்ட மொழியாக விளங்குகிறது. சமஸ்கிருத மொழியின் துணை இல்லாது தனித்து இயங்கும் வல்லமை தமிழ்மொழிக்கு உண்டு என்பார் திராவிடமொழிகளின் தந்தை என அழைக்கப்படும் பிசப் இராபர்ட் கால்டுவெல்:

**“The Tamil, the most cultivated ab-intra of all the Dravidian idioms, can dispense with Sanskrit altogether, if need be, not only stand alone, but flourish without its aid”.**

**- Bisoph Robert Caldwell, 1856**

மேலும் சமஸ்கிருத மொழி தமிழ்மொழியின் மேல் ஒரு தாக்கத்தை ஏற்படுத்தினாலும், சமஸ்கிருதமும் தமிழ்மொழியின் தாக்கத்திற்கு உள்ளாகியுள்ளது:

**“… that wonderful language has condescended to borrow even from Dravidian group of which the Tamil is the oldest, and the principal”.**

**- Bavanantham Pillai, 1925: vi**

தமிழ்மொழியின் இலக்கியங்களின் சிறப்பைப் பற்றிக் கூறும் ஜி.யு. போப் தமிழ்மொழியின் இலக்கியப் பாரம்பரியத்தைத் தனது வாழ்நாளில் கற்பதென்பது கடலில் மூழ்கி முத்து எடுப்பதற்கு ஒப்பாகும் என்கின்றார்:

**“Those who spend their lives in the study of the great South Indian classics must resemble men seeking for pearls under water”.**

**- G.U. Pope, 1911: 2**

தமிழகம் என்பது சேரர், சோழர், பாண்டியர் எனும் மூவேந்தர்களின் வரலாற்றோடு கொங்குநாடு, தொண்டை நாடு எனும் நாடுகளையும் சேர்த்து ஐந்து நாடுகளாக இருந்துள்ளதைத் தமிழ் இலக்கியங்கள் வாயிலாக அறியமுடிகிறது. மேலும் 12 சிற்றரசர்கள் ஆண்ட பகுதிகளும் அடையாளங்காணப்பட்டுள்ளன. எனவே தமிழ்மொழியின் வட்டாரவழக்குகள் என்பது இத்தகைய நாடுகளின் அடிப்படையில் அமைந்திருப்பது தமிழ்மொழி வரலாறு எடுத்துக்காட்டும் வரலாற்று உண்மைகளாகும். தமிழ் மொழியின் சிறப்புகளும் தமிழ்மொழி பேசப்பட்ட நாடுகள் பற்றிய தரவுகளும் முன்னுரையில் விளக்கமாகக் கொடுக்கப்பட்டுள்ளன.

வடவேங்கம் முதல் தென்குமரி வரை பேசப்பட்ட தமிழ்மொழிக்கு எழுத்து வழக்கு அல்லது இலக்கிய வழக்கு, பேச்சுவழக்கு என இருவகை வழக்குகள் இருந்ததைத் தொல்காப்பியப் பாயிரம் எடுத்துரைக்கிறது. மேலும் தொல்காப்பியர் தாம் இயற்றிய தொல்காப்பியம் எனும் இலக்கணநூலைத் தமிழ்மொழியின் இலக்கிய வழக்கு, பேச்சுவழக்கு ஆகிய இரண்டையும் ஆராய்ந்து எழுதியுள்ளார் என்று பாயிரம் கூறுகிறது. தொல்காப்பியர் தமிழின் சொற்களை இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் என்று நான்கு வகைகளாகப் பிரித்துத் திசைச்சொற்கள் எனும் வட்டாரவழக்குச் சொற்களுக்கு இலக்கணமும் கூரியுள்ளார். மேலும் திசைச்சொற்கள் தேவைப்படும் இடங்களில் இலக்கிய வழக்கிலும் பயன்படுத்தப்படலாம் என்று தெளிவாகக் கூறியிருந்தாலும் வட்டாரவழக்குகளைச் சேர்ந்த திசைச்சொற்கள் எந்த வட்டாரத்தில் எந்தச் சொற்கள் பயன்பாட்டில் இருந்தன என்று வரையறுத்துத் தெளிவாகக் கூறவில்லை. இருப்பினும், பேராசிரியர் தெ.பொ. மீனாட்சிசுந்தரன் (1956, 196-197), பேராசிரியர் ரா.பி. சேதுப்பிள்ளை (1956: 32), பேராசிரியர் ஜெ. நீதிவாணன் (2007: 76-77) ஆகியோர் தங்களது ஆய்வுகளில் திசைச்சொற்களைப் பண்டையத் தமிழகத்தின் நாடுகளோடு பட்டியலிட்டுள்ளனர். சென்னைப் பல்கலைக்கழகம் வெளியிட்டுள்ள தமிழ்ப் பேரகராதியில் (1926-1934) தமிழ்ச் சொற்கள் அவைகளின் வட்டாரங்கள், சமுதாயங்கள், தொழில், மதம் போன்ற தலைப்புகளில் அடையாளங்கண்டு கொடுக்கப்பட்டுள்ளன.

தொல்காப்பியம் ஒரு இலக்கணநூல் என்பதால் பொதுவான இலக்கணக் கோட்பாடுகளைப் பெரும்பாலும் கொண்டிருக்கும் பல வட்டாரங்களில் பல

குழுக்களாக அல்லது சமூகங்களாகப் பலதரப்பட்ட தொழில் புரிந்து வாழும் மக்களின் தனித்தன்மைகள், மொழியியல், சமூகவியல், பண்பாட்டியல் கூறுகள் அனைத்தும் இங்கொன்றும் அங்கொன்றுமாக வெளிப்படுத்தப்பட்டிருப்பினும் அவைகள் அனைத்தையும் ஒன்றுதிரட்டி எந்த நிலத்தில் எந்த வழக்கு பயன்படுத்தப்பட்டது என்று தொல்காப்பியம் கூறவில்லை. இருப்பினும் இலக்கியங்களில் பயன்படுத்தப்பட்டுள்ள சொற்களின் பொருள், பயன்படுத்திய புலவர் வாழ்ந்த பகுதி, புலவர்களால் பாடப்பட்ட அரசர்களின் பின்புலம் ஆகியவைகளை அடிப்படையாகக் கொண்டு அச்சொற்கள் வழங்கிய நாடுகளை அடையாளங்காண வாய்ப்புகள் உள்ளன. சங்க இலக்கியப் புலவர்களின் பெயர்கள் தெரிந்தாலும் ஒரு சிலரின் பெயரோடு மட்டுமே புலவர்களுடைய ஊர் அல்லது நாடு பதிவு செய்யப்பட்டுள்ளது. மேலும், ஒருவருடைய வட்டார, சமூக, தொழில் வழக்குகள் பற்றிய ஆழமான ஆய்வுகள் இன்றுவரை நடத்தப்படவில்லை. நடத்தப்பட்டிருக்கும் ஆய்வுகளில் எடுத்துக்காட்டுகள் மட்டுமே உள்ளன.

சில எடுத்துக்காட்டுகள் மூலமாகப் புலவர்கள், உரையாசிரியர்கள் வாழ்ந்த நாட்டை அடையாளங்காண முடியும் என்பது அறிஞர்களின் கருத்தாகும்:

> **“இளம்பூரணர் சோழநாட்டைச் சார்ந்தவர். அதோடு, உறையூர்ப் பகுதி அல்லது கருவூர்ப்பகுதியைச் சார்ந்தவராக இருக்கலாம் என்பது அவர் விளக்கங்களிலிருந்து தெரிகிறது. கைக்கிளை என்பதன் பொருள் யாதோ எனின் கை என்பது சிறுமை பற்றி வரும். அது தத்தம் குறிப்பிற் பொருள் செய்வதோர் இனச்சொல். கிளை எனப்து உறவு. பெருமையில்லாத தலைமக்கள் உறவு என்றவாறு - கைக்குடை, கைஏடு, கைவாள், கையொலியல், கை வாய்க்கால் எனப் பெருமையிலாதவற்றை வழங்குப ஆதலின் என்று எழுதுகின்றார். கைக்குடை, கைவாள் என்ற தொடர்கள் எங்கும் வழங்குமாயினும், கைவாய்க்கால் என்பது இன்றும் சோழநாட்டில் மட்டுமே சிறு வாய்க்காலைக் குறிப்பிடுவதற்கு வழங்கும் பெயராகும். இவர் சோழநாட்டினர் என்ற கருத்துக்கு இது பின்னும் ஆதரவு தருகிறது”**
>
> **- ச.வே. சுப்பிரமணியன், 2008: 18**

மேலும், தற்காலக் கொங்குநாட்டு வழக்கில் காணும் கும்மாயம் ‘சிறுவர்கள் விளையாடும் ஒருவகை விளையாட்டு’ என்ற சொல் பதிற்றுப்பத்தில் உள்ளது எனவும் கூழை ‘குட்டையான நபர்’ எனும் சொல் அகநானூற்றில் உள்ளது எனவும்

சுளுகு 'தானியங்களைச் சுத்தம் செய்யப் பயன்படும் சாதனம்' என்ற சொல் புறநானூற்றில் உள்ளது எனவும் பி. லூர்துசாமி (1949: 457-459) எடுத்துக்காட்டியுள்ளார்.

தொல்காப்பிய உரையாசிரியர் சேனாவரையர் "செந்தமிழ் சேர் பன்னிரு நிலத்தினும்" என்ற சூத்திரத்திற்கு உரை எழுதும் பொழுது தென்பாண்டி நாட்டார் ஆ, எருமை என்பனவற்றைப் பெற்றம் என்றும் தம்மாமி என்பதைத் தந்துவை என்றும் வழங்குவர் என வட்டாரவழக்குகளுக்கு எடுத்துக்காட்டுகள் கொடுத்துள்ளார். நன்னூலுக்கு உரையெழுதிய சங்க நமச்சிவாயர்

> **"இவற்றுள், செந்தமிழ்ப் பாண்டி நாட்டின் தெந்திசைக் கண்ணதாகிய தென்பாண்டி நாட்டார் ஆவினைப் பெற்றம் என்றும் சோற்றைச் சோன்றி என்றும், குட்ட நாட்டார் தாயைத் தள்ளி என்றும், குட நாட்டார் தந்தையை அச்சன் என்றும், கற்கா நாட்டார் வஞ்சரைக் கையர் என்றும், வேணாட்டார் தோட்டத்தைக் கிழார் என்றும், பூழி நாட்டார் சிறு குளத்தைப் பாழி என்றும், அருவா நாட்டார் செறுவைச் செய் என்றும், சிறுகுளத்தைக் கேணி என்றும், அருவா வடதலையார் புளியை எகினம் என்றும், சீத நாட்டார் தோழனை எலுவன் என்றும், தோழியை இருளை என்றும் வழங்குவர்"**
>
> **- ந. குமாரசாமி ராஜா, 1972**

என்றும் பல நாடுகளாகப் பிரிந்திருந்த தமிழகத்தின் வட்டாரவழக்குச் சொற்களுக்கு எடுத்துக்காட்டுகள் கூறியுள்ளார்.

பேச்சுவழக்கு ஆய்வுகள் என்பது ஐரோப்பியர்களின் வருகைக்குப் பின் ஒரு தனிச்சிறப்போடு நடத்தப்பட்டுள்ளன. முதல் பேச்சுவழக்கு ஆய்வு இறைத்தந்தை ஹென்றிக் - ஹென்றிக் எனும் போர்த்துக்கீசியப் பாதிரியாரால் தூத்துக்குடி மாவட்டப் பரதவர் எனும் மீனவர் சமூகத்தினர் பேசும் பேச்சுவழக்கை அடிப்படையாகக் கொண்டு கி.பி. 1549-ஆம் ஆண்டு எழுதப்பட்டது. டச்சு நாட்டைச் சேர்ந்த மத போதகர் பிலிப்பஸ் பால்டியல் (கி.பி. 1632-1672) எழுதிய முதல் தமிழ்ப் பேச்சுவழக்கு இலக்கணநூல் கி.பி. 1672-இல் அம்பலக்கட்டாவில் இருந்த அச்சுக்கூடத்தில் அச்சியிடப்பட்டு வெளியிடப்பட்டது. கி.பி. 1728-இல் இறைத்தந்தை கான்ஸ்டாண்டினஸ் ஜோஸப் பெஸ்கி இலத்தீன் மொழியில் தமிழுக்கு ஒரு இலக்கணநூல் எழுதினார். இது 1806-இல் கிறிஸ்டோபர் ஹென்றி ஹோஸ்ட் என்பவரால் ஆங்கிலத்தில் "Grammar of the Common Dialect of the

Tamil called nfhLe;jkpo; composed for the use of the missionaries of the Society of Jesus" எனும் தலைப்பில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. பெஸ்கி அவர்கள் தமிழ்மொழியைப் பற்றிக் கீழ்க்கண்டவாறு கூறியுள்ளார்:

**"In this region there are two dialects of the Tamil language: I would call one High, the other the common. Some not very correctly call that which differs from the common, the Poetical dialect. But since we see the Tamulians use that dialect, no so much in those writings which have trammels of metre, as in all others which by the old authors skilled in this tongue are composed in prose also; which is especially to be seen in the commentaries of the poets, that dialect will be better named the more elegant, or high, that the poetic. The Tamulians, however call this high dialect nre;jkpo;; and the common nfhLe;jkpo;; as if they call that elegant Tamil, this the rough".**

**- Constantius Joseph Beschi, 1728: 2**

ஐரோப்பியப் பாதிரிமார்களின் தமிழ்ப் பேச்சுவழக்கு ஆய்வுகள் பேச்சுவழக்குகளின் இலக்கணம், பேச்சுவழக்கு அகராதிகள் ஆகிய இரு தலைப்புகளின் ஆய்வுகளுக்கு அடித்தளமாகவும் முன்னோடிகளாகவும் அமைந்தன. மொழியியல் எனும் தனித்துறை தமிழகப் பல்கலைக்கழகங்களில் அறிமுகமான பின் வட்டாரவழக்கு, சமூக வழக்கு, தொழில் வழக்கு எனும் தலைப்புகளில் பல ஆய்வுகள் நடத்தப்பட்டுள்ளன.

**"The development of Tamil Lexicography, owes much to the earnest Christians who took all pain to master not only Tamil language, but also the manners and customs of the Tamil land and people".**

**- Tamil Lexicon, 1926-34: xxxv**

தற்காலத்தில் வட்டாரங்கள் என்பது வருவாய் மாவட்டங்களாக அடையாளங்காணப்படுகிறது. எனவே, அனைத்து வருவாய் மாவட்டங்களில் கள ஆய்வுகள் செய்து தமிழ் வட்டாரவழக்கு வட்டாரங்களை அடையாளங்காணும் ஆய்வுகள் பொது வினா நிரல் மூலம் நடத்தப்படவேண்டிய அவசியத்தை அறிஞர்கள் தற்பொழுது உணர்ந்துள்ளனர். இத்தகைய ஆய்வுகள் தமிழ்மொழியின் வரலாற்றாய்வுகளுக்கும் உரிய தரவுகளாக அமையும். தொல்காப்பியம் முதல்

தற்காலம் வரையிலான வட்டாரவழக்குகளின் ஆதாரங்கள், ஆய்வுகள், ஆய்வுமுடிவுகளின் முக்கியத்துவம் அனைத்தும் இயல் ஒன்றில் விரிவாகக் கொடுக்கப்பட்டுள்ளன.

தமிழகம் என்பது தமிழ்மொழி பேசும் பகுதிகள் ஆகும். ஆனால் தமிழ்மொழி பேசப்பட்ட பகுதிகள் சேரர், சோழர், பாண்டியர் எனும் மூன்று அரசர்களால் ஆளப்பட்ட பகுதிகளாகப் பிரிந்திருந்தது. தமிழகத்தை மூவேந்தர்கள் ஆண்டதை

**'வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பின்'**

எனும் தொல்காப்பியச் சூத்திரத்தால் (தொல். 1336) அறியமுடிகிறது. மேலும் ஔவையார் பாடியுள்ள தனிப்பாடல் ஒன்றில் அங்கவை, சங்கவைகளின் திருமணப்பந்தலில் சேர, சோழ, பாண்டிய மன்னர்கள் மூவரும் அவர்களை வாழ்த்தியதாகக் கூறும் பாடலிலும் மூவேந்தர் பற்றிய செய்தி வருகிறது.

**திங்கள் குடையுடைச் சேரனும் சோழனும் பாண்டியனும்**
**மங்கைக்கு அறுகிட வந்துநின் றோர்மணப் பந்தலிலே**
**சங்குஒக்க வெண்குருத்து ஈன்றுபச் சோலை சலசலத்து**
**நுங்குக்கண் முற்றி அடிக்கண் கறுத்த நுனிசிவந்து**
**பங்குக்கு மூன்று பழம்தர வேண்டும் பனந்துண்டமே**

**- அ. மாணிக்கம், 1988: 14**

மூன்று பேரரசர்கள் ஆண்ட நாடுகளின் பெயர்களோடு கொங்கு நாடு, தொண்டை நாடு எனும் நாடுகளின் பெயர்களும் சங்க இலக்கியங்களில் காணக்கிடக்கின்றன. ஔவையார் எழுதிய தனிப்பாடல் ஒன்றில் சேரர், சோழர், பாண்டியர் ஆண்ட நாடுகளோடு தொண்டை நாடும் குறிக்கப்படுகிறது.

**வேழம் உடைத்து மலைநாடு மேதக்க**
**சோழ வளநாடு சோறுடைத்து - பூழியர்கோன்**
**தென்நாடு முத்துடைத்துத் தென்நீர் வயல்தொண்டை**
**நன்னாடு சான்றோர் உடைத்து**

**- அ. மாணிக்கம், 1977: 13**

தோண்டை நாட்டை ஆண்ட தொண்டைமான் இளந்திரையன் பற்றிய குறிப்புகள் அகநானூற்றுப் பாடல்கள் 85, 340-இல் காணக்கிடக்கின்றன.

கொங்கு நாடு தனியொரு பகுதியாக சங்ககாலம் முதல் இருந்ததைக் கம்பரின் தனிப்பாடல் மூலம் அறியலாம். இப்பாடலில் கொங்கு நாட்டைப் பற்றிக் கம்பர் பாடியுள்ளார்.

**நீரெல்லாம் சேற்று நாற்றம், நிலமெல்லாம் கல்லும் முள்ளும்**
**ஊரெல்லாம் பட்டி தொட்டி, உண்பதோ கம்பஞ்சோறு**
**பேரெல்லாம் பொம்மன் திம்மன், பெண்களோ நாயும் பேயும்**
**கார் உலகம் கொங்கு நாட்டைக் கனவிலும் நிலைக்கொ நாதே.**

**- அ. மாணிக்கம், 1977: 19**

இவ்வகை நாடுகள் தவிர 12 நாடுகளைப் பற்றிய குறிப்பும் சங்க இலக்கண, இலக்கியங்களில் காணக்கிடக்கின்றன. திசைச்சொல்லுக்கு இலக்கணம் கூறும் தொல்காப்பியர்

**செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தும்**
**தம்குறிப் பினவே திசைச்சொல் கிளவி**

**- தொல். 883**

என்று கூறுகின்றார். நன்னூலாசிரியரும் 12 நிலப்பகுதிகள் இருந்ததை உறுதிப்படுத்துகின்றார்.

**செந்தமிழ் நிலம்சேர் பன்னிரு நிலத்தினும்**
**ஒன்பதிற் றிரண்டில் தமிழ்மொழி நிலத்தினும்**
**தங்குறிப் பினவே திசைச்சொல் என்ப**

- நன்னூல், 273

இந்தப் பன்னிரு நிலப்பகுதி அல்லது நாடுகளைத் தொல்காப்பிய உரையாசிரியர் சேனாவரையர் கீழ்க்கண்டவாறு பட்டியலிட்டுள்ளார்:

**தென்பாண்டி குட்டம் குடம் கற்காவேண்பூழி**
**பன்றி அருவா அதன் வடக்கு - நன்றாய**
**சீத மலாடு புனல்நாடு செந்தமிழ்சேர்**
**ஏதமில் பன்னிரு நாட்டென்**

மேற்கூறப்பட்ட 12 நாடுகளைத் தற்காலத் தமிழ்நாட்டில் அடையாளம் காணமுடிகிறது (மனோகரன், 2014).

இத்தகைய பிரிவுகள் தவிர தமிழ் பேசப்பட்ட பகுதிகளை அகத்தனவும் புறத்தனவும் என்று இறுவேறு பகுதிகளாகப் பிரிக்கின்றனர். இதில் அகத்தனவு நாடுகள் தமிழகத்தில் உள்ள நாட்டுப்பகுதிகளைக் குறிக்கிறது. புறத்தனவு என்பது தமிழகத்திற்கு வெளியே தமிழ் பேசப்பட்ட நாடுகளைக் குறிக்கிறது. இத்தகைய புறத்தனவு நாடுகளாகக் கீழ்க்கண்ட நாடுகளை நன்னூலுக்கு உரையெழுதிய மயிலைநாதர் பட்டியலிட்டுள்ளார்:

**சிங்களஞ் சோனகஞ் சாவகஞ் சீனத் துளுக்குடகம்**

**கொங்கணங் கன்னடங் கொல்லந் தெலுங்கம் கலிங்கம் வங்கம்**

**கங்க மகதங் கடாரங் கடவுங் கடுங்செலம்**

**தங்கும் புகழ்த்தமிழ் சூழ்பதி நேழ்நிலன் தாமிவையே**

**- மயிலைநாதர்**

இவ்வாறாகத் தமிழகத்தில் பல நாட்டினர்களாகப் பிரிந்து வாழ்ந்த தமிழர்களால் பேசப்பட்டது வட்டாரவழக்குகளுக்குக் காரணிகளாக அமைந்துள்ளது.

சங்ககாலப் பாடல்களாக அறியவருவன 2,381 ஆகும். இப்பாடல்களைப் பாடிய புலவர்களின் எண்ணிக்கை 473 ஆகும். இவர்களில் 31 பேர் பெண்பாற் புலவர்கள். சங்ககால இலக்கியப் பாடல்களைப் பாடிய புலவர்களுள் சிலர் நகரங்களைச் சார்ந்தவர்கள். பலர் சிற்றூர்களைச் சார்ந்தவர்கள். கற்பிக்கும் ஆசிரியர், பொன் வணிகர், ஆடை வணிகர், மருத்துவர், தச்சர் முதலாகப் பல்வேறு தொழில் செய்து வாழ்ந்தவர்கள். அரசர்களாகவும், அரச குடும்பத்தைச் சார்ந்தவர்களாகவும் இருந்தவர்கள் 31 பேர்கள் (வரதராசன், 1972: 48). இவ்வாறு பலதரப்பட்ட தொழில் புரிந்து பலதரப்பட்ட நாடுகளில் வாழ்ந்த பல சமூகங்களைச் சேர்ந்த புலவர்களால் பாடப்பெற்ற இலக்கியங்களில் புலவர்களின் வட்டார, சமூகத் தாக்கங்கள் இயற்கையாகவே இருக்கும்.

தமிழர்கள் நாட்டுப்பகுதிகளைத் தவிர அவர்கள் வாழ்ந்த நிலப்பகுதிகளை ஐந்து பிரிவுகளாகப் பிரித்து அதைத் திணைக்கோட்பாடு எனும் ஒரு இலக்கணக் கோட்பாட்டில் மக்களின் வாழ்வியல்கள் கூறுகளைப் புலவர்கள் எடுத்துரைத்துள்ளனர்.

**சேயோன் மேய மைவரை உலகமும்**

**வேந்தன் மேய தீம்புனல் உலகமும்**

**வருணன் மேய பெருமணல் உலகமும்**

**முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்**

**சொல்லிய முறையால் சொல்லவும் படுமே**

**- தொல். 351**

**முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து**

**நல்இயல்பு இழந்த நடுங்கு துயருற்று**

**பாலை என்பதொரு படிவம் கொள்ளும்**

**- சிலப்பதிகாரம், காடு: 64-66**

இத்தகைய திணைக்கோட்பாடுகள் முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் எனும் மூன்று திணைக்கூறுகளால் பகுத்துக்கூறப்படுகிறது. இத்தகைய ஐந்து நிலப்பகுதிகளில் வாழ்ந்த மக்களிடைய அந்தந்த நிலப்பகுதிகளின் தாக்கத்தால் வட்டாரவழக்குகளும் மாறுபடுகின்றன.

இவ்வாறு பலதரப்பட்ட நாடுகள், பலதரப்பட்ட நிலப்பகுதிகள், பலதரப்பட்ட சமூகங்கள் ஆகிய சமூகக்காரணிகள் வட்டாரவழக்குகளுக்கு ஆதாரமாக விளங்குகின்றன. தமிழ்மொழி இலக்கிய வழக்கு, பேச்சுவழக்கு, வட்டாரவழக்கு என்று பல்வேறு மொழிப்பிரிவுகளாக அடையாளங்காணப்பட்ட நிலையில் எந்த வட்டாரத்தில் பேசப்பட்ட தமிழ் இலக்கிய வழக்கை ஒத்ததாக இருந்தது எனும் கேள்வி எழுகிறது. தொல்காப்பிய உரையாசிரியர் சேனாவரையர் "வைகையாற்றின் வடக்கும், மருதயாற்றின் தெற்கும், கருவூரின் கிழக்கும், மருவூரின் மேற்கும் அமைந்த சோழ நாடாகிய புனல் நாட்டினைச் செந்தமிழ் நாடாகக் கொண்டு இதனைச் சூழவுள்ள தென்பாண்டி முதலிய நாடுகளைச் செந்தமிழ் நாட்டினைச் சூழ்ந்த புறநாடுகளாகக் குறிப்பிட்டுள்ளார். யாப்பருங்கலக்காரிகையுரையாசிரியர் முதலியோரும் சோழநாட்டையே செந்தமிழ் நாடாகத் தம்முரையிற் குறித்துள்ளனர்" (வெள்ளைவாரணர், 1987: 180). சேக்கிழாரடிகள் தமது பெரியபுராணத்தில் சங்கம் அமைத்துத் தமிழ் வளர்த்த பாண்டிய நாட்டினையே செந்தமிழ் நாடாகக் கருதுகின்றார். இவரது கூற்றை சிவஞான முனிவரும் வலியிருத்தியுள்ளார் (சேதுப்பிள்ளை, 1971: 1). மதுரைத் தமிழ்ச்சங்கப் புலவர்களால் அங்கீகரிக்கப்பட்ட தமிழே செந்தமிழாகக் கருதப்பட்டது எனவும் அத்தகைய மொழி பாண்டிய நாட்டில்

பேசப்பட்ட தமிழையே சார்ந்திருந்தது எனவும் பேராசிரியர் ரா.பி. சேதுப்பிள்ளை குறிப்பிட்டுள்ளார்:

**"The language which commanded the acceptance of the Academy came in due course to be regarded as the standard language (centamil). It is possible that this language was mainly based on the dialects of Tamil that was then prevalent in the Pandya country"**

**- R.P. Sethu Pillai, 1971, Part II: 1**

தற்காலத் தமிழ் வட்டாரவழக்குகளை ஆய்வு செய்த ஆண்ட்ரனோவ் எனும் உருசியநாட்டு மொழியியல் அறிஞர் கிழக்கு வட்டாரத்தில் பேசப்படும் தமிழும் அதனை ஒட்டிய வடக்கு வட்டாரப் பகுதியில் பேசப்படும் தமிழும் தமிழின் செந்தமிழ் வழக்கிற்கு ஆதாரமாகவும் சங்ககாலத் தமிழ் இலக்கிய வழக்கின் தொடர்ச்சியாகவும் விளங்குவதால் செந்தமிழ் என்று அழைக்கப்பட்ட வரலாற்றுக் காலக் கிழக்கு வட்டாரத் தமிழ்மொழி செந்தமிழ் வழக்கு எனத் தன் ஆய்வில் தெரிவித்துள்ளார் (ஆண்ட்ரனோவ், 1969: 2). மேலும் தமிழ்மொழியின் எல்லைகள் 'வடவேங்கடந் தென்குமரி' என்று கூறப்பட்டாலும் இலங்கையும் தமிழ் கூறும் நல்லுலகத்தில் அடங்கும் என்பார் செக்கோசுலோவேக்கியா நாட்டு மொழியியல் அறிஞர் கமில் சுவெலபில்:

**"Tamil proper that is continental Tamilnad and Tamil Ceylon will always remain the Tamil̠kūr̠um nallulakam par excellence and therefore it should be of primary importance for any investigation of Tamil dialects".**

**- Kamil Zvelebil, 1964: 239**

வரலாற்று அடிப்படையில் தமிழ்மொழி பேசப்பட்ட பகுதிகளின் பிரிவுகளையும், வட்டாரவழக்குக் கூறுகளின் காரணிகளையும் இவ்வியலில் தெளிவாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

தமிழர்களின் சமூக அமைப்புகள் தமிழர்களின் திணைக்கோட்பாடாகிய நிலப்பகுதிப் பிரிவுகளை அடியொற்றி அமைந்திருந்தது. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை எனும் ஐந்துவகை நிலப்பகுதிகளில் வாழ்ந்த மக்களின் சமூகப் பெயர்களும் அவர்களின் தலைமக்கள் பெயர்களும் சமூகங்கள் தனித்தனிப் பிரிவுகளாக இருந்ததைத் தெரிவிக்கிறது.

**குறிஞ்சி : குறவன், குறத்தி**

**முல்லை : ஆயர், வேட்டுவர்**

**மருதம் : உழவர்**

**நெய்தல் : நுளையர்**

**பாலை : எயினர்**

இவர்கள் அல்லாது பார்ப்பர், அந்தணர், சான்றோர், கள்வர், மறவர், படையாட்சி, புலையர், விறவி, பாணன், கூத்தன், வேளிர், பறையர், கடம்பர், வேடர், குளியர், நாகர், உமணர், மல்லர், இருளர், களமர், துன்னகாரர், மீனவர், வாணியர் போன்ற பல சமூகங்களின் பெயர்கள் சங்க கால இலக்கியங்களில் காணக்கிடக்கின்றன. தொல்காப்பியர் ‘‘பிறப்பே குடிமை .... (தொல். 12191 என்று ஒருவர் பிறந்த பிறப்பின் அடிப்படையில் அவரது குடி அமைவதை எடுத்துக்காட்டுகின்றார். மேலும்

**வழக்கு எனப்படுவது உயர்ந்தோர் மேற்றே**

**நிகழ்ச்சி அவர்கட்கு ஆகலான**

**- தொல்காப்பியம், 1219**

‘‘வழக்கென்று சொல்லப்படுவது உயர்ந்தோர் வழங்கிய வழக்கே என்னை? உலகத்து நிகழ்ச்சியெல்லாம் அவரையே நோக்கினமையின் என்றவாறு” என்று கணேசையர் (1943: 680) விளக்கம் கூறுகின்றார். எனவே, சமூகப் பிரிவுகளில் உயர்ந்தோர் எனக்கருதப்படும் சமூகத்தினரின் வழக்கே பிற சமூகத்தாராலும் பின்பற்றப்படும் வழக்காக இருந்துள்ளது.

தொல்காப்பியர் சமூகத்தை அல்லது சாதியைக் குடி என்றே அழைக்கின்றார். மேலும் இத்தகைய சமூகப் பிரிவுகளிடையே உயர்ந்தோர், ஒப்போர், தாழ்ந்தோர் எனும் வேறுபாடுகளும் இருந்துள்ளன. இதைத் தொல்காப்பியர் ஈ, தா, கொடு எனும் வினைச்சொற்கள் மூலம் உறுதிப்படுத்துகின்றார். மேற்கூறப்பட்ட மூன்று வினைச்சொற்களும் ஒரே பொருளைக் குறித்தாலும் ஒவ்வொரு சொல்லும் தனித்தனிச் சமூகப்பிரிவினர்களிடம் பேசும்பொழுது பயன்படுத்தப்படவேண்டும் என்று தொல்காப்பியர் கூறுகின்றார்.

**ஈ என் கிளவி இழிந்தோள் கூற்றே**

**- தொல். 928**

**தா என் கிளவி ஒப்போன் கூற்றே**

**- தொல். 929**

**கொடு என் கிளவி உயர்ந்தோள் கூற்றே**

**- தொல். 930**

இவ்வாறாக ஒரே பொருளில் வரும் வினைச்சொற்கள் எவ்வாறு யார் யாரிடத்தில் பேசுகின்றார் என்பதையும் அவர்களது சமூகநிலையையும் உணர்த்துவனவாக உள்ளன. எனவே, தமிழர்களின் சமூகப்பிரிவுகளில் உயர்ந்தோர், தாழ்ந்தோர் எனும் சமூகச் சிந்தனை இருந்ததையும் உணர்த்துகிறது. இவ்வாறாகப் பல சமூகப்பிரிவினர்களாக உயர்ந்தோர், தாழ்ந்தோர் எனும் சமூகச் சிந்தனையில் வாழ்ந்து வந்த தமிழர்களிடையே சமூக வழக்குகள் இயற்கையாகவே சமூகங்களை அடையாளங்காட்டும் சமூகக்கூறுகளாக அமைந்துள்ளன. இத்தகைய தமிழர்களின் சமூகப்பிரிவுகளையும், சமூக வழக்குக்கூறுக் காரணிகளையும் இந்த இயலில் விளக்கமாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

சங்ககாலத்தில் தமிழ்மொழி பேசும் பகுதிகள் பல நாடுகளாகப் பிரிந்திருந்ததையும், அப்பகுதிகள் பல மன்னர்கள் ஆண்ட பகுதிகளாக விளங்கியதையையும், ஒவ்வொரு நாட்டுப்பகுதியிலும் பலதரப்பட்ட தமிழ்ச் சமூகங்கள் வாழ்ந்து வந்த தரவுகளையும் சங்ககால இலக்கியங்கள் மூலம் அறியமுடிகிறது. இத்தகைய நாடுகளின் பிரிவுகளைத் தற்காலச் சமூகங்களின் பெயர்களிலும் காண முடிகிறது. கீழ்க்காணும் சமூகப்பெயர்கள் இதை உறுதிப்படுத்துவனவாக உள்ளன: சோழியச் செட்டி, சோழிய வேளாளர், பாண்டிய வேளாளர், தொண்டை மண்டல முதலி, கொங்கு வெள்ளாளர், நாஞ்சில் வெள்ளாளர். மேலும் தற்காலப் பேச்சுவழக்கு அகராதிகளும் இத்தகைய நாட்டுப் பிரிவுகளை இன்றளவிலும் அடையாளங்கண்டுள்ளன: கொங்கு நாடு, செட்டி நாடு, நாஞ்சில் நாடு, நடு நாடு, தொண்டை நாடு. தற்கால பேச்சுவழக்குச் சொற்கள் வட்டாரங்களை அடையாளம் காட்டுவதோடு வட்டாரவழக்குச் சொற்கள் சங்ககாலத் தமிழின் தொடர்ச்சியாக விளங்குவதைக் காணலாம். இத்தகைய எடுத்துக்காட்டுகளையும், வட்டார அடையாளங்களையும் விளக்கிநிற்கும் விதமாக வட்டாரவழக்குச் சொல்லதிகார நூல்களிலிருந்து எடுத்துக்காட்டுகள் கொடுக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு நாடுகளின் எல்லைகளும் கொடுக்கப்பட்டுள்ளன. கீழ்க்கண்ட அகராதிகளில் இருந்து சொற்கள் கொடுக்கப்பட்டுள்ளன:

1. ராஜநாராயணன் வழக்குச் சொல்லகராதி
2. நெல்லை வட்டாரவழக்குச் சொல்லகராதி
3. கொங்கு வட்டாரவழக்குச் சொல்லகராதி
4. தொண்டை மண்டல வழக்குச் சொல்லகராதி
5. நடுநாட்டு வழக்குச் சொல்லகராதி
6. நாஞ்சில் நாட்டு வழக்குச் சொல்லகராதி
7. அறந்தாங்கி வட்டாரச் சொல்லகராதி/செட்டிநாடும் செந்தமிழும்

வட்டாரவழக்குச் சொற்கள், இலக்கியச் சொற்கள் ஆகியவற்றிற்கு எடுத்துக்காட்டுகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

**ராஜநாராயணன் வழக்குச் சொல்லகராதி**

அக்கம் ‘இருப்பிடம்’

அகப்பை நோய் ‘பட்டினி’

அடப்பக்காரன் ‘உதவிக்காக வைக்கப்படும் ஆள், ஜமீந்தார் வீட்டுச் சமையல்காரன்’

ஆயி ‘தாய், தாய்க்கிழவி’

இட்டகுடி ‘பெண் கொடுத்த குடி’

(குடி ‘சமூகம்’ எனும் சங்ககாலச் சொல் இங்கு அதே பொருளில் வந்துள்ளது)

**நெல்லை வட்டாரப் பேச்சுவழக்கு**

அங்கமாற ‘அந்தப் பக்கமாக’

அவுக.ஃ.அவிய ‘அவர்கள்’

இருசி ‘வயதாகியும் பூப்படையாத பெண்’

ஊட்டி ‘பன்றி’

நல்லது ‘நல்ல பாம்பு’

**கொங்குவட்டாரப் பேச்சுவழக்கு**

அச்சானியம் ‘அபசகுனம்’

அண்ணன் ‘தந்தை’

ஆரியம் ‘கேழ்வரகு’

மாராயம் ‘வண்ணார், நாவிதர் ஆகியவர்களுக்குக் கொடுக்கும் ஆண்டுக்கூலி’

குக்குவலி ‘பிரசவ வலி’

முருவாங்கறி ‘பன்றிக்கறி’

**பழவேற்காடு (தொண்டைநாடு) வட்டாரப் பேச்சுவழக்கு**

அன்னூறு ‘ஐநூறு’

கீளண்டை ‘கிழக்குப்பக்கம்’

கொண்டு ‘வாங்கி’

செத்தியாய் ‘உசத்தியாய், உயர்வாக’

சோனகர் ‘இசுலாமியர்’

**நடுநாட்டுப் பேச்சுவழக்கு**

அங்கம் ‘வயிறு’

குந்து ‘உட்கார்’ (சங்க கால இலக்கியச் சொல்)

கூத்தரசி ‘நெல்லாக வாங்கி அவித்து அரைத்து விற்கப்படும் அரிசி’

பொட்டி ‘2.5 ஏக்கர் பரப்புள்ள முந்திரிக்காடு’

மூச்சி ‘முறம்’

**நாஞ்சில் வட்டாரவழக்கு**

அக்கானி, அக்கியானி ‘பதநீர்’

அண்டி ‘முந்திரிப்பருப்பு’

இளப்பம் ‘சிறுவயது’

குந்தகம் ‘குற்றம், இடையூறு, குறை’

மலக்கறி ‘காய்கறி’

**செட்டிநாட்டுப் பேச்சுவழக்கு**

ஆமக்கன் ‘ஆண்மகன், கணவன்’

ஐந்தொகை ‘ஐந்தொகை (விழுமுதல், வரவு, செலவு, இருப்பு, ஆதாயம்)

துராவை ‘கீழ்த்தரமான’

நருவிசு ‘கண்டிப்பு’

நாண் ‘கயிறு’

**இலக்கியவழக்குச் சொற்கள்**

குடி ‘சமூகம்’

கேணி ‘கிணறு’

தெங்கு ‘தென்னை மரம்’

கமுகு ‘பாக்கு மரம்’

அண்ணாவி ‘ஆசிரியர்’

நுளையர் ‘ஒரு மீனவ சமுதாயம்’

மறவர் ‘ஒரு சமூகம்’

கள்ளர் ‘ஒரு சமூகம்’

வேடன் ‘ஒரு சமூகம்’

புரவி ‘குதிரை’

மோதகம் ‘ஒருவகைத் தின்பண்டம், கொளுக்கட்டை’

சொற்கள், ஒலியன் வேறுபாடு அல்லது மாற்றம் மட்டுமல்லாது இலக்கணக்கூறுகளும் வட்டாரவழக்குகளை அடையாளங்காண உதவுகிறது. இத்தகைய வட்டாரவழக்குகளை அடையாளங்காட்டும் இலக்கணக்கூறுகள் இவ்வியலில் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

**ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியும்**
**ஒன்றினைக் கூறும் பன்மைக் கிளவியும்**
**வழக்கி நாகிய உயர்ச்சொல் கிளவி**
**இலக்கண மருங்கின் உயர்சொல் கிளவி**

**- தொல். 510**

ஒருமையில் உள்ள சொற்களுக்குப் பன்மை விகுதி சேர்த்துக் கூறுவது இலக்கண வழக்குப்படி அமைந்த சொல்வழக்கு அல்ல. மாறாக உலக வழக்கில் காணப்படும் இலக்கணக் கூறாகும். தற்கால வட்டாரவழக்குகளில் அவன் என்பது ஒருமை அவர் என்பது பன்மை. அவர் என்ற சொல்லோடு அவர்கள் எனும் பன்மைச் சொல்லும் பயன்பாட்டில் உள்ளது. அவர், அவர்கள் எனும் சொற்கள் பன்மையக் குறிப்பது மட்டுமல்லாது ஒருமையில் மரியாதைக்குரிய சொற்களாகவும் வழங்குகின்றன.

இரண்டாம் வேற்றுமை உருபு-ஐ அநேகமாக அனைத்து உயர்திணைப் பெயர்ச்சொற்களோடும், பொதுப் பெயர்ச்சொற்களோடும் சேர்ந்துவரும். ஆனால் சங்ககால இலக்கியங்களில் இரண்டாம் வேற்றுமை உருபு -ஐ இல்லாமலும் சொற்கள் பயன்பாட்டில் உள்ளது.

**மரம் வெட்டினான்**

**மரத்தை வெட்டினான்**

இத்தகைய வேறுபாடுகள் வட்டாரவழக்குகளைப் பிரதிபலிப்பனவாக உள்ளன.

செல், கொடு எனும் வினைச்சொற்கள் படர்க்கை ஒருமையில் வரும் பதிலிப்பெயரோடும் வா, தா போன்ற வினைச்சொற்கள் தன்னிலை, முன்னிலைப் பதிலிப்பெயர்களோடும் பயன்படுத்தப்பட வேண்டும் என்பது இலக்கண விதியாகும். ஆனால் பல சங்கப்பாடல்களில் இந்த விதி மீறப்பட்டுள்ளது. இத்தகைய மாற்றங்கள் வட்டாரவழக்குகளின் தாக்கத்தால் ஏற்படுகிறது என அறிஞர்கள் கருதுகின்றனர்.

‘‘உயர்திணையில் வரும் -அது என்ற ஆறாம் வேற்றுமை உருபு கெட்டு நான்காம் வேற்றுமையாகிய-கு உருபு வரும்’’.

**எனது மகன்**

**எனக்கு மகன்**

**(ச.வே. சுப்ரமணியன், 2008: 160)**

தொல்காப்பியர் தமிழில் அ, இ, உ எனும் மூன்று சுட்டுக்கள் உள்ளன என்று கூறுகின்றார்:

**அ இ உ அம் மூன்றும் சுட்டு**

**- தொல். 31**

ஆனால் தற்காலத் தமிழ் வழக்கில் உகரச் சுட்டு தமிழகத்தில் உள்ள எந்தப் பேச்சுவழக்கிலும் வழங்கவில்லை. ஆனால், இலங்கை யாழ்ப்பாணத் தமிழில் மட்டும் இன்றும் உகரச் சுட்டு பயன்பாட்டில் உள்ளது. இத்தகைய எடுத்துக்காட்டுகள் தமிழ் வரலாற்றாய்வுக்குரிய தரவுகளாக உள்ளன. இத்தகைய இலக்கணக் கூறுகள் இந்த இயலில் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

தமிழ்மொழியின் வட்டாரவழக்குகள் தொல்காப்பியர் காலம் முதல் தற்காலம் வரை அடையாளம் காணப்பட்டுள்ளன. தொல்காப்பியர் ‘திசைச்சொல்’ என்று கூறி திசைச்சொற்களின் வட்டாரங்கள் 12 என்று கூறியுள்ளார். இத்தகைய வட்டாரங்கள் காலப்போக்கில் மாறுதல்கள் அடைந்துள்ளன. தற்கால மொழியியல் ஆய்வாளர்கள் தமிழின் வட்டாரங்களை மண்டலங்களாகப் பிரித்துக்காட்டுகின்றனர். தற்போதைய மாவட்டங்கள் வருவாய் மாவட்டங்களாக இருப்பதால், தமிழ்மொழியின் வட்டாரவழக்கு மண்டலங்கள் பல வருவாய் மாவட்டப் பகுதிகளை உள்ளடக்கியதாக விளங்குகின்றன. கன்னியாகுமரி போன்ற வருவாய் மாவட்டத்தில் பல நாட்டுப் பிரிவுகள் அடையாளங்காணப்படுகின்றன. வட்டாரவழக்குகளை அடையாளங்காட்டும் ஒலியன், உருபன், பொருள் மாறுபாடு போன்ற இலக்கணக்கூறுகள் அடையாளங்காணப்பட்டு தமிழர்கள் வாழும் பகுதிகள் பல நாடுகளாக, மண்டலங்களாக, மாவட்டங்களாகப் பிரிக்கப்பட்டாலும் இலக்கிய வழக்கு என்ற பொதுவழக்கு தமிழ்மொழியின் தொடர்ச்சியைச் சங்ககாலம் முதல் தற்காலம் வரை காத்து வந்துள்ளது என்பது தமிழின் இலக்கண, இலக்கியப் பாரம்பரியத்தின் அருமை பெருமைகளை உணர்த்துவனவாக உள்ளது. எல்லோராலும் கடைப்பிடிக்கப்பட்டு பொதுநிலையில் பயன்படுத்தப்பட்ட இலக்கிய வழக்கு என்ற ஒரு பொதுவழக்கு இல்லாது இருந்திருந்தால் ஒவ்வொரு வட்டாரவழக்குகளும் காலப்போக்கில் மாறுதல்கள் அடைந்து தனித்தனி மொழிகளாக உருவாகியிருக்கும். எனவே, வட்டாரவழக்குகளோடு இலக்கிய வழக்கும் பாதுகாக்கப்படவேண்டியதன் அவசியத்தை இவ்வாய்வு தெளிவாக உணர்த்துகிறது.

# துணைநூல் பட்டியல் - Bibliography

## தமிழ் நூல்கள்


| | | |
|---|---|---|
| 1. வீராசாமி முதலியார், | 1880 | கொத்தனாரது ஆங்கிலத் தமிழ்ச் சொல் அட்டவணை, சென்னை. |
| 2. வில்லிபுத்தூராழ்வார், | 1907 | மகாபாரதம், மதுரை. |
| 3. பவானந்தம் பிள்ளை, ச, | 1925 | தற்கால தமிழ்ச் சொல்லகராதி, சென்னை: மாக்மில்லன் |
| 4. ராகவையங்கார், எம்., | 1928 | சேதுநாடும் தமிழும், மதுரை: தமிழ்ச் சங்க முத்ரசாலை. |
| 5. சாமிநாதையர், உ வே, | 1929 | சங்கத்தமிழும் பிற்காலத்தமிழும், சென்னை: டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூல் நிலையம், ஐந்தாம் பதிப்பு 2000. |
| 6. இராசநாயகம், செ., | 1933 | யாழ்ப்பாணச் சரித்திரம், மறுபதிப்பு 2003, புது தில்லி: ஏசியன் எடுகேஷனல் சர்வீசஸ். |
| 7. முதலியார், செ. இராசநாயகம், | 1933 | யாழ்ப்பாணச் சரித்திரம், மறுபதிப்பு 2003, புதுதில்லி: ஏசியன் எடுகேஷனல் சர்வீசஸ் |
| 8. இராகவையங்கார், ரா., | 1941 | தமிழ் வரலாறு, மறுபதிப்பு 1979, அண்ணாமலை நகர், அண்ணாமலைப் பல்கலைக்கழகம். |
| 9. ஆறுமுக முதலியார், எஸ்., | 1941 | ‘சேரநாடும் தமிழும், ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் சிறப்பு மலர், அண்ணாமலைநகர்: அண்ணாமலைப் பல்கலைக்கழகம், பக். 123-144. |
| 10. ராகவையங்கார், ரா, | 1941 | தமிழ் வரலாறு, மூன்றாம் பதிப்பு - 1979, அண்ணாமலைநகர் அண்ணாமலைப் பல்கலைக்கழகம். |
| 11. கணேசையர் (பதிப்), | 1943 | தொல்காப்பியம் மூலமும் உரையும், மூன்று பாகங்கள், மறுபதிப்பு 2007, சென்னை உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம் 1952, 1955, |
| 12. கணேசையர், | 1943 | தொல்காப்பியம் பொருளதிகார மூலமும் பேராசிரியருரையும், பாகம் - இரண்டு, சென்னை: உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், மறுபதிப்பு 2007. |

13. வேங்கடசாமி நாட்டார், ந.மு. & ரா. வேங்கடாசலம் பிள்ளை, 1944, அகநானூறு: மணிமிடை பவளம்; மறுபதிப்பு 2007, சென்னை: திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்படிப்புக் கழகம்.

14. கணேசையர்,சி(பதிப்பு), 1948 தொல்காப்பியம் பொருளதிகார மூலமும் நச்சினார்க்கினியருரையும், முன்னைந்தியல்கள், பாகம் - ஒன்று, சுன்னாகம்: திருமகள் அழுத்தகம்; மறுபதிப்பு 2007, சென்னை: உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

15. கணேசையர்,சி(பதிப்பு), 1948 தொல்காப்பியம் பொருளதிகார மூலமும் நச்சினார்க்கினியருரையும், முன்னைந்தியல்கள், பாகம் - ஒன்று, சுன்னாகம்: திருமகள் அழுத்தகம்; மறுபதிப்பு 2007: சென்னை: உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

16. லூர்துசாமி, பி., 1949 'சில பேச்சு வழக்குகள்', *சிலம்பு* - 24, பக். 457-461.

17. பழனியப்ப பிள்ளை,தி பொ, 1948 'வழக்கறியார் வழக்கு', சிலம்பு-23, பக். 289-293.

18. கணேசையர்,சி(பதிப்பு), 1952 தொல்காப்பியம் பொருளதிகார மூலமும் நச்சினார்க்கினியருரையும், சுன்னாகம்: திருமகள் அழுத்தகம், சென்னை: உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்.

19. கணேசையர்,சி(பதிப்பு), 1952 தொல்காப்பியம் பொருளதிகார மூலமும் நச்சினார்க்கினியர் உரையும், சுன்னாகம்: திருமகள் அழுத்தகம்

20. கணேசையர் (பதிப்.), 1955 தொல்காப்பியம் சொல்லதிகார மூலமும் சேனாவரையருரையும், மறுபதிப்பு 2007, சென்னை: உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

21. பதிப்பு ஆசிரியக்குழு, 1958 பாட்டும் தொகையும், சென்னை: எஸ். ராஜம், 5 - தம்புச் செட்டித் தெரு.

22. புலியூர்க்கேசிகன் (பதி ), 1958 கலிங்கத்துப்பரணி, சென்னை: பாரி நிலையம், மறுபதிப்பு 2004.

23. வெள்ளைவாரணர், க., 1957 தொல்காப்பியம், மூன்றாம் பதிப்பு 1978, அண்ணாமலைநகர்: அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.

| | | |
|---|---|---|
| 24. ராஜம், எஸ்., | 1958 | பாட்டும் தொகையும், சென்னை: மர்ரே அண்டு கம்பெனி. |
| 25. சோமலெ, | 1960 | செட்டிநாடும் தமிழும், சென்னை: பாரி நிலையம். |
| 26. சேதுப்பிள்ளை, ரா.பி., | 1960 | செட்டிநாடும் செந்தமிழும், சென்னை: பாரி நிலையம். |
| 27. சதாசிவம், எஸ்., | 1964 | சேரநாடும் செந்தமிழும், சென்னை: பாரி நிலையம். |
| 28. சுந்தரராசன் செ., கோவை, | 1965 | ‘குமரிச்சொற்கள், சிலம்பு - 40, பக். 92-93. |
| 29. பொன்னி, | 1966 | ‘கல்லார் தரும் கலைச் சொற்கள், சிலம்பு - 41, பக். 522-524 |
| 30. விபுலானந்தசுவாமி, | 1967 | சோழமண்டலத் தமிழும் ஈழமண்டலத் தமிழும், சென்னை: ஓறியண்ட் லாங்மேன். |
| 31. குமாரசாமிராஜா, ந., | 1972 | ‘தமிழ்க் கிளைமொழிகள்’, PS குமாரசாமி ராஜா சிறப்பு மலர், ராஜபாளையம். |
| 32. வரதராஜன், மு., | 1972 | தமிழ் இலக்கிய வரலாறு, 26ஆம் பதிப்பு 2009, புது தில்லி: சாகித்திய அகாதெமி. |
| 33. நீதிவாணன், ஜெ., | 1974-75 | ‘தொல்காப்பியத்தில் வட்டார வழக்குக் கூறுகள்’, வையை, மலர் 4, இரண்டாம் பருவம், மதுரைப் பல்கலைக்கழகம், மதுரை, பக். 4-20 |
| 34. கலைச்செல்வன், எம்., | 1976 | தமிழில் வழக்குகள், கருக்காம்பட்டி: எம்.வேலுச்சாமி கவுண்டர். |
| 35. ஏசுதாசன், சி., | 1976 | பேச்சுத்தமிழ்:இலங்கையிலும் தமிழகத்திலும், மொழியியல், இதழ் 2:4, பக். 65-88. |
| 36. மாணிக்கம், அ புலவர், | 1977 | தனிப்பாடல் திரட்டு, முதல் பகுதி பாகம், சென்னை: பூம்புகார் பதிப்பகம் |
| 37. சீனிவாசவர்மா, கோ., | 1977 | கிளைமொழியியல், மறுபதிப்பு 1986, அண்ணாமலை நகர்: அனைத்திந்தியத் தமிழ் மொழியியல் கழகம். |
| 38. ராஜநாராயணன், கி., | 1982 | வட்டாரவழக்குச் சொல்லகராதி, மறுபதிப்பு 2008, சிவகங்கை: அன்னம். |
| 39. சோமலெ, | 1984 | செட்டிநாடும் செந்தமிழும், சென்னை: வானதி பதிப்பகம். |

40. ஜெயதேவன், வ., 1985 தமிழ் அகராதியியல் வரலாறு: அறிமுகம், சென்னை: ஐந்திணைப் பதிப்பகம்

41. தேவநேயப் பாவாணர், ஞா., 1985 செந்தமிழ்ச் சொற்பிறப்பியல்-பேரகர-முதலி, தொகுதி-1, தமிழ் அகரமுதலித்திட்டம், சென்னை: தமிழக அரசு.

42. சீனிவாச வர்மா, கோ., 1986 கிளைமொழியியல், அண்ணாமலைநகர்: அனைத்திந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம்.

43. கந்தசாமி, இல.செ., 1987 தமிழர் வேளாண் மரபுகள், கோயமுத்தூர்: கலைச்செல்வம் பதிப்பகம்.

44. மகாலிங்கம், கே., 1987 'சமுதாயவட்டாரத் தமிழ்க்கிளைமொழிகள் ஆய்வின் அனுகுமுறைகளும் பிரச்சனைகளும்', எஸ். ஆரோக்கியநாதன், Seminar Papers on Dialectology, தஞ்சாவூர்: தமிழ்ப் பல்கலைக்கழகம், பக். 165-178.

45. ஆரோக்கியநாதன், எஸ்., 1987 கிளை மொழிகள், விழுப்புரம்: முத்து பதிப்பகம்.

46. வெள்ளைவாரணனார், க., 1987, "திசை மொழியும் வட்டார வழக்கும்", in S. Arokianathan (ed.), Seminar Papers on Dialectology, Thanjavur: Tamil University, pp. 179 – 185.

47. லேனா தமிழ்வாணன், 1987 வட்டாரச் சொற்களும் விளக்கங்களும், சென்னை: மணிமேகலைப் பிரசுரம்.

48. முருகானந்தம், சண்முக, 1990 கடற்கரைப் பரதவர் கலைச்சொல் அகராதி, சென்னை: ஐந்திணைப் பதிப்பகம்.

49. சண்முகம், சு ப, 1990 செட்டிநாட்டில் செந்தமிழ் வழக்கு, சென்னை: காவேரி.

50. சண்முகம், எஸ்., 1990 செட்டிநாட்டில் செந்தமிழ் வழக்கு, சென்னை: காவேரி தெரு.

51. காளியப்பா, டி.எம், 1991 கொங்குத் தமிழ், கோயமுத்தூர்: தேவி பதிப்பகம்.

52. காளியப்பா, டி.எம்., 1991 கொங்கு தமிழ், தேவி பப்ளிஸர்ஸ்: கோயம்புத்தூர்.

53. ஆறுமுக நாவலர், 1992 நன்னூல் காண்டிகையுரை சொல்லதிகாரம், சென்னை: முல்லை நிலையம்.

54. சௌந்திரபாண்டியன்,எஸ்., 1992, 'மறைந்து போகும் வழக்காறுகள்', சிலம்பு 67, பக். 275-76.

55. ராமகிருஷ்ணன்,எஸ்., 1992 க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, விரிவாக்கித் திருத்திய பதிப்பு, 2008, சென்னை: க்ரியா.

56. ஸ்டீபன் சாம், நே., 1994 கன்னியாகுமரி மாவட்ட மீனவர்களின் வாழ்வியல்-ஓர் ஆய்வு, கல்லுக்கூட்டம், கன்னியாகுமரி: தங்கம் பதிப்பகம்.

57. மாதையன், பெ., 1997 அகராதியியல், தஞ்சாவூர்: தமிழ்ப் பல்கலைக் கழகம்

58. சௌந்திரபாண்டியன்,சு, 1997 'பளவேற்காடு கைப்பீயத்து', *தொண்டை* மண்டல வரலாறுகள், சென்னை, அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம், பக். 147 - 196.

59. சௌந்திரபாண்டியன்,சு, 1997 தொண்டை மண்டல வரலாறுகள், சென்னை: அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம்.

60. மாணிக்கம், அ புலவர், 1998 தனிப்பாடல் திரட்டு,இரண்டாம் பாகம், சென்னை: பூம்புகார் பதிப்பகம்

61. சுப்பிரமணியன் ச. வே., 1998 சிலப்பதிகாரம், ஐந்தாம்பதிப்பு 2010, சென்னை: கங்கை புத்தக நிலையம்

62. ஜெயதேவன், வ., 1999 தமிழ் அகராதியியல் அன்றும் இன்றும், சென்னை: அஸ்வினி புக் கம்பெனி

63. பெருமாள் முருகன், 2000 கொங்கு வட்டாரச் சொல்லகராதி, கோபி செட்டிப்பாளையம், குருத்து வெளியீடு.

64. ஜீவபாரதி, கே & வே எழில்முத்து, 2001 ஜீவா தொகுத்த வழக்குச் சொல்லகராதி, சென்னை: ராஜேஸ்வரி பதிப்பகம்.

65. சுந்தரசண்முகனார், 2001 தமிழ் அகராதிக்கலை, சிதம்பரம்: மெய்யப்பன் தமிழாய்வகம்

66. வில்வபதி, கோ., 2003 நன்னூல் மூலமும் உரையும், சென்னை: பழனியப்பா பிரதர்ஸ்.

67. மகாலட்சுமி, டி., 2003 கோவை மாவட்ட வழக்குச்சொல் அகராதி, சென்னை: தி பார்க்கர்.

68. ராஜன், எ மு, 2004(2002) புதுச்சேரி கிராமியத் தமிழகராதி, புதுச்சேரி: புதுச்சேரி கூட்டுறவு புத்தகச் சங்கம்

69. ராஜன், ஏ.எம்., 2004 புதுச்சேரி கிராமியத் தமிழகராதி, புதுச்சேரி: புதுச்சேரி கோ ஆப்பரரேடிவ் புக் சொசைடி.

70. புலவர் மணியன், 2004 கொங்கு நாட்டுத் தமிழ், கோயம்புத்தூர்: வேம் அச்சகம்.

71. சிங்காரவேலுமுதலியார்,ஆ., 2004 அபிதான சிந்தாமணி, சென்னை: சீதைப்பதிப்பகம்.

72. ஞானசுந்தரம், வ, 2004 ‘தமிழில் கிளை மொழிகள்’, பேராசிரியர் எம் பி, எமனோ நூறாம் ஆண்டு பிறந்தநாள் சிறப்புத் திராவிடஇயல் தேசியக் கருத்தரங்கு, மொழியியல் துறை, தஞ்சாவூர்: தமிழ்ப் பல்கலைக்கழகம், 25-26, மார்ச்சு.

73. முருகையா, ப., 2004 நெல்லை வட்டார வழக்குச் சொல்லகராதி, சென்னை: அமுதா பதிப்பகம்.

74. பெருமாள், அ கா, 2004 நாஞ்சில் வட்டாரவழக்கு சொல்லகராதி, சென்னை: தமிழினி

75. பழனியப்பா சுப்பிரமணியன், 2006 செட்டிநாட்டு வட்டாரவழக்குச் சொல்லகராதி, சென்னை: பழனியப்பா பிரதர்ஸ்.

76. கண்மணி குணசேகரன், 2007 நடுநாட்டுச் சொல்லகராதி, தமிழினி, சென்னை

77. இராசு, செ., 2007 ஈரோடு மாவட்ட வரலாறு, ஈரோடு: கொங்கு ஆய்வு மையம்.

78. சோமசுந்தரனார்,பொவெ, 2007 குறுந்தொகை, சென்னை: திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்.

79. இராசமாணிக்கனார், மா., 2008 தமிழ்நாட்டு வரலாறு, சென்னை: காவ்யா.

80. இரவிக்குமார், இரா., 2008 கொங்கு வட்டாரவழக்குச் சொல்லகராதி, உடுமலைப் பேட்டை: கொங்கு மண்டல ஆய்வு மையம்.

81. சுப்பிரமணியன் ச. வே., 2008 தொல்காப்பியம் (முழுவதும்) விளக்கவுரை, சிதம்பரம்: மெய்யப்பன் பதிப்பகம்.

82. தண்டபாணி தேசிகர், ச., 2008 நன்னூல் விருத்தியுரை, சென்னை: சாரதா பதிப்பகம்.

83. ஆனந்தி, ந., 2008 கொங்கு மண்டல சதகம் - மூலமும் உரையும், சென்னை: சாரதா பதிப்பகம், இரண்டாம் பதிப்பு 2017.

84. தமிழகன், பி., 2009, வழக்குச்சொல் அகராதி, திருச்சிராப்பள்ளி: இளந்தமிழ்ப் பதிப்பகம்.
தினமணி கதிர், 02.03.2014, பக். 21.

85. நாஞ்சில்நாடன், 2010 மணமாலையும் மலர்வளையமும்', ரசனை, செப்டம்பர், பக் 9-14

86. மனோகரன், ச., 2010 வேளாண்மைச் சொற்கள்: தமிழர்களின் நெல் வகைகள், நிறுவன ஆய்வறிக்கை, சென்னை: செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனம்.

87. சுப்பிரமணியன்,ச வே, 2010 பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் - மூலமும் தெளிவுரையும், சென்னை: மணிவாசகர் பதிப்பகம்

88. இளங்கோவன்,பெரி.சே, 2011 அறந்தாங்கி வட்டாரவழக்குச் சொல் அகராதி, அகநி: வந்தவாசி.

89. மனோகரன், ச., 2011 'தமிழக மீனவர்களின் பேச்சுவழக்கில் காணும் பண்பாடு, தொழில் கூறுகளும் தொழில் நுணுக்கங்களும்', தமிழியல், எண். 79 & 80, பக். 51 - 94

90. மனோகரன், ச., 2011 தமிழக மீனவர்களின் தொழில் - பண்பாட்டுச் சொல் அகராதி, நிறுவன ஆய்வறிக்கை, சென்னை: செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனம்.

91. மனோகரன், ச., 2011 ஆடுமாடுகள் வளர்ப்புக் கலைச்சொல்லகராதி, நிறுவன ஆய்வறிக்கை, சென்னை: செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனம்.

92. மனோகரன், ச., 2012 'வழக்குச்சொல் வட்டாரங்களும் வட்டாரவழக்கு அகராதிகளும்',தமிழியல், எண். 81, பக். 28-60.

93. மனோகரன், ச., 2013 'தொல்காப்பியர் காட்டும் சுட்டுகளும் சுட்டுப்பெயர்களும் - ஒரு மொழியியல் சமூகவியல் வரலாற்றாய்வு', *தமிழியல்*, எண். 84, பக். 23-50.

94. மனோகரன், ச., 2013 "தொல்காப்பியர் காட்டும் சுட்டுகளும் சுட்டுப்பெயர்களும் - ஒரு மொழியியல் சமூகவியல் வரலாற்றாய்வு", Journal of Tamil Studies, No. 84, pp. 23-50.

95. மனோகரன், ச., 2014, 'வழக்காற்றுத் தமிழ்', ஆ. மணி (பதிப்), செவ்வியல் இலக்கண இலக்கிய ஆராய்ச்சிக் கட்டுரைகள், சென்னை: வாவண்யா பதிப்பகம், பக். 9-39.

96. மனோகரன், ச., 2014, 'வழக்காற்றுத் தமிழும் தமிழர் பண்பாட்டுக்கூறுகளும், பக். 40-63.

97. மனோகரன், ச., 2017 'கலைச்சொல்லாக்கம்: தமிழ் வழக்குச்சொற்களும் அகராதிகளும்', அரிமா நோக்கு, Vol. 10: 4, பக். 45-60.

98. மனோகரன், ச., 2018 19-ஆம் நூற்றாண்டு தொடக்ககாலப் பழவேற்காடும் தொண்டை மண்டலத் தமிழும்', அரிமா நோக்கு 12:3,பக்.21-31.

99. மனோகரன், ச., 2018, 'தொல்காப்பியமும் கிளைமொழித் தமிழ் வழக்குகளும்', தமிழியல், எண். 100, பக். 46-59.

## ஆங்கிலம் நூல்கள்

100 Anrique Anriquez, P., 1579 Tresladada em lingua Malavar ou Tamul pillow, Cochin

101 Henrique Henriques, Fr., 1569 Arte de Lingua Malavar (Grammar of the Language of the Malavar), Mimeo.

102 Henriques Henriques, Fr 1600 Tamil-Portuguese dictionary (Gregory James, 2000)

103 Antonio de Proenca, Fr, 1679 Vocabunlario Tamuelco com a Significacao Portungueza composto Pello (Tamil Portuguese Dictionary), Cochin.

104 Ziegenbalg, Barttholomæus, 1712 Dictionarium Tamulicum (Tamil dictionary)

105 Ziegenbalg, Barttholomæus, 1719 Lexicon Malabaricum (Malabar lexicon) (Gregory James, 2000).

106 Beschi, Constantinus Joseph, 1728 A Grammar of the Common Dialect of the Tamul Language; 1848,

| | | | |
|---|---|---|---|
| | | | English Translation by George William Mahon, Vepery: The Christian Knowledge Society's Press; Reprint 1971, Thanjavur: Sarasvati Mahal Library. |
| 107 | Beschius, Constantius Joseph, Rev Fr, | 1742 | Dictionarium Tamulico – Latinum additis in præ fatione diquot regulis necessario prælegendis (Tamil-Latin dictionary), with a preface in which there are several rules one needs to read before hand), Trichinopoly: South India Times Press. |
| 108 | Fabricius, John Philip and John Christopher Breithaupt, | 1779 | A Malabar and English dictionary, wherein the words and phrases of the Tamulian language, commonly called by Europeans the Malabar language, are explained in English, Vepery: Mission Press |
| 109 | Fabricius, John Philip and John Christopher Breithaupt, | 1786 | A dictionary of the English and Malabar languages, Vepery: Mission Press |
| 110 | Christopher Henry Horst (Trans) | 1806 | Grammatica Latino-Tamulica, A 1806 grammar of the common dialect of the Tamulian language, called Kotuntamil: composed by R F Constanzo Jospeh Beschi, … after a study and practice of thirty years, Vepery |
| 111 | Rottler, J P, | 1830 | Tamil-English Dictionary, four parts, Vepery |
| 112 | Pope, G U Rev, | 1855 | A Tamil Hand-Book or Full Introduction to the Common Dialect of that Language on the Plan of Ollendorf and Arnold, For the use of foreigners learning Tamil, and of Tamilians learning English; with copious vocabularies (Tamil-English, and English-Tamil), Madras: P R Hunt, (Gregory James, 2000) |

| | | | |
|---|---|---|---|
| 113 | Caldwell, Robert, | 1856 | A Comparative Grammar of the Dravidian or South – Indian Family of Languages, Third revised edition and edited by J.L. Wyatt and T. Ramakrishna Pillai, 1956, Madras: University of Madras. |
| 114 | Veeraswamy Moodeliar, T S, | 1858 | The Builder's vocabulary in English and Tamil, showing the names of the component parts of buildings, bridges & c and of the various descriptions of materials, labour and tools employed in their construction Madras: Higginbotham & Co, (Gregory James, 2000) |
| 115 | Percival, P Rev, | 1862 | Tamil and English Dictionary, Madras |
| 116 | Winslow, Miron, | 1862 | A comprehensive Tamil and English dictionary of high and low Tamil in part manuscript materials of the late Rev Joseph Knight, and others, Vol I-III, Madras: American Mission Press (Gregory James, 2000) |
| 117 | Burnell, A C, | 1876 | Specimens of South Indian Dialects- Tamil of Tanjore, Tranquebar |
| 118 | Phillips Maurice, | 1873 | 'Tamil in the Salem district: A Report prepared for the Madras Government', Indian Antiquary, Vol. 2, pp. 223-228. |
| 119 | Arden, A.H. Rev., | 1891 | A Progressive Grammar of Common Tamil, (Fourth edition revised by A.C. Clayton, with an appendix on Tamil Phonetics by J.R. Firth), 1934, Madras: Christian Literature Society of India; Reprint 1962. |
| 120 | Pope, G U, | 1900 | The Thiruvasagam or Sacret Utterances of the Tamil Poet Saint and sage Manikka-Vasagar, Oxford: The Glarendon Press |
| 121 | Kanakasabai, V., | 1904 | The Tamils Eighteen Hundred Years Ago, Reprint 1979, New Delhi: Asian Educational Services. |

| | | | |
|---|---|---|---|
| 122 | Pope, G U Rev, | 1904 | A Handbook of the Ordinary Dialect of the Tamil Language, Oxford: Clarendon Press, 5th Edition Reprint 1979, New Delhi: Asian Educational Services. |
| 123 | Bloch, Jules, | 1910 | ‘Castes et dialects en tamoul’, Memories de la socioe'te de Linguistique, No 16, pp 1-30. |
| 124 | Srinivasa Aiyangar M, | 1914 | Tamil Studies – Essays on the History of the Tamil People, Language, Religion and Literature, Madras: The Gaurdian Press, Reprint 1986, New Delhi, Asian Educational Services. |
| 125 | Bavanandam Pillai, S., | 1925 | The Modern Tamil-Tamil Dictionary, Madras: Macmillan & Co.Limited. |
| 126 | VaiyapuriPillai,S(ed), | 1926 | Tamil Lexicon, Vol I-VI and Supplementary, Madras: University of Madras |
| 127 | Iyengar, Srinivasa P. T., | 1929 | History of the Tamils from the Earliest Times to 600 A.D., Reprint 1989, New Delhi: Asian Educational Services. |
| 128 | Srinivasa P. T., | 1929 | History of the Tamils, Reprint 1989, New Delhi: Asian Educational Services. |
| 129 | Hutton, J.H., | 1933 | Census of India 1931 with complete Survey of Tribal Life and Systems, Volume I & II; Reprint 1986: Gian Publishing House. |
| 130 | Geiger, A., | 1938 | A Grammar of the Sinhalese Language, Colombo. |
| 131 | Sethupillai, R P, | 1939 | ‘Tamil: Literary and Colloquial’, Annals of Oriental Research, Vol 3:1, pp. 25-32. |
| 132 | Sethupillai, R P, | 1939 | ‘Tamil: Literary and Colloquial’, Annals of Oriental Research, Vol 3:1, pp. 35-60. |
| 133 | Arden, A.H. Rev., | 1942 | A Progressive Grammar of the Tamil Language, Revised by A.C. Clayton (fifth edition), Madras: The Christian Literature Society for India. |

134 Mathews, Gordon, 1942 'The Vulgar Pronunciation of Tamil', Bulletin of the School of Oriental Studies, Vol 10, pp. 992 – 997.

135 Sethu Pillai, R. P., 1943 "Words and their Significance", Annals of Oriental Research, Vol. I:1 – 2, Reprint 1974, Madras: University of Madras.

136 Sethu Pillai, R. P., 1943 'Tamil – Literary and Colloquial', Annuals of Oriental Research, Vol. 2:2 and Vol. 3:1 – 2.

137 Sethu Pillai, R. P., 1944 "Tamil – Literary and Colloquial", Annals of Oriental Research, Vol. II and Vol. III:1 – 2, Reprint 1974, Madras: University of Madras

138 Sethu Pillai, R. P., 1944 'Tamil: literary and colloquial', Annals of Oriental Research, Vol 8:2, pp. 25-33.

139 Census of India 1951 Paper No.1, Language, Delhi: The Manager of Publications.

140 Meenakshisundaran,TP, 1955 A Bird's Eye View of Tamil Literature', Souvenir, Sixtieth Session of Indian National Congress, Chennai: Avadi; Reprint 1961, Prof T P Meenakshisundaran, Sixty – First Birthday Commemoration Volume, Annamalai Nagar: Annamalai University, pp 31 – 54.

141 Kanapathi Pillai, K, 1958 'The Jaffna Dialect of Tamil: A Phonological Study', Indian Linguistics, Turner Jubilee Volume - 1, Vol 19, pp 219-227.

142 Ferguson, C. A., 1959 'Diglossia', Word, Vol. 15.

143 Zvelebil, Kamil V and S Viswanathan, 1959 'Dialects of Tamil – II: Madras and Madras Brahman (Texts), Archiv Orientalni, Vol 27: 4, pp. 572-603.

144 Shanmugam Pillai M, 1960 'Literary and Colloquial Tamil' International Journal of American Linguisties, Vol. 7, pp. 98-103.

| | | | |
|---|---|---|---|
| 145 | Bright William, | 1960 | 'Linguistic Change in some Indian Caste Dialects', International Journal of American Linguististics, Vol. 26:3, pp. 19-25. |
| 146 | Zvelebil, Kamil V, | 1960 | 'Dialects of Tamil III- Madurai (Interpretation and Descriptive Statement)', Archiv Orientalni, Vol 28:3, pp. 414-456. |
| 147 | Zvelebil, Kamil V, | 1960 | 'Notes on Two Dialects of Ceylon Tamil', Transactions of Linguistic Circle of Delhi, Dr Siddheswar Varma Volume, pp. 28-36. |
| 148 | Zvelebil, Kamil V, | 1961 | 'Some Features of Dindigul Tamil', T P Meenakshisundaram Commemoration Volume, Coimbatore, pp 426-446 |
| 149 | Andronov, M S, | 1962 | Razgovornyji Tamil, skij Jazyk I ego Dialekty (Colloquial Tamil and its Dialects), Moscow: Izdatel, Stvo Vostcnoj Literatury |
| 150 | Andronov, M S, | 1962 | Colloquial Tamil and its dialects, Academy of Science of USSR, Moscow: Institute of Peoples of Asia. |
| 151 | Harry Hoijer, | 1962 | "The Sapir – Whorf Hypothesis", in Morton H. Fried (ed.), Readings in Anthropology, Vol. I, New York |
| 152 | Shanmugam Pillai, M., | 1962 | 'A Tamil Dialect in Ceylon', Indian Linguistics, Vol. 23, pp. 90–98. |
| 153 | Zvelebil, Kamil V., | 1963 | 'Dialects of Tamil IV-Erode, Tuticorin, Ramnad', Archiv Orientalni, Vol 31:4, pp.635-638. |
| 154 | Meenakshisundaran, T. P., | 1964 | Ceylon and Tamil, An address delivered by Professor T. P. Meenakshisundaran at Annamalai University during the Orient – Occident Week, October 1963, Jaffna: Union of All Ceylon Students in India. |

| | | | |
|---|---|---|---|
| 155 | Zvelebil, Kamil V, | 1964 | 'Spoken Languages of Tamil Nadu', Archiv Orientalni, Vol 32:2, pp. 237-264. |
| 156 | Meenakshisundaran, T.P., | 1965 | History of Tamil Language, Deccan College, Poona: Linguistic Society of India. |
| 157 | Subramanian, S.V., | 1965 | Cilappatikaram – A Descriptive Grammar with India, Madras: Pari Nilayam. |
| 158 | Ramasubbaiah, | 1966 | A Lexical Study of Tamil Dialects in Lower Perak, Kuala Lumpur: Department of Indian Studies, University of Malaya. |
| 159 | Andronov, M S, | 1969 | A Standard Grammar of Modern and Classical Tamil, Madras: New Century Book House Pvt Ltd. |
| 160 | Karunakaran, K, | 1970 | 'Tamil Dialects: A Classification', Proceedings of the Second All India University Tamil Teachers' Conference, Thiruchirappalli, pp 1-8 |
| 161 | Haugen, E., | 1972 | "Dialect, Language, Nation", in J. B. Pride and Janet Holmes (eds), Sociolinguistics, Harmondsworth: Penguin Books |
| 162 | Nilakanta Sastri K A, | 1972 | Sangam (age) Literature: Its Cults and Cultures, Madras: Swathi Publishers. |
| 163 | Gnanasundaram, V., | 1973 | A Pilot Dialect Survey of Tondai Mandalam, Unpublished Ph.D. Thesis, CAS in Linguistics, Annamalainagar: Annamali University. |
| 164 | Israel, M, | 1973 | The Treatment of Morphology in Tolkappiyam, Madurai: Madurai Kamaraj University |
| 165 | Subramoniam,VI,(ed) | 1973 | Seminar on dialectology: Papers and Discussions, Trivandrum: Dravidian Linguistic Association |

166 Fishman, Joshua A., 1974 'The Sociology of Language', Current Trends in Linguistics, Vol. 12, The Hague, Paris: Mouton

167 Geoffrey Leech, 1974 Semantics, Harmondsworth: Penguin Books

168 Sethu Pillai, R P, 1974 Words and their Significant & Tamil – Literary and Colloquial, Madras: University of Madras

169 Srinivasa Varma, G., 1975 'Dialects in Tolkappiyam', Seminar on early Dravidian Grammars, CAS in Linguistics, Annamalainagar: Annamalai University.

170 Velupillai, A, 1976 Study of the dialects in inscriptional Tamil, Trivandrum: Dravidian Linguistic Association, Publication No 21

171 Chandrasekhar, A., 1977 Census of India 1971, Series 1,

India, Part II-C (i), Social and Cultural Tables, Delhi: The Controller of Publications.

172 Zvelebil, Kamil V., 1977 'Vaḷḷi – Murugan – A Dravidiam Myth', Indo – Iranian Journal, Vol. 19, pp. 227 – 246.

173 Srinivasa Varma, G. and S. Sakthivel, 1977 'Tamil Dialects', Indian Journal of Linguistics, Vol. 2:1.

174 Dhamotharan, A., 1978 Tamil Dictionaries: A Biblography, Wiesbaden: Steiner, Beitrage Zur Sirdasienforchug.

175 Karunakaran, K, 1978 Studies in Tamil Socio linguistics, சிதம்பரம்: மலர் பதிப்பு.

176 Agesthialingom, S, 1979 A Grammar of old Tamil with special reference to Patirruppattu; CAS in Linguistics, Annamalainagar: Annamalai University.

177 Agesthialingom, S. and K.Karunakaran (eds), 1980 Sociolinguistics and Dialectology: Seminar Papers, CAS in Linguistics, Annamalainagar: Annamalai University.

178 Agesthialingom, S. and N. Kumaraswami Raja, 1980 "Dictionary Making in the Tamil Region", in B. G. Misra (ed.), Lexicography in India, Mysore: Central Institute of Indian Languages, pp. 119 – 125.

179 Deivasundaram, N., 1981 Tamil Diglossia, Tirunelveli: Nainar Pathippagam.

180 Sakthivel, S, 1981 'A Survey of Tamil Dialects', In M S Sunkapur and Jayavant S Kulli (eds), Papers in Linguistics, R C Hiremat Felicitation Volume, Mysore: Sharat Prakashan, pp 284-301

181 Banies, J.A., 1983 Census of India 1891-A General Report; Reprint 1985, Delhi: Manas Publications.

182 Kiruvathy, Susila A.P.A., 1987 A Pilot Dialect Survey in Pandya Country (Madurai, Ramnad, Tirunelveli), Unpublished Ph.D. Thesis, CAS in Linguistics, Annamalainagar: Annamalai University.

183 Shanmugam Pillai M, 1987 'Tamil Dialectology- A Survey', In S. Arokianathan (ed ), Seminar Papers on Dialectology, Tamil University, Thanjavur, pp 3-64.

184 Athithan, A, 1989 Linguistic Structures in Tamil – A Historical Study, Madurai: Madurai Kamaraj University

185 James, A., 1989 Linguistic Survey of Chola Country, Unpublished Ph.D. Thesis, CAS in Linguistics, Annamalainagar: Annamalai University.

| | | | |
|---|---|---|---|
| 186 | Manoharan, S., | 1989 | "Language Resistance and Cultural Pressure", in S. C. Panchbhai and M. K. A. Siddiqui (eds), Acculturation and Social Change in India – An Interdisciplinary Appraisal, Calcutta: Anthropological Survey of India, pp. 181 – 189. |
| 187 | Sundararajan, S, | 1991 | Ancient Tamil Country – Its Social and Economic Structure, New Delhi: Navrang. |
| 188 | Nambudiri, Narayan P.P., | 1992 | Aryans in South India, New Delhi: Inter-India Publications |
| 189 | Suseendirarajah, S., | 1993 | Jaffna Tamil: Phonology and Morphology, Thirunelveli, Jaffna: University of Jaffna Publication. |
| 190 | Shanmugam, S.V., | 1996 | 'The Concepts of Standard Dialect and Regional Dialects in Tamil Grammars' Journal of Tamil Studies, Vol. 49 & 50, pp. 188-200. |
| 191 | Ramaswami, N, | 1997 | Diglossia: Formal and Informal Tamil, Mysore: Central Institute of Indian Languages. |
| 192 | Thani Nayagam, X. S., | 1997 | Tamil Culture and Civilization – Readings: The Classical Period, Chennai: International Institute of Tamil Studies. |
| 193 | Gregory James, | 2000 | Colporul: A History of Tamil Dictionaries, Chennai: Cre-A |
| 194 | Sundaram, R. M. | 2000 | "Technical Dictionaries in Tamil", in K. Nachimuthu (Ch.ed), Tamil – Malayalam Lexicography, Department of Tamil, Thiruvananthapuram: University of Kerala, pp. 45 – 52. |
| 195 | Balasubramanian, K., | 2001 | Studies in Tolkappiyam, CAS in Linguistics, Annamalainagar: Annamalai University. |

| | | | |
|---|---|---|---|
| 196 | Census of India | 2001 | Paper 1 of 2007, Language, India, States and Union Territories, (Table C-16), New Delhi: Office of the Registrar General, India. |
| 197 | Stephen, S J, | 2006 | ‘Five Portuguese Tamil Grammar Manuscripts’, International Journal of Dravidian Linguistics, Vol XXXV: 2, pp 67 – 88 |
| 198 | Neethivanan, J., | 2007 | Tamil Dialects – A Historical Account, Part J, Tolkappiyam, Report Submitted to Central Institute of Classical Tamil, Chennai. |
| 199 | Manoharan, S., | 2008 | ‘Tamiḻakam – The land and the people: An ethnic account’, Journal of Tamil Studies, No. 73, pp. 86 – 120 |
| 200 | Manoharan, S., | 2009 | ‘Tamiḻakam’ ‘Tamil Land’ and Īḻam Sri Lanka – Linguistic and Cultural Linkages and Gontinuum’, Journal of Tamil Studies, No. 75, pp. 89-112 |
| 201 | Census of India | 2011 | Paper 1 of, 2018, Language, India, States and Union Territories, (Table C-16), New Delhi: Office of the Registrar General, India. |
| 202 | Manoharan, S., | 2012 | Tamil Dialects Through Ages’, Journal of Tamil Studies, No. 82, pp 93-114 |
| 203 | Manoharan, S., | 2018 | ‘Kongu Tamil Dialect and Kongu Culture – An Ethnosemantic Study’, in V. Jayadevan and Oppilla Mathivanan (eds), The Forntiers of Lexicography, Chennai: Arimaa Nokku, pp. 220-243 |

# சங்க இலக்கியங்களில் வட்டார வழக்குச் சொற்கள் - ஓர் ஆய்வு

மதுரை காமராசா் பல்கலைக்கழக மொழியியல் துறை முனைவா்ப் பட்டத்திற்காக (பிஎச்.டி) அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளா்

**ச. சரண்யா**

பதிவு எண் : **P3433**

**மேற்பாா்வையாளா்**

**முனைவா் இரா. குமாரசாமி**, எம்.ஏ., பிஎச்.டி.,
உதவிப் பேராசிரியா்






**மொழியியல் துறை**

**மதுரை காமராசா் பல்கலைக்கழகம்**

**(ஆற்றல்சால் பல்கலைக்கழகம்)**

**மதுரை – 625 021.**


**ஜுன் - 2019**